


# சாண்டில்யன்




► பாகம் 1: சோழப் பேரரசனை வீரராஜேந்திரன் அளித்த சமாதான ஓலையுடன் கலிங்கத்துத் துறைமுகமான பாலூர்ப் பெருந்துறைக்கு வந்த கருணாகரப் பல்லவன் என்ற இளையபல்லவன் அங்கு தமிழர்கள் சிறைசெய்து துன்புறுத்தப் படுவதையும், சோழ இளவலான அநபாயனும் ஆபத்தில் சிக்கியிருப்பதையும் உணருகிறான். அங்கு இறங்கியதும் காவலரால் துரத்தப்பட்ட இளையபல்லவன் தப்பி யோடி கடாரத்திலிருந்து சோழர்கள் உதவி நாட வந்து பாலூரில் மறைந்துறைந்த அரசன் குணவர்மனையும் அவன் மகள் காஞ்சனாதேவியையும் சந்தித்து, காஞ்சனா தேவியிடம் காதல் கொள்கிறான். சோழ இளவலின் நண்பனான அரபு நாட்டு அமீரின் முயற்சியாலும் சீனக் கொள்ளைக்காரனான அகூதாவின் உதவியாலும் பீமன் பிடியிலிருந்து தப்பிய காஞ்சனாதேவி, குணவர்மன், அநபாயன் முதலியோர் ஒரு கப்பலில் பூம்புகார் சென்றுவிட, காயமுற்ற இளையபல்லவனைச் சுங்க அதிகாரி கண்டியத்தேவனும், அமீரும், கூலவாணிகனும் தூக்கிக் கொண்டு அகூதாவின் கப்பலில் தூரக் கிழக்குப் பகுதிக்குச் செல்கிறார்கள்.




அத்தியாயம் 1

## காவலனை நோக்கி வந்த காலன்

உதிக்கலாமா வேண்டாமா என்று உறுதியற்றுச் சலனப்படுவனபோல் ஆதவன் மிகுந்த சந்தேகத்துடன் நீர் மட்டத்துக்குமேல் மெள்ளத் தலையை நீட்டத் துவங்கிய அந்த அதிகாலை நேரத்தில்கூட *அக்ஷய முனைக்

* இது ஆகின்ஹெட் என்று தற்காலத்தில் அழைக்கப்படுகிறது. இதைப்பற்றிய விவரங்களுக்கு John Anderson எழுதிய "Acheen and the ports of North and East Coasts of Sumatra" என்ற நூலைப் பார்க்கவும். Pages 22-23.

கடலோரம் கோபத்தின் வசப்பட்ட மனித புத்தியைப் போல் மிதமிஞ்சிய உஷ்ணத்தைக் கக்கிக் கொண்டிருந்தது. பூமத்திய ரேகை தன்னை இரண்டாகப் பிளந்து சரிபாதி உடலில் பாய்ந்து சென்றதால் சாதாரண காலத்திலேயே நல்ல உஷ்ணத்தைப் பெற்றிருந்த சுமத்ரா என்ற சொர்ண பூமித் தீவு, தனது வடக்குக் கோடியில் கடலில் தலை நீட்டிக் கொண்டு முப்புறமும் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்த அக்ஷயமுனைக்கு, கோடைக்காலத்தின் அந்த காலையில் அளவுக்கதிகமாகவே உஷ்ணத்தை அளித்திருந்ததால், கரையிலிருந்த கடல் நாரைகள் தரையிலிருந்து பறந்து சென்று அலைப்பரப்பில் உட்கார்ந்து கொண்டன. இடையே பூமத்திய ரேகை ஓடுவதாலேயே அதிக உஷ்ணத்தைப் பெற்றிருந்த சொர்ணபூமியின் மேல் திசையில், பாரதத்தின் மேற்குத் தொடர்ச்சி மலையைப் போலவே வடக்குத் தெற்காக ஓடிக்கொண்டிருந்த பகிட் பாரிஸான் மலைத்தொடரில் சுமார் தொண்ணூறு எரிமலைகளிருந்தபடியால் தீவின் உஷ்ணம் அபரிமிதமாக இருந்ததன்றி, அந்த மலைத் தொடரின் துவக்கமும் அக்ஷய முனையை ஒட்டியிருந்ததால், அன்றைய அதிகாலையிலேயே காலை வைத்து நடக்க முடியாத அளவுக்குக் கடற்கரையோர மணல் பிராந்தியத்தில் சாதாரணமாகவே உஷ்ணம் மிதமிஞ்சியிருக்குமென்றால் அக்ஷய முனைக் கடலோர மணலின் தன்மை வேறு அந்தச் சூட்டைப் பன்முறை பெருக்கிக் கொண்டிருந்தது. மனிதனால் வரையறுக்க முடியாத ஏதோ ஒரு காலத்தில் பகிட் பாரிஸாரின் எரிமலைகள் பொங்கி வழிந்தோடிய காரணத்தால் பல இடங்களில் கந்தகமும் சொர்ணக் கனிகளும் சொர்ணத் தீவின் மண்ணில் பரவிக் கிடந்ததன்றி அந்த ரசாயன உலோகப் பொருள்கள் அணுமாத்திரமாக மணலில் கலந்து தணல் போன்ற

உருவத்தை மட்டுமின்றி குணத்தையும் கடலோர மணலுக்கு அளித்திருந்ததால், மணல் நல்ல வெள்ளை நிறமாக இல்லாமல் சற்று செந்நிறமாகவே காட்சி யளித்த தல்லாமல், காலைத் தரையில் வைக்க முடியாத நிலைமை யையும் ஏற்படுத்தியிருந்தது. இத்தனை உஷ்ணத்தையும் கவ்விக் கரைத்துவிட இஷ்டப்பட்டன போல் அக்ஷய முனையை முப்புறத்திலும் பேரிரைச்சலுடன் தாக்கிய கடலலைகளை ஏளனம் செய்வதுபோல் தூரத்தே புகைந்து கொண்டு நின்ற எரிமலை அவ்வப்போது தன் தீ நாக்கை வெளியே நீட்டி நீட்டி உள்ளுக்கு இழுத்துக் கொண டிருந்தது. வாழ்வில் மலைபோல் வரும் துன்பத்தின் ஊடே சுகமும் உண்டென்று குறிப்பிடுவது போல் அத்தனை உஷ்ணத்தையும் மீறி மலைப்பகுதியிலிருந்த காட்டிலிருந்து சில்லென்ற காற்றும் நீண்ட நேரத்திற்கு ஒருமுறை இரு விநாடிகள் வீசிவிட்டுச் சென்று கொண்டிருந்தது.

அந்த இன்பக் காற்று வீசிய நேரங்களில் மலைக் காட்டுப் பகுதியிலிருந்து கூட்டம் கூட்டமாகப் பறந்து வந்த பற்பல வர்ணப் பட்சிகள் கரையோரத்திலும், நீர்மீதும் விதவிதமாகச் சஞ்சரிக்கத் தொடங்கியதால் அத்தனை உஷ்ணத்திலும் தாபத்திலும் அந்தக் கடலோரம் கண் கொள்ளாக் காட்சியாகவே இருந்தது. அந்தக் காட்சியை உச்ச நிலைக்குக் கொண்டு போகவோ என்னவோ பாராபடு நதி பல கிளைகளாகப் பிரிந்து அந்த அக்ஷயமுனைக் கடலுக்குள் வெகு கம்பீரத்துடன் பாய்ந்து கொண்டிருந்தது.

பாராபடு நதி அப்படிப் பல பிரிவுகளாகப் பாய்ந்த தால் அக்ஷயமுனைக்குப் பெரும் லாபமே இருந்தது. சொர்ண பூமியின் வடக்குப் பகுதியிலுள்ள ஐந்து துறைமுகங்களில் வடமேற்குப் பகுதியிலிருந்த அக்ஷய முனைத் துறைமுகத்தில் கடலாழம் அதிகமாயிருந்ததன்றி, பாராபடுவின் பிரிவுக் கால்களும் ஆழமாயிருந்தபடியால்

கிட்டத்தட்ட அக்ஷயமுனை நகரத்துக்கு வெகு அருகில் மரக்கலங்கள் வர முடிந்தது. அப்படி வந்த மரக்கலங்களி லிருந்து வர்த்தகப் பொருள்களை இறக்க நதிப் பிரிவுகளுக்கு இடையிடையே இருந்த மணற் குன்றுகள் உதவின. அது மட்டுமல்ல, அக்ஷயமுனைத் துறைமுகப் பகுதியைச் சுற்றிலும் சற்று எட்ட சமுத்திரத்தில் சக்கர வட்டமாக அமைந்திருந்த சிறுசிறு தீவுகளும் அந்தத் துறைமுகத்துக்குப் பாதுகாப்பு அரண்களாக அமைந்திருந்தன. அக்ஷய முனையின் நகரமும் கடலுக்கு எதிரே இருந்த மலைச் சரிவில் அமைந்திருந்ததால் அந்த மலைக்கோட்டையி லிருந்து தூரத்தில் வரும் மரக்கலங்களை அறிய முடிந்த தாகையால் வர்த்தகத்துக்கும் பாதுகாப்புக்கும் சிறந்த ஓர் இடமாக அக்ஷயமுனை பிரசித்தி பெற்றிருந்தது. அக்ஷய முனைக் கோட்டைப் பகுதியும் அதிலிருந்த சிறந்த வீடுகளையும் கவனிப்போர்களுக்கு அக்ஷயமுனை நகரத்தில் செல்வத்துக்குக் குறைவில்லையென்பது தெரிய வரும். அப்படி வீடுகளைப் பார்த்து நிலையைப் புரிந்து கொள்ளாத மந்த புத்தியுள்ளவர்கள்கூடக் கோட்டைச் சுவருக்குப் பின்புறத்தில் மலை உச்சியை ஒட்டித் தெரிந்த பெரும் மாளிகையின் சொர்ண கலசத்தைப் பார்த்தால் உண்மையைப் புரிந்து கொள்வார்கள். நதியின் பல பிரிவு களுடன் மணற்பாதையொன்றும் கூச்சாகக் கடலுக்குள் நீண்ட தூரம் இயற்கையாகவே ஓடியதால் அக்ஷயமுனை என்ற பெயர் பெற்ற அந்தத் துறைமுகம் அக்ஷய நகரத்துக்கு வெளியே கால் காத தூரத்திலிருந்ததென்றாலும் மலை உச்சிக்கருகிலிருந்த மாளிகைத் தலைவன் கண்களுக்குத் தென்படாமல் அந்தத் துறைமுகத்தில் எதுவும் நடக்க முடியாத முறையிலேயே அக்ஷயமுனை அமைந்திருந்தது.

கோட்டைக்கும் கடலுக்கும் இடையே இருந்த மணற் பிரதேசம் பார்வைக்கு அத்தனை செல்வச் செழிப்புள்ள

தாகப் புலப்படாமல் மூங்கில் வீடுகளின் கூட்டங்களால் நிரப்பப்பட்டிருந்தாலும், அந்த மூங்கில் வீடுகளில் மறைந்து கிடந்த செல்வம் கோட்டைக்குள்ளிருந்த பெரும் வீடு களிலும் இருப்பது சந்தேகம் என்பதை அக்ஷய நகரத்தார் அறிந்திருந்ததன்றி, அந்த மூங்கில் குடில்களைச் சிறிதளவு கூட நெருங்காமல் எச்சரிக்கையாகவே இருந்தார்கள். அந்த மூங்கில் வீடுகள் கூட்டம் கூட்டமாக அந்தத் துறை முகத்தின் பல பகுதிகளிலும் பிரிந்து காணப்பட்டதற்கும் காரண மிருந்தது. சொர்ணபூமியிலும், சாவகத்திலும், பொற்கிரிஸே யிலும், பாலியிலும் காணப்பட்ட பலதரப் பட்ட-சாதிகளைச் சேர்ந்தவர்கள் மட்டுமின்றிப் பாரத நாட்டிலிருந்தும் ஆப்பிரிக்க, அரபு நாடுகளிலிருந்தும் பல வகுப்பினரும் அங்குக் கூட்டம் கூட்டமாக வசித்து வந்தார்கள். அப்படி வசித்து வந்த அவர்கள் அனைவருமே கடலோடும் பொதுத் தொழிலைச் செய்து வந்தாலும் வசிப்பதில் மட்டும் பிரிவினையைக் காட்டித் தனித் தனிக் கூட்டமாக மூங்கில் வீடுகளை அமைத்திருந்தார்கள். அத்தகைய அந்தப் பிரிவினர் எல்லோருமே மாலுமிகளாத லாலும், எந்த நாட்டுப் பற்றுமில்லாதவர்களாதலாலும், அக்ஷயமுனைப் பகுதியிலும், அக்கம் பக்கத்திலும் வரும் மரக்கலங்களை மடக்குவதையே தொழிலாகக் கொண் டிருந்ததாலும், அக்ஷய நகரத்தில் தங்குவதற்குச் செலுத்திய பங்கு போக மீதிப் பங்கு அந்தக் குடிசைவாசிகளிடம் மிதமிஞ்சி இருக்கவே குடிசையில் வாழ்ந்தாலும் பணத் துக்கு எக்குறையும் இல்லாதவர்களாகவே அவர்கள் காலங் கழித்து வந்தார்கள். அப்படி மிஞ்சிய பணத்தையும் நகைகளையும் கவர நகரத்துக்குள் பல வசதிகளை அந்த மாலுமிகளுக்கு அக்ஷய நகரத்தின் காவலன் செய்து கொடுத்திருந்தானாகையால், அந்தக் குடிசைகளின்

செல்வம் ஒரேயடியாகத் தன் கைக்கு வரும் என்ற நிச்சயத்துடனேயே இருந்தான். அதன் காரணமாகவே அவர்களைத் தன் வீரர்களைக் கொண்டு எந்தவித இம்சையும் செய்யாமல் நிம்மதியும் சந்துஷ்டியும் மிக்க நிலைமையிலேயே வைத்திருந்தான்.

அவன் அவர்களை இம்சை செய்யாமலும் சுமுக மாகவும் வைத்திருந்ததற்கு முக்கியமான காரணம் வேறு ஒன்றும் உண்டு. அந்தக் குடிசையிலிருந்த மாலுமிகள் கடற்போரில் மட்டுமின்றி நிலப் போரிலும் நிகரற்றவர் களாகையால் அவர்கள் ஒன்று சேர்ந்து நகரத்தின்மீது பாய்ந்தால் நகரத்தை அரைவிநாடி தன்னால் காப்பாற்ற முடியாதென்பதை அவன் சந்தேகமற உணர்ந்து கொண் டிருந்தான். அதன் விளைவாகக் கூடியவரையில் அந்தக் குடிசைவாசிகளிடம் மிக அன்பாக இருந்த அக்ஷய நகரத்தின் காவலன் அடிக்கடி அவர்களிடை ஏதாவதொரு சண்டையைக் கிளப்பிவிட்டு இரண்டொருவரைப் பலி கொடுத்து ஆட்சியை அங்கு ஸ்திரப்படுத்திக் கொண் டிருந்தான். தன்னையும் மீறி அவர்களிடை ஒற்றுமை ஏற்படும் சமயங்களில் கடலில் ஏதோ பெரும் பொக்கிஷக் கப்பல்கள் வருவதாகத் தனக்குச் செய்தி வந்திருப்பதாக ஆசை காட்டி அந்த வேட்டைக்கு அவர்களை விரட்டி விடுவான். அத்தகைய செய்தியை அவன் மிகுந்த நாசூக்காகப் பரப்பிய அடுத்த சில நாழிகைகளில் பல மரக்கலங்கள் பாய் விரித்துக் கடலில் ஓடும். அப்படி ஓடும் கப்பல்களிடம் வேறு கப்பல்கள் அகப்பட்டால் அக்ஷ யத்தின் காவலனுக்கும் லாபம். அவர்களுக்கும் லாபம். இல்லையேல் குடிசைவாழ் மாலுமிகளுக்குத்தான் நஷ்டம். அக்ஷய நகரத்தின் காவலனுக்கு எந்தவித நஷ்டமுமில்லை. அவர்கள் மரக்கலத்தை மடக்காமல் திரும்பி வந்த

மடமைக்காக அவர்களைத் தூஷிப்பான். அதிகக் கவடு சூதில்லாத அந்த மாலுமிக் கூட்டமும் அதை ஒப்புக் கொள்ளும். இப்படிப் பலவிதமாகக் கபட நாடகம் ஆடிவந்த அக்ஷயத்தின் காவலன் ஒன்று மட்டும் உணர்ந் திருந்தான். என்றாவது ஒருநாள் மூர்க்கத்தனமில்லாத புத்திசாலியான மரக்கலத் தலைவன் எவனாவது ஒருவன் அந்த அக்ஷயத்துக்கு வந்து சேர்ந்தால் தன்பாடு பெரும் திண்டாட்டமென்பதை அறிந்திருந்தானாகையால், கூடிய வரை அத்தகைய மரக்கலத் தலைவர்களை அந்தப் பகுதியில் அனுமதிக்காமல், முரட்டுக் கொள்ளைக்காரர் களுக்கு மட்டுமே அந்த அக்ஷயமுனையில் இடம் கொடுத் திருந்தான். அப்படி அவன் எச்சரிக்கையையும் மீறி அக்ஷய முனைக்குள் நுழைந்துவிட்ட இருபெரும் மரக்கலத் தலைவர்கள் துர்மரணமடைந்தார்கள். என்ன காரணத் தாலோ அவர்கள் மரக்கலமும் தீப்பிடித்து எரிந்து போயிற்று. அப்படி எரிந்தது பெரும் துற்சகுனமென்று அக்ஷயத்தின் காவலன் பெரிதும் வருந்தினான். அதற்குப் பிராயச்சித்தமாக அந்த நகரத் தேவதைக்கு விழா நடத்தி பிரசித்தியான *வாஜாங் நடனத்தையும் செய்து கடற்கரை மாலுமிகளை திருப்தி செய்து விட்டான்.

இத்தகைய விழாக்களாலும் குடிமக்களின் குண விசேஷத்தாலும் வங்கக் கடல் பிராந்தியத்தில் மட்டுமின்றி தூரக்கிழக்குத் தீவுகளின் பிராந்தியம் முழுவதிலுமே

---

* வாஜாங் அல்லது வாயாங் என்பது சொர்ண பூமியிலும் சாவகத்திலும் ஆடப்பட்டு வந்த சிறந்த நடனம். இதற்கு மூலம்: சிந்து நடனங்கள் — 'The Dutch East' By J. Macmillan Brown.

'கோல்டன்கிரிஸே அல்லது பொற்கிரிஸே என்பது தெற்கு மலேயாவைக் குறிக்கும் — Ancient Explorers By Carey & Warmington.

அக்ஷயமுனை பெரும் பிரசித்தி அடைந்திருந்தது. அந்த முனையில் மற்ற சாதிகளோடு தமிழர்களும் இருந்தார்களானாலும், அவர்கள் மிகச் சொல்பமாக இருந்தபடியால் அக்ஷயமுனைத் தலைவனின் கிருத்திரமங்களைச் சரியாக அறிந்திருந்தாலும் ஏதும் செய்ய முடியாத துர்பாக்கிய நிலையிலேயே வாழ்ந்து வந்தார்கள். அக்ஷயமுனைத் துறைமுகத்தில் அவர்களுக்கு இருந்த வீடுகள் சுமார் பத்து. மரக்கலம் ஒன்றே ஒன்று. அதுவும் பெரும் மரக்கலமல்ல. மற்ற வகுப்பினரின் மரக்கலங்களுக்கு இடையில் அது நிற்கும்போது ஏதோ சாதாரணப் படகு ஒன்று நிற்பது போலவே இருக்கும். என்ன காரணத்தாலோ தமிழகத்தின் மாலுமிகள் அந்த அக்ஷயமுனையை அடையாமலே சென்றார்கள். தமிழகத்தின் மரக்கலங்கள்கூட அந்த வழியில் வராமல் பாலூரிலிருந்து பொற்கிரிஸேயிலிருந்த தலைத் தக்கோலத்துக்குப் போய் அங்கிருந்து தெற்கே ஸ்ரீவிஜயத் துறைமுகத்துக்குச் சென்றுகொண்டிருந்தன. சூளு என்ற கடற் கொள்ளைக்காரர்களிடத்திலுள்ள பயத்தில் தமிழ் மாலுமிகள் இப்படி ஊர் சுற்றிப் போய்க் கொண்டிருந்ததாகச் சரித்திர ஆசிரியர்கள் சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் சூளுக்கள் மட்டுமல்ல அந்தக் கொள்ளைக்காரர்கள் பல நாட்டவரும் அந்தக் கொள்ளையில் பங்கெடுத்துக் கொண்டுதானிருந்தார்கள். கொள்ளையடித்தவர் யாராயிருந்தாலும், காரணம் யாதாய் இருந்தாலும், அக்ஷயமுனைத் தலைவனுக்கு மட்டும் தமிழகத்தின் கப்பல்கள் அக்ஷயமுனையிலிருந்து விலகிச் சென்றது பெரும் மன நிம்மதியை அளித்திருந்தது.

தமிழர்களை அறவே வெறுத்தான் அக்ஷயத்தின் காவலன். அவர்கள் நுண்ணறிவைக் கண்டு அவன் ஓரளவு அஞ்சவும் செய்தான். அதிக நுண்ணறிவு படைத்தவர்

களுக்கும் தன் சுரண்டல் கொள்கைக்கும் சரிப்பட்டு வராது என்பதை அறிந்திருந்தானாகையால் அக்ஷயத்தின் தலைவனுக்குத் தமிழர் எண்ணிக்கைக் குறைவாகவும் பலவீனமாகவும் இருந்தது பெரும் திருப்தியை அளித்தது. அப்படி அவர்களில் ஓரிருவர் தங்கள் அறிவைக் காட்ட முற்பட்டால் அவர்களை அப்புறப்படுத்த வேண்டிய முயற்சிகளையும் எடுத்தான் அவன். இத்தகைய பயங்கரக் கொலைகாரனுக்கு அஞ்சியே தமிழர்கள் அங்கு காலம் கழித்து வந்தார்கள்.

அக்ஷயமுனைத் தலைவனின் கொடூரத்துக்குச் சாட்சி சொல்லுவதைப்போல் சுட்டெரித்த அந்தக் கோடை கால காலை நேரத்தின் கொடுமையைப் பிளக்க முயன்றது ஒரு பெருங் காற்று. திடீரென எழுந்த அந்தப் பெரும் காற்று இரண்டொரு நாழிகை விடாமலே அடித்ததால் கடற்கரைக் குடிசையில் உள்ள மக்கள் திடீரென வெளியே வந்து ஆகாயத்தைக் கவனித்தார்கள். அக்ஷயமுனையில் திடீரென வரும் கோடை மழைக்கு இத்தகைய பூர்வாங்கக் காற்று வீசுவது உண்டு. ஆனால் அன்று காலை எழுந்த காற்று வழக்கமான பெரும் காற்றாகவுமில்லை. மழை பொழியும் மேகங்களைக் கொண்டு வரவுமில்லை. பலத்த கொள்ளைக்கும் எண்ணற்ற கொலைகளுக்கும் காரண பூதனான அக்ஷய முனைத் தலைவனுக்கும் பெரும் காலன் ஒருவனைக் கொண்டு வந்தது. அந்தக் காலனைத் தாங்கி வந்த பெரும் மரக்கலமொன்று தூரத்தே கடலில் வெகு வேகமாக உந்தப்பட்டுக் கரையை நோக்கி அதிவேகத்துடன் விரைந்தது. அந்தக் கப்பலின் மேல்தளத்தில் பெரும் பாய்மரத் தூணில் சாய்ந்து நின்ற அந்தக் காலனும் எதிரே தெரிந்த அக்ஷயமுனைத் தோற்றத்தைக் கண்டு பேருவகை கொண்டதற்கு அறிகுறியாகப் புன்முறுவலொன்றைத் தன்

இதழ்களில் தவழவிட்டான். அடுத்த விநாடி அவன் அரச தோரணையில் தன் கையை அசைக்கவே, மரக்கலத் தளத்தின் மூலையிலிருந்து இரு கொம்புகள் பலமாக அக்ஷயமுனைத் துறைமுகத்தை நோக்கி ஊதப்பட்டன. அந்த ஊதலைக் கேட்ட துறைமுக மக்கள் நடுங்கினர். கரையில் கப்பலைப் பார்க்க குழுமியவர் மீண்டும் குடிசையை நோக்கி ஓடினர். மலைச் சரிவிலிருந்த நகரத்தின் கோட்டைக் கதவும் திடீரென மிகுந்த வேகத்துடன் சாத்தப்பட்டது; அக்ஷய நகரக் கோட்டையைப் பாதுகாப்பதற்கான நடவடிக்கைகள் துரிதமாக எடுக்கப்பட்டன. அத்தனை மக்களும் கண்டு நடுங்கிய அந்த அசுரக் கப்பல் எதையும் லட்சியம் செய்யாமல் துரிதமாகத் துறைமுகத்தில் நுழைந்துவிட்டது.



அத்தியாயம் 2

# துணிவின் எல்லை

அக்ஷயமுனைக் கோட்டையின் துரிதமான பாது காப்பு ஏற்பாடுகளையும், கோட்டைக்கு முன்பாக மணல் வெளியில் கட்டப்பட்டிருந்த மூங்கில் குடிசைகளை நோக்கி விரைந்த மாலுமிக் கூட்டத்தின் குடும்பங்களையும், தனது மரக்கலப் பாய்மரத் தூணில் சாய்ந்த வண்ணமே கவனித்த அந்த அசுரக் கப்பலின் தலைவன் இதழ்களில் புன்முறுவலொன்று பெரிதாக விரிந்தது. அதைச் சேர்ந்து விரிந்த அவன் கண்களும், ஒருமுறை நாலாப்புறத்திலும் சுழன்று அந்தத் துறைமுகத்தின் தன்மையையும் பாது காப்புப் பலத்தையும் நிதானமாக அளவெடுத்தன. தன் மரக்கலம் செல்லும் நீர் வழியைச் சுற்றிலும் ஐந்தாறு பெரும் மரக்கலங்கள் நிற்பதையும் அந்த மரக்கலங்களில், போர்க் கலங்களும் பொருத்தப்பட்டிருந்ததையும் கவனித்த அவன், வலுவுள்ள சிறு கடற்படையின் அரணுக்குள் தான் நுழை வதைப் புரிந்துகொண்டான்.

அதைத் தவிர அக்ஷயமுனைத் துறைமுகத்தை வளைத்தன போல் சக்கரவட்டமாகத் தூரத்தே தெரிந்த சிறுசிறு தீவுகளிலிருந்தும் புகை வந்துகொண்டிருந்ததால் அந்த இடங்களிலும் சின்னஞ்சிறு காவற்படைகளிருப் பதையும் அவன் புரிந்துகொண்டான். போதாக்குறைக்கு, சற்று எட்டத் தெரிந்த மலைச்சரிவிலிருந்த கோட்டை பலமான மதில்களை உடையதாகவும், வேலெறியும் பெரும் விற்கூடங்களையும் மற்றும் பல போர்ச் சாதனங்களை

உடையதாகவும் காட்சி அளித்ததையும் கவனித்தான் அவன். தவிர அந்தக் கோட்டை மதிலின் தளமும் விசாலமாக இருக்க வேண்டுமென்பதைப் பாதுகாப்பை முன்னிட்டுத் திடீரென உலாவிய வீரர்கள் வரிசையி லிருந்தும் ஊகித்துக் கொண்டான் அந்த அசுரக்கப்பலின் தலைவன். இத்தகைய பெரும் பாதுகாப்புகளையும், இயற்கை யரண்களையும் உள்ள துறைமுகமும் கோட்டை யும் பரம அயோக்கியன் ஒருவன் கையில் இல்லாமல் சொந்த நாட்டு நலனை மதிக்கும் ஒரு தியாகியின் கையில் இருந்தால் அந்த நாடு நிரந்தரப் பாதுகாப்பை அடைந்த நாடாக இருக்குமே என்று அவன் முதலில் எண்ணினாலும், அப்படிப்பட்ட நாட்டுப் பற்றுடையவன் கையில் அந்தத் துறைமுகம் மட்டுமிருந்தால் தன் எண்ணங்களும் திட்டங் களும் தவிடு பொடியாகி விடுமே என்பதை நினைத்து அக்ஷயமுனையின் அன்றைய நிலையைப் பார்த்துப் பெரிதும் திருப்தியடைந்தவனாய்ப் பெருமூச்சு ஒன்றும் விட்டான். இத்தனை பாதுகாப்பிருந்தும் பெரும் கொள்ளைக்காரர்கள் துறைமுகத்தின் முகப்பிலிருந்தும் தனது கப்பலின் கொம்புகள் ஊதியதும் அவர்கள் பயந்து பறந்தோடுவதைக் கண்டு அவன் ஆச்சரியம் சிறிதும் கொள்ளவேயில்லை. அப்படி அவர்கள் ஓடுவதற்குத் தன் வீரமும், கப்பலின் திறமையும் காரணமல்லவென்பதை அவன் சந்தேகமற உணர்ந்தே யிருந்தானாகையால் கப்பலைத் துறைமுகத்துக்குள் நன்றாகக் கொண்டுவந்து நங்கூரம் பாய்ச்ச முற்படு முன்பாக, தன் கையால் சமிக்ஞை செய்து, கப்பலின் பின்புறக் கோடியிலிருந்த இரு மாலுமி களை அருகே வரவழைத்தான்.

வந்த மாலுமிகள் இருவர் முகத்திலும் ஈயாடவில்லை. அக்ஷயமுனைக்கு வந்ததில் தங்கள் தலைவன் ஆழம் தெரியாமல் காலிட்டுக் கொண்டிருக்கிறான் என்ற

நினைப்பாலும், கப்பல் யாருடையது என்று தெரிந்த மாத்திரத்தில் அக்ஷய முனைக் கொள்ளைக்காரரும் காவலனும் அதைச் சில நிமிஷங்களில் அழித்துவிடுவார் களென்பதும், கப்பலைச் சேர்ந்தவர்கள் உடல்களிலிருந்து உயிர்கள் பயங்கர முறையில் நீக்கப்பட்டுச் சடலங்கள் கழுகுகள் கொத்த மலைப் பாறைகளில் வைக்கப்படுமென் பதையும் அறிந்திருந்த அவர்கள் முகங்களில் பெரும் கிலி பரவியிருந்தது. அந்தக் கிலியைக் கண்ட கப்பலின் தலைவன் சற்றுப் பெரிதாகவே நகைத்து, "அமீர்! கண்டியத் தேவரே! உங்கள் உள்ளங்களிலும் அச்சமிருக்கிறதென்பதை இன்றுதான் புரிந்துகொண்டேன். உங்கள் முகங்களைப் பார்த்தால் தூக்கு மேடைக்குச் செல்லும் பயங் கொள்ளி களைப் பார்க்கத் தேவையில்லை" என்றான்.

அக்ஷயமுனையின் பயங்கரத்தை அறிந்திருந்தும் அப்படி அநாயாசமாக நகைத்த தங்கள் தலைவனை ஏறெடுத்து நோக்கிய அந்த இரு மாலுமிகளில் அமீரே துணிவுடன் சொன்னான், "துணிவு அறிவை அடிப்படை யாகக் கொண்டதாக இருக்க வேண்டும், இளைய பல்லவரே" என்று.

அந்தச் சொற்களையும், அதில் தொனித்த வெறுப்பை யும் கவனித்த இளையபல்லவன் நகைப்பைச் சற்று நிறுத்திக் கொண்டானானாலும் புன்முறுவலை மட்டும் உதடுகளி லிருந்து விலக்காமலே மீண்டும் அமீரை உற்று நோக்கி விட்டு, "அறிவை மனிதன் அளவுக்கதிகமாக உபயோகப் படுத்தும்போது துணிவு விலகிவிடுகிறது. எதற்கும் அளவு வேண்டும்" என்று ஏளனம் சொட்டும் குரலில் கூறினான்.

இதைக் கேட்ட அமீரின் பெரு உடல் ஒருமுறை அசைந்தது. ராக்ஷச விழிகள் விரிந்தன. இதழ்களிலும் ஏளன நகையொன்று விரிந்தது. "அறிவு அதிகம் கூடாது

என்கிறீர்களா? அறிவாளியான நீங்களே இதைச் சொல்வது வியப்பாயிருக்கிறது எனக்கு" என்றான் அமீர்.

"அறிவுக்கு அளவு வேண்டுமென்று கூறவில்லை அமீர், அதை உபயோகப்படுத்துவதில் அளவு வேண்டு மென்று கூறினேன். அதியுக்தி ஆபத்து என்பது வடமொழிப் பழமொழி. எதிலும் அதிகப்படியைக் கைவிட வேண்டு மென்று வடமொழி சுலோகமும் இருக்கிறது" என்று இளையபல்லவன் தனது வடமொழி வல்லமையைக் காட்டினான்.

மொழி வளத்திலோ அதன் ஆராய்ச்சியிலோ சிரத்தை காட்டாத அமீர், 'இப்பொழுது எந்த அளவில் அறிவைக் காட்ட வேண்டுமென்று அபிப்பிராயப்படு கிறீர்கள்?" என்று விசாரித்தான்.

"அச்சத்தைத் தவிர்க்கும் அளவுக்கு," மிகவும் நிதானமாக வந்தது இளையபல்லவன் பதில். அவன் குரலிலும் தோரணையிலும் உதித்த நிதானத்தைக் கண்டு அமீர் மட்டுமல்ல கலிங்கத்தின் சுங்க அதிகாரியாயிருந்த கண்டியத்தேவன் கூட வியப்படைந்தான். கலிங்கத்தின் பாலூர்ப் பெருந்துறையில் கால் வைத்த முதல் நாளன்று சுங்கச் சாவடியில் தான் பீமனைப் பற்றிக் கூறியதுமே வெகுண்டு முன் கோபத்துடன் இரைந்து பலத்த ஆபத்துக் குள்ளான இளையபல்லவன் ஒரு வருட காலத்துக்குள் அடைந்துவிட்ட நிதானத்தை எண்ணி ஆச்சரியப் பட்டான். அமீர் அதற்காக மட்டும் ஆச்சரியப்படவில்லை. தனது குருநாதரான அகூதாவின் குணங்களில் சிறந்த வற்றை ஒரே வருட காலத்தில் கைக்கொண்டுவிட்ட இளையபல்லவனின் அபாரத் திறமையைப் பற்றி எண்ணியதோடு மனிதர்களைத் திறமைசாலிகளாக அடிக்க அகூதாவுக்கு இருந்த வல்லமையையும் எண்ணி வியப்படைந்தான்.

கிறிஸ்துவுக்குப் பிறகு ஏற்பட்ட சகாப்தத்தின் 1063ஆவது வருஷத்தில் கலிங்கத்தின் பாலூர்ப் பெருந் துறையில் வந்திறங்கிய இளைய பல்லவனுக்கும், சரியாக ஒரு வருஷம் கழித்துப் பெரும் மரக்கலத்தின் தலைவனாய் இணையற்ற துணிவுடன் சொர்ணபூமியின் அக்ஷயமுனைத் துறைமுகத்தில் நுழைந்து நங்கூரம் பாய்ச்ச முற்பட்ட இளைய பல்லவனுக்கும் பெரும் வித்தியாசம் இருக்கத்தான் செய்தது. ஒரு வருடத்துக்கு முன்னால் அவன் முகத்தி லிருந்த துடிப்பும் முன்கோபமும் மறைந்து அவற்றின் இடத்தைப் பெரும் நிதானமொன்று ஆக்ரமித்துக் கொண்டிருந்தது. முகத்தில் பெரும் சாந்தமும் எல்லையற்ற நிதானமும் தெரிந்தாலும் உள்ளம் சதா ஊசி முனையில் மிகுந்த எச்சரிக்கையுடனிருப்பதைப் பளிச்சு பளிச்சென்று ஜொலித்த ஈட்டி விழிகள் நிரூபித்தன. அந்த ஒரு வருடத்தில் தனக்கேற்பட்ட நிதானத்தைப் பற்றி இளையபல்லவனே ஆச்சரியப்பட்டான். அத்தனை நிதானத்துக்கும் தனக் கேற்பட்ட கப்பலோட்டும் திறமைக்கும் சீனக் கொள்ளைக் காரனான அகூதா அளித்த பயிற்சியே காரணமென்பதை அவனும் அடிக்கடி தன்னுள் சொல்லிக் கொண்டிருந்தான். அந்த ஒரு வருடத்தில் அவன் அடைந்த அனுபவங்கள் பலதரப்பட்டவை.

ஒரு வருடமாகத் தான் உயிரோடு இருப்பதே பெரும் பிரம்மப்பிரயத்தனம் என்று நினைத்தான் அவன். பாலூர்ப் பெருந்துறையில் காஞ்சனாதேவியையும், அநபாயரையும் காப்பாற்றத் தான் தன்னைப் பலி கொடுக்கத் தீர்மானித்துத் தன்னந்தனியே பீமனையும் அவன் வீரர் கூட்டத்தையும் எதிர்த்து நின்றதை நினைத்துப் பார்த்த இளையபல்லவன், அந்தப் போரில் தான் மடியப் பல தடவை வழியிருந்தும், எப்படியோ தப்பிவிட்டதை எண்ணிப் பார்த்தான். பீமன் எறிந்த வேலினால் ஏற்பட்ட காயத்தின் இரத்தப் போக்கி

னாலும் கட்டுக் கடங்காத வெறி பிடித்த அரபுப் புரவிகள் தன்னைத் தள்ளி அவற்றின் குளம்புகள் இரண்டு மண்டையில் தாக்கியதாலும் தான் மரணவேதனையுடன் மூர்ச்சையாகித் தரையில் விழுந்ததையும் சிந்தித்தான். 'அதிலேயே நான் மரணமடைந்திருக்கலாம். அப்படி மரணமடையாவிட்டாலும், பீமனின் வீரர்கள் வாள் பாய்ச்சி என்னைக் கொன்றிருக்கலாம். கொல்லவில்லை. நான் மரணமடைந்து விட்டதாக நினைத்து அவர்கள் போயிருக்க வேண்டும். இல்லையேல்....' என்று நினைத்துப் புன்முறுவல் கொண்டான்.

அப்படி நிலத்தில் குளம்படி பட்டு வீழ்ந்தபிறகு நடந்த காரியங்கள் ஏதோ சொப்பனம்போல் அவன் நினைப்பில் இருந்து கொண்டிருந்தன. குளம்படி பட்டு மூர்ச்சையான தான் இரண்டு விநாடிகளுக்கெல்லாம் மூர்ச்சை தெளிந்து எழுந்ததும், தள்ளாடித் தள்ளாடிக் குறுக்கே வந்த ஒரு வெறி பிடித்த புரவிமீது சிரமப்பட்டுத் தாவிப் படுத்துக் கொண்டதும், அந்தப் புரவி தெய்வச் செயலாக நீர்க் கரையை நோக்கி விரைந்ததும், லேசாக நினைப்பிலிருந்தது அந்த வாலிப வீரனுக்கு. அதற்குப்பின் தான் பல நாள்கள் ஸ்மரணையற்றிருந்ததையும் அந்தப் பல நாள்களில் தன்னைத் தாங்கிய அகூதாவின் பெரும் கப்பல் அலை கடலில் பாய் விரித்து ஓடிக்கொண்டிருந்ததையும் அமீர் சொல்லக் கேட்டிருந்தான் இளையபல்லவன். "இளைய பல்லவரே! அகூதாதான் உங்களைக் காத்த தெய்வம். நான் ஓட்டி வந்த வண்டிக்கு ஒருவேளை ஆபத்து நேர்ந்து தப்ப முடியாவிட்டால் நம்மை வேறு வழியில் தப்புவிக்கவும் ஏற்பாடு செய்திருந்தார் என் குருநாதர். இதற்காக, கோதாவரி சங்கமத்திலிருந்து பல அடிகள் தள்ளி ஒரு தனிப்படகையும் தன் மாலுமிகள் சிலரையும் நிறுத்தித் தானும் நின்று போரின் நிலையைக் கவனித்துக் கொண்

டிருந்தார். நீங்கள் போரில் மூர்ச்சையாகி விழுந்ததும் முரட்டுப் புரவி மீது படுத்ததும் அது கரை நோக்கி வந்ததும் எதையும் கவனிக்கத் தவறாத அவர் விழிகள் கவனித்தன. ஆகவே எங்கள் வண்டி மடக்கப்பட்டு காஞ்சனாதேவியும் அநபாயரும் தப்பியதும் எங்களைத் தன் படகுக்கு வரும்படி சைகை செய்தார். நாங்கள் ஓடினோம். அதற்குள் உங்களைத் தாங்கிய புரவியும் நீர்க்கரை வந்து திடீரெனத் திரும்பியது. நீங்கள் புரவியிலிருந்து உருண்டு விழுந்தீர்கள். அகூதா உங்களை இரு கைகளால் தாங்கிக் கொண்டார். எங்களைத் துரத்திய வீரர்களைச் சீன மாலுமிகள் வெட்டிப் போட்டனர். வெகு துரிதமாகப் படகில் உங்களையும் எங்களையும் ஏற்றிக் கொண்டு அகூதா தன் மரக்கலத்துக்கு வந்து சேர்ந்தார். மரக்கலம் நங்கூரமெடுத்துப் பாய் விரித்தது. பிறகு பல நாள்கள் நீங்கள் காய்ச்சல் வசப் பட்டீர்கள். ஏதேதோ பிதற்றினீர்கள்" என்று அமீர் ஒரு வருஷத்துக்குமுன் அகூதாவின் கப்பலில் விளக்கிச் சொன்னது அன்றும் நினைப்பில் எழுந்தது இளைய பல்லவனுக்கு. 'என்னென்ன பிதற்றினோம்!' என்று எண்ணிப் பார்த்த அவன் முகத்தில் அப்பொழுதும் மந்தகாசம் விரிந்தது. பிதற்றியதை அமீர் ஜாடை மாடையாகத்தான் சொன்னானென்றாலும் மீதியைப் புரிந்துகொள்வதில் எந்தவிதக் கஷ்டமும் ஏற்படவில்லை அந்த வாலிபனுக்கு. "ஏதோ சாளரத்துக்குள் குதித்ததைச் சொன்னீர்கள். ஆடை... ஆடை... என்றீர்கள். பிறகு கோதாவரியில் நீராடு நீராடு என்றீர்கள். ஆடை உலர்கிறது என்றீர்கள்" என இப்படிப் பிதற்றலை விவரித்தான் அமீர். ஆனால் அமீர் முழுவதையும் சொல்லவில்லையென் பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், காரணத்தை உணர்ந்து பெருமகிழ்ச்சி கொண்டான். வெளிநாட்டுப் பிரமுகர் வீதியின் மாளிகைச் சாளரத்தில் ஏறிக் குதித்த

போது தன்னெதிரே ஆடை புனைய வந்த பூங்கோதையும், கோதாவரியில் நீரில் திளைந்துவிட்டு மறைவில் ஆடை உலர்த்திய மோகனவல்லியும், கோதாவரிக் கரைக் குடிசையில் தன்னருகே நின்று நிரந்தரமாகத் தன்னை அடிமையாக்கிக் கொண்ட அந்தக் கட்டழகிக் கள்ளியும் ஒருத்தியே யென்றாலும் அவள் பல உருவங்களில் தன் மனத்தே எழுந்திருக்க வேண்டுமென்றும், சுரவேகத்தில் அவற்றைத் தான் விளக்கி வர்ணித்திருக்க வேண்டு மென்றும் விஷமியான அமீர் விஷயத்தை முழுதும் சொல்லாமல் மறைக்கிறானென்பதையும் எண்ணிய அவன் இதயத்தில் மகிழ்ச்சி நிரம்பி நின்றது.

இந்தச் சம்பவங்களும், அதையடுத்துத் தான் அகூதாவின் கப்பலில் காய்ச்சலாக இருந்து பிழைத்தபின் அகூதா தனக்குக் கப்பலோட்டவும் கப்பல் போர் புரியவும் அளித்த பயிற்சியும், நிதானத்தின் அவசியத்தை அவன் திரும்பத் திரும்ப வலியுறுத்தித் தன்னைப் பதனிட்ட திறமையையும் அந்தச் சமயத்தில் எண்ணிய இளைய பல்லவன், இத்தனை பயிற்சியுடைய தான் அக்ஷயமுனைத் தளத்தை எண்ணி அச்சப்பட அவசியமில்லையென்று நினைத்தான். சென்ற ஒரு வருட காலத்தில் சொர்ண பூமி வட்டாரங்களிலும் சீனக் கடல் வட்டாரங்களிலும் அகூதா செய்த பெரும் போர்களில் பங்கெடுத்துக் கொண்டு யாருக்கும் கிடைத்தற்கரிய பயிற்சியைப் பெற்றிருந்த இளையபல்லவன், எத்தனை எத்தனையோ அமானுஷ்ய மான காரியங்களை அகூதா செய்திருப்பதை எண்ணிப் பார்த்தான். அகூதா அத்தகைய பெரும் சாதனைகளைச் சாதிக்க முடியுமானால் தான் மட்டும் ஏன் சாதிக்க முடியாது என்று நினைத்தும் பார்த்தான். செய்ய முடியும் என்ற உறுதி அவனுக்குப் பரிபூரணமாக இருந்ததற்கு அவன் முகத்தில் காணப்பட்ட நிதானமே சான்றாக நின்றது. தன்

கப்பலின் கொம்புகள் ஊதப்பட்டதும் அக்ஷயமுனைக் கடற்பகுதியில் திரண்டிருந்த மாலுமிக் கூட்டங்களும் அவர்கள் குடும்பங்களும் ஓடியதும், கோட்டைக் கதவு பலமாகச் சாத்தப்பட்டதும், பாதுகாப்பு ஏற்பாடுகள் பலப்பட்டதையும் பார்த்த இளையபல்லவன், அகூதாவின் கொம்புகளுக்கு இருந்த பலத்தை எண்ணி மகிழ்ச்சியடைந்தது மட்டுமல்ல, பெருமிதமும் அடைந்தான்.

அந்தப் பெருமிதம் அவன் முகத்தில் தாண்டவமாடியதையும், அதன் விளைவாக, சற்றே விரிந்த வதனத்தின் கன்னத்திலிருந்த வெட்டுத் தழும்பும் நுதல் உச்சியிலிருந்த குதிரைக் குளம்புகளின் வட்டத் தழும்பும் சற்றே குறுகி அவன் முகத்துக்குப் பெரும் கம்பீரத்தை அளித்ததையும் கண்ட அமீர், "இளையபல்லவரே! அந்த மக்கள் ஓடியதால், நமது அபாயம் நீங்கிவிடவில்லை" என்று சுட்டிக் காட்டினான் ஏளனத்துடன்.

"அது தெரியும் எனக்கு" என்றான் இளையபல்லவன்.

"அவர்கள் ஓடுவது நமது மரக்கலத்தைக் கண்டு அல்ல" என்று மீண்டும் குறிப்பிட்டான் அமீர்.

"பின் எதைக் கண்டு?"

"கொம்புகளைக் கண்டு. அவற்றின் பெரும் அலறலைக் கேட்டு."

"அதுவும் தெரியும் எனக்கு."

"அகூதாவின் கப்பலிலிருந்துதான் இத்தகைய கொம்புகள் ஊதப்படுவது வழக்கம்."

"ஆம்."

"இது அகூதாவின் கப்பலென்று அஞ்சி மாலுமிகள் ஓடுகிறார்கள். அவர் பெயரைக் கேட்டாலே இந்தக் கடல் பிராந்தியத்தில் சிம்ம சொப்பனம்."

"சென்ற ஒரு வருடக் காலத்தில் அதை நானும் பார்த்திருக்கிறேன்."

"இது அகூதாவின் கப்பல் இல்லை என்று தெரிந்ததும் மாலுமிகள் படகுகளில் வந்து மரக்கலத்தை வளைத்துக் கொள்வார்கள்... அல்லது..."

"அல்லது?"

"நாம் இறங்கிச் சென்றால் நம்மை வெட்டிப் போடுவார்கள்."

"அப்படியா?"

"ஆம்."

"அதைச் சோதிப்போம்" என்று மிகுந்த நிதானத்துடன் சொன்னான் இளையபல்லவன்.

அந்தச் சோதனை பெரும் அபாயமானது என்பதை உணர்ந்த அமீரும் கண்டியத்தேவனும் திடுக்கிட்டார்கள். அதைவிடத் திடுக்கிடும்படியான செய்தியொன்றையும அடுத்துச் சொன்னான் இளையபல்லவன். "சோதிப்போம் என்பதால் சோதனையில் நீங்கள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை" என்று சற்று அழுத்தியும் சொற்களை உதிர்த்தான்.

"நீங்கள் சொல்வது புரியவில்லை" என்றான் கண்டியத்தேவன்.

"இந்தச் சோதனை என் உயிர் சோதனை. இதுதான் என் திட்டம். கவனமாய்க் கேளுங்கள்" என்று திட்டத்தை விளக்கிய இளையபல்லவன் அந்தப் பயங்கரத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகளிலும் துரிதமாக இறங்கினான். அன்றுடன் இளையபல்லவன் ஆயுள் முடிந்துவிட்டதென்றே நினைத்தார்கள் அமீரும், கண்டியத்தேவனும். அது மட்டுமல்ல, அவன் ஆயுள் முடிந்த சில நாழிகைகளில் தங்கள் ஆயுளும் முடியும் என்பதையும் திண்ணமாக

நம்பினார்கள். அதனால் அவர்கள் முகத்தில் ஏற்பட்ட கிலியையோ தன் திட்டத்தின் பலாபலன்களையோ லட்சியம் செய்யாத இளையபல்லவன், "உம்! நங்கூரம் பாய்ச்சுங்கள். நான் கரைக்குச் செல்லப் படகு ஒன்று இறக்குங்கள்" என்று இரைந்து கூவினான். அந்த உத்தர வைக் கேட்ட அமீரும் கண்டியத்தேவனும் பேயறைந்தது போல அசைவற்று நின்றார்கள். துணிவுக்கும் எல்லை யுண்டு என்று நினைத்த அவர்கள் துணிவின் எல்லையை யும் மீறி அபாய அலுவலில் இறங்கிய இளையபல்லவனின் கதியை எண்ணி எண்ணிப் பெரும் கலவரத்துக்கும் உள்ளானார்கள்.



அத்தியாயம் 3

# பிரதிக்ஞை

அகூதா அளித்த பெரும் கொம்புகள் பயங்கர மாகவே ஊதப்பட்டதால் அகூதாவே வந்துவிட்டானென்ற எண்ணத்தாலும் அந்தப் பெரும் கொள்ளைக்காரனிடம் உள்ள அச்சத்தாலுமே அக்ஷயமுனைக் கடலோடிகளும் கோட்டை வீரரும் பதுங்கிப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்கிறார்களென்ற உண்மையை விளக்கியும், வந்திருப்பது யார் என்று தெரிந்த மாத்திரத்தில் ஏற்படக்கூடிய பயங்கர விளைவை விவரித்துச் சொல்லியுங்கூட இளையபல்லவன் எதையும் லட்சியம் செய்யாமல் தன் திட்டத்தை விடாப் பிடியாகப் பிடித்துக்கொண்டதையும் மரக்கலத்தை நங்கூரம் பாய்ச்சவும், கரைக்குச் செல்லப் படகொன்றை இறக்கவும் அவன் உத்தரவிட்டதையும் கண்ட கண்டியத் தேவனும், அமீரும் பிரமிப்பின் எல்லையை மட்டுமின்றி, அவனது அளவற்ற துணிவைக் கண்டு பெரும் கலவரத்தை அடையவே செய்தார்கள். அந்தக் கலவரத்தில் ஆழ்ந்தும் விட்டதால் கண்டியத்தேவன் அடியோடு ஊமையாகி விட்டாலும் அமீர் மட்டும் கடைசி முறையாகச் சற்றுக் கடுமையாகவே எச்சரிக்கத் தொடங்கி, "இளையபல்லவர் தமது திட்டத்தின் பலாபலன்களை நன்கு உணர்ந் திருக்கிறாரென்று நினைக்கிறேன்" என்றான்.

அமீர் சம்பாஷணையைத் துவங்குமுன்பே நங்கூரம் நீருக்குள் இறக்கப்பட்டதால் திடீரெனத் தேங்கிவிட்ட கப்பலின் ஆட்டத்தில் சிறிது அசைந்த இளையபல்லவன்

அமீரின்மீது தன் ஈட்டி விழிகளை நாட்டிச் சொன்னான், "பூரணமாக உணர்ந்திருக்கிறேன் அமீர்" என்று.

"திட்டம் அபாயமானது" என்று வலியுறுத்தினான் மீண்டும் அமீர்.

"ஆனால் அவசியமானது" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன், முகத்தில் எந்தவித உணர்ச்சியும் பரவ விடாமல்.

"என்ன அவசியம் நேர்ந்திருக்கிறது இப்போது?" என்று கேட்டான் அமீர்.

இளையபல்லவன் இரு விநாடிகளில் ஏதோ யோசித்துவிட்டு, "அமீர்! இந்தக் கப்பல் நமக்கு ஏன் கொடுக்கப்பட்டது."

அமீரின் பெருவிழிகள் நன்றாக மலர்ந்து தலைவனை ஏறெடுத்து நோக்கின. "நமக்கு என்று சொல்வது பொருந்தாது தலைவரே! தங்களுக்கு என்று சொல்வது தான் தகும். பாலித் தீவின் கிழக்குப் பகுதியை அகூதா தாக்கியபோது தாங்கள் காட்டிய அபாரத் துணிவுக்கும், போர்த்திறனுக்கும் தோல்வியுற இருந்த சந்தர்ப்பத்தை வெற்றிச் சந்தர்ப்பமாக மாற்றிய உங்கள் நுண்ணறிவுக்கும், என் குருநாதர் அளித்த பரிசு இந்தக் கப்பல். இது உங்கள் சொந்த மரக்கலம்..." என்று சொல்லிக்கொண்டு போனவனைக் கைநீட்டித் தடுத்த இளையபல்லவன், "அதைக் கேட்கவில்லை அமீர், இந்தக் கப்பலை அகூதாவிடமிருந்து எதற்கு வாங்கினேன், தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும், சொந்த நாடு செல்ல" என்றான் அமீர்.

"இல்லை, அமீர் இல்லை. சொந்த நாடு செல்ல அல்ல. சொந்த நாடு செல்ல நாம் அக்ஷயமுனைக்கு வரவேண்டிய அவசியமே இல்லை" என்று திட்டமாக அறிவித்தான் இளையபல்லவன்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் அமீர் சிறிதும் வியப் படையவில்லையென்றாலும் கண்டியத்தேவன் மட்டும் பிரமிப்புக்குள்ளாகி, “என்ன! சொந்த நாடு செல்ல அல்லவா?” என்று வார்த்தைகளை உதிர்த்தான்.

“அல்ல.” உறுதியுடன் வந்தது இளையபல்லவன் பதில்.

“பின் எதற்கு இந்த மரக்கலம்? ஏன் அக்ஷயமுனை வந்தோம்?” ஏமாற்றமும் திகிலும் நிரம்பி நின்றன கண்டியத் தேவன் கேள்வியில்.

“நாட்டுப் பணிக்காக இந்த மரக்கலத்தைப் பெற்றேன். நாட்டுப் பணியை முன்னிட்டே இங்கு வந்தேன்” என்றான் இளையபல்லவன்.

“நாட்டுப் பணிக்கு இங்கு வருவானேன்?” என்று வினவினான் கண்டியத்தேவன்.

“இதுதான் அதற்குச் சரியான இடம்.”

“கொள்ளைக்காரர் இருக்கும் இந்த அக்ஷய முனையா!”

“ஆம்”

“ஏன்?”

“நாமும் கொள்ளையடிக்கலாம்.”

“சோழர் படைத்தலைவருக்கு அந்த ஆசை வேறு இருக்கிறதா?”

“அது மட்டுமல்ல...”

“அடுத்த சேவை எது?”

“எதிரிகளின் கப்பல்களைக் கொளுத்தவும் கொளுத்த லாம்.”

“மிகச் சிறந்த பணிதான்” என்ற கண்டியத்தேவன் குரலில் ஏளனமிருந்தது. ஆனால் அதை ஒப்புக்கொண்டு பதில் கூறிய இளையபல்லவன் குரலிலோ முகத்திலோ

ஏளனமுமில்லை, இகழ்ச்சிக் குறியுமில்லை. எதிரில் பற்பல வித சிந்தனைகளுடன் நின்றிருந்த அமீரையும் கண்டியத் தேவனையும் தன் கண்களால் சில விநாடிகள் ஆராய்ந்து விட்டு, "முன்பே உங்களிருவரிடம் நான் என் குறிக் கோளைத் தெரிவித்திருக்க வேண்டும்" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்துச் சற்றே தாமதித்த இளையபல்லவன், "அமீர்! தீவிர யோசனைக்குப் பின்பே நான் இந்த முடிவுக்கு வந்தேன். அதுவும் நமது எதிரிகள் நிலத்தில் மட்டுமின்றி நீர்ப்பரப்பிலும் நமக்குச் சென்ற வருடத்தில் விளை வித்துள்ள அநீதிகள் அனந்தம். தென் கலிங்கத்தின் அநீதியிலும் கொடுமையிலும் தமிழர்கள் வாடுகிறார்கள். சோழ நாட்டுக் கப்பல்களுக்கும் பாலூர் பெருந்துறையில் பீமன் இடம் கொடாதது மட்டுமல்ல, கலிங்கத்தின் மரக்கலங்களைக் கொண்டு ஸ்ரீவிஜயத்தின் நீர் வழிகளிலும் தமிழர் கப்பல்களுக்குப் பெரும் இடைஞ்சல் விளைவித்து வருகிறான். அகூதாவின் கப்பலையே கடாரத்துக்கருகில் கலிங்கத்தின் மரக்கலம் ஒன்று மடக்கியதை நாம் பார்க்க வில்லையா?" என்றான்.

மெள்ள மெள்ள இளையபல்லவனின் நிலை அமீருக்குப் புரியலாயிற்று. "ஆம், ஆம். பார்த்தோம்" என்றான் பதிலுக்கு.

"கலிங்கத்தின் மரக்கலங்கள் தமிழகத்தின் இரண்டு மூன்று சிறு கப்பல்களை நாசம் செய்ததாகவும், தமிழ் மாலுமிகளைச் சிறைப் பிடித்ததாகவும் செய்தி கிடைக்க வில்லையா?" என்று மீண்டும் கேட்டான் இளைய பல்லவன்.

"ஆம். அந்தச் செய்தி பாலித் தீவில் இருக்கையில் கிடைத்தது" என்றான் கண்டியத்தேவன்.

இளையபல்லவன் இருமுறை தளத்தில் உலாவி விட்டு அந்த இருவர் எதிரிலும் நின்றான். "அன்று தீர்மானித்தேன். கலிங்கத்தின் கடற்படைப் பலத்தை

என்னால் முடிந்த வரையில் முறிப்பதென்று. முறிப்பது மட்டுமல்ல, ராஜராஜ சோழர் காலத்திலும், ராஜேந்திர சோழ தேவர் காலத்திலுமிருந்த தமிழர்களின் கடலாதிக் கத்தை மீண்டும் நிலை நிறுத்துவதென்றும் அன்றே பிரதிக்ஞை செய்தேன். அந்தப் பிரதிக்ஞையை நிறை வேற்றவே இந்த அக்ஷயமுனை வந்தேன். இங்கு நமது கப்பலை நல்ல பலமுள்ளதாகச் செய்து பழுதும் பார்ப் போம். புதுப் புது விதப் போர்க்கலங்களை இதில் பொருத்து வோம்! பிறகு கடலோடுவோம்! கடலோடி, கலிங்கக் கப்பல்களை மறிப்பதற்கும், பிடிப்பதற்கும், அழிப்பதற்கும் கடலில் முகத்தை நீட்டிக் கொண்டிருக்கும் இந்த அக்ஷய முனையைத் தவிர வேறு சிறந்த இடம் கிடைப்பது கஷ்டம்" என்று விளக்கவும் செய்தான் சோழர்களின் படைத் தலைவன்.

"தங்கள் திட்டத்துக்குத் தேவையான மாலுமிகள் இல்லையே" என்றான் அமீர்.

"இப்பொழுது ஐம்பது பேர் நம் மரக்கலத்தில் இருக்கிறார்கள்?" என்றான் இளையபல்லவன்.

"இன்னும் நூறு பேர் வேண்டும்" என்றான் அமீர்.

"அதோ கடற்கரைக் குடிசைகளிலிருக்கும் கொள் ளைக்காரர்களிலிருந்து பொறுக்கிக் கொள்வோம்" என்று பதில் கூறினான் இளைய பல்லவன்.

இந்தச் சமயத்தில் குறுக்கிட்ட கண்டியத்தேவன், "இளையபல்லவரே! அவர்கள் கொள்ளைக்காரர்கள் என்பதைக் கவனிக்க வேண்டும்" என்றான் இடை மறித்து.

"இருந்தாலென்ன?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"கொள்ளையடிப்பார்கள்."

"கலிங்கத்தின் கப்பல்களைத்தானே?"

"ஆம். கொள்ளையில் பங்கும் கேட்பார்கள்!"

"கலிங்கத்தின் பொருளில்தானே?"

திருப்பித் திருப்பிச் சட்டென்று இளையபல்லவன் சொன்ன பதில்களைக் கேட்ட கண்டியத்தேவன் பெரும் பிரமிப்புக்குள்ளானான். பிரமிப்பின் குறி மட்டுமல்ல, பெரும் இகழ்ச்சிக் குறியும் அவன் முகத்தில் பரவலாயிற்று. "இதை வீரராஜேந்திரர் ஒப்புக்கொள்வாரா?" என்றும் வினவினான் அவன், வெறுப்பு குரலிலும் தொனிக்க.

இளையபல்லவன் முகத்தில் கிலேசத்தின் சாயை லேசாக ஒரு விநாடி படர்ந்து பிறகு நீங்கியது. "வீர ராஜேந்திரர் தர்மவான். நல்லெண்ணமுள்ளவர். ஆனால் பாவம் அவர் நினைப்பதெல்லாம் நடப்பதில்லை. கலிங்கத்துடன் சமாதானத்தை நாடி, சமாதான ஓலை கொடுத்துத்தான் என்னைப் பாலூர்ப் பெருந்துறைக்கு அனுப்பினார். ஆனால் அங்கு கிடைத்தது போர். கடற் பிராந்தியத்தில் அமைதியான வர்த்தகத்தை விரும்புகிறார். ஆனால் இங்கு நடப்பது தமிழக மரக்கலங்களின் அழிவு. இன்னும் சில நாள்கள் கலிங்கத்தின் அட்டூழியங்களை நடக்க அனுமதித்தால் ராஜராஜரும் ராஜேந்திரரும் ஏற்படுத்திய தமிழர் கடலாதிக்கம் மறைந்துவிடும். கலிங்கமும் இந்து ஸ்ரீவிஜயமும்தான் தலையெடுக்கும். சோழ சாம்ராஜ்யத்தைக் கண்டு நடுங்கிய இந்த இரு நாடுகளுக்கும் துணிவு அபரிமிதமாகும். அதை ஒடுக்கவே நான் திட்டமிட்டிருக்கிறேன். இன்று என் கையில் இருப்பது ஒரு கப்பல். இன்னும் சில நாள்களில் பல மரக்கலங்கள் இங்கு நம் ஆதிக்கத்தில் நிற்கும். அதற்கு அஸ்திவாரம் போடவும், அக்ஷய முனைத் தலைவனை ஆசை காட்டி நம் வலையில் இழுக்கவும் இங்கு வந்தேன். நீங்கள் கப்பலைப் பார்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிரமிக்கும்படியான செய்தியுடன் திரும்புகிறேன்," என்று கூறிய இளைய பல்லவன் விடுவிடு என்று கப்பலின் மேல் தளப் படிகளி

லிருந்து இறங்கித் தன் அறைக்குச் சென்று ஒரு நாழிகை கழித்துத் திரும்பி வந்தான். அப்படி வந்தவன் மிகப் படாடோபமாகப் புது உடை அணிந்திருப்பதை அமீரும் கண்டியத்தேவனும் கவனித்தார்கள். அவன் கச்சையி லிருந்து அழகிய சிறு பையொன்று தொங்கிக் கொண் டிருந்ததையும் கவனித்தார்கள். அந்தப் பையில் இருந்தது என்ன என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது மட்டுமின்றி, அதனால் பெரும் பலன் உண்டென்பதையும் அவர்கள் அறிந்தே இருந்தார்கள்.

கண்டியத்தேவனை விட அமீர் நிலைமையை வெகு திட்டமாக அறிந்திருந்தான். கொள்ளைக்காரர் சுபாவம் விசாரிக்காமல் யாரையும் ஒழித்துவிடுவது என்பதை அறிந்திருந்ததால் இளையபல்லவனின் திட்டத்தைக் கேட்கவோ சர்ச்சை செய்யவோ யாரும் தயாராயிருக்க மாட்டார்களென்பதை அவன் புரிந்து கொண்டிருந்தா னாகையால், "இளையபல்லவரே! கரைக்கு நீர் போக வேண்டாம். கோட்டைத் தலைவனோடு பேசவேண்டு மென்றால் நான் போய் வருகிறேன்" என்றான்.

"என்னைவிட நீ சிறந்தவனா?"

"உங்களைவிடக் கொள்ளைக்காரர் சுபாவத்தை நான் நன்றாக அறிந்தவன். உங்களுக்கு முன்பே நான் அகூதாவின் சீடன்."

"கொள்ளை அதிபரின் பிரதம சீடருக்கு வணக்கம். இருப்பினும் இதை நானே செய்து முடிக்க இஷ்டப் படுகிறேன்." என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே நூலேணி வழியாக மரக்கலத்திலிருந்து இளையபல்லவன் படகில் இறங்கவே படகு கரையை நோக்கி விரைந்தது. அமீரும் கண்டியத்தேவனும் மரக்கலத்திலிருந்தே கரையில் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

படகு கரையை அடைந்ததும் இளையபல்லவன் மிகுந்த நிதானத்துடன் கரையில் இறங்கி, சாவதானமாக மணலில் நடந்து கோட்டையை நோக்கித் தன்னந்தனியே சென்றான். தன்னந்தனியே ஒரு மனிதன் வந்ததால் பயத்தை இழந்த குடிசை மக்கள் பெரும் கூச்சலுடன் கூட்டமாக அவனை நோக்கி ஓடி வந்தார்கள். அந்தக் கணமே அவன் ஆயுள் முடிந்துவிடுமென்று நினைத்துக் கப்பலில் நெஞ்சு திடுக்கிட நின்ற அமீரும் கண்டியத் தேவனும் பெரும் ஆச்சரியத்துக்குள்ளானார்கள். இளைய பல்லவன் ஏதோ சொன்னதைக் கேட்டதும் மந்திரத்தால் கட்டுப்பட்டவர்கள் போல் கொள்ளைக்காரர் அவனைத் தொடர்ந்து செல்வதை இருவரும் கவனித்துப் பிரமிப்புக் குள்ளானார்கள். அந்தப் பிரமிப்பு அடுத்த அரை நாழிகையில் விலகியது. அவர்கள் எதிர்பார்த்தது நடந்தே விட்டது. கோட்டை மதில்களிலிருந்து பறந்து வந்த பெரும் விஷ அம்பு இளையபல்லவன் இதயத்தில் வெகு வேகமாகப் பாய்ந்தது. அதைக்கண்ட கொள்ளைக்காரர் பெரும் கூக்குர லிட்டார்கள்.

அமீரும் கண்டியத்தேவனும் இளையபல்லவன் கதியை நினைத்து மனம் உடைந்து நின்றார்கள். கலிங்கத்தை அழிக்க அவன் செய்த பிரதிக்ஞை, அவன் ஆயுளை அத்தனை அற்ப ஆயுளாகவா அடிக்க வேண்டும் என்று ஏங்கவும் செய்தார்கள்.

அத்தியாயம் 4

# சொப்பனமா!

அக்ஷயமுனைக் கோட்டைத் தளத்திலிருந்து அதி துரிதமாக வீசப்பட்ட விஷ அம்பு இளையபல்லவனின் மார்பில் தைத்ததும் அது அவன் உயிரைக் குடித்து விட்டதாகவே எண்ணித் துடிதுடித்த அமீரும் கண்டியத் தேவனும் அடுத்த விநாடி வியப்பின் எல்லை வசப்பட்டுத் தங்கள் கண்களையே நம்பாமல் ஏதோ இந்திர ஜாலத்தைப் பார்ப்பது போல் கரையைப் பார்த்து வாயைப் பிளந்து கொண்டு கப்பல் தளத்தில் நின்றார்கள். சென்ற ஒரு வருடத்தில் அகூதாவிடம் இளையபல்லவன் மரக்கலப் போர்க் கலையை மட்டும்தான் கற்றானா அல்லது மந்திரமும் கற்றானா என்ற எண்ண அலையில் புரண்ட அவர்கள், அவனது ஆயுள் அற்ப ஆயுளாக அடிக்கும் சக்தி உலகில் இல்லையென்று தங்களுக்குள்ளேயே சொல்லிக் கொண்டார்கள். விஷ அம்பிலிருந்தும் தப்பி, கோட்டையை நோக்கி அலட்சியமாக மேலும் நடந்த படைத் தலைவனின் துணிவு பயங்கரத் துணிவாகவேபட்டது, அவ்விருவரின் பதைபதைத்த உள்ளங்களுக்கு.

ஆனால் கோட்டைக்குள் செல்லத் தீர்மானித்த விநாடியிலிருந்து இளையபல்லவன் மட்டும் பின்னேற் படும் அபாயங்களை முன்கூட்டியே யோசித்துவிட்டா னாகையால் சிறிதளவும் அச்சமில்லாத இதயத்தினனாய், நிதானம் லவலேசமும் கலங்காதவனாய், தனது பயணத் துக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்து கொண்ட பின்பே கப்பலை விட்டுக் கிளம்பினான். அவன் கப்பலின் மேல்தளத்திலிருந்தபோது மார்பைப் பாதி திறந்து காட்டிய

அரை அங்கியை அணிந்திருந்தாலும் தனது அறைக்குப் போய்ப் பிரயாணச் சித்தனாய் வந்தபோது கழுத்திலிருந்து முழந்தாள்வரை தொங்கிய உடலைப் பூரணமாக மறைத்து நின்ற ராஜரீக உடையையே அணிந்திருந்தான். அதுவும் தன் வசமிருந்த உடைகளில் பெரும் சரிகை வேலைப்பாடுகள் செய்யப்பட்ட மிகவும் படாடோபமான உடையையே பொறுக்கி அணிந்திருந்தான். அந்த உடையின் கச்சையும், விலையுயர்ந்த மணிகளும் முத்துகளும் பதிப்பிக்கப் பெற்றிருந்ததன்றி, கச்சையில் செருகப்பட்டிருந்த சிறு வாளின் பிடியிலும் ரத்தினங்கள் இழைக்கப்பட்டிருந்தன. அந்தக் கோலத்திலிருந்த ஒரே பழைய அம்சம் அவன் வாள் ஒன்றுதான். சென்ற ஒரு வருட காலத்தில் பல போர்களைக் கண்டிருந்த அந்த வாளை மட்டும் மாற்றாமல் மற்ற சகலத்தையுமே மாற்றிக்கொண்டு பெரும் தோரணையுட னேயே அவன் கப்பல் தளத்திலிருந்து கிழிருந்த படகில் இறங்கினான். எப்பொழுதும் அதிக படாடோபத்தை விரும்பாத கருணாகர பல்லவன் அன்று படாடோபத்தின் சின்னமாய் விளங்கியதைக் கண்டு பிரமிப்பும் வியப்பும் கொண்டதல்லாமல் எதிர் நோக்கியிருந்த ஆபத்தை முன்னிட்டு, கலவரமும் அடைந்த அமீரும் கண்டியத் தேவனும் அவன் போவதைக் கண்டு அசைவற்று நின்று கொண்டிருந்தார்கள்.

அவர்கள் கலவரத்தையோ, எதிர்நோக்கியிருந்த ஆபத்தையோ, சிறிதளவும் பொருட்படுத்தாமல், கப்பலின் நூலேணி மூலம் படகிலிறங்கி அதில் இருந்த இரு மாலுமி களையும் படகைக் கரையை நோக்கிச் செலுத்துமாறு உத்தரவிட்டான் இளையபல்லவன். படகு சென்று கொண்டே இருக்கையில் மீண்டுமொருமுறை அந்தத் துறைமுகத்தின் அமைப்பையும், கோட்டையின் அமைப் பையும் நன்றாகக் கவனித்தான். அதன் பெரும் பாதுகாப்புகளையும் பலத்தையும் அவன் ஏற்கெனவே எடை போட்டிருந்தானாகையால் படகில் சென்ற

சமயத்தில் அவன் கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் இன்ப மான காட்சிகள்தான். அவனது மரக்கலம் துறை முகத்துக்குள் வந்து நங்கூரம் பாய்ச்சிப் படகில் இறங்கு வதற்குச் சுமார் இரண்டு நாழிகைகளுக்கு மேல் பிடித் திருந்தபடியால் அதிகாலையிலிருந்த பெரும் உஷ்ணம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகி, எங்கும் பெரும் ஒளியையும் பெரும் திகைப்பையும் ஏற்படுத்தியிருந்ததால், கடலலைகள் தரையருகில் வருமுன்பாக மடிந்து மடிந்து ஏற்படுத்திய பெரும் திரைகள் பிரமாதமான ஒலியைப் பெற்றுக் கண்ணைப் பறித்தன. அத்துடன் படகிலிருந்த வண்ணம் பக்கத்து நீரில் கைவைத்த இளையபல்லவன் அதுவும் லேசாக உஷ்ணப்பட்டிருந்ததைக் கண்டு 'இத்தகைய உஷ்ணத்திலும் பலமான ஜீவராசிகள் வளரு கின்றனவே!' என்று ஆச்சரியத்துடன் தனக்குள் சொல்லிக் கொண்டிருந்த சமயத்தில் பலமான வாளை மீன் ஒன்று அலை மட்டத்தில் துள்ளியெழுந்து மீண்டும் நீரில் மூழ்கியதைக் கவனித்தான். அதைத் தவிர அத்தனை கடலோசையையும் பிளந்துகொண்டு பகிட்பாரிஸான் மலைக்காட்டுப் பகுதியிலிருந்து துஷ்ட மிருகங்களின் கர்ஜனைகளும் கேட்பதைக் காதில் வாங்கிய இளைய பல்லவன், "உஷ்ணம் உயிரைக் குடிப்பதில்லை: உயிரை அளிக்கவே செய்கிறது; உயிரை அளிப்பது மட்டுமல்ல, உடலைத் திடமாகவும் அடிக்கிறது" என்று சொல்லிக் கொண்டவன் அதற்கு அத்தாட்சி கடலிலும் மலையிலும் மட்டுமில்லாது கடற்கரையிலும் கிடப்பதைக் கண்டான்.

தனது படகு தன்னந்தனியாக வருவதைக் கண்டதும் கடற்கரைக் குடிசை வட்டாரங்களில் நடவடிக்கை துரிதமாக ஏற்பட்டதையும், மூடிய குடிசைக் கதவுகள் திறக்கப்பட்டதையும் அவற்றிலிருந்து திடகாத்திரமான தலைகள் எட்டிப் பார்த்ததையும் கண்ட இளையபல்லவன், 'நல்ல பலத்தை இந்த அக்ஷயமுனை உஷ்ணம் கொடுக்கத் தான் செய்கிறது. நல்லவேளை அதிக தைரியத்தை மட்டும் கொடுக்கவில்லை. கொடுத்திருந்தால் நாம் தப்புவது பெரும்

கஷ்டம்' என்று தனக்குள் எண்ணமிட்டுச் சிறிது புன் முறுவலும் கொண்டான். எதிரே பிரிவு பிரிவாக இருந்த குடிசைகளில் வசித்திருந்த கொள்ளைக்காரரின் உரத்தை அவன் ஓரளவு எடை போட்டுவிட்டதால் சிறிதும் லட்சியம் செய்யாமலே படகில் உட்கார்ந்து படகுக்கும் நாவாய்க்குமிடையிலிருந்த தூரத்தைக் கடந்ததன்றி, படகு கரையை அடைந்ததும் அந்த அலட்சியத்துடனேயே கரையில் குதித்து, "படகைத் திருப்பி மரக்கலத்துக்குக் கொண்டு செல்லுங்கள்" என்று தனது வீரர் இருவருக்கும் கட்டளையிட்டுத் தான் மட்டும் தனியாகக் கோட்டையை நோக்கி நடக்கலானான். அப்படி நடந்த சமயத்தில் அவன் எதையும் கவனிக்காதவன்போல், நடந்துகொண்டாலும் அவன் கண்கள் எதிர்நோக்கி வந்த ஆபத்தின் ஒவ்வோர் அசைவையும் கவனித்துக் கொண்டுதானிருந்தன.

அக்ஷயமுனைத் துறைமுகத்துக்குள் கப்பல் நுழைந் ததும் ஊதப்பட்ட கொம்புகளால் அதை அகூதாவின் கப்பலென்று நினைத்து ஓடி ஒளிந்த அக்ஷயமுனைக் கடலோரக் குடிசை வாசிகள் தூரத்தில் தங்கள் குடிசை களிலிருந்து கப்பலில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் கவனிக்கத் தவறவில்லையாகையால், கப்பல் நங்கூரம் பாய்ச்சியதையும் அதன் தளத்திலிருந்து அகூதாவின் தோற்றத்துக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத ஒரு வாலிபன் படகிலிறங்கியதையும் பார்த்ததும், தாங்கள் வீண் கலவரப் பட்டுவிட்டதை உணர்ந்துகொண்டார்கள். அத்துடன் அந்த மரக்கலத்தின் வாலிபத் தலைவன் தன்னந்தனியே படகில் கரை நோக்கி வந்ததும், அவர்களுக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் அச்சமும் நீங்கிவிடவே அவர்கள் குடிசைகளை விட்டு வெளிவந்தனர். தனித்தனியான குடிசைக் கூட்டங்களிலிருந்து திடுதிடுவென்று வெளிப் போந்த அந்த நானாவிதத் தோற்றமுள்ள பல நாட்டுக் கொள்ளைக்காரர்கள் திடீரெனப் பெருங் கூச்சலிட்டு, கத்திகள், பெரும் ஈட்டிகள், பின் புறத்திலிருந்து மண்டை

யில் தாக்கக்கூடிய வயிரம் பாய்ந்த மரக் கட்டைகள் முதலிய ஆயுதங்களுடன் கரையை நோக்கி விரைந்து வந்தார்கள். வந்தது அவர்கள் மட்டுமல்லாமல் அந்தக் குடிசையிலிருந்த பல நாட்டுப் பெண்களும் அவர்களுடன் ஓடி வந்தார்கள். மனிதக் கதம்பம்போல் பல வர்ணங் களுடன் தூரத்தே வந்த அந்தக் கூட்டத்தைக் கவனித்தும் அதைப்பற்றிச் சிறிதளவும் சிந்திக்காதவன் போல் மணலில் அவர்களை நோக்கி நடந்தான் இளையபல்லவன்.

அந்தக் கொள்ளைக்காரர்கள் பலப்பல பிரிவுகளாக இருந்த குடிசைகளிலிருந்து தனித்தனிக் கூட்டங்களாகப் பிரிந்து கிளம்பினாலும் சற்று தூரத்தில் ஒன்று சேர்ந்து விட்டதன்றி, நானாவிதக் கூச்சலுடனும், கேலிச் சிரிப் புடனும் வெகு வேகமாக இளையபல்லவனை அணுகி னார்கள். அப்படி அணுகிய அந்த மனித அலை, இளைய பல்லவனை நெருங்கியதும் நல்ல மலைப் பகுதியைத் தாக்கும் கடலலை போலச் சிறிது உடைந்து பின்வாங்கியது. அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் முன் பகுதியிலிருந்த வர்கள் தங்கள் கூட்டத்தைப் பார்த்தும், ஆயுதங்களைப் பார்த்தும், சிறிதும் லட்சியம் செய்யாமல் வரும் அந்த வாலிபனின் துணிவைக் கண்டு சிறிது தயங்கினார்கள். அந்தத் தயக்கத்தின் விளைவாகக் கூட்டமும் சிறிது திடீரெனத் தேங்கியது. முன்வரிசை தேங்கியதால் பின் வரிசைகள் சிறிது சலனப்பட்டன. அத்தனையையும் கவனிக்கத் தவறாத கருணாகர பல்லவன், அவர்களை ஒருமுறை தன் கூரிய கண்களால் அளவெடுத்தான்.

கூட்டத்தில் பல நாட்டுச் சாதிகளிருப்பதையும், ஆனால் நெறி மருந்துக்குக்கூட அவர்களிடமில்லாததையும் அவர்கள் முகபாவத்திலிருந்தே அறிந்த சோழநாட்டுப் படைத்தலைவன் கூட்டத்தின் உட்புறத்திலிருந்த பல நாட்டுப் பெண்கள் மீதும் கண்களை ஓட்டி அவர்களில் பெரும்பாலோர் பிற நாடுகளிலிருந்தும் பிற நாட்டுக்

கப்பல்களிலிருந்தும் கவரப்பட்டு வந்தவர்களென்பதையும், கற்புக்கும் அவர்களுக்கும் அதிக சம்பந்தமிருக்க முடியா தென்றும் தீர்மானித்துக் கொண்டான். அத்தனை பெண் முகங்களிலும் சில தூய முகங்களிருப்பதையும் கண்டு, "உலகத்தில் எங்கும் எப்பொழுதும் தூய்மைக்கும் இடமிருக் கிறது" என்று சொல்லிக் கொண்டான். முன்னணியில் தன் எதிரே ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டு நின்ற கொள் ளைக்காரர்கள் குறை எதுவாயிருந்தாலும் அச்சம் அந்தக் குறைகளில் ஒன்றல்ல என்பதைத் திட்டமாக உணர்ந்து கொண்டான் சோழர்களின் படைத்தலைவன். அந்த முகங்களில் தன்னைக் கண்டதால் சற்றுக் குழப்ப மிருந்ததேயொழிய அச்சத்தின் சாயை சிறிதுமில்லாததைக் கவனித்து, தான் சிறிது நிதானம் பிசகினாலும் தன் உயிர் செல்லாக் காசு பெறாதென்பதையும் தீர்மானித்துக் கொண்டான். கொம்புகள் ஊதப்பட்டதும் அவர்கள் ஓடி ஒளிந்து கொண்டதற்குக் காரணம் அச்சமேயென்றாலும் பெரும் படைகளே கேட்டு அஞ்சிய அகூதாவின் கொம்பு களின் சப்தத்தை அந்தக் கொள்ளைக்காரர்கள் செவி மடுத்துப் பயப்பட்டது பெரும் அச்சத்தின் அறிகுறியாகாது என்பதையும் புரிந்துகொண்டான்.

கொள்ளைக்காரர்களின் பலாபலத்தை இப்படி எடை போட்டுக் கொண்ட இளையபல்லவன், அவர்கள் தன்னை அணுகியதும் அவர்களைக் கூர்ந்து ஒருமுறை நோக்கினான். பிறகு அவர்கள் கைகளிலிருந்த பலவித ஆயுதங்களை நோக்கினான். "தனி மனிதனைக் கொல்ல எதற்கு இத்தனை ஆயுதங்கள்?" என்று படைத்தலைவன் ஒருவன் தன் வீரர்களைக் கேட்கும் அதிகாரத் தொனியில் அந்தக் கொள்ளைக் கூட்டத்தை நோக்கிக் கேட்டான்.

அவன் தோரணையையும் கேள்வியில் தொனித்த அதிகாரத்தையும் கண்ட கொள்ளைக்காரர்கள் ஒரு விநாடி

மிரண்டனர். பிறகு அவர்களில் ஒரு தமிழன், "நீ யார்?" என்று பதில் கேள்வியொன்றை வீசினான்.

"உங்களில் ஒருவன்" என்றான் இளையபல்லவன் தீர்க்கமான, நிதானமான குரலில்.

"உங்களில் ஒருவனா?" ஆச்சரியத்துடன் அந்தக் கொள்ளைக்காரன் மறுமுறையும் கேட்டான்.

அடுத்த விநாடி அந்த முன்னணிக் கொள்ளைக் காரனுக்குப் பின்னாலிருந்து, "பொய்! பொய்! அவன் உடையைப் பார்" என்று பல குரல்கள் எழுந்தன. இதை யடுத்து அர்த்தமில்லாத கூச்சலும் மிரட்டலும் அந்தக் கொள்ளைக்காரர்களிடமிருந்தும் அங்கிருந்த பெண்களிட மிருந்தும் கிளம்பின. "அவனைக் கொல்லுங்கள், கொல் லுங்கள்!" என பலமான கூச்சல்கள் கடலலைகளையும் அடக்கும் வகையில் எழுந்தன. அத்தனைக்கும் அசை யாமல் நின்ற இடத்திலேயே நின்றான் இளையபல்லவன். அவனது கூரிய விழிகளில் ஏளன ஒளி மண்டிக் கிடந்தது. அந்தக் கூக்குரலைக் கேட்டு அவன் கை அவன் பெருவாளையோ, கச்சையிலிருந்த சிறு வாளையோகூட நோக்கிச் செல்லாததைக் கண்ட கொள்ளைக்காரர் குழப்படைந்தனர். அடுத்தவிநாடி பேசாமலே அவர்களை நோக்கி இரண்டடி முன்னெடுத்து வைத்தான் இளைய பல்லவன். சிங்கத்தைக் கண்டு பின் வாங்கும் ஆட்டு மந்தை போல அந்தக் கொள்ளைக்கூட்டம் பின்வாங்கியது. "குலைக்கிற நாய்கள் கடிப்பதில்லை" என்று சீற்றத்துடன் கூவிய இளையபல்லவன் சட்டென்று நின்றான். அந்த கூட்டமும் நின்றது. கூச்சலும் மந்திரத்தில் கட்டுப்பட்டது போல் நின்றது.

சென்ற ஒரு வருடத்தில் அகூதாவிடமிருந்து மனோ தத்துவ சாத்திரத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருந்தான் அந்த வாலிப வீரன். "பெரும் கூட்டங்களை ஆயுத பலத்தால் சமாளிக்க முடியாது. புத்திபலத்தாலும் உறுதி

யாலும் சாமர்த்தியத்தாலுமே சமாளிக்க முடியும்" என்று அகூதா பலமுறை கூறியிருப்பதை அந்தச் சமயத்தில் நினைத்துக்கொண்ட இளையபல்லவன் அந்தக் கொள்ளைக்காரர்களில் முதலில் பேசிய தமிழனை அருகே அழைத்து, "இவர்களுக்குச் சொல் நான் அகூதாவின் உபதலைவன் என்று. அகூதாவை விட்டு விலகிவிட்டேன் என்பதையும் தெரிவி!" என்று உத்தரவிட்டான்.

அந்தப் பிராந்தியத்தில் அதிகமாகப் பரவியிருந்த •காவி பாஷையில் அதை மொழி பெயர்த்தான் அந்தத் தமிழன். பதிலும் காவி பாஷையிலேயே வந்தது. "இங்கு ஏன் வந்தான்?" என்று மீண்டும் பல குரல்கள் கிளம்பின. அதையும் மொழிபெயர்த்தான் தமிழன்.

"உங்களுடன் வசிக்க. உங்கள் உதவியைப் பெற. உங்களுக்கு அளவற்ற செல்வத்தையும் அளிக்க. உங்களுக்குத் தெரியுமா பெரும் பொருளை ஏற்றிக்கொண்டு கலிங்கத்துக் கப்பலொன்று செல்லப்போகிறதென்று!" என்று வினவினான் படைத்தலைவன்.

இது மொழிபெயர்க்கப்பட்டதும் அந்தக் கூட்டத்தின் பயங்கரக் கூச்சலுக்குப் பதில் களிவெறிக் கூச்சல் எழுந்தது. பொன்னை எதிர்பார்த்ததால் ஏற்பட்ட வெறி அவர்கள் எதிர்ப்பை நிமிட நேரத்தில் நட்பாக மாற்றவே அவர்களில் சிலர் அவனைக் கட்டிக் கொண்டார்கள்; அவன் இஷ்டப் பட்டிருந்தால், அவனைத் தூக்கிக்கொண்டும் கோட்டைக்குச் சென்றிருப்பார்கள். இளையபல்லவன் அதை அனுமதிக்காமல் அவர்களை விலக்கிக்கொண்டு, முன்னே நடந்தான். அவர்கள் கூச்சலிட்டுக் கொண்டும், ஆடிப்

• காவி என்பது சொர்ண பூமியின் பகுதிகளில் பேசப்பட்ட ஒரு பாஷை. அதில் சமஸ்கிருத வார்த்தைகள் அதிகம் — The Dutch East by, J. Macmillan Brown.

பாடிக் கொண்டும் அவனைப் பின் தொடர்ந்து சென் றார்கள்.

வானைப் பிளந்த அவர்கள் களிவெறிக் கூச்சல் திடீரென நின்றது. கோட்டை மீதிருந்து வீசப்பட்ட விஷ அம்பு அவன் மார்பில் பாய்ந்ததும் கூச்சல் ஸ்தம்பித்தது. பயத்தின் மூச்சுக்காற்று மட்டும் 'ஹா' என்ற சப்தத்துடன் எழுந்தது. அடுத்த விநாடி அதுவே ஆச்சரியத்துக்கு அடிகோலியது. விஷ அம்பு மார்பில் தைத்திருக்க, கண்ணிமைக்கும் நேரம் நின்ற கருணாகர பல்லவன் தள்ளாடித் திடீரென விழுவானென்று அவனைப் பிடிக்கப் போன இரு கள்வரும் அவன் உதடுகளிலிருந்து உதிர்த்த திடீர்ச் சிரிப்பைக் கேட்டுத் திகைத்தனர். அடுத்த விநாடி அந்த அம்பை மார்பிலிருந்து பிடுங்கி அலட்சியமாக அவன் எறிந்துவிட்டு மேலே நடக்க முற்பட்டதையும் அம்பு தைத்த இடத்தில் சிறிது ரத்தம்கூட வராததையும் கண்டு பெரும் பயமும் வியப்பும் அடைந்தனர் கள்வர். அதன் விளை வாகச் சிலர் அவனைத் தொடர்ந்தனர்; சில்ர் கைகளை ஆகாசத்தில் ஆட்டி மேற்கொண்டு அம்பு வீச வேண்டா மென்று கோட்டைக் காவலருக்கு எச்சரித்தார்கள். அத்துடன் ஏதோ மந்திரத்தால் வசப்பட்டவர்கள் போல் தேவபுருஷனைத் தொடரும் மானிடப் பிறவிகளென இளையபல்லவனைத் தொடர்ந்து சென்றார்கள்.

அவர்கள் செய்த சைகைகளாலும் அவர்கள் கூட்ட மாக இளையபல்லவனைத் தொடர்ந்து வந்ததாலும் அபாயமேதுமில்லை என்பதைப் புரிந்துகொண்ட கோட் டைக்காவலர் மேற்கொண்டு அம்புகளை வீசாமல் கோட்டைக் கதவுகளையும் திறந்தார்கள்.

அங்கிருந்த கோட்டைக் காவலரின் தலைவனை நோக்கிய கருணாகர பல்லவன் கோட்டைத்தலைவனை அவசரமாகப் பார்க்க வேண்டுமென்று கேட்டான்.

காவலர் தலைவன் சில விநாடிகள் இளையபல்லவனை ஏற இறங்கப் பார்த்தான்.

அவன் உடையின் உயர்வையும் தோரணையின் கம்பீரத்தையும் கண்டு, 'சரி பின்னால் வா' என்பதற் கறிகுறியாகச் சைகை செய்துவிட்டு முன்னால் நடந்தான். கொள்ளையர் புடை சூழக் காவலர் தலைவனைப் பின்பற்றி அந்த மலைச் சரிவின் சில வீதிகளைத் தாண்டி உச்சியிலிருந்த மாளிகைக்கு வந்த இளையபல்லவன் கடைசியாக அந்த மாளிகையின் பெரும் அறையொன்றில் உட்கார வைக்கப்பட்டான். விநாடிகள் சில ஓடின. தீவிர சிந்தனையில் ஆழ்ந்து அந்த அறையைச் சுற்றுமுற்றும் பார்த்த இளையபல்லவன் பயங்கரமான ஒரு மனிதனின் இருப்பிடத்திற்குத் தான் வந்திருப்பதை உணர்ந்து கொண்டான். அத்தகைய மனிதனைத் தான் சரிபடுத்த வேண்டுமானால் தன் சாமர்த்தியத்தில் பெரும்பகுதியை உபயோகிக்க வேண்டியிருக்குமென்பதையும் புரிந்து கொண்டான்.

இப்படி அவன் சிந்தனைகள் ஓடிக்கொண்டிருந்த சமயத்தில் தூரத்தே இருந்த சிறு கதவு ஒன்று திறக்கப்பட்டு, கோட்டைத் தலைவன் உள்ளே நுழைந்தான்.

அவனைக் கண்டதும் இளையபல்லவனின் சிந்தனைகள் எங்கெங்கோ பறந்தன. விவரிக்க இயலாத பெரும் திகைப்பு அவன் இதயத்தைச் சூழ்ந்து கொண்டது. தான் இருப்பது உண்மையில் அக்ஷயமுனைதானா என்பது பற்றிப் பெரும் சந்தேகம் துளிர்த்தது அவன் இதயத்தில். தான் காண்பது சொப்பனமா என்று கூடச் சிந்தித்தான் அவன்.

அத்தியாயம் 5

# அந்தரங்க அறையில்...

'காண்பது கனவா அல்லது எதிரில் வந்திருப்பது உண்மைத் தோற்றம்தானா? இருப்பது சொர்ண பூமியின் அக்ஷயமுனையா அல்லது கலிங்கத்தின் பாலூர்ப் பெருந் துறையா?' என்ற சந்தேகம் இளையபல்லவன் இதயத்தில் எழுந்து அவன் சித்தத்தை எல்லையற்ற பிரமிப்புக்கும் குழப்பத்துக்கும் உள்ளாக்கியதென்றால், அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. அத்தனை ஏமாற்றத்தையும் சந்தேகத்தையும் அளித்தான் கோடியிலிருந்த கத வொன்றைத் திறந்துகொண்டு அறைக்குள் நுழைந்த அந்தக் கோட்டைத் தலைவன். இளையபல்லவன் கற்பனை செய்த கோலத்துக்கு முற்றும் மாறாக அவன் தோற்றமிருந்ததன்றி, சொப்பனத்திலும் நினைக்க முடியாத மற்றொருவன் சாயலும் கோட்டைத் தலைவனுக்கு இருக்கவே சில விநாடிகள் ஸ்தம்பித்தே போனான் சோழர் படைத் தலைவன்.

அக்ஷயமுனையைப் பற்றிக் கீழ்த்திசையெங்கும் பரவிக் கிடந்த பயங்கர வரலாற்றை வைத்து, அதன் வாசிகளையும் கோட்டையின் தலைவனையும் எடை போட்டிருந்த இளையபல்லவன், தலைவன் அறைக்குள் தான் தனித்திருந்த சில நிமிடங்களில் வெளிநாடுகளில் உலாவிக் கிடந்த வதந்தியில் தவறேதுமில்லை என்றே எண்ணினான். அந்த அறை ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் ஒரு மூலையிலிருந்த சாதாரணத் துறைமுகக் காவலனின்

அறைபோலில்லாமல் பெரும் சாம்ராஜ்யாதிபதியின் அந்தரங்க அறை போலிருந்ததையும், அதன் தூண்கள் கூடத் தங்கத் தகடுகளால் மூடப்பட்டிருந்ததையும், சுவர் களில் ஆங்காங்கு இருந்த சிறு வெள்ளிப் பட்டயங்களில் எழுப்பப்பட்ட பல செய்திகள் எந்த மனிதனது உரத்தையும் வீரத்தையும் உலுக்கிவிடும் தன்மை பெற்றிருந்ததையும் பார்த்த இளையபல்லவன், பெரும் கொள்ளைக்காரனும் இதயமற்ற கொலைகாரனுமான ஒரு பரம அயோக்கி யனின் இருப்பிடத்துக்குத் தான் வந்துவிட்டதைச் சந்தேக மறப் புரிந்து கொண்டான். அக்ஷயமுனைக்கு வந்து பெரும் மரக்கலத் தலைவர்களாக விளங்கி, பெரும் தனத்தைக் கொண்டு வந்தவர்கள் திடீர் திடீரென மறைந்துவிட்டதற்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் சுவர்களில் காணப் பட்ட வெள்ளிப் பட்டயங்களில் வாசகங்களிருந்தன. அந்தப் பட்டயங்களின் தலையில் மாண்ட அந்த மாலுமிகள் சின்னஞ்சிறு தலைகளும் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருந்தன.

அந்தப் பட்டயங்களை அந்த அறையில் அக்ஷய முனைத் தலைவன் பதித்திருந்ததன் காரணத்தைப் பற்றி எத்தகைய சந்தேகமும் ஏற்படவில்லை இளையபல்லவ னுக்கு. அவற்றிலிருந்த தலைகளின் சித்திரங்கள் தன்னைப் போல் வரும் புது மரக்கலத் தலைவர்களை அச்சுறுத்து வதற்கேயென்பதையும் பட்டயங்களில் அனுதாபம்போல் எழுதப்பட்டிருந்த வாசகங்களில் பலத்த எச்சரிக்கையும் அடங்கியிருப்பதையும் கவனித்த இளையபல்லவன், கோட்டைத் தலைவன் பெரும் கொலைகாரன் என்பது மட்டுமின்றி, சாமர்த்தியமான கொலைகாரனுங்கூட என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். தவிர, கோட்டைத் தலைவன் கொலையையே ஒரு கலையாக மாற்றிக் கொண்டு அதன் சக்தியிலேயே வளர்ச்சியடைந்திருக்கிறா

னென்பதையும் அறிந்து கொண்டானாகையால், பெரும் ராட்சதன் ஒருவனைத் தான் சந்திக்க நேரிடுமென்ற எண்ணத்துடனேயே அந்த அறையில் காத்திருந்தான். ஆனால் தன் நினைப்புக்கு நேர்மாறாக, நல்ல உயரமுள்ள ஒற்றைநாடியாகச் சிவந்த சரீரத்துடன் ராஜகளை பொருந்திய ஒரு மனிதன் முகத்தில் புன்முறுவல் தவழ உள்ளே நுழைந்ததும், பெரும் பிரமிப்புக்குள்ளான இளைய பல்லவன் சற்று அவனைக் கவனித்ததும் உள்ளே துள்ளி யெழுந்த பல உணர்ச்சிகளுக்கு இலக்கானாலும் ஆச னத்தை மட்டும் விட்டு எழுந்திருக்கவில்லை. இதே நிலை ஒரு வருடத்துக்கு முன்பிருந்தால் துள்ளி எழுந்திருப் பான், சொற்களைப் படபடவெனப் பொரிந்தும் தள்ளி யிருப்பான். ஆனால் பெரும் நிதானத்தை அடைந்துவிட்ட படைத்தலைவன் அந்த நேரத்தில் ஆசனத்தை விட்டு எழுந்திருக்கவுமில்லை, தனது படபடப்பைக் காட்டவு மில்லை. அவன் புருவங்களின் சலனங்களில் மட்டுமே அந்த வியப்பு தெரிந்தது. அறைக்குள் நுழைந்தவன் காஞ்சனாதேவியின் தந்தையான குணவர்மனேயென ஆரம்பப் பார்வையில் தீர்மானித்து விட்ட இளைய பல்லவன் அத்தகைய அதிர்ச்சியும் பிரமிப்பும் அடைந்த தில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

அறைக்குள் நுழைந்த கோட்டைத் தலைவன் அசல் குணவர்மனைப் போலவே தோற்றத்திலிருந்ததன்றி அவன் நடையும் கடாரத்தின் அதிபனை நூற்றுக்கு நூறு ஒத்திருந்தது. அதே விசால வதனம், அதே ராஜ தோரணை, சுருண்ட தோளில் தொங்கிய அதே தலைமுடி.. நீண்ட மெல்லிய கைகள்! வித்தியாசம் எதுவுமே இல்லை குணவர்மனுக்கும் கோட்டைத் தலைவனுக்கும்! இப்படிக் குணவர்மனை உரித்து வைத்தது போல் அறைக் கோடிக் கதவின் மூலம் நுழைந்த கோட்டைத் தலைவனைக் கண்டு

சில விநாடிகள் பிரமித்து ஸ்தம்பித்துவிட்ட இளைய பல்லவன் கூடிய சீக்கிரம் சுயநிலையை அடைந்து நன்றாக எதிரே வந்தவனை அளவெடுக்க ஆரம்பித்தான். குணவர்ம னும் கோட்டைத் தலைவனும் பார்வைக்கு இரட்டையர் போல் இருந்தாலும் சில முக்கிய வித்தியாசங்கள் இருவருக்கும் இருப்பதைச் சில விநாடிகளின் ஆராய்ச்சி களுக்குபின் அறிய முடிந்தது இளையபல்லவனால். முகத்தில் அதே ராஜ தோரணைதான். இருந்தாலும் பலத்த கடுமை இருந்தது அதில். கண்கள் அதே கருமை நிறம், விசாலம் இருந்தாலும் குணவர்மன் கண்களிலிருந்த ஏக்கம், துறவு மனப்பான்மை இரண்டும் கோட்டைத் தலைவன் கண்களில் இல்லை. அவற்றுக்குப் பதில் பெரும் குரூரமும் வஞ்சகமும் கலந்திருந்தன. இளையபல்லவனைக் கண்டதும் அவன் இதழ்களில் விரிந்த புன்னகை முதல் தோற்றத்துக்கு இன்பமாகத் தோன்றினாலும் அதில் பொய்யும் வஞ்சகமும் புதைந்து நின்றன. வந்ததும் அவன் பேசிய இரண்டொரு சொற்களும் அவன் பரம அயோக்கியனென்பதை நிரூபித்தன.

பேசிய சொற்கள் மரியாதை நிரம்பியவைதான். காதுக்குக் குளிர்ச்சியாகவும் இருந்தன. இருப்பினும் மனிதனுடைய குணத்துக்குச் சொல்லப்படும் வடமொழி சுலோகமே இளையபல்லவன் நினைப்புக்கு வந்தது.

பங்கஜத்தைப்போல் விரிந்து வரவேற்கும் முகம், சந்தனத்தைப்போல் குளிர்ந்திருக்கும் சொற்கள், வஞ்சகம் நிறைந்த நெஞ்சம், இம் மூன்றும் அயோக்கியனுடைய லக்ஷணங்கள் என்ற கவிதையை ஒரு முறைக்கு இரண்டு முறையாகத் தனக்குள் சொல்லிக்கொண்ட இளைய பல்லவன் கோட்டைத் தலைவனுக்கும் அந்தச் சுலோகத் துக்கும் பொருத்தம் நூற்றுக்கு நூறு என்று தீர்மானித்துக் கொண்டாலும், அந்த எண்ணங்களை அணுவளவும்

முகத்தில் காட்டாமல், கோட்டைத் தலைவன் உள்ளே நுழைந்ததும் ஏற்பட்ட திகைப்பை இரண்டொரு விநாடிகளில் சமாளித்துக் கொண்டு புன்முறுவல் செய்தான்.

அத்தனை துரிதமாக இளையபல்லவன் தன் ஆரம்பத் திகைப்பையும் எண்ணங்களையும் மறைத்தும் கூட அவன் உணர்ச்சிகளை நொடிப்பொழுதில் கவனித்து விட்ட கோட்டைத் தலைவன், இன்பப் புன்முறுவல் தவழ்ந்த இதழ்களுடன் அறைக்கோடியிலிருந்து நடுவிடத்துக்கு வந்து பெரும் அதிர்வெடியொன்றை எடுத்துப் படைத்தலைவன் மீது வீச முற்பட்டு, "அக்ஷயமுனைக்கு இளையபல்லவன் வருகை நல்வரவாகட்டும்," என்று சர்வசாதாரணமாக வரவேற்புக் கூறி எதிரேயிருந்த நவரத்தினங்கள் இழைக்கப் பெற்ற ஆசனத்தில் அமர்ந்து கொண்டான்.

அக்ஷயமுனையின் தலைவன் பேசிய மொழி சொர்ண பூமியின் காவி பாஷையாயில்லாமல் தூய்மையான தமிழாயிருந்தது பற்றி மட்டுமின்றித் தன் பெயரையும் அவன் அறிந்து கொண்டிருப்பது பற்றிப் பேராச்சரியமடைந்தான் இளையபல்லவன். 'இந்த அறைக்கு வரும்வரை நான் பெயரை யாருக்கும் சொல்லாதிருக்க இவனுக்கு எப்படி என் பெயர் தெரிந்தது!' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாலும் அதைப்பற்றி வெளிப்படையாக எந்த உணர்ச்சியையும் காட்டாமல், "எனக்கு இரட்டைப் பாக்கியம் ஏற்பட்டிருக்கிறது," என்று பதில் கூறி வணக்கத்துக்கு அறிகுறியாகத் தலையையும் தாழ்த்தினான் இளையபல்லவன்.

"எனக்கும் அப்படித்தான்" என்றான் கோட்டைத் தலைவன் இதழ்களிலிருந்த புன்முறுவல் முகத்திலும் படர.

சிறிது சிந்தனைக்குப்பின் கேட்டான் இளையபல்லவன், "உங்களுக்குமா?"

"ஆம்." மிகுந்த அடக்கத்துடனும் அந்த அடக்கத்திலும் ஒரு பயங்கரம் புதைந்து கிடந்த குரலில் வெளி வந்தது கோட்டைத் தலைவனின் பதில்.

"தங்களைக் கண்டது என் பாக்கியம். தாங்கள் என் மொழியைப் பேசுவது என் பாக்கியம் என்பதை இரட்டைப் பாக்கியமாகக் கருதினேன் நான்," என்று குறிப்பிட்டான் இளையபல்லவன்.

"அரச வம்சத்தில் பிறந்து கொள்ளைக்காரராகத் திரும்பிய இளையபல்லவரை நான் அறிய நேரிட்டது ஒரு பாக்கியம். இரண்டவதாக எங்கள் காவி மொழியை அவர் அறிந்திருப்பது மற்றொரு பாக்கியம். ஆக இரட்டை பாக்கியம் எனக்கு உண்டு. இல்லை, இல்லை, மூன்று வகை பாக்கியம்..." என்று திருத்திக் கொண்டான் கோட்டைத் தலைவன்.

"மூன்றா!"

"ஆம், நானே இளையபல்லவர் பிரசித்தியைக் கேட்டு அவரைப் பார்க்க விரும்பினேன். அவராக என்னைத் தேடி வந்தது மூன்றாவது பாக்கியமல்லவா?"

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாத இளையபல்லவனை நோக்கிய கோட்டைத் தலைவன் தன் கைகளைக் கோத்து மடியில் வைத்துக்கொண்டு, "நமக்குள் முன்பே மறைமுகத் தொடர்பிருப்பதும் என் பாக்கியத்தை அதிகப்படுத்துகின்றது," என்று சொன்னான்.

அவன் எதைக் குறிக்கிறானென்பதைப் புரிந்து கொண்ட இளையபல்லவன், "ஆம். ஒருவிதத் தொடர்பு இருக்கத்தான் செய்கிறது" என்றான்.

"என் சகோதரனுக்குத் தாங்கள் செய்த உதவிக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்," என்றான் கோட்டைத் தலைவன். அவன் குணவர்மனைக் குறிக்கிறா

னென்பதைச் சந்தேகமறத் தெரிந்துகொண்டாலும் இருவரின் முக ஜாடையிலிருந்து அவர்களுக்குள் நெருங்கிய உறவு உண்டு என்பதை அறிந்திருந்தாலும், அவர்கள் எப்படிச் சகோதரர்களாக முடியும் என்பதை எண்ணிச் சற்று சிந்தனையில் ஆழ்ந்தான்.

யார் எண்ணத்தையும் ஊடுருவிப் பார்க்கும் திறனுள்ள கோட்டைத் தலைவனுக்கு இளையபல்லவன் இதயத்தில் எழுந்த சந்தேகமும் புரிந்திருக்க வேண்டும். ஆகவே அவன் சொன்னான்: "குணவர்மர் என் சொந்தச் சகோதரர் அல்ல. ஒன்றுவிட்ட சகோதரர்தான். இருப்பினும், அவர் சொந்தச் சகோதரரான ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி ஜெயவர்மருக்கும் அவருக்குமுள்ள சாயலைவிட, எனக்கும் குணவர்மருக்குமுள்ள சாயலில் அதிக ஒற்றுமையிருக்கும். ஆகவே நீங்கள் ஆரம்பத்தில் என்னைக் கண்டு திடுக்கிட்டதில் ஆச்சரியமில்லை."

கோட்டைத்தலைவன், தான் அக்ஷயமுனையில் கால் வைத்த சில விநாடிகளுக்குள்ளேயே தன்னைப் பற்றிய ஜாதகம் அத்தனையும் கணித்துவிட்டதைக் கண்டு மீண்டும் வியப்பெய்தி உணர்ச்சிகளை அடக்க முடியாத நிலையை எய்திவிட்ட இளையபல்லவன் வியப்பின் குறி முகமெங்கும் படர, கோட்டைத்தலைவனை நோக்கி, "உங்களுக்குச் சோதிடம் தெரியுமா?" என்று வினவினான்.

"தெரியாது." அடக்கத்துடன் வந்தது கோட்டைத் தலைவனின் பதில்.

"மனோதத்துவ சாத்திரம்?"

"அது என்னவென்பதே எனக்குத் தெரியாது. நான் எதையும் அதிகமாகப் படித்ததில்லை."

"உங்களுக்குப் படிப்பு அவசியமில்லை."

"ஏன்?"

"சிலருடைய அறிவின் பலன் சாத்திரங்கள். மற்றவர் களுக்குச் சாத்திரங்கள் அறிவைப் புகட்டுகின்றன. படிக் காமல் இயற்கையிலேயே சாத்திரக் கல்வியின் பயனைப் பெறுபவர்களும் உண்டு."

"அப்படி நான் பலன் பெற்றவனுமில்லை. என்னை வீணாகப் புகழ வேண்டாம். நான் சொன்ன விஷயங் களைப் பற்றி வியப்படையவும் வேண்டாம்," என்று கூறிய கோட்டைத் தலைவன், இளையபல்லவனை ஏறெடுத்துப் பார்த்துவிட்டு, மிக நிதானமான குரலில் மேலும் சொன்னான்: "இதில் ஊகத்துக்கோ கூரிய அறிவுக்கோ அவசியமில்லை. ஸ்ரீவிஜயத்தின் மன்னர் தமது சகோ தரனின் நன்மையில் கருத்துள்ளவர் என்பதை நான் உங்களுக்குச் சொல்லத் தேவையில்லை. ஆகவே குண வர்மர் பாலூர்ப் பெருந்துறையில் கால் வைத்த நாள் முதலாக நடக்கும் விஷயங்ளைக் கவனிக்க ஜெயவர்மர் ஏற்பாடு செய்ததில் ஆச்சரியமில்லையல்லவா? தவிர, தென் கலிங்கத்து மன்னன் பீமன் எங்கள் சக்கரவர்த்தியின் நண்பர். ஆகவே ஸ்ரீவிஜயம் வரும் வர்த்தகக் கப்பல்களில் கலிங்கத்தின் முத்திரை ஓலைகள் அடிக்கடி வருகின்றன. நீங்கள் குணவர்மரையும் இளவரசியையும் தப்புவித்த செய்திகள், பர்லூர்ப் பெருந்துறை நீதி மண்டபத்திலும் கடற்கரையிலும் நடந்த விந்தைகள் அனைத்தும் இங்கு தெரியும். ஸ்ரீவிஜயத்தின் மக்கள் உங்களையும் அநபாயரை யும் பற்றிக் கதை கதையாகப் பேசுகிறார்கள். பிரசித்தி நல்லதுதான், சில சமயங்களில் அதில் ஆபத்தும் கலந்திருக் கிறது..."

இப்படி விஷயங்களைச் சர்வசாதாரணமாக விளக்கிய கோட்டைத் தலைவனைச் சில விநாடிகள் நோக்கிய இளையபல்லவன் தன் ஆசனத்தில் நன்றாகச்

சாய்ந்துகொண்டான். "என்னைப் பற்றித் தங்களுக்கு இன்னும் என்ன தெரியும்?" என்று வினவினான்.

"முதலில் நீங்கள் பாலூர்ப் பெருந்துறை கடற்கரைப் போரில் மாண்டுவிட்டதாகச் செய்தி கிடைத்தது. ஆறு மாதங்களுக்குப் பிறகு யாரோ ஓர் இளையபல்லவன் அகூதாவின் உப தலைவனாயிருப்பதாகவும், கடற்போரில் குருவான அகூதாவையே மிஞ்சியவனென்றும் கேள்விப் பட்டோம். பிறகு ஊகம் பிரமாதமா? இரண்டும் இரண்டும் நான்காகி விட்டது. அகூதாவின் உப தலைவர் என்னைப் பார்க்க விரும்புவதாகக் காவலர் தலைவன் சொன்னான். வந்திருப்பது யாரென்று தெரிந்தது. அரச வம்சத்தில் சேர்ந்த ஒருவரை சாதாரணமாக வரவேற்கக் கூடாதென்று உங்களை என் அந்தரங்க அறைக்கே வரவழைத்தேன். இதற்கு முன்பு இங்கு வந்திருப்பவர்கள் வெகு சிலர்தான்..." என்று கோட்டைத் தலைவன் பேச்சைச் சட்டென்று நிறுத்தினான்.

"அப்படியா?" இளையபல்லவன் குரலில் சந்தேகம் தொனித்தது.

"அந்தச் சிலரும் துர்ப்பாக்கியம் செய்தவர்கள்," என்றான் துயரத்துடன் கோட்டைத் தலைவன்.

"ஏன்?" இளையபல்லவன் குரலில் மேலும் சந்தேகம் தொனித்தது.

"இங்கு வந்தபின் அவர்கள் காணப்படவில்லை."

"அப்படியா?"

"ஏதோ விபத்துக்குள்ளானார்கள்."

"என்ன விபத்தோ?"

"என்ன விபத்தோ தெரியாது. அவர்கள் சடலங்கள் மட்டும் கோட்டைக்கு வெளியே கிடந்தன. சடலங்களுக்கு இருபது அடிகள் தள்ளித் தலைகள் கிடந்தன."

"பயங்கரம்!"

"பயங்கர விளைவுகள் இங்கு அதிகமில்லை. எப்பொழுதாவது ஒருமுறை நடக்கும். அந்தச் சிலரும் தங்களைப் போலவே கடற்போரில் பிரசித்தி பெற்றவர்கள்.

"அப்படியா?"

"ஆம்."

"பிரசித்தியில் அத்தனை ஆபத்தா?"

"ஆம் இளையபல்லவரே! சந்தேகமிருந்தால் திரும்பிப் பாருங்கள்," என்ற கோட்டைத் தலைவன் இதழ்களில் பயங்கரப் புன்னகை அரும்பியது. இளைய பல்லவன் திரும்பி நோக்கினான். பின்புறத்தில் உருவிய வாள்களை ஏந்திய இரு வீரர்கள் நின்றிருந்தார்கள்.



அத்தியாயம் 6

# உருண்டது நான்கு, புரண்டது?

பிரசித்தியால் விளைவது ஆபத்தே என்ற தத்துவத்தைச் சுட்டிக்காட்டியதன்றி அதற்குத் தக்க சான்று தரும் முறையில், 'சந்தேகமிருந்தால் திரும்பிப் பாருங்கள்' என்று சர்வ சகஜமாகக் கூறிய கோட்டைத் தலைவன் சொற்களைத் தொடர்ந்து தனது ஆசனத்திற்குப் பின்புறம் தலை திரும்பிப் பார்த்த இளையபல்லவன், அங்கு உருவிய வாள்களுடன் நின்றிருந்த இரு வீரர்களைக் கண்டதும் அவர்களை ஒரு முறை ஏற இறங்க நோக்கிவிட்டு மீண்டும் ஆசனத்தில் திரும்பி எதிரேயிருந்த கோட்டைத் தலைவனை மிக இன்பமான புன்முறுவல் படர்ந்த வதனத்துடனும், அந்தப் புன்முறுவலை விஷமச் சிரிப்பாக உதிர்த்த கண்களுடனும் நோக்கினான்.

அத்தகைய மந்தகாச வதனத்தையும், ஆபத்தைக் கண்டும் இளையபல்லவன் பார்வை மூலமே உணர்த்திய அலட்சியத்தைக் கண்ட கோட்டைத் தலைவன் பெரும் வியப்புக்குள்ளானான். அந்தத் தனது அந்தரங்க அறையில் வந்த சில பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரர்கள் மறைந்து மடிந்த விவரங்களை எடுத்துச் சொல்லி, படிப்படியாக அச்சத்தை உயர்த்திக்கொண்டே போய், அவற்றுக்குச் சிகரம் வைத்தது போல் லேசான சமிக்ஞையினாலேயே உருவிய வாள்களுடன் காவலரை வரவழைத்துக் காட்டியும் அதைப்பற்றி லவலேசமும் கவலைப்படாமல் தன்னைப் பார்த்து வாய்விட்டு நகைக்காவிட்டாலும்

கண்களின் பார்வையால் நகைத்த படைத் தலைவன் மீது ஆச்சரியம் ததும்பும் விழிகளை நிலைக்கவிட்டான் அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவன். அந்த ஆச் சரியத்துடன் சிறிது சிந்தனையும் அவன் சித்தத்தில் எழுந்ததற்கு அறிகுறியாகப் புருவங்கள் சிறிது மேலே ஏற மூன்று வரிக்கோடுகள் பக்தர்களின் கீற்றுச் சந்தனம் போல் அவன் முகத்தில் விழுந்தன. இம்முறை இளையபல்லவன் பிரமிப்பு பன்முறை அதிகமாயிற்று. இதே மூன்று கோடுகளை அவன் பாலூர்ப் பெருந்துறையின் வெளி நாட்டுப் பிரமுகர் வீதியிலிருந்த மாளிகையில் முதல் நாள் இரவு கண்டிருந்தான். அந்த மூன்று வரிகள் முகத்தில் உதயமானதும் அந்த அயோக்கியன் எப்படி சாட்சாத் குணவர்மன் போலவே காட்சியளித்தான் என்பதை நினைத்து விவரிக்க இயலாத ஆச்சரியத்தின் வசப்பட்டான் இளைய பல்லவன். அதிலிருந்து ஒரு முக்கிய உண்மையும் வெளியாயிற்று சோழர் படை உபதலைவனுக்கு. "குண வர்மனுக்கு அந்த மூன்று வரிக்கோடுகள் கவலை உழுது விட்ட சின்னங்கள். ஆனால் படாடோபத்திலும் கொள்ளைக்காரரர் கொண்டு குவித்த பணத்திலும் காலங் கழிக்கும் இவனுக்கென்ன கவலையிருக்க முடியும்?" என்று எண்ணிப் பார்த்த இளையபல்லவன், 'சாந்திக்கும் பணத்துக்கும் படாடோபத்துக்கும் சம்பந்தமில்லை. சாந்தியை அளிக்கும் அம்சமே வேறு,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். தவிர அதுவரை தன் எண்ணங் களையோ, குறைகளையோ காட்டாமல் சமாளித்துக் கொண்ட கோட்டைத் தலைவன், அபாயத்தின் முனை யிலும் தான் அலட்சியம் காட்டியதைப் பார்த்து வெளிக்கு வியப்பையும் உள்ளுக்குள் கவலையையும் எய்திவிட்டதை நினைத்த இளையபல்லவன், 'மேலுக்கு மிகவும் துணிவுள்ள வனாகத் தெரியும் இவன் துணிவு உண்மையானதல்ல,

வஞ்சகத்தின் துணை கொண்டது. ஆகவே வயிரம் பாயாது,' என்று உள்ளத்தே தீர்மானித்துக் கொண்டான். இப்படிக் கோட்டைத் தலைவனின் பலாபலத்தை எடை போட்டு விட்ட இளையபல்லவன் நன்றாகத் தனது ஆசனத்தில் சாய்ந்துகொண்டு கால்களையும் சாவதானமாக நீட்டிக் கொண்டான்.

தனது அந்தரங்க அறைக்கு இளைப்பாறவே வந்தவன் போல் இளையபல்லவன் ஆசுவாசப்படுத்திக் கொள் வதைக் கண்ட கோட்டைத் தலைவன் அவன் நிதானத் தையும் நெஞ்சுரத்தையும் கண்டு மேலும் மேலும் வியப் புக்கும், இத்தகையவன் அக்ஷயமுனையில் காலூன்றினால் தனக்கு ஏற்படக்கூடிய பலவீனத்தை நினைத்துக் கவலைக்கும் உள்ளானாலும் அந்த உணர்ச்சிகளை வெகு சீக்கிரம் மறைத்துக் கொண்டான். கொள்ளைக்காரர்களின் பணத்தாசையும் சில்லறை இன்பங்களில் அவர்களுக் கிருந்த வெறியுமே தன் சக்தியென்பதையும், அறிவாளி எவனை விட்டாலும் பல திசைகளில் தனக்கு ஆபத்து உண்டென்பதையும் உணர்ந்ததாலேயே ஏற்கெனவே பல அறிவாளிகளை அவன் தீர்த்துக் கட்டியிருந்தான். அவர்கள் பிரதாபங்களையும் தலைகளையும் பட்டயங்களில் வரைந்து அந்தரங்க அறையில் பதித்திருந்ததற்குக் காரணம், அந்த அறைக்கு வருபவர்கள் ஆரம்பத்திலேயே நடுக்கம் கொள்ளட்டும் என்பதுதான். அப்படி ஏற்கெனவே பலர் நடுங்கியும் இருக்கிறார்கள். படங்களைப் பார்த்தும் தான் ஆபத்தைச் சுட்டிக் காட்டியும், இரு வீரர் வாள் பிடித்து நின்றும் அசையாத துணிவு கொண்ட ஒருவன் தனது கோட்டைக்கு வந்துவிட்டான் என்ற நினைப்பு மட்டு மின்றி, அவன் பெரும் அறிவாளியும் ராஜதந்திரியுங்கூட என்ற எண்ணமும் கோட்டைத் தலைவனுக்குப் பெரும் கவலையை அளித்தன. அத்தகையவனை ஒழிப்ப

தானாலும் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் உணர்ந்துகொண்ட கோட்டைத் தலைவன், உள்ளூர இருந்த உணர்ச்சிகளை மறைத்து இளையபல்லவனை நோக்கி மகிழ்ச்சிப் புன்முறுவலும் கொண்டான். அத்துடன் பாராட்டவும் முற்பட்டு, "உங்கள் துணிவைப் பற்றி ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இன்று என் கோட்டையில் நேரில் கண்டேன்." என்றான்.

வாள் வீரர் இருவரை அவன் வரவழைத்தது தன்னை வெட்டிப் போட, அல்லது சிறையில் தள்ள என்பதை உணர்ந்திருந்த இளையபல்லவன், கோட்டைத் தலைவன் திடீரெனத் தன் துணிவைப் பாராட்ட முற்பட்டதில் ஆழ்ந்த கருத்து ஏதோ இருக்க வேண்டுமென்ற எச்சரிக்கை யுடனேயே பதிலும் சொன்னான் : "உங்கள் பாராட்டு தலுக்கு நன்றி. ஆனால் துணிவு எதையும் நான் காட்ட வில்லையே."

கோட்டைத் தலைவன் இதழ்களில் இருந்த புன் முறுவல் மேலும் விகசித்தது. "என்ன! துணிவைக் காட்ட வில்லையா?" என்று வினவினான் குரலில் வியப்பு ஒலிக்க.

"இல்லை," என்றான் இளையபல்லவன் சகஜமாக.

"இந்தச் சுவரிலுள்ள பட்டயங்களைப் படிக்க வில்லையா?" என்று மறுமுறை வினவினான் கோட்டைத் தலைவன்.

"படித்தேன்." இந்தப் பதிலும் சம்பிரதாய முறையில் நிதானமாக வந்தது.

"இவை மாண்டவர்கள் பட்டயங்கள்."

"ஆம். அவற்றிலேயே குறிப்புகளிருக்கின்றன."

"இந்த அறைக்கு வந்ததும் மறைந்தவர்கள்."

"அதை நீங்களே கூறினீர்கள்."

"அவர்களை நான் ஏன் கொன்றிருக்கக் கூடாது?"

"கொன்றிருக்கலாம்!"

"கொன்றிருக்கலாமா! அதிலும் சந்தேகமா?"

"ஆம். அவசியமிருந்தால் கொன்றிருப்பீர்கள். அவசியமில்லாவிட்டால் ஏன் கொல்ல வேண்டும்?"

இளையபல்லவனின் இந்தக் கடைசிக் கேள்வியும், அது வெளியிடப்பட்ட போதிருந்த தொனியும் முக பாவமும் கோட்டைத் தலைவனை ஓர் உலுக்கு உலுக்கின. தான் கொலை செய்ததைக் கிட்டத்தட்டச் சரியென்று இளையபல்லவன் ஒப்புக்கொள்வதைக் கவனித்த கோட்டைத் தலைவன் இயத்தில், 'நம்மைவிட இவன் பெரிய கொலைகாரனோ?' என்ற சந்தேகம் உதயமாயிற்று. இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல், "கொலையை ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று வினவினான்.

"ஆம்."

"நீங்களும் கொலை செய்வீர்களா?"

"எவ்வளவோ பேரைக் கொன்றிருக்கிறேன்."

"அவசியத்தாலா?"

"அவசியமில்லாமல் நான் எதையும் செய்வதில்லை. உதாரணமாக...." என்று மெள்ள இழுத்தான் இளையபல்லவன் கண்களைச் சற்றுக் கீழே தாழ்த்திய வண்ணம்.

தாழ்த்திய கண்களை அந்தக் கண்களுடன் கலக்க முயன்ற கோட்டைத் தலைவனின் வஞ்சகக் கண்கள் தோல்வியடைந்தன. கண்களைத் தன் மடியை நோக்கி நன்றாகத் தாழ்த்திக் கொண்டான் இளையபல்லவன். ஏதோ உதாரணம் சொல்ல முயன்று நிறுத்திக்கொண்ட இளையபல்லவன் குரலிலிருந்த ஏளனமும் கோட்டைத் தலைவனைப் பெரிதும் திகைக்க வைத்தது. "ஏதோ சொல்ல

முற்பட்டு நிறுத்திவிட்டீர்கள்," என்றான் கோட்டைத் தலைவன்.

"உதாரணம் சொல்ல முற்பட்டேன்," என்றான் இளையபல்லவன்.

"சொல்லுங்கள்," என்றான் கோட்டைத் தலைவன்.

திடீரென்று அந்த அறையே சுழல்வது போலிருந்தது கோட்டைத் தலைவனுக்கு. கண்ணிமைக்கும் நேரத்தில் நிகழ்ந்துவிட்ட அந்தத் துணிகரச் செயல் எதற்கும் சலனப் படாத அவன் புத்தியைப் பெரிதும் குழப்பியதன்றி இணையற்ற பீதியையும் விளைவித்தது. அத்தனையும் ஏதோ ஜால வித்தைபோல் நிகழ்ந்தது. "சொல்லுங்கள்" என்று தன் வாயிலிருந்து வார்த்தை உதிருமுன்பாக இளைய பல்லவன் கச்சையில் இருந்த குறுவாள் இமை கொட்டு வதற்குள் தன்னை நோக்கிப் பறந்துவிட்டதையும், அப்படிப் பறந்த குறுவாள், தன் கழுத்தின் வலப்புறத்துக் கருகில் உராய்ந்து சருமத்தை இம்மியும் தொடாமல் கழுத்தை மறைத்த அங்கியை மட்டும் பிரித்து ஆசனத்தில் வைத்துத் தன் கழுத்தை அப்படியோ இப்படியோ அசையாமல் தடுத்துவிட்டதையும் கண்டு, சிந்திக்கவும் சக்தியில்லாமல் பிரமை பிடித்து ஆசனத்தில் அப்படியே சாய்ந்துவிட்டான் கோட்டைத் தலைவன்.

அறைக்குள் வகையாகத் தங்களிடம் சிக்கியிருப் பவன் தங்கள் தலைவன்மீது குறுவாளைத் திடீரென எடுத்து வீசுவானென்பதைச் சொப்பனத்திலும் எதிர் பார்க்காத வாள் பிடித்த வீரரும் கையிலிருந்த வாள்களை உபயோகிக்கவும் அஞ்சி சில விநாடிகள் அசைவற்று நின்றனர். முதல் கலவரம் நீங்கியதும் வாள்களை உருவப்போன அந்த வீரர்களை, கோட்டைத் தலைவனின் கரம் செய்த சமிக்ஞை தடுத்தது.

அந்தச் சமிக்ஞையைக் கண்ட இளையபல்லவன் கோட்டைத் தலைவனை நோக்கி, "தலைவரே! நீங்கள் தீரம் மிகுந்த அறிவாளிதான்," என்று பாராட்டினான்.

"எந்த விதத்தில் அறிவாளி?" தான் குறுவாளை வீசிக் கழுத்தை அசைய முடியாமல் ஆசனத்தில் புதைத்ததும் அடைந்த பிரமிப்பை வெகு சீக்கிரம் விலக்கிக் கொண்டு தனக்குக் கேள்வி போடத் துவங்கிய கோட்டைத் தலைவன் நிதானத்தைக் கண்டு பெரும் வியப்பெய்திய இளைய பல்லவன் மிகுந்த அபாயமான ஒரு மனிதனுடன் தான் உறவாட வேண்டுமென்பதைப் புரிந்து கொண்டானாகை யால், "வாள்களை உபயோகப்படுத்த வேண்டாமென வீரர்களுக்குச் சமிக்ஞை செய்தது அறிவாளியின் செய்கை," என்றான் இளையபல்லவன் உணர்ச்சி ஏதும் காட்டா மலே.

"உங்களை அவர்கள் கொல்லாமல் தடுத்தது அறிவின் அத்தாட்சியா!" கோட்டைத் தலைவன் கேள்வியில் ஏளனமிருந்தது.

"இல்லை, உங்களை நான் கொல்லாமல் தடுத்தது" என்றான் இளையபல்லவன்.

"புரியவில்லை எனக்கு."

"புரியச் சொல்கிறேன் கேளுங்கள், கோட்டைத் தலைவரே! என் கச்சையின் குறுவாள் மட்டுமல்ல, இதோ இடையில் தொங்கும் நீண்ட வாளும் வேகத்துடன் வினை விளைக்க வல்லது. இஷ்டப்பட்டிருந்தால் குறுவாளை உங்கள் கழுத்தின் நடுப்பகுதியை நோக்கி வீசி உங்கள் ஆயுளை நான் முடித்திருக்கலாம். என் உறுதியை உங்க ளுக்குக் காட்டவும் உங்கள் அந்தரங்க அறைகூட உங்க ளுக்குப் பாதுகாப்பு இல்லை என்பதை நிரூபிக்கவுமே குறுவாளை உங்கள் கழுத்தின் இடது பக்கத்துக்காக வீசி

அங்கியை ஆசனத்தில் புதைத்தேன். உங்கள் வீரர்கள் வாள்களை ஓங்கியிருந்தால் கண்ணிமைக்கும் நேரத்தில் என் நீண்ட வாள் உங்கள் ஊட்டியில் பாய்ந்திருக்கும். உங்களுக்கு அது புரிந்திருக்கிறது. மனிதர்களையும் அவர்கள் திறமையையும் ஆராயும் சக்தி உங்களுக் கிருக்கிறது. இதையெல்லாம் அறிந்துதான் உங்கள் நட்பையும் உதவியையும் நாடி நான் அக்ஷயமுனை வந்தேன். நீங்கள் என்னையோ நான் உங்களையோ கொல்லும் நிலையில் இல்லை," என்று சர்வசாதாரணமாக ஏதோ கதை சொல்பவன் போல் விளக்கிய இளைய பல்லவன் திடீரென ஆசனத்திலிருந்து எழுந்து கோட்டைத் தலைவன் கழுத்தை அசையவொட்டாமல் செய்திருந்த குறுவாளை எடுத்துத் தன் கச்சையில் மீண்டும் செருகிக் கொண்டான். அது மட்டுமின்றி, "ஏன் இவர்களை அனுப்பி விடலாமே," என்று வீரர்களைக் கையால் சுட்டியும் காட்டினான்.

இளையபல்லவனின் செயல்களும் பேச்சும் பெரும் விந்தையாயிருந்தன கோட்டைத்தலைவனுக்கு. அத்தகைய ஒரு விசித்திர மனிதனை அவன் அதுவரை கண்டதில்லை. அந்த மனிதனால் தன்னைத் தாழ்த்தவோ உயர்த்தவோ நிச்சயமாய் முடியும் என்று தீர்மானித்துக் கொண்ட கோட்டைத் தலைவன், தன் வீரர்களைக் கொண்டு அந்த அறையிலேயே அவனை ஒழித்துவிடலாமா என்று மீண்டும் சிந்தித்தான். ஆனால் அதனால் விளையக்கூடிய ஆபத்தை எண்ணி, 'இவனை ஒழிப்பதானால் அதற்கு இடம் இந்தக் கோட்டையல்ல, சமயமும் இதுவல்ல' என்று தீர்மானித்துக் கொண்டு இளையபல்லவன் கூறியபடி அறையை விட்டுச் செல்லுமாறு வீரர்களுக்குப் பணித்தான்.

வீரர்கள் சென்றதும் கோட்டைத் தலைவனுக்கு நேர் எதிரில் வந்து நின்றுகொண்ட இளையபல்லவன்,

"தலைவரே! நான் பயங்கர விரோதி என்பதை உங்களுக்கு நிரூபித்தாகிவிட்டது. சிறந்த நண்பன் என்பதை நிரூபிக்கிறேன். உங்கள் கையிரண்டையும் ஏந்துங்கள்," என்று உத்தரவிடும் தோரணையில் கூறினான்.

அதன்படி கையேந்திய கோட்டைத் தலைவனின் கைகளில் இளைய பல்லவன் கச்சையிலிருந்த பட்டுப் பையிலிருந்து கொட்டப்பட்ட நான்கு பொருள்கள் உருண்டன. உருண்ட அந்தப் பொருள்களைப் பார்த்த கோட்டைத் தலைவனின் கண்கள் அவற்றைப் பார்த்துக் கொண்டே இருந்தன. அறையில் அதுவரை நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் அவன் சித்தத்திலிருந்து மறைந்தன. கண்களில் விவரிக்க இயலாத வியப்பும் வெறியும் படர்ந்தன. அந்த வியப்பும் வெறியும் கலந்த கண்கள் பயபக்தியுடன் இளைய பல்லவனையும் ஏறெடுத்து நோக்கின. உருண்டவை நான்கு, அவற்றில் புரண்டது பெருங்கதை.



அத்தியாயம் 7

# அசைந்த சிலை

கச்சையிலிருந்த பட்டுப் பையை எடுத்து அவிழ்த்துக் கண நேரத்தில் தனது கையில் இளையபல்லவன் உருட்டி விட்ட நான்கு பெரும் நல்முத்துகளையும், விழித்த விழிகள் நிலைத்தபடியே நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தான் அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவன். இயற்கை யாகவே மிகப் பெரியதாக இருந்த அந்த நல்முத்துகள் மீது வடக்குச் சாளரத்தின் வழியாகப் பாய்ந்த காலைக் கதிரவனின் இருகதிர்கள் அந்த முத்துகளை ஏதோ பெரும் உயிர் வாய்ந்த பிம்பங்களைப்போல் ஜொலிக்க வைத் திருந்தன. அவற்றின் இயற்கையமைப்பில், கதிரவன் கதிர்கள் அற்றின் மீது பாய்ந்து கிளம்பிய ஜாஜ்வல்யத்தில் அடியோடு லயித்துவிட்ட கோட்டைத் தலைவன், தனது கரங்களில் அக்ஷயமுனைக் கோட்டையையே விலைக்கு வாங்கக்கூடிய பெரும் செல்வம் உருண்டு கிடப்பதை உணர்ந்தான். அவற்றைப் பர்த்ததுமே அவற்றின் மதிப்பை மட்டுமின்றி, அவை சம்பந்தமாகக் கீழ்த்திசைப் பிராந்தி யங்களில் உலாவிய கதைகளையும் நினைத்துப் பார்த்த கோட்டைத் தலைவன், அவற்றைக் கொண்டு வந்த இளைய பல்லவன் அமானுஷ்யமான பிறவியாகத்தானிருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். அந்த நான்கு இணையற்ற முத்துகள் பாலித்தீவின் சிற்றரசனுக்குச் சொந்தமாயிருந்ததாகவும், அவற்றைப் பல நாட்டு மன்னர்கள் பல தலைமுறைகளாகக் கைப்பற்ற முயன்றும்

பலிக்கவில்லையென்றும், பாலி மன்னர்கள் அவற்றை எங்கே மறைத்து வைத்திருந்தார்களென்பதும் அவன் கேட்டறிந்த விஷயம். ஆகவே இத்தகைய முத்துகள் இளைய பல்லவன் கையில் கிட்டியது பெரும் விந்தையென நினைத்த அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன், 'யாருக்கும் கிடைக்காத இந்த முத்துகள் இவனுக்கு எப்படிக் கிடைத்தன?' என்று சந்தேகத்துடன் தன்னையே மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டான். அத்துடன் அந்த மாபெரும் செல்வத்தைத் தன்னுடையதாக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆசையால் வெறிமிகுந்த பார்வையொன் றையும் அவற்றின் மீது உலாவவிட்டான்.

அவன் பார்வையையும், முகத்தில் ஓடிய சிந்தனைக் குறிகளையும் விடாமல் பார்த்துக் கொண்டு நின்ற இளைய பல்லவன், சற்றுத் தைரியத்துடன் கோட்டைத் தலைவனை முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டு, "தலைவரே! எனது நட்பில் லாபமிருப்பதைப் புரிந்து கொண்டீரல்லவா?" என்று வினவினான் ஏளனம் கலந்த இளநகையுடன்.

கோட்டைத் தலைவன் தலை தூக்கி அவனைப் பார்த்தாலும் அவன் கண்கள் எதிரேயிருப்பவனை ஆராயும் சக்தியை இழந்திருந்தனவாகையால் இளைய பல்லவனின் இதழ்களில் தவழ்ந்த இளநகையையோ ஏளனத்தையோ அவை கவனிக்கவில்லை. ஏதோ சொப்பனத்திலிருப்பவன் குரலில் கேட்டான் கோட்டைத் தலைவன், "உமது நட்பில் என்ன பலன் இருக்கிறது?" என்று.

"உமது கைகளிலிருப்பதே போதிய பலனல்லவா?" என்று மெல்ல வினவினான் இளையபல்லவன்.

இளையபல்லவன் கேள்வியில் எத்தகைய பதற்றமோ இகழ்ச்சியோ இல்லாவிட்டாலும், அதைக் கேட்ட கோட்டைத் தலைவன் ஏதோ விஷக்கடி பட்டவன் போல்

துள்ளி ஆசனத்தில் உட்கார்ந்தான். "என்ன? இன்னொரு முறை சொல்லுங்கள்?" என்று வினவினான் அவரச அவசரமாக.

"உங்கள் கையிலிருப்பதே போதிய பலனல்லவா என்றேன்!" என்று கேள்வியை மீண்டும் திருப்பிச் சொன்னான் இளையபல்லவன்.

"அப்படியானால்...?" மென்று சிரமப்பட்டு மீதி வார்த்தைகளை விழுங்கினான் கோட்டைத் தலைவன்.

"முத்துகள் உங்களுக்கு நான் அளிக்கும் பரிசு," சாதாரண தானமளிப்பவன் போல் பதில் சொன்னான் இளையபல்லவன்.

"உண்மையாகவா?"

"ஆம்."

"நான்குமா!"

"ஆம்."

"இவற்றின் மதிப்பு உமக்குத் தெரியுமா?"

"முத்துகள் கொழிக்கும், முத்துகள் எடுக்கும் தமிழகத்தில் பிறந்தவன் நான்."

"இவை அத்தகைய சாதாரண முத்துகள் அல்ல. இன்று நேற்று எடுக்கப்பட்டவை அல்ல."

"நெடுநாட்களுக்கு முன் எடுக்கப்பட்டதானாலும் தமிழகத்தின் முத்துகள் இவை."

"எப்படித் தெரியும் உமக்கு?"

"இவற்றின் வெண்மையிலிருந்து கதிரவன் கதிர்களோ, விளக்கின் சுடரொளியோ படும்போது வைரங்கள் போல் மாறுவதிலிருந்து."

இதைக் கேட்டதும் மீண்டும் தனது கைகளை நோக்கினான் கோட்டைத் தலைவன். கதிரவன் ஒளியில் அந்த முத்துகளின் பிரகாசம் ஆயிரம் மடங்கு உயர்ந் திருந்தது. 'உண்மைதான் உண்மைதான்' என்று தனக்குத் தானே பைத்தியக்காரன் போல் சொல்லிக்கொண்ட கோட்டைத் தலைவன், "இந்த முத்துகள் பாலித் தீவிலிருந்தன?" என்றான் இளையபல்லவனை நோக்கி.

'ஆம்' என்பதற்கு அறிகுறியாக தலையசைத்தான் இளைய பல்லவன்.

"இவை எப்படி உமக்குக் கிடைத்தன?"

"பாலி மன்னர் கொடுத்தார்."

"தாமாகவா?"

"ஆம்."

"இதை நான் நம்பவில்லை." கோட்டைத் தலைவன் முத்துகளைக் கைகளில் இறுகப் பிடித்த வண்ணம் ஆசனத்திலிருந்து எழுந்து இளையபல்லவனை நன்றாக ஏறிட்டு நோக்கிவிட்டுச் சொன்னான்: "இந்த முத்துகளைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும்."

"நீங்கள் முத்துகளை ஆராய்ந்தபோதே புரிந்து கொண்டேன்," என்று இளையபல்லவன் ஆமோதித்தான்.

"இவை பாலி அரசர்களின் குடும்ப தனம்," என்று சுட்டிக் காட்டினான் கோட்டைத் தலைவன்.

"ஆம்."

"இவற்றை அவரிடமிருந்து விலைக்கு வாங்கப் பல அரசர்கள் முனைந்தார்கள்."

"அப்படித்தான் கேள்வி."

"ஆனால் பாலி மன்னர்கள் கொடுக்கவில்லை."

"அதுவும் கேள்வி உண்டு."

"உமக்கு மட்டும் ஏன் கொடுத்தார்கள்?"

"இப்பொழுது பாலியிலுள்ள மன்னருக்கு யாரும் செய்ய முடியாத உதவியைச் செய்தேன்."

கோட்டைத் தலைவன் முகத்தில் கேள்விக்குறி பலமாக எழுந்து நின்றது. "கொள்ளைக்காரன் என்ன உதவியைச் செய்ய முடியும் அரசருக்கு?"

"மற்றவர்கள் செய்யமுடியாத உதவியைக் கொள் ளைக்காரன் செய்ய முடியும். கொள்ளைக்காரன் செய்ய முடியாத உதவியை மற்ற யாரும் செய்ய முடியாது," என்று புதிர் போட்ட இளையபல்லவன் மெல்ல நகைக்கவும் செய்தான்.

"அத்தகைய பெரும் உதவிதான் என்ன?" என்று கேட்ட கோட்டைத் தலைவனின் குரலில் சந்தேகம் துளிர்த்தது.

இளையபல்லவன் அந்தச் சந்தேகத்தைக் கவனித் தானானாலும் கவனிக்காதவன் போல், "தலைவரே! உமது இந்தக் கோட்டை பாழாக்கப்படாமலும் உமது குடும்பப் பெண்கள் கற்பழிக்கப்படாமலும் பாதுகாக்க என்ன கொடுப்பீர்கள்?" என்று கேட்டான்.

"எதையும் கொடுப்பேன்." விநாடி நேரத்தில் எழுந்தது கோட்டைத் தலைவன் பதில்.

"அப்படிக் கொடுக்கப்பட்ட முத்துகள் இவை." என்று விடையிறுத்த இளையபல்லவன் ஒரு விநாடி ஏதோ சிந்தித்துவிட்டு, "தலைவரே! பாலித்தீவு அகூதாவின் கொள்ளைக் கூட்டத்தால் தாக்கப்பட்டதை அறிவீர் களல்லவா?" என்று வினவினான்.

"ஆம் அறிவேன்," என்றான் கோட்டைத் தலைவன்.

"அந்தத் தாக்குதலை வெற்றிகரமாக முடித்துக் கொடுத்தவன் நான். அதற்காக அகூதா தமது பெரும் போர்க் கப்பல்களில் ஒன்றை எனக்கு வெகுமானமாகக் கொடுத்தார். அகூதாவின் கொள்ளைக்காரர்கள் பாலித் தலைநகரில் புகுந்து கொள்ளையடித்துச் சூறையாடிப் பெண்களை நாசம் செய்ய முற்பட்டார்கள். என்னிட மிருந்த வீரர்களைக் கொண்டு அந்த பாதகச் செயல்களை நிறுத்தினேன். கொள்ளைக் கூட்டம் சூழ்ந்திருந்த அரண் மனைக்குள் புகுந்து மன்னரையும் அவர் குடும்பத்தையும் காப்பாற்றினேன். அவருக்கும் அகூதாவுக்கும் இடையில் ஓர் ஒப்பந்தத்தையும் முடித்து, கொள்ளைக்காரரைக் கட்டுப்பாட்டுடன் பாலியிலிருந்து வெளியேற்றினேன். தமது குடும்பத்தையும் நகரத்தையும் சீரழிவதிலிருந்து காப்பாற்றியதற்காகப் பாலி மன்னர் இந்த முத்துகளைப் பரிசாக அளித்தார்," என்று இளையபல்லவன் முத்துகள் தனது கைக்கு வந்த வரலாற்றை விவரித்தான்.

அவன் பேச்சைக் கேட்கக் கேட்கப் பெரும் வியப்பா யிருந்தது கோட்டைத் தலைவனுக்கு. 'நகரங்களைச் சூறை யாடலிலிருந்து காப்பாற்றுவதும், மன்னர் குடும்பத்தையும், பெண்களையும் மானபங்கத்திலிருந்து காப்பதும் கொள் ளைக்காரன் செய்கையாக இல்லையே?' என்று உள்ளுக்குள் எண்ணமிட்ட கோட்டைத் தலைவன், "நீர் கொள்ளைக்காரரா, அரசாங்கக் கடற்படைத் தளபதியா?" என்று வெளிப்படையாகக் கேட்கவும் செய்தான்.

"இரண்டுமாக இருக்க உத்தேசிக்கிறேன்," என்று இளையபல்லவன் பதில் கூறினான்.

இதைக் கேட்டதும் வியப்புடன் விழிகளை உயர்த்திய கோட்டைத் தலைவன், "அதெப்படி முடியும் இளைய பல்லவரே! அரசாங்கங்களின் கடற்படை, சில கட்டுப்பாடு

களுக்கும் நீதி வரம்புகளுக்கும் உட்பட்டது. கொள்ளைப் படை அத்தகைய வரம்புகளுக்கு உட்படாதது," என்று விளக்கினான்.

"இரண்டிலுமிருக்கிற நல்ல அம்சங்களை எடுத்துக் கொள்கிறேன். கொள்ளைக்காரர், கட்டுப்பாடுடைய மாலுமிகளைவிடத் துணிவுள்ளவர்கள்; உயிரைப் பணயம் வைத்து எந்த அளவிலும் ஈடுபடக்கூடியவர்கள். கட்டுப் பாடுடைய கடற்படை கண்டபடி எல்லோர் மரக்கலங் களையும் தாக்க முடியாது. சில நெறிகளுக்கும் உத்தரவு களுக்கும் அந்தந்த அரசாங்க உடன்படிக்கைகளுக்கும் உட்பட்டது. கொள்ளைக்காரர்களுக்குள்ள துணிவையும் அரசாங்கக் கடற்படையின் கட்டுப்பாட்டையும் நெறி யையும் இணைக்க நான் முயற்சிக்கிறேன்," என்று கூறினான் இளையபல்லவன்.

"இரண்டையும் இணைக்க முடியுமா?"

"முடியும்."

"இணைத்து என்ன செய்யப் போகிறீர்கள்?"

"சிறு கடற்படையைச் சொந்தமாக நிறுவப் போகிறேன்."

"நிறுவி?"

சற்று யோசித்த இளையபல்லவன் நிதானமும், உறுதியும் தொனித்த குரலில், "கலிங்கத்தின் கடலாதிக் கத்தை உடைக்கப் போகிறேன்," என்று கூறினான். கூறிவிட்டுச் சில விநாடிகள் கோட்டைத் தலைவனைக் கூர்ந்து நோக்கவும் செய்தான்.

கோட்டைத் தலைவன் சில விநாடிகள் யோசித்துக் கொண்டு அறையில் அங்குமிங்கும் உலாவினான். பிறகு

நின்று கேட்டான், "கலிங்கத்தின் மீது அத்தனை வெறுப்பா உங்களுக்கு?" என்று.

"ஆம்." என்று திட்டமாகக் கூறினான் இளைய பல்லவன்.

"ஏன்?"

"கலிங்கத்தின் கடலாதிக்கம் சோழநாட்டுக் கடல் வாணிபத்துக்குப் பெரும் ஆபத்து. இப்பொழுது கடலில் உலவும் தமிழ் வணிகரின் உயிர்களுக்கே உலை வைக்கிறது கலிங்கம். இதை ஒடுக்க வேண்டும்."

"கொள்ளைக்காரருக்கு நாடு, நீதி, அபிமானம் என்பது உண்டா?"

"சாதாரணமாகக் கிடையாது. ஆனால் அவையும் உண்டு என்பதற்கு நான் அத்தாட்சியாக இருக்க விரும்பு கிறேன்."

மறுபடியும் சில வினாடிகள் மௌனம் சாதித்த கோட்டைத் தலைவன், "நான் உமக்கு உதவுவேனென்று எதிர்பார்க்கிறீரா?" என்று வினவினான்.

"எதிர்பார்த்துத்தான் இங்கு வந்தேன்."

"நான் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதியின் சேவகன், அவர் கோட்டையின் தளபதி."

"அது தெரியும் எனக்கு."

"ஸ்ரீவிஜயத்தின் சக்கரவர்த்தி கலிங்கத்துடன் நட்பு கொண்டவர்."

"அதுவும் நீங்கள் ஏற்கெனவே சொல்லி இருக் கிறீர்கள்."

"அப்படியிருக்க நான் உங்களுக்கு உதவுவது ராஜத் துரோகமாகாதா!"

"ஆகும்.... ஆனால்...." என்று இழுத்த இளைய பல்லவன் குரலில் விபரீத தொனி துளிர்த்தது.

அதைக் கோட்டைத் தலைவனும் கவனித்தான். ஆகவே, "ஆனால் என்ன?" என்று சீற்றத்துடன் வினவி னான்.

"ஆனால் நீங்கள் எந்தப் பக்கம் நியாயமிருக்கிறது என்பதை அறிந்து நடப்பவர் என்பதைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். இந்த அறைக்கு வந்ததும் அதைப் புரிந்துகொண்டேன்," என்ற இளையபல்லவன் எதிரே யிருந்த பட்டயங்களில் ஒன்றைச் சுட்டிக்காட்டி, "அந்தப் பட்டயத்திலிருப்பவர் பெயர் ஸ்ரீவிஜயத்தின் உபதளபதி என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அவரையும் கொலை செய்திருக்கிறீர்கள். ஆகவே நீங்கள் அவரவர்களுக்குத் தகுதி யாகவும் சமய சந்தர்ப்பங்களை முன்னிட்டும் முடிவு களைச் செய்வீர்கள் என்பதை உணர்ந்தேன்" என்று கூறினான்.

இதைக் கூறியபோது இளைய பல்லவன் குரலிலிருந்த ஏளனத்தைக் கோட்டைத் தலைவன் கவனிக்கத் தவறவில்லை. சுயநலத்துக்குத் தான் எதையும் செய்ய வல்லவன், யார் பக்கமும் சேர வல்லவன் என்பதை இளையபல்லவன் புரிந்துகொண்டு விட்டானென்பதை உணர்ந்துகொண்ட கோட்டைத் தலைவன் உள்ளத்தில் பெரும் சீற்றம் உருவெடுத்தது. எந்த அயோக்கியனும், தனது அயோக்கியத்தனத்தைப் பிறன் உணர்த்த விரும்புவ தில்லை. ஆகவே தன் ஆத்மாவையே உற்றுப் பார்த்துத் தன் குணவிசேஷங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இளையபல்லவன் அலசிவிட்டதும் அதில் ஆக்ரோஷ மடைந்த கோட்டைத் தலைவன், "உமக்கு உதவ நான் மறுத்தால்?" என்று இரைந்து அந்த அறையே கிடுகிடுக்கும் படியாகக் கூவினான்.

அந்தக் கூச்சலை இளையபல்லவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அறைகூட அவன் நினைப்பிலிருந்து நீங்கியது. அவன் கண்கள் அந்த அறையின் ஒரு மூலையை நோக்கி நிலைத்தவை நிலைத்தபடி நின்றன. அங்கிருந்தது ஒரு சிலை. அது மெள்ள அசையவும் செய்தது. ஏதோ பிரமை பிடித்தவன் போல் அதைப் பார்த்துக்கொண்டே நின்றான் இளையபல்லவன்.





## மஞ்சளழகி

“உமக்கு நான் உதவ மறுத்தால்?” என்ற கோட்டைத் தலைவனின் ஆக்ரோஷக் கூச்சலைக்கூட அறிவில் புகவொட்டாமல் தடுத்துத் தன்னைப் பெரும் பிரமைக்கு உள்ளாக்கிக் கொண்டு அறைக் கதவுக்கருகில் சிறிதும் அசையாமல் சிலையென நின்ற சித்தினிப் பெண்ணை இமை கொட்டாமல் பார்த்து நின்ற இளையபல்லவன், அந்த அழகுச்சிலை அசையவும் ஆரம்பித்தபின் அதன் நடை ஒய்யாரத்திலும் மனத்தைப் பறி கொடுத்தான். அதுவரையில் தான் வாழ்வில் கண்ட எந்தச் சாதியையும், அந்த வடிவழகி சேர்ந்தவளல்லவென்பதைப் பார்த்த மாத்திரத்தில் புரிந்துகொண்டாலும், அவள் எந்தச் சாதி, எந்த நாட்டவள் என்று தீர்மானிக்க முடியாத அளவுக்கு அவள் உடலழகு இடத்துக்கு இடம் மாறுபட்டிருந்ததைக் கவனித்த இளையபல்லவன் எங்கோ கானகத்தில் புகுந்தவன் என்றும் காணாத ஒரு புத்தம் புது மலரைக் கண்டு விட்டால் எந்த நிலையை அடைவானோ அந்த நிலையை அடைந்திருந்தான். அவள் முகத்தில் லேசாகச் சீனப் பெண்களுக்கு உள்ள களை இருந்ததேயொழிய, நல்ல கூர்மையாயிருந்த நாசியும், அடர்த்தியாக வளர்ந்திருந்த புருவங்களும் அவள் சீனத்துப் பைங்கிளி அல்லவென்பதை அறிவுறுத்தின. அவள் சரீரச் சருமத்தில் ஓடியிருந்த லேசான மஞ்சள் நிறமும் சீனத்து மாதர் உடலிலுள்ள மஞ்சளைப் போலில்லாமல் மஞ்சள் பூசிக் குளித்த பின்னுள்ள உடல் வண்ணத்தை அடைந்திருந்ததால், ஏதோ பக்குவப்பட்ட தங்கம்போல் பளிச்சிட்டது. நன்றாக

எழுந்து வளைந்திருந்த அவள் கன்னக் கதுப்புகளும் அதிக அகலமில்லாவிட்டாலும் மிக வசீகரமாகத் தெரிந்த நுதல் பிரதேசமும், உருண்டு தொங்கிய கைகளும், புத்தொளி யொன்றை இயற்கையாகவே பெற்றிருந்ததையும், தெரிந்தும் தெரியாமலுமிருந்த அந்த ஒளியும் அவளைச் சொர்ண தேவதையைப் போல அடித்திருந்ததையும் கவனித்த இளையபல்லவன் மனத்தை விட்டு அகற்ற முடியாத பெரும் விபரீத அழகுக்கு முன்பாகத் தான் நிற்பதை அறிந்து கொண்டான். அத்தனை அழகையும் தோற்கடிக்கும் படியாக அவனை உற்று நோக்கிய விழிகளில்கூட இனங்களிரண்டு கலந்து கிடந்தன. அவள் கருவிழிகளைச் சுற்றியிருந்த இடம் அசல் வெளுப்பாயில்லாமல் சற்று செவ்வரி படர்ந்திருந்ததால் சாவகத்தின் குரூரமான பகத் இனத்தாரின் விழிகளைப் போல் அவை இருந்தாலும், விழிகளில் குரூரத்துக்குப் பதில் சாந்தமும் விஷமமும் நிலவிக் கிடந்தன. அவள் பார்வையிலிருந்து குணத்தைப் பற்றி எதுவும் சொல்ல முடியாதிருந்தது. வெறுத்த பார்வையல்ல, வஞ்சகப் பார்வையுமல்ல. இருந்தாலும் பார்ப்பவர்களுக்குச் சந்தேகம் தொனிக்கும் பார்வையை அந்த விழிகள் உதிர்த்தன.

காட்டுப் புஷ்பம் போலவே அவள் அவயவங்கள் செழித்துக் கிடந்தன. திண்மையான கழுத்தும், சிற்றி டைக்குக் கீழே முன்னும் பின்னுமிருந்த வளர்ச்சியும் இன்ப இச்சை நிறைந்த உள்ளத்துக்கு வெளிச் சான்றுகளாகக் காட்சியளித்தன. உறுதியாக நிலத்தில் ஊன்றிய அவள் கால்கள் மிகுந்த அழகு படைத்து, கட்டை விரலிலிருந்து மேல் நோக்கு நோக்கினால், சிறிதாகத் துவங்கிப் பெரிதாகக் கடலுக்கு அருகே விரியும் அழகுள்ள நதியையும் தோற் கடிக்கும் வண்ணம் அமைந்திருந்தன.

இத்தனை அழகுகளைத் தாங்கி, நல்லவளா, பொல் லாதவளா, சீனத்துப் பெண்ணா, வேறு நாட்டவளா என்று எதையும் ஊகிக்க முடியாத பெரும் புதிராகவும்

அசைவற்றும் நின்ற அந்த அழகுச்சிலை அசைய முற்பட்டுத் தன்னை நோக்கி நடக்கத் துவங்கியதும், அவள் தேகத்தின் எழிலிடங்கள் மெல்ல ஆடியும் துள்ளியும் புரண்டும் கூட வந்து இளையபல்லவன் சித்தத்தை எங்கோ இழுத்துக் கொண்டு சென்றன. தலையில் இருந்த அவள் சுருண்ட மயிரில் பல இழைகள் பிரிந்து தொங்கித் தோளில் புரண்டதும், முழுப் பின்னல் மார்பில் தவழ்ந்ததும் சில இழைகள் கன்னத்தைத் தொட்டதும் பெரும் இம்சையை இளையபல்லவன் இதயத்தில் விளைவித்தன. அந்த உணர்ச்சிகள் அவன் சித்தத்தை ஒரு வருடத்துக்கு முன்பாகப் பாலூர்ப் பெருந்துறைக்கு இழுத்துச் சென்றன. வெளிநாட்டுப் பிரமுகர் வீதியின் மாளிகை அறையில் குதிக்க வைத்தது.

அங்கு தான் திரை மறைவிலிருந்த காட்சியும், ஆடை புனைய வந்த காஞ்சனாதேவியின் தெய்வீக அழகும், அவன் இதயக் கண் முன்னால் தாண்டவமாடின. அன்று தான் ஒளிந்திருந்த திரை அசைந்ததும் அவள் அஞ்சன விழிகள் திடீரென எழுந்து தானிருந்த இடத்தை நோக்கிய வீர நோக்கையும் கண்டான் அவன். இன்று எதிரேயிருந்த கண்களிலிருந்து பயமற்ற, ஆனால் வீரம் என்று சொல்ல முடியாத பேரழகுக் கண்களையும் பார்த்தான். 'அங்கு அசைந்தது திரை. சீறின அஞ்சன விழிகள். இங்கு அசைந்தது ஒரு சிலை, மயக்கின அழகுக் கண்கள்,' என்று தனக்குள் எண்ணமிட்ட இளையபல்லவன் இரண்டு அழகிகளுக்கும் உள்ள ஏற்றத் தாழ்வையும் எடை போட முற்பட்டுத் தோல்வியே அடைந்தான். இரண்டும் வெவ்வேறு அழகாயிருந்ததையும், ஒன்றுக்கொன்று சளைக் காததாயிருந்ததையும் அறிந்து கொண்ட இளையபல்லவன் ஒன்று மட்டும் தீர்மானமாகப் புரிந்துகொண்டான். 'காஞ்சனாதேவியின் அழகு தூய்மையான ஒற்றை நாட்டு அழகு. அக்ஷயக்கோட்டைச் சித்தினியின் அழகில் எத்தனையோ உயர்விருந்தும் அதில் இரண்டு நாடுகளோ

இனங்களோ கலந்திருக்க வேண்டும்” என்று உறுதி செய்து கொண்ட இளையபல்லவன், ‘எந்த இனம் கலந்தாலும் விவகாரங்களைக் கலக்காமல் அந்த இனங்களின் அழகு களை மட்டும் இணைத்து எதற்காக ஆண்டவன் இந்த அற்புதத்தைச் சிருஷ்டித்தான்?’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அதில் ஒரு முடிவுக்கும் வந்தான். ‘இது அழகுதான். ஆனால் அஞ்சத்தக்க அழகு,’ என்று முடிவுசெய்த இளையபல்லவன் எதிரேயிருந்த கோட்டைத் தலைவன்மீது தன் கண்களைத் திருப்பினான். ஆனால் கோட்டைத் தலைவன் அவன் கண்களுக்குப் புலப்பட வில்லை.

இளையபல்லவன் சிந்தனையைப் பலவிதங்களில் புரட்டிக்கொண்டே அசைந்து அசைந்து நடந்து வந்த அந்தப் பேரழகி அவன் ஆராய்ச்சி முடிவதற்குள் கோட்டைத் தலைவனுக்கும் இளையபல்லவனுக்கும் இடையே வந்துவிட்டதல்லாமல், கோட்டைத் தலைவ னுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு இளையபல்லவனை நோக்கித் திரும்பியும் நின்றதால், சோழர் படைத் தலைவன் தன் கண்களைத் தூக்கியபோது எதிரே அவள் எழில் அவனை நோக்கிற்று. சிருங்கார ரஸமடங்கிய பெரும் கவியின் ஏட்டுப் பிரதிகளைச் சுவையுடன் பார்க்கும் ரஸிகனின் பார்வையுடன் அவளை நோக்கிய இளைய பல்லவன், தன் சித்தத்தை அடியோடு சீரழிக்கும் நோக்கத்துடன் இயற்கை வளர்த்துவிட்ட பெரும் புஷ்பங் களைத் தாங்கிய ஒரு பூவுடற் செல்வி தன் விழிகளுக் கெதிரே நிற்பதைக் கண்டான். சிறிது சலனமும் அடைந் தான். சலனம் என்ன? சங்கடமும் அடைந்தான்.

அவளை அப்படி நோக்குவதும், சலனத்துக்கு உட்படுவதும் காஞ்சனாதேவியிடம் தான் கொண்டுள்ள காதலுக்குப் பெரும் இழுக்கு என்று நினைத்துச் சிந்தனையை வேறு திக்கில் இழுக்க முயன்ற இளைய பல்லவன் எப்படிச் சிந்தனை தன் வசமில்லை என்பதை

அந்தச் சில விநாடிகளில் புரிந்துகொண்டான். புத்தியின் புறத்தோற்றமான கண்ணெனும் வாயில் வழியாக அவள் எழில் தன் சித்தத்துக்குள் நுழைந்து வேறு நினைப்புக்கே அங்கு இடமில்லாமல் செய்து விட்டதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் செய்வதறியாமல் திணறினான். இந்தச் சமயத்தில் கோட்டைத் தலைவனாவது உதவிக்கு வந்திருக் கலாம். ஆனால் என்ன காரணத்தாலோ கோட்டைத் தலைவன் ஆக்ரோஷக் கூச்சல் திடீரென அடங்கியது. "உனக்கு உதவ மறுத்தால்?" என்று அவன் ஆரம்பத்தில் இட்ட கூச்சலுக்குப் பின் அவன் எதுவுமே பேசவில்லை. இளையபல்லவன் கண்கள் சென்ற திக்கையும், அவன் பிரமையையும் கவனித்த கோட்டைத் தலைவன் முகத்தி லிருந்த ஆக்ரோஷம் திடீரென மறைந்து வதனத்தை மந்தகாசம் ஆட்கொண்டது. அந்த மந்தகாசத்தின் ஊடே வஞ்சகப் பார்வையொன்றும் புகுந்தது. அவன் முகத்தில் திடீரென ஏதேதோ எண்ணங்கள் புகுந்து மறைந்து கொண்டதற்கான அறிகுறிகள் ஒரு விநாடி தெரிந்தன. பிறகு அவன் ஏதோ முடிவுக்கு வந்துவிட்டதையும் அந்த முடிவில் அவனுக்குப் பெரும் திருப்தியும் இருந்ததும் மந்தகாசத்தில் விரிந்து கிடந்தது.

இளையபல்லவனின் அழகு ஆராய்ச்சியைக் கோட்டைத் தலைவன் மிகுந்த நிதானத்துடன் பார்த்துக் கொண்டே நின்றான். அந்தப் பெண்ணின் அழகுக்கடலில் இளையபல்லவன் அமிழ்ந்து போவதைக் கண்டு அக மகிழ்ந்து போனதற்கு அறிகுறியாக அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனின் அதரங்கள் மெல்லப் புன் முறுவல் கோட்டின. அந்த ஆனந்தப் புன்முறுவல், அவன் இளையபல்லவனை வலியப் பிணைக்கவல்ல பல திட்டங்களை வகுத்து விட்டதற்கான சாந்தியையும் அவன் மனத்தில் நிரப்பியது. ஆகவே அந்த அழகி தங்களிரு வருக்கும் இடையே வந்து தனக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்றதைப்பற்றி அவன் சிறிதும் லட்சியம்

செய்யாமல் இரண்டடி பின் சென்று பழையபடி தன் ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு, அவர்களிருவர் பேச்சின் போக்கைக் கவனிக்க முற்பட்டான்.

இளைய பல்லவனுக்கு முன் வந்து திடமாகவும், ஆனால் பெரும் ஒய்யாரத்துடனும் இடையில் ஒரு கையை முட்டுக்கொடுத்து நின்ற அந்த அழகுச் சிலை தன் செவ்விய அதரங்களைப் பிரித்து, "நீங்கள் மகா வீரர் என்பதைப் புரிந்து கொண்டேன்." என்ற சொற்களை உதிர்த்ததன்றி, தன் தலையையும் ஒருபுறம் வணக்கத்துக்கு அறிகுறியாக ஒருக்களித்தாள்.

அதரத்தின் அபரிமிதச் சிவப்பு, தான் சற்று முன்பு கோட்டைத் தலைவனுக்குப் பரிசளித்த முத்துகளை விடச் சிறந்த நான்கு பற்கள், வீணையின் நாதம் போல் உதிர்ந்த சொற்கள் எல்லாம் இளையபல்லவன் இதயத்தைக் கொள்ளை கொண்டன. அந்த அழகுச் சிலைக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்தான் அவன். பிறகு மெள்ள ஒற்றைச்சொல்லை வெளியிட்டான், "நன்றி" என்று.

அவள் மெல்ல நகைத்துவிட்டுப் பதில் சொன்னாள் : "உங்களுக்கு அடக்கமும் இருக்கிறது," என்று.

"நன்றி," இரண்டாம் முறையும் இளையபல்லவன் அதே பல்லவியைப் பாடினான்.

அவளது பெரும் புருவங்கள் நெற்றியை நோக்கி வியப்புக்கு அறிகுறியாக எழுந்தன. "வெட்கமும் இருக்கிறது உங்களுக்கு," என்றாள் அவள் மறுபடியும் நகைத்து.

அவள் நகைப்பு பெரும் இன்பமாகத்தானிருந்தது, இளையபல்லவனுக்கு. இருந்தாலும், திரும்பத் திரும்ப அவள் தன் குணாதிசயங்களை விவரித்ததால் பொறுக்காத அவன் தன் கைவரிசையையும் காட்டத் தொடங்கி, "சில சமயங்களில் அந்தக் குணம் ஆண்களுக்கும் தேவையா யிருக்கிறது," என்றான் மெதுவாக.

அவன் பதிலில் புதைந்து கிடந்த பொருளை நொடிப் பொழுதில் புரிந்துகொண்டாள் அவள். பெண்கள் சில சமயங்களில் காட்டும் நாணக்குறைவைக் குத்திக் காட்டவே அவன் அப்படிப் பதில் சொல்லியிருக்கிறானென்பதை அறிந்துகொண்ட அவள், "உங்களுக்கு விஷமமும் இருக்கிறது" என்றாள் நான்காம் முறையாக.

"என்ன!" வியப்புடன் கேட்டான் இளையபல்லவன்.

"நீங்கள் மாவீரர் என்றேன் - அடக்கத்தைக் காட்டினீர்கள். உங்களுக்கு அடக்கமிருக்கிறதென்றேன் - வெட்கத்தைக் காட்டினீர்கள். வெட்கமிருக்கிறதென்றேன் - என்னைக் குத்திக் காட்டி உங்களுக்கு விஷமமும் உண்டு என்பதை நிரூபித்தீர்கள். அடக்கம், வெட்கம், விஷமம் ஆகிய குணங்கள் எனக்கு மிகவும் பிடிக்கும்" என்றாள் அவள் உள்ளத்தைத் திறந்து காட்டி.

"ஏன்?" அவளுக்குப் பதில் சொல்லத் தெரியாததால் ஏதோ கேட்க வேண்டும் என்பதற்காக அந்த ஒற்றைச் சொல்லை உதிர்த்தான் இளையபல்லவன்.

"அடக்கம் வீரத்துக்கு அடையாளம். வெட்கம் பண்பாட்டுக்கு அடையாளம். விஷமம் ரசிகத் தன்மைக்கு அடையாளம்," என்று அவள் பதில் சொல்லி அவனைப் பயமின்றி ஏறெடுத்துப் பார்த்தாள்.

இத்தனை சம்பாஷணைக்குப் பிறகும் இளையபல்லவன் ஒரு நிலையை அடையாமலே தத்தளித்தான். இருப்பினும் சமாளித்துக்கொண்டு, "மனோதத்துவத்தை நீங்கள் நன்கு அறிந்து கொண்டிருக்கிறீர்கள்," என்று கூறினான்.

பதிலுக்கு அவள் அடக்கத்தைக் காட்டவுமில்லை, நன்றி கூறவுமில்லை. "ஆம்" என்று சர்வசாதாரணமாக ஒப்புக்கொண்டாள். அந்த 'ஆம்' அந்தப் பாராட்டுதல் தனக்குத் தகும் என்பதை ஒப்புக்கொள்வதுபோல் இருந்தது. இதனால் வியப்புடன் அவளை ஏறெடுத்துப் பார்த்த

இளையபல்லவனை நோக்கி அவள் நகைத்துவிட்டு, "உங்கள் பாராட்டுதலை நான் ஒப்புக்கொண்டது உங்களுக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் நீங்கள் சொன்னதில் தவறேதுமில்லை. எனக்கு மனோதத்துவம் தெரியாதிருந்தால் இந் அக்ஷயமுனையில் நான் ஒருநாள் ஜீவித்திருக்க முடியுமா? கொள்ளையர் நடுவில் பயமின்றி உலாவ முடியுமா?" என்றாள்.

"கொள்ளையர் நடுவில் உலாவுவீர்களா!" மிகுந்த ஆச்சரியத்துடன் எழுந்தது இளையபல்லவன் கேள்வி. 'கற்பையோ ஒழுக்கத்தையோ இம்மியளவும் மதிக்காத கொள்ளையர் கூட்டத்தில் இத்தகைய ஒரு பெண் சிக்கினால்...?' நினைக்கவும் பயந்தான் இளைய பல்லவன்.

அவன் முகபாவத்தை அந்த அழகி கவனித்தாள். நகைத்துவிட்டுச் சொன்னாள் : "உங்கள் வியப்புக்குக் காரணமிருக்கிறது. என்னுடன் பழகிய பலரும் உங்களைப் போல் வியப்படைந்திருக்கிறார்கள்... ஆனால் இதில் எனக்கு வியப்பில்லை. கொள்ளைக்காரரிடம் எனக்கு அச்சமில்லை. அவர்களுக்குத்தான் என்னிடம் அச்சமிருக் கிறது. நான் இஷ்டப்பட்டால் அவர்கள் என்னைச் சுற்றி வளைக்கலாம். இல்லையேல் தொலை தூரத்தில் நிற்க வேண்டும்" என்ற அவள் சரேலெனப் பின்னடைந்து, தன் தந்தையும் இளைய பல்லவனும் ஒருவரையொருவர் நேரில் பார்த்துக்கொள்ள இடம் விட்டுத் தன் இடது கையைக் கோட்டைத் தலைவனை நோக்கிச் சுட்டிக்காட்டி, வலது கையைத் தன் மார்பின் மீது வைத்து, "இதோ இருக்கும் என் தந்தை கோட்டையின் தலைவராயிருக்கலாம். கொள்ளைக் காரர்களின் தலைவர் இவரல்ல, நான்தான்!" என்றாள்.

ஏதோ நாட்டிய முத்திரைபோல் மார்பில் வைக்கப் பட்ட இந்தக் கையும், அபிநய பாவங்கள் முகத்தில் துளிர்த்த அழகுக் குறிகளும் இளையபல்லவனைக் கவர்ந்ததன்றி அவள் சொற்களில் தொனித்த எல்லையற்ற

துணிவும் அவனுக்கு வியப்பையே அளித்தன. உடல் முழுவதும் மயக்கந்தரும் மஞ்சள் நிறமோடிய அந்த மஞ்சளழகியை நன்றாக ஏறெடுத்து நோக்கிய இளைய பல்லவன் வணக்கத்துக்கு அறிகுறியாகத் தலை தாழ்த்தி, "அப்படியானல் நான் வந்த அலுவல் சுலபமாகிறது?" என்றான்.

"எந்த அலுவல்?" என்று கேட்டாள் அவள்:

"சில முக்கிய கோரிக்கைகளுடன் தங்கள் தந்தை யிடம் வந்தேன்."

"என்ன சொன்னார்."

"இன்னும் சரியான பதில் இல்லை."

"உங்களைப் போன்ற கொள்ளைக்காரருக்கு... மன்னிக்க வேண்டும்.. வீரருக்கு என் தந்தை எதையும் மறுக்க மாட்டாரே!"

"மறுக்கவில்லைதான். இருந்தாலும்..."

"யோசிக்கிறார். அது சகஜம்தானே? ஒரு நாள் அவருக்கு அவகாசம் கொடுங்கள். இன்றிரவு நிகழ்ச்சி முடியட்டும்," என்ற அவள் திடீரெனத் தன் தந்தையின் பக்கம் திரும்பி, "ஏனப்பா! இன்றைய இரவு நிகழ்ச்சிக்கு இவரையும்..." என்று தொடங்கினாள்.

அடுத்த விநாடி அறை அதிர்ந்தது. "போ உள்ளே, உன்னை யார் வரச் சொன்னது இங்கே?" என்று கூவினான் கோட்டைத் தலைவன். அவன் உணர்ச்சிகளைத் திடீரென அத்தனை தூரம் உலுக்கிவிடக்கூடிய அந்த நிகழ்ச்சி எதுவாயிருக்கும்? ஏதும் புரியாமல் கோட்டைத் தலை வனை நோக்கினான் சோழர் படைத் தலைவன். கோட்டைத் தலைவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது.

அத்தியாயம் 9

# முன்னேற்பாடு

அன்றைய இரவு நிகழ்ச்சிக்குத் தன்னையும் அழைக்க வேண்டுமென அந்த அழகுச்சிலை கூற முற்பட்டு வார்த்தையை முடிக்கா முன்னமே, "உன்னை யார் வரச் சொன்னது இங்கே? போ உள்ளே!" என்று அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் அந்த அறையே அதிரும்படியாகக் கூவியதைக் கேட்டதும் சற்றுக் குழம்பவே செய்தான் இளையபல்லவன். எண்ணங்களைச் சிறிதும் புறத்தே காட்டாத ஆழ்ந்த உள்ளம் படைத்த அந்தக் கிராதகனே, கட்டுப்பட்ட தன் உணர்ச்சிகளைக் காற்றில் உதறிவிட்டுக் கூவும்படியான அந்த நிகழ்ச்சி யாதாயிருக்கும் என்று யோசித்து எதுவும் புரியாததால் கோட்டைத் தலைவனை நோக்கிக் கண்களைத் திருப்பிய இளையபல்லவன், அவன் முகத்தில் கோபம் மிதமிஞ்சித் தாண்டவமாடிக் கொண்டிருப்பதையும், சுடும் கண்களை அவன் தன் மகள் மீது திருப்பியிருப்பதையும் கண்டான். தந்தையின் அந்த உக்கிராகாரக் கோபத்துக்கு இலக்கான அந்த அழகியின் நிலை எப்படியிருக்கிறதென்பதைப் பார்க்க அவள்மீது திரும்பிய படைத்தலைவனின் கூரிய கண்கள் மறுகணம் பெரு வியப்பைக் கக்கின. தந்தையின் கூச்சலால் இம்மியளவும் உணர்ச்சிவசப்படாத அந்த மஞ்சளழகி, கோட்டைத் தலைவனை நோக்கி மௌனமாகவே மந்தகாசமே செய்தாள். தந்தையின் கூச்சலைக் கேட்டதும் அவள் தலை அவனை நோக்கித் திடீரெனத் திரும்பியதில், குழல் அசைந்து மயிரிழைகள் தோளின் இருபுறங்களிலும்

விழுந்தன. மருண்ட அவள் செவ்வரி விழிகள் சற்றே திரும்பின. அவ்வளவுதான். மற்றபடி வேறெவ்வித மாறுதலும் அவளிடம் காணப்படவில்லை. ஏற்பட்ட சிறு மாறுதல்களும் கண்ணிமைக்கும் நேரத்தில் நிகழ்ந்தனவாகையால், அவை மாறுதல்களாகவே இளையபல்லவனின் கூரிய விழிகளுக்கு மட்டுமென்ன அறிவுக்குக்கூடப் புலப்படவில்லை. இடுப்பில் முட்டுக் கொடுத்த கையைக் கூட எடுக்காமல், இருந்த இடத்தை விட்டு அசையாமல், அஞ்சாமல் சிரித்துக்கொண்டே நின்ற அவள் கண்கள் கோட்டைத் தலைவன் மீதே பல விநாடிகள் நிலைத்தன.

அந்தக் கண்களில் ஏதோ பெரும் சக்தி இருக்க வேண்டுமென்பதைச் சில விநாடிகளுக்குள் புரிந்து கொண்ட இளையபல்லவனின் வியப்பு பன்மடங்கு விரியலாயிற்று. மஞ்சளழகியின் கண்கள், கோட்டைத் தலைவன்மீது நிலைத்த ஒவ்வொரு விநாடியிலும் அவன் முகத்தில் மாறுதல் ஏற்பட்டு வந்ததையும், ஆரம்பத்தில் அதில் விரவிக் கிடந்த கோபமும் சிறிது சிறிதாக மறைந்து விட்டதையும் கண்ட இளையபல்லவன். அந்தப் பெண் அந்த அறையில் மட்டுமல்லாமல் அக்ஷய முனையிலேயே ஒரு பெரும் சக்தியென்பதையும், தன் திட்டங்கள் நிறைவேற அவள் உதவி மிகவும் அவசியமென்பதையும் சந்தேகமற அறிந்துகொண்டான். புலியைப் பழக்குபவனுடைய கண்களைப் பார்க்க முடியாமல் அஞ்சி ஒடுங்கும் புலியைப் போல அந்தத் துஷ்டன் மெள்ள மெள்ள ஒடுங்கி விட்டதையும் கண்ட இளைய பல்லவன், வியப்பு நிரம்பி வழிந்தோடிய விழிகளை மஞ்சளழகிமீது நிலைக்க விட்டான்.

தந்தையைத் தன் பார்வையாலேயே அடக்கிவிட்ட மஞ்சளழகி மெள்ள இளையபல்லவனை நோக்கித் திரும்பி முகத்திலிருந்த மந்தகாசத்துடன் சிறிது வருத்தத்தின்

குறியையும் கலந்துகொண்டு, "வீரரே! மன்னிக்க வேண்டும். தந்தை சில சமயங்களில் இப்படித் தான் நிதானத்தை இழந்துவிடுகிறார். உட்காருங்கள், நிதானமாகப் பேசு வோம்," என்று கூறி, அவனை எதிரேயிருந்த மஞ்சத்தில் மீண்டும் அமரச் சொல்லி, தந்தையின் பக்கத்திலே இருந்த ஆசனத்தில் தானும் உட்கார்ந்து கொண்டாள். அதிக ஒடுக்கத்தைக் காட்டாமலும், அபரிமிதமான ஆடம்பர மின்றியும், அடக்கமும், கம்பீரமும் கலந்த பெரும் ராணி போல் மஞ்சத்திலமர்ந்து மடியில் கைகளைக் கோத்துத் தவழ வைத்துக் கொண்ட மஞ்சளழகி தந்தையை நோக்கி, "அப்பா! இதற்கு ஏன் இவ்வளவு கூச்சல்? உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால் நிகழ்ச்சிக்கு இவரை அழைக்க வேண்டாம். அவ்வளவுதானே?" என்றாள். அவள் பேசிய போது சாதாரணமாகவே இன்ப நாதமாயிருந்த அவள் குரல் மிகவும் குழைந்து கிடந்தது. வீணைத் தந்தியைச் சுண்டி விட்டவுடன் மறு கரத்தின் விரல்கள் இழைக்கும் மேக நாதம் போல் அவள் குரல் எத்தகைய கடுமையான இதயத்தையும் கரைக்கும் தன்மையை எய்திவிட்டதைக் கவனித்த இளையபல்லவன், 'இவள் தந்தையைக் கண்டு அஞ்சாதவள் மட்டுமல்ல, அவனைச் சுண்டு விரலில் வைத்து இஷ்டப்படி சுற்றவும் வல்லவள்,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். அவன் ஊகம் சரியென்பதைக் கோட்டைத் தலைவனின் அடுத்த வார்த்தைகள் நிரூபித் தன. "அதற்காகச் சொல்லவில்லை..." என்று பலவீனமான குரலில் பதில் சொல்ல ஆரம்பித்தான் கோட்டைத் தலைவன்.

"எதற்காகச் சொல்லவில்லை!" என்று ஏதும் புரியாத குழந்தைபோல் மஞ்சளழகி அவனைக் கேட்டாள்.

கோட்டைத் தலைவன் இம்முறை தைரியமாகத் தலைநிமிர்ந்து அவளை நோக்கினான். அவள் விழிகள்

உதிர்த்த அந்தக் குழந்தைப் பார்வை இடையில் ஏற்பட்ட அவனுடைய அச்சத்தைத் தவிர்த்திருக்க வேண்டும். அவன் முகத்தில் மெள்ள மெள்ளப் பழைய களை படர்ந்து ஆழமும் வஞ்சகமும் நிறைந்த முன்னைய நோக்கு கண்களிலும் நிலவியது. அந்த வஞ்சகப் பார்வையிலும் பாசம் சிறிது பரவி நின்றது. சொற்களிலும் அந்தப் பாசம் தொனிக்கச் சொன்னான் கோட்டைத் தலைவன், "நான் இரைந்தது உன் மனத்தைப் புண்படுத்த அல்ல மகளே!" என்று.

மஞ்சளழகியும் கொஞ்சிய வண்ணமே, "என் மனத்தை நீங்கள் ஒருநாளும் புண்படுத்த மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியாதா?" என்று பதில் சொன்னாள்.

அடுத்தபடி இளையபல்லவன் எதிரே கல்லுப் பிள்ளையார் மாதிரி உட்கார்ந்திருக்கிறான் என்பதைப் பற்றிச் சற்றும் நினைக்காமல் தந்தையும் மகளும் ஒருவருக் கொருவரே பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

"இன்றிரவு நிகழ்ச்சி சாமான்யமானதா?" என்று பெண்ணின் கையை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டு செல்லமும் கவலையும் கலந்த குரலில் கேட்டான் கோட்டைத் தலைவன்.

"இல்லை," என்று மஞ்சளழகி பதில் கூறினாள்.

"அக்ஷயமுனையின் பிரத்யேக நிகழ்ச்சி இது," என்றான் கோட்டைத் தலைவன்.

"ஆமாம்," என்றாள் அவள்.

"சித்ரா பௌர்ணமியன்று பிரதி வருஷம் நடக்கிறது."

"ஆமாம்."

"நீ இல்லாவிட்டால் நிகழ்ச்சி இல்லை."

"ஆமாம்."

"நிகழ்ச்சிகள் இல்லாவிட்டால் முடிவுகள் இல்லை."

"உண்மை."

"முடிவுகளில்லாவிட்டால்...?"

"நீங்களில்லை, நானில்லை, இக்கோட்டையுமில்லை."

"இத்தனையும் தெரிந்தா இந்தப் புது மனிதரை இன்றைய இரவு நிகழ்ச்சிக்கு அழைக்க விரும்புகிறாய்?"

இந்தக் கடைசிக் கேள்வியைக் கோட்டைத் தலைவன் வீசியபோதுதான் இளையபல்லவனொருவன் எதிரே யிருக்கிறான் என்ற உணர்வடைந்த மஞ்சளழகி அவனை ஏறெடுத்து நோக்கினாள். அப்படி நோக்கிய அந்தக் கண்களில் சிறிது குழப்பம் இருந்ததை இளையபல்லவன் கவனித்தான். அந்த இருவர் சம்பாஷணையையும் கேட்க ஏதோ பெரு மர்மங்களடங்கிய ஒரு பிரதேசத்துக்குத் தான் வந்துவிட்ட உணர்ச்சி ஏற்பட்டதால், சித்தத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து சுழல, இளையபல்லவனும் ஓரளவு குழப்பமே அடைந்திருந்தான். அந்த இரவு நிகழ்ச்சியைப் பற்றித் தந்தையும் மகளும் பேசி முடித்த பிறகு நிலைமை தெளிவாவதற்குப் பதில் மர்மம் முன்னைவிட வலுத்து விட்டதைக் கவனித்த இளையபல்லவனின் இதயத்தில் அந்த நிகழ்ச்சி எதுவாயிருக்கும் என்பதை அறிய ஏற்பட்ட ஆவலுடன், அதில் எப்படியும் கலந்து கொண்டு விடுவது என்ற உறுதியும் ஏற்பட்டது. அவன் இதயத்திலோடிய எண்ணங்களைப் புரிந்துகொண்டதாலோ என்னவோ, மஞ்சளழகியின் கண்களிலிருந்து குழப்பம் மறைந்து இதழ் களில் புன்னகை அரும்பியது. உள்ளத்தே ஊடுருவிச் சென்ற சங்கடமான உணர்ச்சிகளைச் சமாளித்துக் கொள்ளச் சற்று வாய்விட்டுச் சிரிக்கவும் செய்தாள் அவள்.

மேலும் மௌனமாயிருப்பதால் பலன் இல்லை என்பதை உணர்ந்துகொண்ட இளையபல்லவன் கேட் டான், "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று.

"உங்கள் நிலையை எண்ணிச் சிரித்தேன்," என்றாள் அவள், வேடிக்கையாக.

"ஏன்? என் நிலைக்கு என்ன?"

"நீங்களும் தந்தையும் ஏதோ பேசிக்கொண்டிருந் தீர்கள். குறுக்கே நான் வந்து குளறிவிட்டேன்," என்றாள் அவள்.

இரவு நிகழ்ச்சியைப் பற்றிய பிரஸ்தாபத்தை ஒதுக்கி விட அவள் தீர்மானித்திருக்கிறாளென்பதையும், அதை முன்னிட்டே அதற்கு முற்பட்ட பகுதிக்குச் சம்பாஷ ணையை இழுத்துச் செல்கிறாளென்பதையும் அறிந்து கொண்ட இளையபல்லவனும் அவள் வழியே போகத் தொடங்கி, "உங்கள் குறுக்கீடு எனக்குத் தடையாயில்லை, உதவிதான்," என்றான்.

"எப்படி உதவி?" என்று கேட்டாள் அவள்.

"உங்கள் தந்தையிடம் சில உதவிகளை நாடி வந்ததாகத் தெரிவித்தேன்..."

"ஆம், சொன்னீர்கள்."

"பதிலில்லை என்றும் கூறினேன்."

"ஆம், அதையும் தெரிவித்தீர்கள்."

"தந்தை உதவுவார், உங்களைப் போன்ற வீரருக்கு எதையும் மறுக்க மாட்டார் என்று நீங்கள்தான் உறுதி கூறினீர்கள்..."

"உண்மைதான், கூறினேன்."

"இதைவிடப் பெரிய உதவி என்ன வேண்டும்? உங்கள் குறுக்கீடு எனக்கு நன்மை விளைவித்திருக்கிறது. அது மட்டுமல்ல..."

"பின்னும் என்ன?"

இளையபல்லவனின் விழிகள் திடமாக எழுந்து அவளை நோக்கின. "சிருஷ்டியின் சிறந்த அழகையும் நான்

வாழ்வில் கண்டேன்.” என்று மெள்ளச் சொற்களை உதிர்த்தன உதடுகள். அவள் ஏதோ பதில் சொல்ல முயன்று பவள இதழ்களைத் திறந்தாள். அவளைப் பேசாமல் சைகையினாலேயே தடுத்த இளையபல்லவன் மேலும் பேசத் தொடங்கி, “உங்களைப் பாராட்டவோ, இல்லாததைச் சொல்லி முகஸ்துதி செய்து உங்கள் தந்தையிடம் நான் கோரியதைப் பெறவோ பேசப்படும் வீண் வார்த்தைகளல்ல இவை; உண்மையைத்தான் சொன்னேன். உங்களைப் பாராட்டாமலும், உங்கள் தந்தையிடம் கெஞ்சாமலும் நான் கோரிவந்த உதவியைப் பெற என்னால் முடியும். இது தற்புகழ்ச்சியென்று நினைக்க வேண்டாம். இந்த அக்ஷயமுனைக் கோட்டையைப் பற்றியும் உங்கள் தந்தையைப் பற்றியும் பூரணமாகத் தகவல்களறிந்தே இங்கு நான் வந்திருக்கிறேன். உங்கள் தந்தை இஷ்டப்பட்டால் என்னையும் என் மரக்கலத்தையும் என் மாலுமிகளையும் இன்றே அழித்து விட முடியும். ஆனால் கதை அத்துடன் முடியாது. என்னை அழிப்பது சுலபமல்ல. அப்படியே அழிப்பதாக வைத்துக் கொண்டாலும் பயங்கர விளைவுகள் ஏற்படும். ஒன்று மட்டும் நினைவு இருக்கட்டும். சரியான முன்னேற்பாடுகள் இல்லாமல் நான் சிங்கத்தின் வாய்க்குள் தலையிடுபவன் அல்ல....”

இந்த இடத்தில் சற்று நிதானித்த இளையபல்லவன், கோட்டைத் தலைவனை உற்றுப் பார்த்துவிட்டு, மஞ்சளழகியை நோக்கிக் கேட்டான், “இந்த அக்ஷயமுனைத் துறையில் தனியாக இறங்கிச் செல்ல வேண்டாமென்று என் மாலுமிகள் தடுத்தார்கள். அதையும் மீறித்தான் நான் இறங்கினேன், தெரியுமா உங்களுக்கு?” என்று.

“அது துணிவைக் காட்டுகிறது. முன்னேற்பாட்டைக் காட்டவில்லை,” என்றாள் மஞ்சளழகி இகழ்ச்சியுடன்.

“கடற்கரைக் கொள்ளைக்காரர்கள் என்னை வெட்டிப் போட வந்தார்கள். கலிங்கத்துக் கப்பல்

தங்கத்துடன் வருகிறது. கொள்ளையடிக்கலாம் என்றேன். அவர்கள் என் பக்கம் சேர்ந்து கொண்டார்கள்," என்று சுட்டிக் காட்டினான் படைத் தலைவன்.

"அது தந்திரத்தைக் காட்டுகிறது. முன்னேற்பாட்டை அல்ல," என்றாள் மஞ்சளழகி மீண்டும், இதழில் அரும்பி நின்ற இகழ்ச்சி குரலிலும் ஒலிபாய.

அடுத்த அஸ்திரத்தை மிகப் பலமாக வீசினான் இளையபல்லவன்: "கோட்டைத் தளத்திலிருந்து வீசப் பட்ட விஷ அம்பு என் மார்பில் தைத்தும் நான் இறக்காமல் அதைப் பிடுங்கி எறிந்துவிட்டு இங்கே வந்திருக்கிறேன், அது எதைக் காட்டுகிறது? மந்திரத்தையா?"

இளையபல்லவனுக்கு ஏதும் பதில் சொல்ல முடியாமல் விழித்தாள் மஞ்சளழகி.

திடீரெனத் தன் அங்கியை விலக்கி மார்பைத் திறந்து காட்டிய இளையபல்லவன், "இது எதைக் காட்டுகிறது தேவி, மந்திரத்தையா, முன்னேற்பாட்டையா?" என்றான் இகழ்ச்சி குரலில் பூரணமாகத் தொனிக்க.

மஞ்சளழகி மட்டுமல்ல, அவள் தந்தையும் படைத் தலைவன் மார்பைக் கண்டு பிரமித்தான். விஷ அம்பு அவனைக் கொல்லாத மர்மம் அவர்களுக்குத் தெள் ளெனப் புரிந்தது. அவன் மார்பை அணைத்து நின்ற யவனர் இரும்புக் கவசத்தை இமை கொட்டாமல் அவ்விருவரும் பார்த்தார்கள். அவன் அங்கிக்குள் மறைந்து கிடைந்த அந்த இரும்புக் கவசமே அவன் உயிரைக் காத்தது என்பதைப் புரிந்துகொண்ட தந்தையும் மகளும் அவன் தீர்க்காலோச னையையும் முன்னேற்பாட்டையும் கண்டு வியப்பின் எல்லையை எய்தி, அந்த வியப்பு முகங்களிலும் படர இளையபல்லவனை ஏறெடுத்து நோக்கினார்கள்.

உணர்ச்சிகளைப் பெரிதும் கட்டுப்படுத்தக்கூடிய அவ்விருவரையுமே மலைக்க வைத்தது பற்றி மகிழ்வெய்திய

சோழர் படைத் தலைவன் மஞ்சளழகியை நோக்கி, "தேவி! வாழ்வில் பேராபத்துகளில் சிக்கி அனுபவப்பட்டவன் நான். ஆகையால் எப்பொழுதும் முன்னெச்சரிக்கையுடன் நடந்துகொள்கிறேன். இந்தக் கவசம் போட்டுக் கொண்டு வந்த முன்னெச்சரிக்கையைப் பற்றி நீங்கள் வியப்படைய வேண்டாம். இன்னொரு முன்னேற்பாடு செய்திருக்கிறேன். அதைக் கேட்டால் நீங்கள் திகைத்துப் போவீர்கள். அது மட்டுமல்ல; இளையபல்லவன் அத்தனை முட்டாளல்ல என்பதையும் புரிந்துகொள்வீர்கள்," என்றான்.

"அதையும் சொல்லுங்கள்," என்று அவள் கேட்டாள் அச்சம் குரலில் லேசாகத் தொனிக்க.

"இப்படி வாருங்கள்," என்று அவளை அந்த அறையில் ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று சில வார்த்தைகள்தான் சொன்னான் இளையபல்லவன். அவன் சொன்ன வார்த்தைகள் அவள் முகத்தில் மிதமிஞ்சிய கிலியைப் பரவ விட்டன.

"வேண்டாம், வேண்டாம். அது மட்டும் வேண்டாம்" என்று கதறினாள் மஞ்சளழகி.

"இன்றிரவு நிகழ்ச்சிக்கு?" இகழ்ச்சியுடன் எழுந்தது இளையபல்லவன் கேள்வி.

"அவசியம் வாருங்கள். அவசியம் வாருங்கள்," என்று திகில் நிரம்பிய சொற்களை மிகுந்த பலவீனத்துடன் உதிர்த்தாள் மஞ்சளழகி.

அத்தியாயம் 10

# அகூதாவின் சபதம்

அறை மூலைக்கு மஞ்சளழகியை அழைத்துச்சென்று மர்மமாக அவளிடம் இளையபல்லவன் ஏதோ சில வார்த்தைகள் சொன்னதும், அந்தச் சில வார்த்தைகளைக் கேட்டவுடன், "வேண்டாம், வேண்டாம் அது மட்டும் வேண்டாம்" என அவள் கதறியதன்றி, தன் சம்பந்த மில்லாமலே இளையபல்லவனை அன்றைய இரவு நிகழ்ச்சிக்கு அழைத்துவிட்டதும் பெரும் விந்தையாக மட்டுமல்ல, கோபத்தையும் அச்சத்தையும் ஒருங்கே விளைவிப்பதாகவுமிருந்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு. ஏதோ பெரும் விபரீத வார்த்தைகளைச் சொல்லி எதற்கும் அஞ்சாத தன் மகளுக்கே சோழர் படைத் தலைவன் பெரும் அச்சத்தை விளைவித்து விட்டா னென்பதை மட்டும் உணர்ந்துகொண்ட கோட்டைக் காவலன், அவன் என்ன சொல்லியிருப்பான் என்பதை நினைத்துக் குழம்பி, மலைத்து, திகைத்து, அந்த அறையின் மூலையையே நோக்கிக் கொண்டிருந்தான்.

அறையின் மூலையிலிருந்த நிலை அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனின் துணிவுக்கோ, மஞ்சளழகியின் திடசித்தத்துக்கோ அத்தாட்சியாக அமையாமல் இளைய பல்லவனின் இறுமாப்புக்கே சாட்சி காட்டும் முறையில் அமைந்து கிடந்தது. நன்றாக நிமிர்ந்து, மஞ்சளழகியின் திகிலையும் திகிலால் விளைந்த உடலின் நடுக்கத்தையும் தயை தாட்சண்யமில்லாமல் பார்த்துக்கொண்டும்,

# கடல் புறா

சாண்டில்யன்

## 10. அகூதாவின் சபதம்



இதயத்தில் என்றுமில்லாத குரூரத்தை முகத்தில் காட்டினாலும் அதில் ஓரளவு நிதானத்தையும் கலந்து கொண்டும் நின்றிருந்தான் இளையபல்லவன். அவனெதிரே அத்தனை திகிலுடன் நின்ற நிலையிலும் அழகு முன்னைவிட அதிகமாகப் பரிமளிக்க ஒய்யாரமாகவேயிருந்த மஞ்சளழகியின் தலை மட்டும் ஒருபுறம் லேசாக சாய்ந்து கிடந்தது. அந்த அறை மூலைக்கு வந்ததும் இளையபல்லவன் பார்த்த பார்வை அவள் கண்கள் முன்பாக அப்பொழுதும் எழுந்து நின்றது. அவன் சொன்ன சொற்கள் மௌனம் நிலவிய அந்த விநாடியிலும் அவள் காதுகளிலே ஒலித்து உணர்ச்சிகளில் புகுந்து சித்தத்தில் சம்மட்டிகளைக் கொண்டு அடித்துக் கொண்டேயிருந்தன. சில விநாடிகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிதான் அதுவென்றாலும், திரும்பத் திரும்ப அது நடப்பது போன்ற பிரமையே ஏற்பட்டது அந்த அழகுச் சிலைக்கு.

அறை மூலைக்கு அழைத்து வந்ததும் இளையபல்லவன் பார்த்த நிதானமும், ஆழமும் பரிதாபமும் கலந்த பார்வையை அவன் தன்மீது ஒருமுறைக்கு இருமுறையாக வீசிய காட்சியும் அவள் கண்முன் மீண்டும் எழுந்தன. அடுத்தபடி ஏற்பட்ட அவன் உதடுகளின் அசைவையும், அவள் தனது மனக்கண்முன் மீண்டும் கண்டாள். இளையபல்லவனின் உதடுகள் லேசாகத்தான் அசைந்தன. குரலும் மெதுவாகத்தானிருந்தது. ஆனால் மிகுந்த உறுதியுடன் வெளிவந்தன அவன் சொற்கள். "இந்த அறை மூலைக்கு உங்களை அழைத்து வந்ததற்குக் காரணமிருக்கிறது தேவி!" என்று சாதாரணமாகத்தான் ஆரம்பித்தான் இளையபல்லவன்.

ஆனால் அந்தக் குரலில் இருந்த ஒரு விபரீதத் தொனி அடுத்து வரும் சம்பாஷணை அத்தனை ரசமாயிருக்காது என்பதை நிரூபிக்கவே, மஞ்சளழகி சற்று சிந்தனையுடனேயே கேட்டாள், "என்ன காரணம் வீரரே?" என்று.

வார்த்தையை அளந்து பேசுவது போல் பேசினான் இளையபல்லவன். "நீங்கள் தந்தையை விடப் புத்திசாலி என்பதுதான் காரணம்," என்றான் அவன்.

அவன் தன்னைப் பாராட்டுகிறானா அல்லது தன்னைப் பார்த்து நகைக்கிறானா என்பதை அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. எதற்கும் கேட்டு வைத்தாள் அவள், "பாராட்டவா என்னை இங்கு அழைத்து வந்தீர்கள்?" என்று.

"இல்லை. பாராட்ட அல்ல. உண்மையைச் சொல்ல. உங்கள் தந்தையின் நிதானம் தைரியம் எல்லாம் மேலுக்குத் தான். உண்மையான தைரியமும், நிதானமும், உள்ள ஆபத்தைப் புரிந்துகொள்ளும் சக்தியும் உங்களுக்குத்தான் இருக்கிறது. ஆகவே, உங்களிடம் விஷயத்தைச் சொல்லவே இங்கு அழைத்து வந்தேன்," என்றான் இளைய பல்லவன்.

"என்ன! எங்களுக்கு ஆபத்தா!" வியப்புடன் கேட்டாள் மஞ்சளழகி.

"ஆம்."

"யாரிடமிருந்து ஆபத்து?"

"என்னிடமிருந்து."

"உங்களை என் தந்தை சிறை செய்துவிட்டால்? ஏன் கொன்றே விட்டால்?"

"சிறை செய்தாலே ஆபத்து. கொன்றுவிட்டால் ஆபத்து பன்மடங்கு அதிகம். இருப்பதைவிட இறந்தபின் நான் அபாய மனிதன்."

"இறந்தபின் நீங்கள் என்ன செய்ய முடியும்?"

இளையபல்லவன் விழிகள் அவளை நோக்கி நகைத்தன. "இந்த அக்ஷயமுனைக் கோட்டையை அழித்து விட முடியும். இங்குள்ள அனைவரையும் கொன்றுவிட முடியும். புல் பூண்டு கூட இல்லாமல் இந்த இடத்தைப்

பொசுக்கிவிட முடியும்" என்ற இளையபல்லவனின் குரலில் திடீரென மீண்டும் விபரீதத் தொனி தெரிந்தது.

"பிசாசாக வந்து இத்தனையையும் செய்வீர்களா?" என்று நகைக்க முற்பட்ட மஞ்சளழகி, இளைய பல்லவனின் கண்களில் திடீரென்று பளிச்சிட்ட ஒரு பார்வையைக் கண்டு தன்னைச் சட்டென்று அடக்கிக் கொண்டாள். நகைப்பு உதடுகளில் உறைந்தது. முகத்தில் கிலி படர்ந்தது. அந்தக் கிலியை இளையபல்லவனின் அடுத்த சொற்கள் உச்சஸ்தாயிக்குக் கொண்டு போயின.

எங்கிருந்தோ, வெளி உலகத்தில் இருந்து பேசுவது போல் ரகசியமும் ஆழமும் பயங்கரமும் தொனித்த குரலில் பேசினான் இளையபல்லவன், "ஆம். மஞ்சளழகி," என்று அவன் ஆரம்பித்ததும், ஏதோ சொல்ல முற்பட்ட அந்தப் பெண்ணை, "தடுக்காதீர்கள். உங்கள் தங்கநிற எழில் என்னை பிரமிக்க வைத்திருக்கிறது. உங்களை இனி நான் மஞ்சளழகி என்றுதான் அழைப்பேன். ஆனால் இத்தனை பிரமிக்கத்தக்க அழகு என் அழிவினால் சீரழிந்துவிடுமே என்ற ஏக்கமே என்னை ஆட்கொண்டிருக்கிறது. தற்சமயம்," என்ற இளையபல்லவன் மேலும் அதே விபரீதத் தொனியில் பேசினான்: "ஆம், மஞ்சளழகி, உங்கள் அழகு குலைந்துவிடும். அது மட்டுமல்ல, உங்களைப்போல் இந்தக் கோட்டையிலுள்ள பல பெண்கள் சீரழிக்கப்படுவார்கள். இங்குள்ள கொள்ளைக்காரர்களும், அதோ இன்று நவரத்தினங்கள் இழைத்த ஆசனத்தில் உட்கார்ந்திருக்கும் உங்கள் தந்தையும் கொசுக்களைப்போல் நசுக்கப்படு வார்கள். இந்தக் கோட்டையும் கொத்தளங்களும் கொளுத்தப்படும். இத்தனையும் என் ஒருவன் மரணத்தால் ஏற்படும். என் மரணம் இந்த நகரத்தையே மாய்த்துவிடும். சந்தேகம் வேண்டாம். பிசாசாக வந்து இத்தனையும் சாதிப்பேனா என்றல்லவா கேட்டீர்கள்? ஆம், பிசாசாக

வருவேன். நாசம் செய்ய அல்ல. நாசத்தை வேடிக்கை பார்க்க. ஆனால் இதை நாசம் செய்ய வருவது என்னை விடப் பெரும் பிசாசு. உயிருள்ள ஒரு பிசாசு வரும் இங்கே. அது வருவதற்கு ஏற்பாடு செய்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன். என் முன்னேற்பாட்டைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று பேசிக்கொண்டு போன இளைய பல்லவன் சிறிது பேச்சை நிறுத்தி, மஞ்சளழகியைக் கூர்ந்து நோக்கினான்.

அவள் பிரமை பிடித்து ஏதும் புரியாமல் குழம்பி நின்றிருந்தாள். 'இவன் வீண் பெருமையடித்துக்கொள்ளும் கையாலாகாதவனா? செய்கையால் முடியாததைச் சொற்களைக் கொண்டு சரிக்கட்டி நம்மை அச்சுறுத்தப் பார்க்கிறானா என்ற சந்தேகம் அவள் சித்தத்தில் ஒரு விநாடிதான் எழுந்தது. அடுத்த விநாடி அந்தச் சந்தேகம் மறைந்தது. மறையவைத்தது இளையபல்லவனின் குரூரப் பார்வையொன்று. அவன் இதழ்களில் அந்தத் தருணத்தில் தவழ்ந்த இளநகையிலும், உதடுகள் உதிர்த்த சொற்களிலும் அந்தக் குரூரம் இருந்தது. இளநகையைத் தொடர்ந்து அவன் உதடுகளைத் திறந்து சொன்னான், "மஞ்சளழகி! நான் சொன்னவை வீண் வார்த்தைகளல்ல. நான் செய்துள்ள முன்னேற்பாடும் பொய்யல்ல. இத்தனை நேரம் நான் குறிப்பிட்ட நாசம் நடந்தே தீரும். ஏன் தெரியுமா?" என்று.

"ஏன்?" தீனமாக எழுந்தது மஞ்சளழகியின் கேள்வி.

"வரப்போவது யார் தெரியுமா?"

"தெரியும். பிசாசு."

"பிசாசல்ல."

"ஹூம்!"

"பிசாசை விடக் கொடியது!"

"பிசாசை விடக் கொடியதா?"

"ஆம். அகூதா!"

எத்தனை பெரிய வெடியை அவன் எடுத்து வீசியிருந்தாலும், அதே விநாடியில் அந்த அறையில் ஆயிரம் பிசாசுகள் தாண்டவமாடியிருந்தாலும் அளிக்க முடியாத அதிர்ச்சியை இளையபல்லவன் பதில் அளித்தது அவளுக்கு. அவள் ஏதோ பேச வாய் திறந்தாள். வாயைத் திறந்தாளே தவிர சொற்கள் வெளிவரவில்லை. வாய் அடைத்து நின்று விட்டது.

அவள் உணர்ச்சி வெள்ளத்தையும் உள்ளத்தே துளிர்த்து கிளைத்துவிட்ட கிலியையும் இன்னும் அதிகமாக வளர்த்தன இளையபல்லவனின் அடுத்த சொற்கள். "மஞ்சளழகி! இந்தக் கோட்டைக்கு வருவதை அகூதாவே தடுத்தார். நான்தான் கேட்கவில்லை. கலிங்கத்திலிருந்து கடாரம் செல்லும் மரக்கலங்கள் இடையே புகுந்து தடுக்க இதைவிட நல்ல இடமில்லையென்ற காரணத்தால் நான் இந்த இடத்துக்கு வருவதாகத் திட்டமிட்டேன். பிடிவாதமும் பிடித்தேன். அதற்குமேல் அகூதா ஏதும் பேசவில்லை. 'என்ன உதவி உங்களுக்குத் தேவை?' என்று மட்டும் கேட்டார். எனக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால், இக்கோட்டையின் மீது பழி வாங்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொண்டேன். அகூதாவின் கண்களில் புதிய ஒளி ஒன்று பிறந்தது. அப்பொழுது நாங்கள் இருவரும் நடுக்கடலில் அவருடைய மரக்கலத்தின் தளத்தில் நின்று கொண்டிருந்ததோம். வானமும் மேக மூட்டத்தால் கறுத்துக் கிடந்தது. ஒரு கையை முஷ்டியாகப் பிடித்து உயரத் தூக்கி வானத்தை நோக்கிச் சபதம் செய்தார் அகூதா, 'இன்னும் மூன்று வார காலத்தில் நான் அக்ஷயமுனை வருகிறேன் உங்களைச் சந்திக்க. நீங்கள் அங்கு இருந்தால் அக்ஷயமுனை பிழைக்கும். இல்லையேல் அக்ஷயமுனை இல்லை. தரையோடு தரையாக்கி விடுகிறேன் அந்தக்

கோட்டையை. ஆடவர், பெண்டிர் அனைவரையும் என் வீரர்களிடம் ஒப்படைத்து விடுகிறேன் என்று கூறிப் பேய்ச் சிரிப்பு சிரித்தார் அவர். எதற்கும் அஞ்சாத எனக்கே அந்தச் சிரிப்பு அச்சம் தந்தது. இன்று நினைத்தாலும் என் உள்ளம் நடுங்குகிறது. ஆகவே தேவி! திட்டமாய்த் தெரிந்து கொள்ளுங்கள். என் உடலில் ஊசி முனையளவு தொடப் பட்டாலும் இன்னும் இரண்டே வாரங்களில் அக்ஷய முனை அழிந்துவிடும். நான் அகூதாவை விட்டுக் கிளம்பி ஒரு வாரம் ஆகிறது" என்றான் இளையபல்லவன்.

"ஆம். ஆம்" என்றாள் மஞ்சளழகி நடுக்கத்துடன்.

"அகூதாவின் கடற்படை இன்னும் பதினைந்தே நாள்களில் இந்தத் துறைமுகத்தில் பிரவேசிக்கும்" என்று மற்றுமொருமுறை வலியுறுத்திச் சொன்னான் இளைய பல்லவன்.

"ஆம். ஆம்."

"அகூதாவின் வீரர்கள் இறங்குவார்கள். தடுக்க நானில்லாவிட்டால் அடுத்து நடப்பதை... உங்கள் கதியை... தங்கத்தைப் பழிக்கும் இந்த அழகுத் தேகத்தின் நிலையை... நான் சொல்ல வேண்டுமா?..."

இந்தச் சமயத்தில்தான், "வேண்டாம், வேண்டாம்," என்று கதறினாள் மஞ்சளழகி. இதை அடுத்துத்தான் இளையபல்லவனை அன்றைய இரவு நிகழ்ச்சிக்கு வரவும் வேண்டினாள்.

இந்தச் சம்பாஷணையும் இளையபல்லவன் முகமும் திரும்பத் திரும்பச் சித்தத்தில் வலம் வந்ததால் பிரமை பிடித்து நின்றாள் மஞ்சளழகி. அவள் எத்தனை நேரம் நின்றிருந்தாளோ அவளுக்கே தெரியாது. இளைய பல்லவன் மெள்ளத் தன் கையைப் பிடித்த பின்புதான் அவளுக்குச் சுரணை வந்தது. "பயப்பட வேண்டாம்.

நான்தானிருக்கிறேனே!" என்று அவள் செவிகளில் கூறியது செவி மூலம் உள்ளத்துக்கும் அமுதம் வார்ப்பதாகத் தோன்றியது அவளுக்கு.

அதனால் மீண்டும் உணர்ச்சிகள் மெல்ல மெல்ல அவள் வசப்படலாயின. கடைசியாகச் சொன்ன வார்த்தைகளை அவன் அன்பொழுகச் சொன்னான். உண்மையில் இனிமை தரும் இதயத்தைப் பெற்றிருந்த இளையபல்லவன் அவசியமானால் அதே இதயத்தை இரும்பாகவும் ஆக்கிக் கொள்ள வல்லவன் என்பதை உணர்ந்து கொண்டாளாகையால் அவன் இழுத்த இழுப்புக்கு இசையலானாள். அவளை மெல்லக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு மீண்டும் கோட்டைத் தலைவனிருந்த இடத்துக்குச் சென்ற இளையபல்லவன், அவளை அவள் ஆசனத்திலமர்த்தி விட்டுத் தானும் எதிரே உட்கார்ந்தான்.

கோட்டைத் தலைவனின் உணர்ச்சிகள் விவரணத்துக்கு உட்பட்டதாயில்லை. ஏதேதோ எண்ணங்கள் அவன் சிந்தனையில் எழுந்து உலாவிக் கொண்டிருந்தன. அந்தக் குழப்பத்தின் விளைவாக, அன்னியனொருவன் தன் மகளைக் கையைப் பிடித்து இழுத்து வந்ததையும் அவன் கவனிக்காமல், இளையபல்லவன் எதிரேயிருந்த ஆசனத்தில் அமர்ந்ததும், "இவளிடம் என்ன சொன்னீர்கள்?" என்று குழப்பத்துடனேயே கேட்டான்.

"என் முன்னேற்பாட்டைச் சொன்னேன்," என்றான் இளையபல்லவன்.

"அதைக் கேட்டு ஏன் கதறினாள்?"

"முன்னேற்பாட்டின் விளைவை எண்ணி."

"என்ன விளைவு?"

"மகளையே கேளுங்கள்."

கோட்டைத்தலைவன் மகளை நோக்கித் தன் கண்களைத் திருப்பினான். அவள் கண்கள் அவன் கண்களைத்

தைரியமாகச் சந்தித்தன. ஆனால் அந்தத் தைரியம் அவள் வார்த்தைகளில் தொனிக்கவில்லை. அச்சமும் தைரியமும் மாறி மாறி ஒலித்த சொற்களில் நிறுத்தி நிறுத்தி, அவள் இளையபல்லவன் சொன்னதை விவரித்தாள். அந்த விவரணத்தைக் கேட்டதும், இடிந்து பல விநாடிகள் ஆசனத்தில் சாய்ந்துவிட்டான் கோட்டைத் தலைவன். அகூதா கொள்ளைக்காரனாயிருந்தாலும் சொன்ன சொல்லை நிறைவேற்றத் தவறாதவன் என்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்தது. இளையபல்லவன் மீது கையை வைத்தால் அகூதா வாங்கக்கூடிய, பழியின் பயங்கரத்தையும் அவன் உணர்ந்திருந்தான். அத்தகைய பயங்கரத்தைப் பின்னணிப் பாதுகாப்பாகக் கொண்டு, தன் கோட்டைக்குள் நுழைந்து, தன் அந்தரங்க அறையில் தன்னையே மிரட்டும் இளையபல்லவனின் துணிவை எண்ணி ஒரு கணம் வியந்தான். மறுகணம் பயந்தான். அவன் பயத்துக்குக் காரணமும் இருந்தது. தன் கதி இருதலைக் கொள்ளி என்பதை அறிந்து தவித்தான். அந்தத் தவிப்பை வெளிக்காட்டிய கண்களை மகள்மீது திருப்பிய கோட்டைத் தலைவன், "மகளே! இன்று நாம் நல்ல முகத்தில் விழிக்கவில்லை" என்றான்.

"ஏன்?" என்று அவள் கேட்டாள்.

"இவரை நாம் தொடவும் முடியாது. முன்னேற்பாடு அத்தனை கடுமையானது" என்று இளையபல்லவனைச் சுட்டிக் காட்டினான்.

மஞ்சளழகி பதில் சொல்லவில்லை. ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினாள்.

"இவரை எப்படியும் நாம் காக்க வேண்டும்" என்றான் கோட்டைத் தலைவன்.

"ஆம், ஆம்." பயத்துடன் பதில் சொன்னாள் மஞ்சளழகி.

"இரவு நிகழ்ச்சிக்கும் இவரை அழைத்துவிட்டாய்..."

"ஆம்."

இதை அடுத்து, கோட்டைத் தலைவன் கேட்டான், "இரவு நிகழ்ச்சிக்கு அந்த நால்வரும் வருவார்களே, புரியவில்லையா உனக்கு?" என்று.

மஞ்சளழகி புரிந்துகொண்டாள். அச்சம் துளிர்த்த கண்களைத் தந்தை மீது நாட்டினாள். "ஆம், புரிகிறது தந்தையே! அந்த நால்வரும் வரத்தான் வருவார்கள். இவரை அழைத்தாலும் ஆபத்து, அழைக்காவிட்டாலும் ஆபத்து. ஐயோ, இதென்ன சங்கடம்" என்று குரல் தழுதழுக்கக் கூறினாள் அவள். அத்துடன் தனது இரு கரங்களையும் குவித்து இளையபல்லவனை வணங்கி, "வேண்டாம், இரவு நிகழ்ச்சிக்கு மட்டும் நீங்கள் வர வேண்டாம்," என்று மன்றாடினாள்.

இம்முறை குழம்பியவன் இளையபல்லவன். "யார் அந்த நால்வர்? அவர்கள் வந்தாலென்ன?" என்று குழம்பினான். அதை மெள்ள விவரிக்கத் தொடங்கினாள் மஞ்சளழகி.






அன்றைய இரவு நிகழ்ச்சியைப் பற்றிய மர்மத்தைத் தான் உடைக்க முயன்ற சில விநாடிகளுக்குள் யாரோ நால்வரைப் பற்றிய புது மர்மமொன்று முளைத்து விட்ட தையும், அதையும் நினைத்துத் தன்னையும் நினைத்து அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனும் அவன் புதல்வி யும் பெரும் சஞ்சலமடைந்து தவித்ததையும் கண்ட பல்லவன் அந்தக் கோட்டையின் நிலவரம் பலவிதச் சிக்கல்களை உடையதென்பதையும், அத்தனை சிக்கல் களையும் உள் வயணங்களையும் புரிந்துகொள்ள புது மனிதன் எவனுக்கும் நாளாகுமென்பதையும் அறிந்து கொண்டான். அந்தச் சிக்கல்களில் மூழ்கி எழுந்து அந்த நகரத்தில் தனக்கொரு தனி ஸ்தானத்தையும் செல்வாக் கையும் ஸ்தாபித்துக் கொண்ட பின்பு, கலிங்கத்தின் கடல் பலத்தை உடைக்கும் லட்சியத்தை நிறைவேற்ற நட வடிக்கை எடுப்பதென்றால் அது சில வருஷங்களுக்கு நடவாத காரியமென்பதையும் திண்ணமாகத் தெரிந்து கொண்டானாகையால் அந்த நகரத்தில் தன்னைப் பாதிக்கக்கூடிய நிகழ்ச்சிகளையும் மனிதர்களையும் மட்டும் கவனித்துக் களைந்துவிட்டுத் தன் லட்சியப் பாதையில் நடக்க வேண்டுமேயொழிய எல்லா விவகாரங்களிலும் தான் தலையிடுவது வீண் தொல்லை என்ற முடிவுக்கும் வந்தான். தவிர தன்னை நேரடியாகப் பாதிக்கக்கூடிய எதிரி களையோ நிகழ்ச்சிகளையோ சமாளிப்பதில் தாமதம் காட்டுவதும் தவறாகும் என்ற எண்ணமும் அவன்

இதயத்தே எழுந்தது. ஆகவே அந்தச் சமயத்துக்கு அக்ஷய முனை வரலாறு முற்றிலும் கவனம் செலுத்தாமல் எந்த நால்வர் வருகையால் தனக்கு ஆபத்து என்று மஞ்சளழகியும் அவள் தந்தையும் நினைத்தார்களோ அந்த நால்வரைப் பற்றி மட்டும் அந்தச் சமயத்தில் தெரிந்து கொண்டால் போதுமென்றும், அந்த நால்வரைச் சமாளித்துக் கொண்டு தன் பணியில் அடுத்த இரண்டு நாள்களுக்குள் இறங்குவதே தான் செய்யக்கூடிய காரியமென்பதையும் தீர்மானித்துக்கொண்ட இளையபல்லவன், அந்த நால்வரைப் பற்றிய விவரங்களை மஞ்சளழகி கூற முற்பட்டதும் மிகுந்த கவனத்துடன் அவள் சொல்வதைக் கேட்கலானான். ஆனால் மஞ்சளழகி அந்த நால்வரைப் பற்றி மட்டும் பேச்சைத் துவங்கவில்லை. அந்த நால்வர் வருகையால் அவனுக்கு என்ன ஆபத்து என்பதையும் உடனடியாக எடுத்துச் சொல்லவில்லை. பெரியதொரு சரித்திரத்தையே சொல்ல ஆரம்பித்தாள்.

மலர் மடியில் விரல்கள் பின்னிக் கிடக்க, முடியிழைகள் சில முகத்தில் தவழ்ந்து விளையாட, கரி இமைகள் சற்றே விரிந்து மேலெழ, சமவெளி படர்ந்த தனது அழகிய விழிகளை இளையபல்லவன்மீது உயர்த்திய மஞ்சளழகி, "நீங்கள் கேட்டது சிறு கேள்விதான் வீரரே! இருப்பினும் அதற்குத் தரக்கூடிய பதில் சிறிதல்ல. வெளி உலகம் அறியாத பல விஷயங்களை எடுத்து விவரித்தால் தான் அந்த அக்ஷயமுனையின் உண்மைச் சொரூபத்தை, இங்குள்ள மக்கள் கூட்டங்களின் விசித்திர அமைப்பை, இங்கு ஏற்படும் விபரீத நிகழ்ச்சிகளை, நீங்கள் அறிந்து கொள்ள முடியும்," என்றாள்.

இதைச் சொன்னபோது அவள் கண்களிலிருந்த சங்கடத்தையும் குரலில் இருந்த சஞ்சலத்தையும் கவனித்த இளையபல்லவன், ஒருவேளை அக்ஷயமுனையின் அப

கீர்த்திகளை அவள் அளவுக்கு மீறி மதிப்பிடுகிறாளோ, அபாயங்களை வரம்புக்கு மீறி வர்ணிக்க எத்தனிக்கிறாளோ என்று எண்ணினானாகையால், "பலதரப்பட்ட மக்கள் கூட்டமும் போட்டியும் கொலையும் பொறாமையும் அக்ஷயமுனைக்கு மட்டும் பிரத்தியேகமானதல்ல தேவி! இத்தகைய அபாய பிரதேசங்கள் உலகத்தின் பல இடங்களில் இருக்கின்றன," என்று கூறினான் அவளை நோக்கி.

அவன் எண்ணங்களை அவள் நொடிப்பொழுதில் புரிந்துகொண்டாள். உள்ள அபாயத்தைத் தான் மிகைப் படுத்திக் கூறுவதாக அவன் நினைப்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி அறிந்துகொண்ட அவள் கேட்டாள், "இத்தகைய அபாயப் பிரதேசங்கள் பல இடங்களில் இருக்கலாம்; ஆனால் அங்குள்ள அரசாங்கங்கள் அந்தப் பிரதேசங்களை என்ன செய்யப் பார்க்கின்றன?" என்று.

அவள் எதற்காக அந்தக் கேள்வியைக் கேட்கிறாள் என்பது இளையபல்லவனுக்குப் புரியவில்லைதான். அவள் அனாவசியமாகப் பேச்சை வளர்த்துவதும் அவனுக்கு இஷ்டமில்லைதான். இருப்பினும் அவள் மனத்தைப் புண்படுத்த விரும்பாமல் பதில் சொன்னான்: "சீர்படுத்தப் பார்க்கின்றன. ஒழுக்கத்தையும் நீதியையும் நிலை நிறுத்தப் பார்க்கின்றன," என்று.

அவள் கண்களில் வருத்தம் பெரிதும் விரிந்தது. பெருமூச்சொன்றும் அவள் நாசியிலிருந்து கிளம்பியது. "விளக்கிச் சொல்லுங்கள்" என்று அவள் மீண்டும் கேட்டாள் அந்தத் துன்பப் பெருமூச்சுக்கிடையே.

"கொள்ளைக்காரர்கள் குழுமியுள்ள இடங்கள் எந்த நாட்டிலும் உண்டு. அந்த இடங்களை அரசாங்கங்கள் சீர் படுத்துகின்றன. கொள்ளையரை அடக்கவும் மக்களுக்கு

நிம்மதியான வாழ்க்கையை அளிக்கவும் பிரயத்தனப் படுகின்றன," என்றான் இளையபல்லவன்.

மஞ்சளழகியின் அடுத்த வார்த்தைகள் மிக நிதான மாக வெளிவந்தன. "இங்கு அதுதான் இல்லை," என்றாள் அவள்.

"என்ன சொல்லுகிறீர்கள்!" என்று ஆச்சரியத்துடன் வினவினான் இளையபல்லவன்.

அவள் நேரடியாகப் பதில் சொல்லவில்லை. "ஸ்ரீவிஜ யத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று ஒரு கேள்வியைத் தொடுத்தாள்.

"உலகத்தின் கிழக்குப் பகுதியிலுள்ள பேரரசுகளில் ஒன்று," என்றான் இளையபல்லவன்.

"அதைத் தவிர?" என்று மறுபடியும் வினவினாள் அவள்.

"பல தீவுகளைக் கொண்டதால் பெரும் நிலப்பரப்பும் உடையது."

"அதையும் தவிர?"

"அத்தனை தீவுகளிலும் தங்கம் கிடைப்பதால் சொர்ண பூமியென்றும் அழைக்கப்படுகிறது."

"உண்மை வீரரே! முற்றிலும் உண்மை. உலகத்தின் சகல நாடுகளும், ஏன் மனித வர்க்கம் முழுவதுமே தங்கத்துக்காகத்தான் பிராணனை விடுகின்றன. அல்லவா."

"ஆம்."

"அதனால்தான் தூரத்தில், மேல் திசையிலுள்ள யவனரும் அரபு நாட்டவருங்கூட இந்த நாட்டை நாடி வருகிறார்கள்."

"அப்படித்தான் கேள்வி."

"கேள்வி மட்டுமல்ல. உண்மையும் அதுதான். இங்கு தங்கம் நிரம்பக் கிடைக்கிறது. நிரம்ப என்றால் எத்தனை தெரியுமா?"

"சொல்லுங்கள்."

"இங்கு தங்கம் எடுக்கக் கனி எடுத்துப் பதனம் பண்ணிப் பிரிக்க வேண்டாம். இந்த நாட்டு மண்ணிலேயே தங்கம் கலந்திருக்கிறது. மண்ணை நீரில் போட்டால் மண் கரைந்து தங்கம் பிரிந்துவிடும்."

இதைக் கேட்ட இளையபல்லவன் அசந்து போனான். "அப்படியா?" என்று கேட்கவும் செய்தான், ஆச்சரியம் குரலில் தொனிக்க.

அந்த ஆச்சரியத்தை லட்சியம் செய்யாமலே அவள் சொன்னாள், "வேண்டுமானால் நாளைக்கு நீங்களே சோதித்துப் பாருங்கள். சொர்ணபூமி கூட்டத்தின் முக்கிய நிலமான இந்த சொர்ணத் தீவின் மண் முழுவதும் தங்கமயம். ஆகவே இங்குள்ள யாவருமே தங்கத்துக்காகப் போராட வேண்டிய அவசியமில்லை. தங்கத்துக்காகப் போராட வேண்டிய அவசியமில்லையென்றால் எதற்கும் போராட வேண்டிய அவசியமில்லை. தங்கத்தைக் கொடுத்தால் உலகத்தில் கிடைக்காத பொருள் ஏதுமில்லை. இருந்தும் பொன் கொழிக்கும் இந்த நாட்டில்தான் கிழக்குத் திசையிலுள்ள பெரும் கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் இந்த அக்ஷய முனையிலும் இதற்குப் பின்னாலுள்ள எரிமலைத் தொடரின் காடுகளிலும், இருக்கிறார்கள். பொன் தேவையே இல்லாத, பொன் கொழிக்கும் இந்தப் பேரரசில் கொள்ளைக்காரர் ஏன் வளருகிறார்கள்? யோசித்துப் பாருங்கள்."

அவள் சொற்கள் இளையபல்லவனுக்குத் தீவிர சிந்தனையை அளித்தது. "ஆம். ஏன்?" என்று யோசித்தான்.

'இஷ்டப்பட்டால் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி இந்த அக்ஷய முனையைத் தன் படை பலத்தால் ஒரே நாளில் சீர்படுத்தி விடலாம். ஏன் அப்படிச் செய்யவில்லை?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டான். விடையேதும் கிடைக்காததால் அவளையே கேட்டான், "ஏன்?" என்று.

"இங்குள்ள கொள்ளைக்காரர்கள் நாட்டுக்குத் தேவையாயிருக்கிறார்கள்," என்று நிதானமாகவும், ஓரளவு வெறுப்புடனும் பதில் சொன்னாள் மஞ்சளழகி.

"கொள்ளைக்காரர்கள் நாட்டுக்குத் தேவையா?" ஆச்சரியத்துடன் எழுந்தது இளைய பல்லவன் கேள்வி.

"இல்லையேல் ஸ்ரீவிஜயத்தின் மன்னர் இந்த அக்ஷய முனையை ஏன் அழிக்கவில்லை?" என்று அவள் பதில் கேள்வி கேட்டாள்.

காரணம் புரியாமல் விழித்தான் இளையபல்லவன். மஞ்சளழகி மேலும் விவரித்தாள். "ஸ்ரீவிஜயத்தின் மன்னர் இந்த அக்ஷயமுனையிலும் அடுத்துள்ள பகுதிகளிலும் உள்ள கொள்ளைக் கூட்டங்களை அழிக்காதது மட்டுமல்ல, வளர்க்கவும் வளர்க்கிறார். அவர்கள் கொள்ளையடித்துக் கொண்டு வரும் பொன்னாசையாலல்ல, பொருளாசையாலும் அல்ல," என்ற அவள் சொற்களை இடையே மறித்த இளையபல்லவன், "என்ன பொன்னாசையாலல்லவா!" என்றான் வியப்புடன்.

"அல்ல."

"வேறெந்த ஆசையால்?"

"மண்ணாசையால்."

"மண்ணாசையாலா!"

"ஆம். சொந்த நாட்டின் மீதுள்ள ஆசையால்."

"அதற்குக் கொள்ளையரை வளர்க்க வேண்டுமா?"

"இந்த நாட்டுக்கு வேறு வழியில்லை. நீங்கள் சோழ நாடுதானே?"

"ஆம்."

"உங்கள் நாடு இங்கிருந்து எத்தனை தூரம்?"

"தொலைதூரம்."

"அங்கிருந்து இங்கு வந்து உங்கள் மாமன்னர் இராஜேந்திர சோழதேவர் எத்தனை நகரங்களை அழித்தார், எத்தனை அரிய பொருள்களைக் கவர்ந்து சென்றார்?"

"படையெடுப்பின் விளைவு அது."

"எப்படியாவதிருக்கட்டும். நடந்தது அதுதானே?"

"ஆம்."

"காரணம் என்ன தெரியுமா?"

"சொல்லுங்கள்."

மஞ்சளழகி ஆசனத்தை விட்டு எழுந்து சாளரத்தை நோக்கிச் சென்று வெளியே எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பினாள். பிறகு பெருமூச்சு விட்டுச் சொன்னாள்: "ஸ்ரீ விஜயத்துக்கென்று தனியான கடற்படை பலமில்லை. சோழ நாட்டிலிருந்து பெரும் கடற்படை கடாரத்தை அணுகுமுன்பு அதைத் தடை செய்ய இந்தச் சாம்ராஜ்யத்துக்குத் தேவையான மரக்கலங்கள் இல்லை. மாலுமிகள் இல்லை. இங்கிருந்தவர்கள் கொள்ளைக்காரர்கள்தான். ஆகவே ஸ்ரீவிஜய மன்னர்கள் அவர்களை ஆதரிக்க முற்பட்டார்கள். ஸ்ரீவிஜயத்தின் ஆதிகுடிகள் தைரியசாலிகளான மாலுமிகள். அவர்களில் இரண்டு இனத்தார் உண்டு. ஒரு சாதியார் •'பதக்'குகள் எனப்படுவர்.

---

•பதக் சாதியார் நரமாமிசம் தின்பவர்கள் : கைதிகளையும் வயதான உறவினர்களையும் தின்பது வழக்கம் "SUVARNADVIPA" by R.C. Majumdar Vol. II-Part I.

இன்னொரு வகுப்பு சூளுக்கள். முற்பட்டவர் நிலத்தில் கொள்ளையடிக்க வல்லவர். பிற்பட்டவர் கடற் கொள்ளைக்காரர்கள். இன்றும் இவர்கள் சொர்ண பூமியின் காடுகளிலும், காடுகளை அடுத்த கடலோரங் களிலும் வசித்து வருகிறார்கள்..."

"இந்த இரு இனத்தாரையும் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன்" என்றான் இளையபல்லவன்.

"பதக் சாதியார் மனிதர்களைச் சாப்பிடுவார்கள்," என்றாள் மஞ்சளழகி குரல் சற்றே நடுங்க.

"மனிதர்களைச் சாப்பிடுவார்களா?"

"ஆம். தங்களிடம் சிறைப்படுபவர்களையும், வயதான உறவினர்களையும் தின்பார்கள்!"

"இன்னும் உலகில் இப்படிப்பட்டவர்கள் இருக் கிறார்களா?"

"இருக்கிறார்கள். அவர்கள் தலைவர்களில் இருவர் இன்றிரவு நிகழ்ச்சிக்கு வருவார்கள்."

"அவர்களை நான் அவசியம் சந்திக்க வேண்டும்."

"அவர்கள் மட்டுமல்ல. சூளு கொள்ளைத் தலைவர் இருவரும் வருவார்கள். அவர்கள் மனிதரைத் தின்பதில்லை. அவர்களிடம் சிறைப்படுபவர்களுக்கு ஏற்படும் அவதி மரணத்தினும் கொடியது."

"அப்படியா!"

"ஆம். இரவு நிகழ்ச்சிக்கு வரப் பிடிவாதம் பிடித்தால் அவர்களையும் பார்க்கலாம். அவர்களது அடிமைகளின் நிலையையும் பார்க்கலாம். கூட வரும் அடிமைகளில் பாதிப்பேர் நாக்குகள் துண்டிக்கப்பட்டிருக்கும். சிலர் ஒரு கண்ணிழந்திருப்பார்கள். சிலருக்குக் கை, கால், காது இவற்றில் ஏதாவது ஒன்றோ இரண்டோ இருக்காது."

அந்த இடத்தின் அபாயத்தை, சாதிகளின் பயங்கரத்தை, அங்கு வரக்கூடியவர்களுக்கு ஏற்படக்கூடிய விளைவுகளை நன்றாக உணர்ந்து கொண்டான் இளைய பல்லவன். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் அரசன் தனது நாட்டைப் பாதுகாக்கப் படைபலத்தை விருத்தி செய்யாமல் கொள்ளையரையும், பயங்கரமான ஆதிகுடிகளையும் கொண்டு காரியத்தை நடத்தி வருவதை நினைத்து, 'இந்த நாகரிக உலகத்தில் இப்படியும் ஓர் அரசாங்கமா!' என்று எண்ணினான். அதுவும் புத்தர்பிரான் கொள்கையையும் மதத்தையும் பிரதானமாக உடைய ஸ்ரீவிஜயம் இப்படி மாறியது ஆச்சரியமாயிருந்தது அவனுக்கு. உலகத்தின் பூசல்களை ஒழிக்க வந்த அந்த உத்தமரைச் சில விநாடிகள் தியானித்த இளையபல்லவன், வேறெதற்காக அல்லாவிட்டாலும் புத்தர்பிரான் கொள்கைகள் செழிக்கவும் ஸ்ரீவிஜயம் நாகரிக சாம்ராஜ்யமாக மாறவும், குணசாலியான குணவர்மன் அதன் அரியணையில் அமர வேண்டியது அவசியம் என்று தீர்மானித்தான். 'குணவர்மன் அரியணைப் போரில் மனித நாகரிகமும் பேரரசின் கடலாதிக்கமும் வாணிபமும் சகலமுமே கலந்திருக்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். குணவர்மன் அரியணை ஏறுவதானால் கலிங்கத்தின் கடலாதிக்கம் மட்டுமின்றி அக்ஷயமுனையின் கொள்ளையர் ஆதிக்கமும் அழிய வேண்டுமென்பதையும் நிர்ணயித்துக் கொண்ட அவன், கொள்ளையர் ஆதிக்கத்தை ஒழிப்பதில் தன்னை எதிர் நோக்கக்கூடிய ஆபத்துகளை எண்ணிப் பார்த்தான். ஆபத்து அதிகம் என்பதை நினைக்க நினைக்க அவற்றை எதிர்நோக்க வேண்டும் என்ற ஆவலே இணைந்தது பயமறியாத அவன் உள்ளத்தில். ஆகவே மஞ்சளழகியை நோக்கி, "தேவி, எப்படியும் இன்றைய இரவு நிகழ்ச்சிக்கு வரத்தான் போகிறேன். நீங்கள் சொன்ன அந்த நால்

வரையும் சந்திக்கத் தீர்மானித்துவிட்டேன். இரவு நிகழ்ச்சி என்றீர்களே, அது என்ன அத்தனை பயங்கரமானதா? அதையும்தான் சொல்லுங்களேன்” என்று கேட்டான்.

அவள் சொன்னாள். வியப்பின் வசப்பட்ட அவன், “எங்கே மறுபடியும் சொல்லுங்கள்”, என்று கேட்டான். இரண்டாம் முறையும் சொன்னாள் அவள். அந்த அறையே அதிரும்படியாக நகைத்தான் இளையபல்லவன். “இன்பத்தில் துன்பம், இன்பத்தில் துன்பம்” என்று இருமுறை சொல்லி மீண்டும் நகைத்தான், இளையபல்லவன். நிதானத்தைக் குலைத்து இரைந்து நகைக்கும் அளவுக்கு அவனைத் தூண்டி விடக்கூடிய அத்தனை விசித்திரமான பதிலைச் சொன்னாள் மஞ்சளழகி.



அத்தியாயம் 12

# நிகழ்ச்சியின் புரட்சி

அகூயமுனைக் கோட்டையின் அன்றைய இரவு நிகழ்ச்சியைப் பற்றித் தந்தையும் மகளும் திரும்பத் திரும்பப் பரிமாறிக் கொண்ட வார்த்தைகளிலிருந்தும், அதைப் பற்றித் தன்னைப் பயமுறுத்திய சொற்களிலிருந்தும், அந்த நிகழ்ச்சி ஏதோ என்னவோ எத்தனை பயங்கரமானதோ என்றெல்லாம் எண்ணமிட்டு அதை அறிந்துகொள்ளப் பிடிவாதம் பிடித்த இளையபல்லவன், அது என்ன என்பதை மஞ்சளழகி எடுத்துச் சொல்லியதும் 'பூ! இதுதானா!' என்ற நினைப்பிலும் 'இதையா இத்தனை பிரமாதப்படுத்தினார்கள்' என்ற வியப்பாலும் அந்த அறை அதிரும்படியாக இரைந்தே நகைத்தான். அவள் சொன்ன அந்த இன்பக் காட்சியை நினைத்து, 'இத்தனை இன்பத்தில் பெரும் துன்பத்தையும் இவள் ஏன் பிணைக்கிறாள்?' என்ற மனக் கேள்வியின் காரணமாக, 'இன்பத்தில் துன்பம், இன்பத்தில் துன்பம்' என்ற சொற்களையும் தனது நகைப்புக்கு ஊடே உதிரவிட்டான்.

அவள் சொன்ன சொல் அவனுக்கு அத்தனை நகைப்பையும் அலட்சியத்தையும் அளித்தாலும், இரவு நிகழ்ச்சியைப் பற்றி அவன் கட்டிய முடிவு அத்தனை எளிதானதோ இன்பமானதோ அல்லவென்பதை உணர்ந் திருந்த மஞ்சளழகியும் அவள் தந்தையும், அந்த நகைப்பை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாமலும், அவன் நிலையைப் பற்றி எண்ணியதால் ஓரளவு வருத்தத்துடனும்

அவனை நோக்கினார்கள். அந்த வருத்தம் செவ்வரி படர்ந்த மஞ்சளழகியின் கண்களில் நன்றாகத் துளிர்த்துக் கிடந்தது. அவள் முழுமதி முகத்தையும் சஞ்சல மேக மொன்று படர்ந்து மெள்ள மகிழ்ச்சிக் களையை மறைத்தது. அவன் திரும்பத் திரும்ப இருமுறை நகைத்ததை அவள் மௌனத்துடனும் வருத்தத்துடனும் பார்த்துக்கொண்டே யிருந்தாள். ஆழமான இதயத்தை உடையவனும் அகூதாவின் சபதத்தைக் கேட்டது முதல் கிலி பிடித்துக் கிடந்தவனுமான அவள் தந்தையும் அந்தக் கிலியை மறந்து இளையபல்லவனை மிகுந்த வெறுப்புடன் நோக்கினான். இரவு வந்தால் நேரிட இருப்பதை அறியாமல் இவன் நகைக்கிறானே என்ற எண்ணத்தால் அக்ஷயமுனைக் காவலன் இதயத்தில் அந்த விநாடி துளிர்த்தது அனுதாப மில்லாவிட்டாலும், 'இவன் பிடிவாதத்தால் இன்றிரவு அக்ஷயமுனையில் பெரும் பிரளயம் ஏற்படுமே' என்ற நினைப்பால் பெரும் பயமே எழுந்து நின்றது. ஆகவே பயமும் வெறுப்பும் கலந்த பார்வையொன்றை அவன் இளையபல்லவன் மீது வீசினான்.

இடம், பொருள், ஏவல் ஆகிய எதையும் கவனிக் காமல் அத்துமீறி இருமுறை நகைத்த சமயத்திலும் இளையபல்லவன் கண்கள் மட்டும் எதிரேயிருந்த இருவர் முகங்களையும் ஆராய்ந்து கொண்டிருந்ததன் விளைவாக, அவ்விரண்டிலும் ஏற்பட்ட மாறுதல்களைச் சிரிப்புக்கு இடையே அவன் கவனிக்கத் தவறவில்லையாகையால் மஞ்சளழகி விளக்கிய இரவு நிகழ்ச்சி மேலுக்குத் தோன்றியதுபோல் அத்தனை இன்பமானதாயிருக்க முடியாதோ என்னவோ என்ற சந்தேகம் அவனையும் பீடிக்கலாயிற்று. அதுவும் மஞ்சளழகியின் வதனத்தில் படர்ந்த பரிதாபமும் சஞ்சலமும் அவன் சந்தேகத்தைத் தூண்டிவிடவே தனது நகைப்பை அடக்கிக் கொண்டு சில

விநாடிகள் மஞ்சளழகியைக் கூர்ந்து நோக்கிவிட்டுக் கேட்டான், 'தேவி! அக்ஷயமுனைக் கோட்டை பெரும் மர்மகூடம் போலிருக்கிறதே?" என்று.

மஞ்சளழகி தன் விழிகளைச் சற்றே உயர்த்தி அவனை நோக்கினாள். அவற்றில் விரிந்து கிடந்த துயரம் குரலிலும் ஒலிக்க, "ஆம்", என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்னாள் அவள். அந்த ஒரு வார்த்தையில் பதிந்து கிடந்த அனுதாபம் இளையபல்லவன் இதயத்தை ஊடுருவிச் சென்றது. சில நாழிகைகளுக்கு முன்பே சந்தித்த, முன்பின்னறியாத அந்தப் பெண் தன்னிடம் காட்டும் அனுதாபத்துக்குக் காரணம் புரியாமல் அவன் தவித்தான். எதிர்பாராத அனுதாபமும் அன்பும் அவளிடம் தனக்கு ஏற்பட்டிருப்பதை உணர்ந்த அவன் பெரிதும் குழம்பினான். பெரும் வியப்புக்கும் உள்ளானான். பெண்களைப் பார்த்ததும் உணர்ச்சிவசப் படக்கூடிய சுபாவம் உள்ளவனல்ல இளையபல்லவன். சென்ற ஓர் ஆண்டுக் காலத்தில் பல நாடுகளுக்குச் சென்று பல அழகிகளைப் பார்த்தும் சலிக்காத அவன் மனமும் மஞ்சளழகியின் அபூர்வ எழிலில் மட்டுமல்ல; அவள் பார்வையில், குரலில், அனைத்திலும் ஓரளவு லயிக்கவே செய்தது. ஆகவே சற்று சஞ்சலத்துடனேயே அவன் மீண்டும் கேட்டான், "அத்தனை மர்மங்களில் நீங்கள் சொன்ன இரவு நிகழ்ச்சி, அதுதான் அந்த இன்பக் காட்சி, அதுவும் சேர்ந்ததுதானா?" என்று.

"ஆம்", என்று மீண்டும் ஒரே வார்த்தையில் பதில் சொன்னாள் அவள்.

"இன்றிரவு முழு மதியின் நிலவில் நீங்கள் நடனமாடப் போவதாகச் சொன்னீர்களல்லவா?" என்று அவன் வினவினான் குரலில் குழப்பம் ஒலிக்க.

"ஆம். சொன்னேன்." மிகவும் தீனமாகவே வந்தது அவள் பதில்.

"உங்களுடன் பல சேடிகளும் சேர்ந்து ஆடுவார்கள் என்று கூறினீர்கள்..." என்று மேலும் தொடர்ந்தான் இளையபல்லவன்.

"ஆம் கூறினேன்." இந்தப் பதிலிலும் மகிழ்ச்சி ஒலிக்க வில்லை அவள் குரலில்.

"என்ன விந்தை! முழுமதி நிலவு, அப்சரஸ் போன்ற ஒரு பெண் ஆடுகிறாள். அவளைச் சுற்றிலும் அழகிகளும் ஆடுகிறார்கள். அப்படியிருந்தும் அதில் துன்பமா?" என்ற இளையபல்லவனின் குரலில் ஆச்சரியம் எல்லை கடந்து ஒலித்தது.

"ஆம், துன்பந்தான்," என்றாள் மஞ்சளழகி உறுதி யுடன்.

"இந்த நாட்டு நடனக் காட்சி அத்தனை துன்பமான காட்சியா!"

"இல்லை, வாஜாங் என்ற வாயாங் நடனத்தைவிட இன்பம் தரும் கலைக் காட்சி உலகத்தில் எதுவுமில்லை." இதைச் சொன்னபோது மஞ்சளழகியின் கண்களில் புத்தொளியொன்று பளிச்சிட்டது. நடனத்தை நினைத்த மாத்திரத்தில் அவள் உடலெங்கும் மயிர்கூச்செறிந்தது. முகத்திலிருந்த சஞ்சலங்கூடச் சிறிது மறைந்தது.

அவள் முக மாறுதல்களை அவன் கவனிக்கத்தான் செய்தான். நாட்டியத்தை நினைத்ததுமே அவள் முகத்தில் ஏற்பட்ட புதுப் பொலிவையும் கண்டான். அவள் உடலிலேயே நாட்டியம் ஊறிக்கிடக்கிறதென்பதைப் புரிந்து கொண்டான். ஆகவே அந்த நாட்டியத்தைப் பற்றிய தகவல்களையும் அதனால் ஏற்படக் கூடுமென அவன் எதிர்பார்க்கும் விபரீத விளைவுகளையும் அறிந்து கொள்ள அவன் மேலும் பேச்சைத் தொடர்ந்து, "வாஜாங்கா,

வாயாங்கா... ஏதோ நாட்டிய முறை சொன்னீர்கள்..." என்று ஆரம்பித்தான்.

அவனை இடைமறித்த மஞ்சளழகி, "இரண்டு விதமாகவும் அதை அழைப்பதுண்டு. வாஜாங், வாயாங் இரண்டும் ஒரே நாட்டிய முறை, சொர்ணத் தீவின் தேசிய சொத்து, கலைச் சிகரம் அது," என்றாள்.

"அதிலென்ன, துன்பகரமான காட்சிகளைத்தான் ஆடுவீர்களா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"இல்லை இல்லை" என்று சட்டெனப் பதில் சொல்லிய மஞ்சளழகி, "மிக இன்பமான காட்சிகளைத் தான் ஆடுவோம்." என்றாள்.

"இன்பமான காட்சிகளா!"

"ஆம், புராணக் கதைகளை ஆடுவோம். வேறு வகை வீர, காதற் சுவைக் கதைகளையும் ஆடுவோம்" என்று அவள் நாட்டியத்தை நினைக்க நினைக்க உணர்ச்சி மேலிட்டுப் பேசினாள்.

அவள் உணர்ச்சிகளை மேலும் தூண்டக் கேட்டான் அவன், "புராணக் கதைகளா? இந்த ஊருக்கென்று தனிப் புராணங்கள் உண்டா?" என்று.

"இல்லை. தனிப்பட்ட புராணங்கள் கிடையாது. ராமாயண, மகாபாரதக் கதைகளைத்தான் ஆடுகிறோம்" என்று அவள் கூறினாள்.

"அவை எங்கள் நாட்டுப் புராணங்களாயிற்றே!"

"ஆம். அந்தப் புராணங்கள்தான் இங்கும் நடமாடு கின்றன. பாரதத்தின் புராணங்களாலும் கலைகளாலும் புத்துயிர் பெற்றது சொர்ணபூமி. சொர்ண பூமியின் தீவுகளில் முதலில் பாரதத்தின் ஸநாதன தர்மமும் பிறகு புத்த மதமும் பரவின. நீங்கள் ஊன்றிப் பார்த்தால் உங்கள் நாட்டுக் கலாசாரத்துக்கும் இந்த நாட்டுக் கலாசாரத்

துக்கும் அதிக வேற்றுமையிருக்காது. பாரதத்திலிருந்து வந்த கலைகள் இங்குள்ள கலைகளுடன் பிணைந்தன, பாலுடன் தேன் கலந்தது போல். பழைய வாஜாங்கில் நிழலாட்டந்தான் காட்டுவார்கள். பரதநாட்டியம் கலந்த பிறகு நடனக் கலைஞர்கள் நேரிடையாக ஆடுகிறார்கள். வாஜாங்கில் இருவகை உண்டு. வாஜாங் பூர்ணா என்பது புராணக் கதைகளை ஆடுவது. வாஜாங் கோதக் என்பது வேறு வகை காதற் கதைகளை ஆடுவது. இரண்டும் மகோன்னதமா யிருக்கும் இளையபல்லவரே. வாஜாங் நிகரற்ற நாட்டிய முறை. அதன் பின்னிசை பிரமிக்கத்தக்கது. வெளிச் சூழ்நிலையில் ஆடப்படும் இந்த நடனத்தைப் பார்த்த பின்பு நீங்களே புரிந்து கொள்வீர்கள்," என்ற மஞ்சளழகி யின் கண்கள் கனவுலகில் சஞ்சரிக்கத் தொடங்கின. அந்த நாட்டிய முறையைப் பற்றியும், பாரதம், சொர்ண பூமி இவற்றின் கலாசாரத்தைப் பற்றியும் பேசப் பேச அவள் முகத்தில் உணர்ச்சிகள் பலவாக விரிந்தன. கை கால்கள் கூட உணர்ச்சியால் மெல்ல மெல்ல அசைந்தன. அந்த அசைவைத் தொடர்ந்து சரேலென ஆசனத்திலிருந்து எழுந்த அவள், மஞ்சத்தின் கைப்பிடியில் ஒரு கையை வைத்துக்கொண்டு இடை துவளச் சிறிது நேரம் நின்றாள்.

அவள் நின்ற நிலை மனத்தை அப்படியே பறித்து விடும்படியாயிருந்ததை இளையபல்லவன் கவனித்தான். இடை துவள, ஒரு கரம் நீண்டு மஞ்சத்தின் பிடியில் மலர் விரல்கள் அமர, இன்னொரு கை இடையில் பொருந்த, கால்கள் சற்றே ஒருபுறம் வளைய, பக்கவாட்டில் தலை சாய்த்து அவள் நின்ற கோலமே முதல்தரமான நாட்டியக் கோலமாக அமைந்திருந்ததைக் கவனித்த இளைய பல்லவன், என்ன நேரிடுவதாயிருந்தாலும் அன்றைய நடனத்தைப் பார்த்து விடுவதென் உறுதி பூண்டான். அவன் உறுதியை மேலும் வலுப்படுத்தவும், உணர்ச்சிகளை

அலைக்கழிக்கவும் அவள் மேலும் விவரித்தாள். "இளைய பல்லவரே! உங்கள் நாட்டு பரதத்தை நான் பார்த்திருக்கிறேன். மிகச் சிறந்த நாட்டிய முறை; ஆனால் அதிலிருந்து முளைத்த, அதனால் செழிப்புற்ற வாஜாங்குக்கு இணையான நாட்டியம் உலகில் எங்குமே கிடையாது. இன்றிரவு நான் ஆடும்போது பாருங்கள், உலகமே ஆடும்; அங்கு வரும் கள்வர்கள் ஆடுவார்கள்; வீரர்கள் ஆடுவார்கள்; பெண்கள் ஆடுவார்கள்; இன்னிசை எழுந்து கலக்கும்; அந்தத் தாண்டவத்தில் உள்ளங்கள் புரண்டெழும்; உணர்ச்சிகள் அலை பெருகும்; வந்து பாருங்கள்— வந்து பாருங்கள்—"

மஞ்சளழகி மெய்மறந்து ஆவேசத்துடன் பேசினாள். அந்த ஆவேசத்தில், அவள் நின்ற நடனத் திருக்கோல அழகில், இளையபல்லவன் வசப்பட்டு நின்றான். அந்த இருவருமே அந்தச்சமயத்தில் சுயநிலை இழந்து நின்றார்கள். அத்தனையிலும் சுயநிலை இழக்காத ஒரு குரல் இன்பத்தின் இடையே பாய்ந்து துன்ப அஸ்திரமெனக் குறுக்கே புகுந்தது. "இன்பம் மட்டுமல்ல அந்த நடனத்தில்" என்ற உக்கிரமான சொற்கள் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் வாயிலிருந்து புறப்பட்டு அவர்கள் எண்ண அலைகளை உடைக்கவே, மஞ்சளழகியும் இளையபல்லவனும் ஏக காலத்தில் தலைவனை நோக்கித் திரும்பினார்கள். முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் காட்டாத அக்ஷய முனைத் தலைவன் இகழ்ச்சி தொனித்த குரலில் சொன்னான் இளையபல்லவனை நோக்கி, "இரவு நிகழ்ச்சியின் இன்பக் கிளையைப் புரிந்துகொண்டு விட்டீர்கள்," என்று.

"அப்படியானால் அதற்கு—" என்று துவங்கிய இளைய பல்லவனை இடைமறித்த அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன், "ஆம், துன்பக் கிளையும் ஒன்று உண்டு. நீங்களே சொன்னீர்களல்லவா இன்பத்தில் துன்பம் என்று" எனக் கூறினான்.

"ஆம் சொன்னேன்," என்றான் இளையபல்லவன்.

"நீங்கள் சொன்னது உண்மை. ஆனால் துன்பத்தின் எல்லையைப் புரிந்துகொள்ளாமல் சொன்னீர்கள்" என்றான் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனான பலவர்மன்.

"புரிந்து கொள்கிறேன், சொல்லுங்கள்."

"இப்பொழுது நீங்கள் மயக்கத்தின் பிடியிலிருக் கிறீர்கள், இரவு நிகழ்ச்சிக்கு வந்தால் மரணத்தின் பிடியிலிருப்பீர்கள்" என்று உணர்ச்சி ஏதுமற்ற வறண்ட குரலில் மரண ஓலை வாசிப்பவன்போல் பதில் கூறினான் பலவர்மன்.

இளையபல்லவன் மஞ்சளழகியின் முகத்தைத் திரும்பி நோக்கினான். அப்பொழுது அதில் நாட்டியக் கனவில்லை. இன்பத்தின் நினைப்பில்லை. அச்சத்தின் சொரூபமாயிருந்தது அவள் வதனம். "சற்று நிலை தடுமாறி விட்டேன் தந்தையே" என்று அவள் தந்தையைப் பார்த்து மன்னிப்பும் கேட்டுக் கொண்டாள்.

"அது பெண்ணாகிய உனக்குச் சகஜந்தான்" என்று அலட்சியமாகப் பதில் சொல்லிவிட்டு மஞ்சளழகியைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் இளையபல்லவன் முகத்தில் மட்டும் தனது கண்களை நாட்டிக்கொண்டு சொன்னான் பலவர்மன்: "இளையபல்லவரே! உங்கள் நாட்டுச் சாத்திரப்படி இன்று சித்திரா பௌர்ணமி. இன்றைய இரவு நாட்டியத்தை நாங்கள் என்றும் கைவிட்டதில்லை. இதைப் பெருவிழாவாகக் கொண்டாடுகிறோம். இது உண்மையில் சித்திரா பௌர்ணமி விழாவல்ல, ஒருவகை அரசியல் விழா. இந்த விழாவின் முழு மர்மத்தை நீங்கள் அறிந்து கொள்ளச் சில வருஷங்கள் பிடிக்கும். இந்த விழா இன்பமாகத்தான் ஒவ்வோர் ஆண்டும் துவங்குகிறது. இறுதியில் பத்துப் பதினைந்து கொலைகளாவது விழாமல் இதுவரை இந்த

விழா முடிந்ததில்லை. வாஜாங் மிக இன்பமான நாட்டியம். ஆனால் அதைப் பார்க்க மட்டும் வருவதில்லை கொள்ளைத் தலைவரும், மற்றக் காட்டு மிராண்டிகளும். தங்கள் பழைய விரோதங்களைத் தீர்த்துக் கொள்ளும் ஸ்தலமாகவும் விழா அரங்கத்தைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். இந்தக் கொலைகளில் அரசாங்கத் துக்கும் பங்கு உண்டு. வேண்டாதவர்களை ஒழித்துக் கட்டுவதற்கும் இந்த விழா பயன்படுகிறது. வாஜாங்கின் பின்னிசையைப் பற்றிச் சொன்னாள் என் மகள். பிறகு கலவரம் ஏற்படும்போது விளையும் விபரீத ஒலிகளைப்பற்றி மட்டும் குறிப்பிடவில்லை அவள். அந்த ஒலிகள் அகூதாவின் உபதலைவரான உமது உணர்ச்சிகளைக்கூட உலுக்க வல்லவை."

பலவர்மனின் சொற்களை மிக அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த இளையபல்லவன் இறுதியாக வினவினான்! "இத்தகைய விழாவை நீங்கள் ஏன் நிறுத்தக்கூடாது?"

"நிறுத்த எனக்குச் சக்தியில்லை!" அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் திட்டமாகச் சொன்னான்.

"கலவரத்தை அடக்குவதும் அமைதியை நிலை நாட்டுவதும் உமது கடமையல்லவா?"

"ஆம்."

"பின் ஏன் ஒழுங்கைக் குலைக்கும் மரணத்தை விளைவிக்கும் இந்த விழாவை நடத்துகிறீர்கள்?"

"தலைமுறை தலைமுறையாக இது நடந்து வருகிறது."

"பழைய பழக்கத்தை மாற்றினால்?"

"இந்தக் கோட்டை தவிடுபொடியாகிவிடும். இந்த விழா இந்த நகரத் தேவதைக்காக ஆடப்படுகிறது. அந்தத் தேவதையால் தங்களுக்குப் பெரும் லாபமும் சுபிட்சமும் கிடைப்பதாக இந்த நாட்டுப் பூர்வகுடிகள் நினைக் கிறார்கள். ஆகையால் இதை நிறுத்த முடியாது.

நிறுத்தினால் பதக் சாதியார் இந்த நகரத்தில் புகுந்து இதை அழிப்பார்கள். சூளூக்கள் அரசாங்கத்துக்கு உதவ மாட்டார்கள். பிறகு கடலில் மற்றவர்கள் வைத்தது சட்டம்."

நிலைமையை நன்றாகப் புரிந்துகொண்டான் இளைய பல்லவன். விழாவின் விளைவும் தெள்ளெனப் புரிந்தது அவனுக்கு. அதைத் திட்டமாக விளக்க, "அதுமட்டுமல்ல இளையபல்லவரே! புதிதாக இந்தத் துறைமுகத்துக்குள் காலடி எடுத்து வைக்கும் யாரையும் இங்குள்ளவர்கள் விரும்புவதில்லை," என்றும் சுட்டிக் காட்டினான் கோட்டைத் தலைவன்.

தனக்கு ஏற்படக்கூடிய ஆபத்தை அவன் சுட்டிக் காட்டுகிறானென்பதை உணர்ந்துகொண்ட இளைய பல்லவன் சில விநாடிகள் சிந்தனையில் இறங்கினான். பிறகு ஒரு முடிவுக்கு வந்து, "தலைவரே! நிலைமை விளங்கி விட்டது எனக்கு. மரணத்தின் வாயில் எனக்குப் புதிதல்ல. பலமுறை அதை நான் மிதித்து மீண்டிருக்கிறேன். இன்றிரவு நடனத்துக்கு வருகிறேன். மற்ற விஷயங்களை நாளை பேசிக்கொள்வோம்," என்று கூறிவிட்டு மஞ்சளழகியையும் தலை தாழ்த்தி வணங்கிவிட்டு அந்த அறையிலிருந்து வெளியேறினான்.

அவன் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த மஞ்சளழகியின் முகத்திலும் பலவர்மன் முகத்திலும் பெரும் திகில் விரிந்தது. அவன் அன்றிரவு நிகழ்ச்சிக்கு வந்தால் அவன் மரணம் நிச்சயம். அவன் மாண்டால் அகூதாவினால் கோட்டையின் அழிவு நிச்சயம். இந்த இரண்டு நிச்சயங்களையும் எண்ணி எண்ணித் திகிலுக்கு உள்ளானார்கள் அவ்விருவரும். ஆனால் அன்றைய இரவு நிகழ்ச்சி பெரும் புரட்சியாயிருந்தது. அவர்கள் நினைத்தது வேறு. நடந்தது வேறு. நடந்தது ஒரு கொலை, விளைந்தது வேறு நிலை.

# கடல் புறா

சாண்டில்யன்

## 13. மித்ரபேதம்



அத்தியாயம் 13

# மித்திரபேதம்

பலவர்மனும் மஞ்சளழகியும் இரவு நடனக் காட்சியில் ஏற்படக்கூடிய பயங்கர விளைவுகளைப் பற்றிப் பலப்பல விதமாகப் பயமுறுத்தியும், அந்த அச்சுறுத்தலைப் பற்றி அணுவளவும் எண்ணிப் பார்க்காமல், "எப்படியும் இன்றிரவு நடன நிகழ்ச்சிக்கு வருகிறேன்" என்று திட்டமாகக் கூறிவிட்டு அவர்களிருந்த அறையை விட்டு வெளியேறிய இளையபல்லவன், விடுவிடுவென்று அக் கோட்டையின் தெருக்களில் நடந்து கடற்கரையை நோக்கி விரைந்தான். அவன் கோட்டைத் தலைவன் அறைக்குள் நுழைந்து நீண்ட நேரம் ஆகிவிட்டதை நினைத்து அவன், அதற்குமேல் வெளிவர வழியில்லை என எண்ணி அவனுக்கு ஒரு முடிவு கட்டிவிட்ட அரண்மனைக் காவலர், அவன் வெகு வேகத்துடன் வெளிப்போந்ததும் சில விநாடி திக்பிரமை பிடித்து நின்றுவிட்டனர். அந்த அரண்மனை வீதியில் சதா நடமாடிக் கொண்டிருந்த மற்ற வீரர்களும் இளையபல்லவன் சொந்த வீட்டிலிருந்து வெளியே வருபவன்போல் சர்வசகஜமாக வெளிவந்ததும், பிறகு அவனே கோட்டையின் சொந்தக்காரன் போல் யாரையும் லட்சியம் செய்யாமல் நடந்து சென்றதையும் கண்டு அத்தகைய விசித்திரம் அந்தக் கோட்டையிலும் நிகழ்ந்ததைப் பார்த்து மலைத்து வாயைப் பிளந்துகொண்டு நின்றனர். அவன் கோட்டை மதிலை அணுகிக் கோட்டை வாயில் வழியாக வெளிச் சென்றபோதும், அங்கிருந்த கோட்டை மதில் காவலர் முதலிலெறிந்ததைப் போல் அவன் மீது அம்பெறியாமலும், அவனை எந்த விதத்திலும் தடுக்காமலும் நின்றதன்றி, அவன் எந்த ஜாலவித்தையால்

கோட்டைத் தலைவனிடமிருந்து தப்பி வந்திருக்க முடியும் என்பதை எண்ணி எண்ணி விடை தெரியாமல் வியப்பின் வசப்பட்டுச் செயலிழந்து நின்றார்கள்.

கோட்டை வாயிலைக் கடந்து அவன் கடற்கரை மணலில் பிரவேசித்தபோது சூரியன் உச்சிக்கு ஏறி, காலையிலிருந்த உஷ்ணத்தைவிடப் பன்மடங்கு அதிக உஷ்ணத்தை எங்கும் வீசித் தகித்துக் கொண்டிருந்தும், அத்தனை உஷ்ணத்தையும் சட்டை செய்யாத கடற்கரை வாசிகள் மீண்டும் குடிசைகளிலிருந்து அவனை நோக்கி ஓடிவந்து சூழ்ந்து கொண்டார்கள். யவனர், அராபியர், சீனர், தமிழர் எனப் பலவிதமான பிரிவுகளுடைய அந்தக் கூட்டம் அவன் கடற்கரையில் காலையில் கால் வைத்த போது அவனைத் தீவிர விரோதத்துடன் சந்தித்த தென்றால், அந்த உச்சி நேரத்தில் மிகுந்த சந்துஷ்டியுடனும், குதூகலத்துடனும் சந்தித்துப் பெரும் மகிழ்ச்சிக் கூச்சலை இட்டது. கலிங்கத்தின் தங்கக் கப்பலைக் கொள்ளை யடிக்கலாமென அவன் காலையில் ஆசை காட்டியதை அந்த மாலுமிகள் மறக்கவில்லை. அவர்கள் மனைவிமார் களும், மனைவிமார்களைப் போல் அவர்களுடன் வாழ்ந்து வந்த மற்ற பலதரப்பட்ட பெண்களும், அந்தக் கொள்ளை யில் தங்களுக்குக் கிடைக்கக்கூடிய ஆடை யாபரணங்களை நினைத்துப் பெரும் கொம்மாளமிட்டார்கள். இளைய பல்லவனிடம் நம்பிக்கையும், அந்தக் கூட்டத்துக்குப் பெரிதும் வலுத்திருந்தது. விஷ அம்பு மார்பில் பாய்ந்தும் மாளாத அவனிடம் ஏதோ ஒரு தெய்வீக சக்தி நிச்சயம் இருக்கிறது என்பதை நினைத்தது அந்தக் கூட்டம். அவன் கோட்டைத் தலைவன் மாளிகையிலிருந்து வெளி வந்ததைப் பிரமிக்கத்தக்க ஒரு விஷய'மாக மதிக்கவே யில்லை. விஷ அம்பு தைக்க முடியாத மார்பை உடைய வனை யாரும் கொல்ல முடியாது என்ற தீர்மானத்துட னிருந்த அந்த மாலுமிக் கூட்டமும், மாதர் கூட்டமும்

அவனைச் சுற்றி வளைத்துப் பல கேள்விகளைக் கேட்டார்கள்.

"கோட்டைத் தலைவர் என்ன சொன்னார்?" என்று சிலர் கேட்டார்கள். "நீங்கள் இங்கு தங்குவது நிச்சயம் தானே" என்று மற்றும் சிலர் கேட்டார்கள். "கலிங்கத்துக் கப்பல் எப்பொழுது வரும்? எந்தத் திசையில் வருகிறது?" என்று இன்னும் சிலர் கேட்டார்கள். "அதில் காஷ்மீரத்துப் பட்டிருக்குமா? தமிழகத்துக் காசுமாலை இருக்குமா?" இப்படி இரு பெண்கள் கேட்டார்கள். அவரவர்களுக்குத் தேவையானதை அவரவர்கள் கேட்டார்கள். மிகுந்த கொடூர அநாகரிக வாழ்க்கையிலும் ஆசை உந்தியதால் குழந்தைகளைப் போலக் கேள்விகளைக் கேட்ட அந்தக் கூட்டத்தினர் மீது தன் விழிகளைப் பல திக்குகளில் திருப்பிய இளையபல்லவன் அவரவர்களுக்கு இனிப்பான பதில்களைச் சொல்லிக்கொண்டே நடந்தான். "நான் உங்களை விட்டு எங்கும் செல்லப்போவதில்லை. கலிங் கத்தின் கப்பல் சீக்கிரம் வரும், நாம் சேர்ந்து அதைக் கைப்பற்றுவோம்," என்று மாலுமிகளுக்கும், "காஷ்மீரப் பட்டு என்ன, உலகம் புகழும் தமிழ்நாட்டு மெல்லிய வெள்ளைச் சல்லா, காசு மாலைகள், மகர கண்டிகள், இன்னும் புதுப்புது நகைகள் எல்லாம் உங்களுக்குக் கிடைக்கும்," என்று மாதர்களுக்கும் மாறி மாறிச் சொல்லிக் கொண்டு நீர்க்கரையை நோக்கி நடந்தான் இளைய பல்லவன். அவன் சொற்களைக் கேட்டுக் கொண்டே அவனைச் சூழ்ந்தும், தொடர்ந்தும் வந்த அந்தக் கடற்கரை மாலுமிகள் கூட்டத்தை, நீர்க்கரையை அடைந்ததும் அங்கிருந்த தனது படகில் ஏறு முன்பு திரும்பிப் பார்த்த இளையபல்லவன், சில வினாடிகள் மௌனமாக நின்றான்.

நீர்க்கரையை அடைந்ததும் அவன் சட்டென்று நின்றதும், படகில் ஏறாமல் தங்களை நோக்கித் திரும்பிய தையும் கவனித்த மாலுமிகள் கூட்டம் அவன் ஏதோ சொல்ல முயல்கிறானென்பதைக் கண்டதும் சட்டென்று கூச்சலை அடக்கிக் கொண்டது. இளையபல்லவனின்

காந்தக் கண்கள் அந்தக் கூட்டத்தை நன்றாக ஊடுருவிப் பார்த்தன. அந்தப் பார்வையால் ஸ்தம்பித்துவிட்ட கூட்டத்தை நோக்கி அவன் இதழ்களிலிருந்து திடமான வார்த்தைகள் உதிர்ந்தன. "நீங்கள் சிறந்த மாலுமிகள் என்பதைப் புரிந்து கொண்டேன்." என்று தொடங்கினான் இளையபல்லவன்.

அந்தக் கூட்டத்திலிருந்து அதற்குப் பதிலேதும் வரவில்லை. அவன் மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறானென்பதை எதிர்பார்த்து நின்றார்கள் அந்த மாலுமிகள். இளையபல்லவன் வார்த்தைகள் இரும்பைக் கொண்டு இரும்பிலடித்தால் ஏற்படக்கூடிய தொனியுடனும் உறுதியுடனும் மீண்டும் கிளம்பின. "உங்களை வீணாகப் புகழவோ உங்கள் தயவைச் சம்பாதிக்கவோ நான் இதைச் சொல்லவில்லை. யார் தயவும் எனக்குத் தேவையுமில்லை. நான் அகூதாவின் உபதலைவன். என்னுடைய தாரைகள் ஊதப்பட்டதிலிருந்தே அதை நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்கள்," என்றான் இளைய பல்லவன்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும், அந்தக் கூட்டத்தில் சிறிது சலசலப்பு ஏற்பட்டது. சிலர் பயத்தால் நடுங்கவும் செய்தார்கள். அந்தப் பயத்தைத் தூண்ட மேற்கொண்டு சொன்னான் இளையபல்லவன், "உங்கள் கோட்டைத் தலைவன் என்னைக் கொல்லவில்லை; சிறை செய்யவில்லை; மீண்டும் சுதந்திரமாக நான் எனது கப்பலை நோக்கிப் போகிறேன். ஏன் தெரியுமா? கோட்டைத் தலைவனிடம் சொன்னதை உங்களிடமும் சொல்லுகிறேன், கேளுங்கள். இந்த அக்ஷயமுனையில் எனக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால் இதை அழித்து விடுவதாக அகூதா சபதம் செய்திருக்கிறார். என்னை அழிப்பது இந்தக் கோட்டையை அழிப்பதாகும். ஆனால் இந்த அழகிய கோட்டையையும், நகரத்தையும் அழிக்கும் விருப்பம் எனக்குமில்லை, அகூதாவுக்குமில்லை. அக்ஷய முனை பலப்பட வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்.

இங்கு எல்லோருக்கும் சுபிட்சத்தில் சம பங்கு வேண்டும் என்று நினைக்கிறோம். கோட்டைக்குள் மாட மாளிகைகளும் வெளியே குடிசைகளும் இருக்கக்கூடாது என்று எண்ணுகிறோம்.

இதைச் சொன்ன இளைய பல்லவன் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் குடிசைகளையும் நோக்கி, கோட்டைக்குள்ளிருந்த பெரும் கட்டடங்களையும் நோக்கினான். அவன் பேச்சும் பார்வையும் அந்தக் கொள்ளைக்காரரிடை பெரும் சலசலப்பை உண்டாக்கின. அதைத் தூண்ட இளையபல்லவன் மேலும் பேச்சைத் தொடர்ந்து, "நீங்கள் கடலோடுகிறீர்கள். உயிரைப் பணயம் வைத்துக் கொள்ளையடித்துச் செல்வத்தைக் கொண்டு வருகிறீர்கள். உங்களால் அதோ அந்தக் கோட்டை செழித்திருக்கிறது, நீங்கள் செழிக்கவில்லை, ஏன்?" என்று கேட்ட இளையபல்லவன் மீண்டும் அவர்களைக் கூர்ந்து நோக்கினான். பிறகு இகழ்ச்சிப் புன்முறுவல் செய்து கூறினான். "இருப்பினும் கோட்டைத் தலைவனை எதிர்க்க உங்களுக்கு அச்சமிருக்கிறது. காரணம் பல தந்திரங்களால் அவன் உங்கள் பணத்தைப் பறித்து விடுகிறான். உங்கள் வீரத் தலைவர்களை அப்புறப்படுத்தி விடுகிறான். அந்தப் பயத்தை நீக்கவும், இந்த அநீதியைத் தவிர்க்கவும் நான் இங்கு தங்கத் தீர்மானித்திருக்கிறேன். கோட்டைக்குள் அல்ல, உங்கள் குடிசைகளுக்கு நடுவில் எனது குடிலும் அமையும். இனி நாம் சகோதரர். ஆபத்திலும், சம்பத்திலும், கஷ்டத்திலும், நஷ்டத்திலும் சகோதரர்" என்று பெரும் உணர்ச்சியுடன் கூவிய இளையபல்லவன் தன் கரத்தை உயரத் தூக்கினான். அதே கணத்தில் அந்த மாலுமிகள், அவர்கள் துணைவிகள் அத்தனை பேர் கரங்களும் உயர்ந்தன! "ஆம், ஆம்," "சகோதரர், சகோதரர்!" என்று பலவிதக் கூச்சல்கள் வானைப் பிளந்தன.

அத்துடன் படகில் ஏற முற்பட்ட இளையபல்லவன் கடைசியாக அவர்களை நோக்கிச் சொன்னான்: "இரவு நடன நிகழ்ச்சிக்கு நானும் வருகிறேன்," என்று. இதைக்

கேட்டதும் அந்தக் கூட்டத்தில் சட்டென்று கூச்சல் நின்றது. நிசப்தம் நிலவியது. அச்சம் அவர்கள் இதயங்களைக் கவ்விக் கொண்டதைக் கவனித்த இளையபல்லவன், "அச்சத்தை விடுங்கள். உங்கள் அச்சம் எதிரிகளின் பலம், 'பதக்'குகளா யிருந்தாலென்ன, 'குளூ'க்களாயிருந்தாலென்ன, அவர் களும் மனிதர்கள்தானே? என்னைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். நாமனைவரும் ஒரே கூட்டம், கொள்ளைக் கூட்டம் என்பது நினைவிருக்கட்டும். நம்மில் யாராவது ஒருவரைத் தொட்டால் பலபேர் காவு ஆவது நிச்சயம். என் மாலுமிகளையும் இரவு நிகழ்ச்சிக்கு அழைத்து வருகிறேன். பயப்படாதீர்கள். இன்றிரவு நிகழ்ச்சி நீங்கள் இதுவரை காணாத புது நிகழ்ச்சியாயிருக்கும். புது சகாப்தமொன்று இன்று இந்த அக்ஷயமுனையில் உதயமாகும்" என்று சிறிய குரலில் கூறிவிட்டுப் படகிலேறினான் இளைய பல்லவன். படகோட்டிகள் துடுப்புகளைத் துழாவினார்கள். படகு அவன் மரக்கலத்தை நோக்கி விரைந்தது. அதைப் பார்த்துக் கொண்டே அந்தக் கொள்ளைக்கூட்டம் நீர்க்கரையில் நீண்ட நேரம் நின்றிருந்தது. அதற்குப்பின் அவர்களைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் சென்ற இளையபல்லவன், தன் மரக்கலத்தைப் பெரும் சந்துஷ்டியுடன் அடைந்தான்.

அன்றைய நிகழ்ச்சிகள் அவனுக்குப் பெரும் ஆறுதலையளித்தன. பலவர்மன், மஞ்சளழகி, கடற்கரைக் கொள்ளைக் கூட்டம் இந்த மூன்று தரப்பட்ட பிரிவுகளை எண்ணிப் பார்த்து ஒவ்வொன்றையும் தான் ஓரளவு சமாளித்துக் கொண்டு வந்துவிட்டதை நினைத்து மன சாந்தி அடைந்தான். அன்றிரவு நடன நிகழ்ச்சியில் சொர்ணத் தீவின் பூர்வகுடிகளால் ஏற்படக்கூடிய ஆபத்துக்குத் தான் பரிகாரம் தேடிவிட்டதை எண்ணிப் பார்த்து மகிழ்ச்சியும் அடைந்தான். "நான் சொன்னதைக் கடற்படை மாலுமிகள் அவசியம் எண்ணிப் பார்ப்பார்கள். குறை எனும் விதையை அவர்கள் இதயத்தில் விதைத் திருக்கிறேன். இரவுக்குள் அது மரமாக வளராவிட்டாலும் கண்டிப்பாய்ச் செடியாகவாவது வளர்ந்துவிடும். தற்சமயம்

இந்த மித்ரபேதம் போதும். கோட்டைத் தலைவனிடம் இவர்களுக்குள்ள அச்சத்தை அறுத்து அதிருப்தியை உண்டாக்கினாலே அக்ஷயமுனைப் பாதுகாப்பு இரண்டாகப் பிளக்கும். இடையே நான் நுழைவேன்" என்று எண்ணமிட்டவாறே நூலேணியில் ஏறி மரக்கலத்தின் தளத்தில் காலை வைத்த இளையபல்லவனை அமீரும் கண்டியத்தேவனும் கையைப் பிடித்துத் தூக்கி விட்டார்கள்.

அப்படித் தன்னைத் தூக்கிவிட்ட அந்த இருவர் முகத்திலும் இருந்த வியப்புக் குறியைக் கண்ட கருணாகர பல்லவன் கேட்டான், "ஏன் நான் திரும்பி வந்தது வியப்பாயிருக்கிறதா உங்களுக்கு" என்று.

"அதுமட்டுமல்ல வியப்புக்குக் காரணம். அந்தக் கொள்ளைக் கூட்டத்தார் உங்களிடம் நீண்ட நாள்கள் பழகியவர்களைப்போல் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்களே, அதுவும் விசித்திரமாயிருந்தது," என்றான் அமீர்.

கண்டியத்தேவனும் ஏதோ கேள்வி கேட்க முற்பட்டான். "கண்டியத்தேவரே! சூரியன் உச்சியை எட்டி விட்டான். உணவருந்திக் கொண்டே பேசுவோம்," என்று அவன் கேள்வி பிறக்குமுன்னரே தடுத்துவிட்ட கருணாகர பல்லவன் தன் அறையை நோக்கி அந்த இருவரும் பின் தொடர நடந்தான்.

அறையில் மறுஉடையணிந்து, அமீர், கண்டியத் தேவன், கூலவாணிகன் சேந்தன் முதலியோருடன் உணவருந்த உட்கார்ந்த இளையபல்லவன் மிகவும் நிதானமாகவும் அவர்கள் மனத்தில் ஆழ்ந்து படியும்படியாகவும், தான் கப்பலிலிருந்து புறப்பட்டது முதல் நடந்த நிகழ்ச்சிகளை விவரித்தான். அவன் பேசுவதைச் சிறிதும் தடை செய்யாமல் கேட்டு வந்த அமீரும், மற்றோரும் உள்ள நிலைமையைத் தெள்ளெனப் புரிந்துகொண்டனர். இளைய

பல்லவன் எத்தனையோ சாமர்த்தியமாகக் காரியங்களைச் சாதித்திருந்தாலும் அந்தப் பயங்கரத் துறைமுகத்திலுள்ள ஆபத்து எல்லையற்றது என்பதையும், அன்றிரவு நிகழ்ச்சியும் அத்தனை சாமான்யமாகக் கடக்கக்கூடியதல்லவென்பதையும் அவர்கள் புரிந்துகொண்டார்களாகையால் அவர்கள் முகங்களில் கவலை பெரிதும் தாண்டவமாடியது. அந்தக் கவலைக் குறியைக் கவனித்த இளையபல்லவன் சொன்னான்: "அமீர்! மிகவும் பயங்கரமான அபூர்வ குடிகளும், கொள்ளைக் கூட்டமும் வஞ்சகத்தில் இணையற்ற ஒரு கோட்டைத் தலைவனும் உள்ள இடத்துக்கு நாம் வந்திருக்கிறோம். இருப்பினும் கலிங்கத்தின் கடலாதிக்கத்தை ஒழிக்க இதைவிடச் சிறந்த இடம் கிடையாது. சொர்ண பூமியின் இந்த அக்ஷயமுனை வடக்கு நோக்கித் தனது மூக்கை நீட்டிக்கொண்டு பாலூரிலிருந்து கடாரம் செல்லும் மரக்கலங்களை மோப்பம் பிடிப்பதுபோல் அமைந்திருக்கிறது. இது ஒன்றுதான் நமது லட்சியத்துக்குத் தகுந்த தளம். ஆகவே இங்குள்ள ஆபத்தை நாம் சமாளித்துத்தான் ஆகவேண்டும். சரியான ராஜதந்திரத்தாலும், வீரத்தாலும் ஆகாத காரியங்கள் உலகில் எதுவும் கிடையாது. இதை நினைப்பில் வைத்துக்கொள்ளுங்கள். இங்கு பலவர்மன் ஆதிக்கம் ஒழிந்து என் ஆதிக்கம் நிலைக்க வழிவகுக்கும் பொறுப்பை எனக்கு விட்டுவிடுங்கள்."

அமீர் பதிலேதும் சொல்லவில்லை. கண்டியத்தேவன் மட்டும் சொன்னான்: "எப்படியும் நாம் இங்கு தங்கித்தான் ஆகவேண்டும். நமது மரக்கலம் மீண்டும் கடலில் நீண்ட தூரம் பயணம் செய்யமுடியாது. அதைப் பழுது பார்க்க அவசியமிருக்கிறது," என்று.

அக்ஷயமுனையில் தங்குவதற்கு அமீருக்கு ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் அது கண்டியத்தேவன் பேச்சுடன் நின்றுவிட்டது. ஆகவே அடுத்துச் செய்யவேண்டியது

என்னவென்பதை அறிய அவன் கருணாகரனை நோக்கித் தன் பெருவிழிகளைத் திருப்பினான். கருணாகர பல்லவனின் கட்டளைகள் திட்டமாயிருந்தன. "சேந்தா! நமது பொக்கிஷப் பெட்டிகளில் நகைகளும் சிறந்த குறுவாள்களும் வேறு ஆயுதங்களும் எத்தனை இருக்கும்?" என்று வினவினான் இளையபல்லவன், தன் கட்டளையை இடுமுன்பு.

"பாலித் தீவில் தங்களுக்குக் கிடைத்த பொக்கிஷத்தைத் தவிர, அவ்வப்பொழுது அகூதா கொடுத்ததே இரண்டாயிரம் பேருக்கு வழங்கலாம். நாலு பெட்டி நகைகள் இருக்கின்றன. இரண்டு பெட்டி பட்டாடைகள், இரண்டு பெட்டி விலை உயர்ந்த ஆயுதங்கள் இருக்கின்றன. எல்லாம் பல லட்சம் பொற்காசுகள் பெறும்" என்றான் கூலவாணிகன் சேந்தன்.

"அவற்றில் ஒரு பெட்டி நகைகளையும், ஒரு பெட்டி பட்டாடைகளையும் கரைக்குக் கொண்டு சென்று கொள்ளைக் கூட்டத்தாருடன் இருக்கும் பெண்களுக்கு வழங்கிவிடு. அமீரையும் அழைத்துப் போ. தகுதிக்குத் தக்கபடி ஆபரணங்களைக் கொடு. கொள்ளைத் தலைவர்களுக்குக் குறுவாள்களைப் பரிசாக அளி. இரவு நாட்டியத்தின்போது அவர்கள் அழகு என் கண்களைப் பறிக்க வேண்டுமென்று பெண்களிடம் சொல்," என்று உத்தரவிட்டான் கருணாகர பல்லவன்.

அமீரும், சேந்தனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். உணவை முடித்துக் கொண்ட இளைய பல்லவன் அவர்கள் யாரையும் கவனிக்காமல், எழுந்து அறையை விட்டுத் தளத்துக்குச் சென்றான். அமீரும் சேந்தனும் ஏதோ ஆழ்ந்த யோசனையுடன் இளைய பல்லவன் நடந்து கொள்கிறானென்பதை மட்டும் புரிந்து கொண்டார்களேயொழிய அது என்னவாயிருக்கக்கூடும்

என்பதை மட்டும் அறிய அவர்களால் முடியவில்லை. ஆகவே சொன்னபடி உத்தரவை நிறைவேற்றுவதில் முனைந்தார்கள். அடுத்த சில நாழிகைகளுக்கெல்லாம் பெரும் மரப்பெட்டிகளிரண்டு கப்பலிலிருந்து படகில் இறக்கப்பட்டுக் கரையை நோக்கி விரைந்தன. மீண்டும் படகு வருவதைக் கவனித்ததும் ஆரவாரத்துடன் ஓடிவந்த கொள்ளைக் கூட்ட ஆண்களும், பெண்களும் அமீரும் சேந்தனும் வழங்கிய பரிசுகளைப் பெற்று நானாவிதமாக மகிழ்ச்சிக் கூச்சலிட்டனர். கப்பலின் தளத்தில் நின்று தங்களைக் கவனித்துக் கொண்டிருந்த இளையபல்லவனை நோக்கிக் கைகளை ஆட்டிக் கூச்சலிட்டு நன்றி தெரிவித்தனர். பட்டாடைகளைச் சிலர் விசிறி ஆகாயத்தி லெறிந்து பிடித்தார்கள். சில அழகிகள் முத்து மாலைகளைக் கொண்டையில் வைத்து அழகு பார்த்தார்கள். கடற் கரையில் சூரியனின் மிதமிஞ்சிய வெப்பத்திலும் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டு ஓடிக் கொண்டிருந்தது. அதைக் கண்டு புன்முறுவல் செய்த இளையபல்லவன் மிகுந்த திருப்தியுடன் தன் அறைக்கு மீண்டான். மீண்டவன் பஞ்சணையில் படுத்து நன்றாக உறங்கினான். அதிகக் களைப்பால் நீண்ட நேரம் உறங்கிவிட்ட அந்தத் தமிழகப் படைத் தலைவன் மஞ்சள் வெயில் அடிக்கத் தொடங்கிய சமயத்திலேயே கண்விழித்து மறுபடியும் தளத்துக்கு வந்து கடற்கரையை நோக்கினான். நோக்கியவன் நோக்கிக் கொண்டே நின்றான். கண்களை இருமுறை கசக்கிப் பார்த்தான். கடற்கரை பழைய கடற்கரையாயில்லை. அங்கிருந்த குடிசைகள் மாயமாய் மறைந்துவிட்டன. இருப்பது அக்ஷயமுனையே அல்லவென்று தோன்றியது அவனுக்கு. பிரமிப்பு அவன் முகத்தில் மேலும் மேலும் படர்ந்தது.




மாலை வேளையில் மஞ்சள் வெய்யிலில் கடற்கரை மணற்பகுதியில் கண்ணுக்கெதிரே விரிந்த அந்த அற்புதக் காட்சி இளையபல்லவன் கண்களை மட்டுமின்றி மனத்தையும் பறித்து மயக்கி அவனுக்குப் பிரமை பிடிக்கும்படி செய்துவிட்டதால், நீண்ட நேரம் மரக்கலத்தின் தளத்தின் மேலேயே நின்றுகொண்டிருந்தான். உச்சிவேளை தாண்டி இரண்டு நாழிகைகளுக்குப் பிறகே தான் உறங்கச் சென்றதை நினைத்துப் பார்த்த சோழர் படைத் தலைவனுக்கு, தான் உறங்கி எழுந்த சொற்ப காலத்திற்குள் அத்தனை பெரிய அற்புதம் கடற்கரையில் எப்படி விளைய முடியும் என்பது மட்டும் விளங்கவில்லையாதலால் அவன் கண்களிலும் முகத்திலும் விவரிக்க இயலாத வியப்பே மிதமிஞ்சி நின்றது. உச்சிவேளை அகன்ற இரண்டு நாழிகைகளுக்கும் கதிரவன் மலைவாயில் விழ முற்பட்டு மஞ்சள் வெய்யில் எங்கும் வீசத் துவங்குவதற்கும் இடையே இருந்தது ஒரு ஜாமம் சொச்சமே என்பதைக் கணக்குப் போட்ட இளையபல்லவன், கடற்கரையில் நிகழ்ந்தது உண்மையில் இந்திர ஜாலம்தான் என்ற முடிவுக்கு வந்தான். தூரத்தே அக்ஷயமுனையின் பெரும் கோட்டை மட்டும் அவன் கண்களுக்குப் புலனாகாதிருந்தால் தான் இருப்பது அக்ஷயமுனையல்ல என்ற முடிவுக்கே அவன் வந்திருப்பான்.

அப்படிப் பிரமிக்கத்தக்கவண்ணம், பார்த்தா லொழிய நம்பமுடியாத, அற்புத நகரமொன்று கடற்கரை மணலில் எழுந்திருந்தது. கடற்கரை மணலில் கோட்டைச் சுவரை அடுத்திருந்த குடிசைகளை அடியோடு மறைத்துப் பெரும் மண்டபமொன்றும் மற்றும் பல தூண்களும் ஆங்காங்கு எழுந்து நின்று பழையகால யவன நகரங்களின் பிரவேச ஸ்தூபிகளைப் போல் காட்சியளித்தன. நேராகக் கடலை நோக்கி அமையாமல் மேற்கு நோக்கி பகிட் பாரிஸான் மலைத் தொடரைப் பார்த்தவண்ணம் அமைந்திருந்த பெரு மண்டபத்தின் தூண்கள் ஆகாயத்தை அளாவி நின்றன. கீழேயும் பலகைகளால் தைக்கப்பட்ட மேடை இருந்தது. ஆனால் மேலே எந்த மறைவும் இல்லை. ஆகாயமே கூரையாக அமைந்திருந்த அந்தப் பெரும் மண்டபம் மஞ்சள் வெய்யிலில் ஜாஜ்வல்யமாகக் காட்சி யளித்தது. அதன் வலுவான தூண்களில் விதவிதமான வண்ணச் சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன. மண்டபத்தின் பக்கப் பகுதிகள் இரண்டை மட்டும் பலவித ஓவியங்களை உடைய திரைச்சீலைகள் மறைத்திருந்தன. அந்தப் பெரும் திரைச் சீலைகள் கடற்காற்றில் படபடத்து எழுந்து எழுந்து தாழ்ந்து இளையபல்லவனை, 'வா! வா!' என்று அழைத்தன.

அந்த மண்டபத்திற்குப் பத்தடி தூரம் தள்ளித் தள்ளி நானாவிதமான ஸ்தம்பங்கள் ஆங்காங்கு எழுந்துகொண் டிருந்தன. மயன் சிருஷ்டித்தது போல் திடீரென ஒரு நகரமே அந்தக் கடற்கரையில் உதயமாகி விட்டதையும் ஸ்தம்பங் களின் வேலை அதி துரிதமாக நடப்பதையும் பார்த்த இளையபல்லவன் அக்ஷயமுனைக் கோட்டைத் தொழி லாளிகளின் சுறுசுறுப்பை எண்ணிப் பெரிதும் வியந்தான். தச்சர்களும், கொல்லர்களும் செய்துகொண்டிருந்த வேலையால் எழுந்த உளி, ரம்பம், வாள் இவற்றின் சத்தம்

எங்கும் பரவி காதைப் பிளந்து கொண்டிருந்தது. ஊருக்குள்ளிருந்து கோட்டை வாயில் வழியாக வண்டி களில் இழுக்கப்பட்டு வந்துகொண்டிருந்த பெரும் மரத் தூண்கள் கடற்கரையில் உருட்டப்பட்டதன் விளைவாக ஒன்றுடன் ஒன்று மோதிய சத்தம் வேறு, தச்சர் கொல்லர் ஆயுத சத்தங்களுடன் கலந்துகொண்டது.

விழாவுக்கு அத்தகைய நகரத்தையும், மண்டபத்தையும் நிறுவத் தனித் தனித் தூண்களையும், பலகைகளையும் அக்ஷயமுனையின் அதிகாரிகள் நிரந்தரமாகச் செய்து வைத்திருக்கிறார்களென்பதை அங்கு நடந்த வேலையிலிருந்தும் வண்டிகளில் வந்திறங்கிய மரத்தண்டுகளிலிருந்தும் இளையபல்லவன் புரிந்துகொண்டாலும், திறமையான தொழிலாளிகள் இல்லாவிட்டால் அந்தத் தயாரிப்புப் பகுதிகளை ஒன்று சேர்த்துப் பிணைப்பது அத்தனை துரிதத்தில் முடியாது என்பதையும் தீர்மானித்துக் கொண்டான். அந்த நிர்மாண வேலை அத்தனை துரிதமாகவும், திறமையாகவும் நடந்ததில் அவனுக்கு ஒரு திருப்தியும் இருந்தது. இத்தகைய பணியாட்களைக் கொண்டு தனது மரக்கலத்தைப் பழுதுபார்ப்பதும், அபிவிருத்தி செய்வதும் மிகவும் சுலபம் என்ற நினைப்பால் அவன் மனம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தது. தச்சர்கள் கடற்கரையில் அடிக்கும் ஒவ்வோர் ஆணியின் சத்தமும் அந்த ஆணி தனது மரக்கலத்திலேயே பாய்ந்து அதை உறுதிப்படுத்துவது போன்ற பிரமையை ஏற்படுத்தவே இளையபல்லவன், எதிர் நோக்கியிருந்த ஆபத்தைக்கூட மறந்து, தான் அக்ஷயமுனை வந்தது சரியான காரியம் என்று தனக்குள் சொல்லிக்கொண்டு குதூகலமும் அடைந்தான்.

இப்படிப் பலவிதமாக எண்ணமிட்டுக் கொண்டும் எதிரே எழுந்த புது நகரத்தைப் பார்த்து வியப்பெய்தியும் தளத்தில் நீண்ட நேரம் நின்றுகொண்டிருந்த இளைய

பல்லவன் ஒரு நாழிகை கழித்துத் தனது அறைக்குச் சென்றான். சென்றவன் பஞ்சணையில் சாய்ந்தபடியே அன்றைய இரவு நடன நிகழ்ச்சியைப் பற்றியும், அங்கு ஏற்படக்கூடிய ஆபத்துகளைப் பற்றியும் எண்ணத் துவங்கினான். பலவர்மனும், மஞ்சளழகியும் குறிப்பிட்ட 'அந்த நால்வர்' வந்தால் அவர்களைச் சமாளிக்கும் வழியைப் பற்றியும் யோசித்தான். கடைசியாக என்ன செய்ய வேண்டுமென்பதைப்பற்றி ஒரு முடிவுக்கும் வந்த சோழர் படைத்தலைவன் அதற்குமேல் கவலை ஏதுமின்றிக் கரைக்குப் போவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கலானான்.

இரவு மெள்ள மெள்ள அந்தக் கடற்கரையில் தலை நீட்டிக் கொண்டிருந்தது. கதிரவனின் சாரதியான அருணன் தன் செங்கிரணங்களை இழுத்துக்கொண்டு விட்டானா என்று முழுமதியும் வானத்தில் எட்டிப் பார்க்கத் துவங்கினான்! அந்த இன்பக் காட்சியைக் கண்ட இளையபல்லவன், 'ஆகா, எத்தனை இன்பமான காட்சி! இதிலா கொலையும் கலவரமும் நடக்க வேண்டும்!' என்று தன்னைத்தானே வருத்தத்துடன் கேட்டுக்கொண்டான். மாலை வேளையில் மஞ்சள் வெய்யிலில் மனோகரமாகக் காட்சி அளித்த அந்தப் புது நகரம், இரவில் கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. எங்கும் பெரும் மர ஸ்தூபிகளின் மீது ஈட்டிகளில் சொருகப்பட்ட பந்தங்கள் பெரிதாக எரிந்தன. பலவகை விளக்குகளும் பல தூண்களும் பிணைக்கப் பட்டுக் காற்றில் சுடர்கள் படபடத்தன. இவற்றுக்கெல்லாம் சற்றுத் தள்ளி மேற்கு நோக்கி இருந்த நடன மண்டபம் கண்ணைப் பறித்துக்கொண்டிருந்தது. அதன் பின்னால் கிழக்கில் எழுந்த முழுமதி மண்டபத்துக்குச் சிறந்த பின்னணியையும் கடற்கரைக்குப் பெரும் சோபையையும் அளித்துக் கொண்டிருந்தது. மண்டபத்துக்கு மேற்புறக் கூரையும் பின்புறத் திரையும் அமைக்காத காரணத்தை

இளையபல்லவன் நன்றாகப் புரிந்துகொண்டான். நடனத்தின் சிறப்பை, சூழ்நிலையின் அமைப்பை ரஸிகனான அவனால் அப்பொழுதே புரிந்துகொள்ள முடிந்தது.

இரவு விளக்குகள் எரியத் தொடங்கிய இரண்டு நாழிகைகளுக்கெல்லாம் கோட்டைக்குள்ளிருந்து மக்கள் சாரி சாரியாக வரத் தொடங்கினார்கள். மெள்ள மெள்ள கூட்டமும் கூச்சலும் அந்தக் கடற்கரையில் பெருகலாயிற்று. கூட்டம் சற்று வலுத்ததும் ஆயுதந் தாங்கிய வீரர்கள் கோட்டைக்குள்ளிருந்து வந்து கூட்டத்தைச் சக்கர வட்டமாக உட்கார வைத்துச் சுற்றிலும் வளைந்து நின்று காவல் புரியலாயினர். இந்த ஏற்பாடுகள் ஒரு நிதானத்துக்கு வருவதற்கும், மண்டபத் தூண்களின் மறைவிலிருந்த குடிசைகளிலிருந்த கொள்ளைக் கூட்டத்தார் பெரும் கூச்சலுடன் அந்த நடன அரங்க வளையத்துக்குள் நுழைவதற்கும் சரியாயிருந்தது. வீரர்கள் எத்தனையோ கட்டுப்பாடு செய்தும் கூச்சலும் குழப்பமும் கடற்கரையில் மண்டியே கிடந்தது.

அமீரும், கண்டியத்தேவனும், கூலவாணிகனும் அக்கம் பக்கத்தில் நிற்க, தளத்தின்மீது நின்றவண்ணமே கடற்கரையில் குழுமிக் கொண்டிருந்த பெரும் கூட்டத்தைக் கவனித்த இளையபல்லவன், நடனவிழாவில் மக்கள் பெரும் பைத்தியம் பிடித்தவர்களாயிருக்க வேண்டுமென்று தீர்மானித்தான். அத்தனை மக்களை மயக்கவும், தன் பிடியில் வைத்திருக்கவும் அக்ஷயமுனைக் காவலன் வகுத்துள்ள பல ஏற்பாடுகளில் நடனவிழா முக்கியமானதாக இருக்கவேண்டுமென்ற முடிவுக்கும் வந்தான் இளையபல்லவன். இத்தனை பேரையும் பிரமிக்க வைக்கும் படியான எத்தகைய நடனத்தை மஞ்சளழகி ஆடப் போகிறாளென்பதையும் அவன் எண்ணிப் பார்த்தான். சில விநாடிகள் மனக் கண்ணில் அவள் சுழன்றாடும் காட்சியையும் நடன மண்டபத்தில் அவளுக்கிருக்கக்கூடிய

இயற்கை வசதிகளையும் கண்டான். 'எவனையும் மயக்கக் கூடியதாகத்தான் நடனமிருக்கும். சந்தேகமில்லை' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொள்ளவும் செய்தான்.

அவன் இத்தகைய யோசனைகளில் ஈடுபட்டிருந்த இரண்டொரு நாழிகைகளுக்குள் கடற்கரை ஜன சமுத்திர மாகக் காட்சியளித்தது. கொள்ளைக்காரர்களும் அவர்கள் மாதர்களும் தானளித்த விதவிதமான உடைகளையும், ஆபரணங்களையும் அணிந்து சகல கட்டுப்பாடுகளையும் மீறிக் குறுக்கும் நெடுக்கும் நடப்பதையும், அவர்களை வீரர்கள் மடக்க முயன்று முடியாமல் தவிப்பதையும் கண்ட இளையபல்லவன், தான் கரை செல்லவேண்டிய சமயம் நெருங்கிவிட்டதென்று தீர்மானித்தான். ஆகவே பக்கத்தில் நின்ற அமீரை நோக்கித் திரும்பி, "அமீர்! நீயும் கண்டியத் தேவரும் சேந்தனும் அடுத்தபடி உள்ள ஆறு உபதலைவர் களும் சிறந்த உடைகளை அணிந்து கொள்ளுங்கள். இந்த நிகழ்ச்சிக்கு வரும் கோட்டைத் தலைவனுக்கும், மற்றப் பிரமுகர்களுக்கும் உங்கள் உடைகளும் அணிகளும் எந்த விதத்திலும் குறைந்ததாயிருக்கக் கூடாது. அமீர்! உனது குறுவாள்களில் நாலைந்து எடுத்துக் கச்சையில் செருகிக் கொள். அவற்றுக்குத் தேவையிருக்காதென்று நினைக் கிறேன். எதற்கும் கையில் இருப்பது நல்லது," என்று உத்தரவிட்டான். பிறகு சேந்தனை நோக்கி, "சேந்தா! நமது பொக்கிஷத்தில் இருப்பவற்றுள் சிறந்த மாணிக்க மாலை ஒன்றை எடுத்து என்னிடம் கொடு. மற்றும் ஏதாவது மாலைகள் இருந்தால் நாலைந்தைத் தனியாகக் கொடு," என்று கூறிவிட்டு நடனக் காட்சிக்குப் புறப்படத் தன்னைச் சித்தம் செய்துகொள்ள அறையை நோக்கிச் சென்றான்.

அறைக்குள் நுழைந்ததும் அங்கு தயாராயிருந்த மாலுமியொருவன், ஏந்தி நின்ற கிண்ணத்திலிருந்த பன்னீர் கலந்த குளிர் நீரில், முகம் கழுவி, நுதலில் பிறைச் சந்திரச் சாந்தணிந்து, பெட்டியைத் திறந்து மிகவும் படாடோப

மாகக் காட்சியளித்த உடைகளையும் நவரத்தினப் பிடியுள்ள குறுவாள் ஒன்றையும் எடுத்தான். சாதாரணமாகப் படாடோபத்தில் விருப்பமில்லாத கருணாகர பல்லவன் அன்று அவசியத்தை முன்னிட்டு மிகவும் படாடோபமான உடைகளையும் அணிந்தான். காலில் சீனத்துச் சராயும் மேலே சரிகையும் பொன்னும் மணியும் வைத்துத் தைத்த அங்கியும் இடையில் வைரங்கள் பதித்த கச்சையையும் அணிந்தான். அதில் நவரத்தினப் பிடியையுடைய குறுவாளைச் செருகிக் கொண்டான். ஏற்கெனவே அழகும் வீரமும் நிரம்பிய, கருணாகர பல்லவனின் வதனம் இந்தப் பெரும் அலங்காரத்தாலும், பிறைச்சந்திரனாலும், மெல்லத் தொங்கிய முடியிழைகளாலும், கன்னத்தில் நன்றாகப் பளபளத்த வெட்டுத் தழும்பாலும், மிகக் கப்பீரத்துடனும் இணையற்ற ஆணவத்துடனும் காட்சியளித்தது. அத்தகைய தோற்றத்துடன் அறையை விட்டு வெளிப்போந்த இளைய பல்லவனைக் கண்டு அமீர் பிரமித்தான்.

அவன் பிரமிப்பைக் கண்டு இளநகை கொண்ட இளையபல்லவன், "அமீர், நாம் செல்லுமிடம் படாடோபத்தின் இருப்பிடம். நமது உயர்வை நாம் பலவிதத்திலும் இங்குள்ளவர்களுக்குக் காட்ட வேண்டும். இந்தக் கோட்டை வாசிகளும் பயங்கரப் பூர்வகுடிகளும் நமது தோற்றத்தைப் பார்த்தே அஞ்ச வேண்டும்" என்று கூறிவிட்டு அமீரையும் மற்றவர்களையும் உற்று நோக்கினான். அந்தப் பார்வையில் பெரிதும் சங்கடப்பட்டான் அமீர். அமீரும் பெரும் சரிகை உடைகளை அணிந்திருந்தாலும் அவனுடைய ராட்சதத் தோற்றத்துக்கு அவை சற்றும் பொருத்தமில்லாதிருந்ததோடு கண்ணியத்துக்குப் பதில் ஒரு கொடூரத்தையே அளித்திருந்தன. நல்ல உயரமுள்ள கண்டியத்தேவன் மட்டும் சிறந்த உடைகளில், குறுநில மன்னன்போல் காட்சியளித்தான். எந்தச் சூழ்நிலையிலும் தன் தமிழகத்துத் தொழிற்பணியை விட விருப்பமில்லாத

கூலவாணிகன் தலையில் சரிகை முண்டாசுடனும் உடலங்கியுடனும் இடையில் வரிந்து கட்டப்பட்ட துணியுடனும் விளங்கினான். மற்ற உபதலைவர்கள் ஆறு பேரும் மாலுமிகளின் உடைகளையே அணிந்து போர்க் கோலத்தில் இருந்தார்கள்.

இத்தகைய பரிவாரத்துடன், சேனாதிபதிகளுடன் வரும் சக்கரவர்த்தியைப்போல் கடற்கரைக்குச் செல்லப் படகில் இறங்கினான் இளையபல்லவன். மற்றவர்களும் படகில் உட்கார்ந்ததும் சில நிமிடங்களில் கரையை அடைந்த படகிலிருந்து தரையில் குதித்த இளையபல்லவன் எதிரேயிருந்த பெரும் கூட்டத்தை நோக்கினான். அவன் உடை அணிந்து படகில் கரை வந்து சேரப் பிடித்த ஒரு நாழிகைக்குள் அந்தப் பெரும் கூட்டத்தில் ஓரளவு அமைதி ஏற்பட்டு விட்டதையும், நடனக் காட்சியைப் பார்க்க வந்தவர்கள் சக்கர வட்டமாக உட்கார்ந்து விட்டதையும், யாரும் அடக்க முடியாத அந்த நானாவித மக்களின் கூட்டம் நடனத்தை எதிர்பார்த்து மண்டபத்தை நோக்கிக் கொண்டிருந்ததையும் கண்ட இளையபல்லவன் கலையின் அபார சக்தியை நினைத்து வியந்தான்.

அந்த விநாடியில் கோட்டைக்குள்ளிருந்த தோல் கருவிகள் டமடமவெனச் சப்தித்தன. தாரைகள் பலமாக முழங்கின. கோட்டைக்கதவு திடீரெனத் திறக்கப்பட்டுப் புரவிக் கூட்டமொன்று மண்டபத்தை நோக்கி வந்தது. அந்தப் புரவி வீரர் கூட்டத்தின் நடுமத்தியில் சிவப்புப் புரவியொன்றில் பலவர்மனும் நல்ல வெள்ளைப் புரவியில் மஞ்சளழகியும், பவனி வரும் அரசனைப் போலவும் ராணியைப் போலவும் வருவதை இளையபல்லவன் கண்டான். அந்த இருவரும் அணிந்திருந்த கிரீடங்கள், சுற்றிலும் அடிமைகள் பிடித்த பந்தங்களின் ஒளியில் பளபளத்தன. அந்த கிரீடங்களின் ஒளியைவிடச் சிறந்த

ஒளியைப் பெற்றிருந்த மஞ்சளழகியின் முகம் வசீகரத்தின் எல்லையை எட்டி, காண்பவர் யாரும் விநாடியில் மயங்கக்கூடிய அழகைப் பெற்றிருந்தது.

அந்த இருவரையும் கண்டதும் கடற்கரையில் குழுமியிருந்தவர் பெரும் கூச்சலிட்டனர். பதிலுக்குப் பலவர்மன் தலையை மட்டும் அசைத்தான். அவன் முகத்தில் மிதமிஞ்சிய கவலை குடிகொண்டிருந்தது. மஞ்சளழகியின் முகத்தில் கவலை ஏதுமில்லை. அவள் மக்களை நோக்கிப் புன்னகை புரிந்தாள். பிறகு கிரீடத்தில் புனைந்திருந்த பட்டுத்துணியை எடுத்துக் காற்றில் விசிறினாள். அதைக் கண்ட கூட்டம் வெறி பிடித்துப் பலவிதமாகக் கூச்சலிட்டது. அந்தக் கூச்சலையும் மக்களின் வெறியையும் கண்ட இளையபல்லவன் பலவர்மனுக்கும், மஞ்சளழகிக்கும் அந்த மக்கள் மேல் எத்தனை பலத்த பிடிப்பு இருக்கிறதென்பதையும் உணர்ந்து கொண்டதன்றி, பலவர்மனின் செல்வாக்கை அழிக்க வேண்டுமென்றால் தனது முழுத்திறனும், முழுத்தந்திரமும் உபயோகப்படுத்தப் பட வேண்டும் என்பதையும் அறிந்துகொண்டான்.

அடுத்த சில விநாடிகளில் பலவர்மனும், மஞ்சளழகியும் நடன மண்டபத்தை நெருங்கிப் புரவிகளை விட்டு இறங்கினர். பலவர்மனைக் கண்டதும் கூட்டம் ஒருமுறை எழுந்து வணங்கி உட்கார்ந்தது. காவலர் புடைசூழ வந்த பலவர்மன் அவர்களுக்குச் சிரம் தாழ்த்தி வணங்கிவிட்டுத் தனக்கெனப் போடப்பட்டிருந்த தனி ஆசனத்தில் அமர்ந்தான். மஞ்சளழகி நடன மண்டபத்தின் பக்கச் சிலைக்குள் சென்று மறைந்தாள். அதுதான் கூட்டத்துக்குள் தான் நுழைய வேண்டிய சமயமென்று தீர்மானித்த இளையபல்லவன் தன் உபதலைவர்களுடன் அந்தக் கூட்டத்தை நோக்கிச் சென்றான். அவன் அணிந்திருந்த ராஜ உடையையும் நடந்த தோரணையையும், அவனைப்

பின்பற்றி வந்த உபதலைவர்களின் பார்வைகளையும் கண்டு என்ன செய்வதென்று அறியாமல் திக்பிரமை பிடித்துக் கொண்டு நின்றுவிட்ட காவலர் வரிசையைப் பிளந்துகொண்டு உள்ளே சென்ற இளையபல்லவன், தன் உபதலைவர்களை முன்னிலையில் உட்கார வைத்துத் தான் மட்டும் பலவர்மனுக்கு அருகில் சென்று தலைவணங்கி, "சொன்னபடி வந்துவிட்டேன்," என்றான். பலவர்மன் பதில் ஏதும் சொல்லவில்லை. அவனைப் பலதரப்பட்ட உணர்ச்சிகள் ஆட்டி அலைக்கழித்துக் கொண்டிருந்தன.

இளையபல்லவன் உள்ளே நுழைந்ததுமே கூட்டத்தில் மீண்டும் ஆரவாரம் கிளம்பியதைப் பலவர்மன் கவனித்தான். கொள்ளையடிக்கும் மாலுமிகள், "வருக! வருக!" எனக் காவி மொழியில் கூச்சலிட்டு அவனை வரவேற்றார்கள். கொள்ளைக் கூட்ட மாதர்கள் அவன் தங்களுக்கு அளித்த பட்டாடைகளை விசிறிக் காட்டியும், கொண்டை ஆபரணங்களைத் தொட்டுக் காட்டியும் ஆனந்தக் கூச்சலிட்டார்கள். இவற்றையெல்லாம் பலவர்மன் கவனித்தான். ஒரே பகலுக்குள் இளைய பல்லவன் எப்படி இந்தக் கொள்ளையரை வசப்படுத்தினான் என்று எண்ணினான். ஏதும் புரியாததால் இளையபல்லவனைச் சந்தேகம் நிரம்பிய கண்களுடன் நோக்கினான். இன்னும் சில விநாடிகள் கழித்திருந்தால் இருவரும் அதைப்பற்றிப் பேசியிருப்பார்கள். ஆனால் அதற்கு நேரமில்லை. திடீரெனப் பின்னணி வாத்தியக்காரர்கள் மேடை மீது தோன்றினார்கள். இன்பமான ஸ்வர ஜாலங்கள் எழுந்தன. சூழ்நிலை திடீரென மாறிவிட்டது. கூட்டம் மூச்சைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது. இளையபல்லவன் கண்களையும் காதுகளையும் தீட்டிக் கொண்டான். அடுத்த விநாடி மண்டப மேடைமீது பறந்து வந்தாள் மஞ்சளழகி. சதங்கை ஒலித்தது. கிண்கிணி முரன்று பாடியது. கடற்கரை தேவலோகமாக மாறியது.

# கடல் புறா

சாண்டில்யன்

## 15. நடனமாடினாள்!



அத்தியாயம் 15

# நடனமாடினாள்!

**வ**ண்ணமதி வெள்ளிக் கிண்ணமென பின்னணி வானத்தில் எழுந்து நிற்க, அதன் வெண்ணொளியிலும் மறைய மறுத்த தாரகைகளில் சில கண் சிமிட்டி மண்டபத்தை உற்று நோக்க, வைத்த கண் வாங்காத மனிதக் கடல் மதிமயங்க, தேவலோக ரம்பைபோல் மேடைமீது பறந்து வந்த மஞ்சளழகி தலை தாழ்த்தி அந்தக் கூட்டத்தை வணங்கிக் கொண்டே, தன் மஞ்சள் நிற மங்களப் பாதங்களை மெள்ள மெள்ளத் தட்டித் தட்டிச் சதங்கையொலி ஜல்ஜல் என்று எங்கும் ஒலிபரப்ப, சிலம்பிலிருந்த முத்துப்பரல்கள் குலுங்கிக் குலுங்கி அதற்கு ஆதார சுருதி கூட்ட, தனது நடனத்தைத் துவங்கினாள்.

திக்குகள் நிர்மலமாயிருந்தன. எதிரேயிருந்த மனிதக் கடலுக்குப் புறம்பேயிருந்த அலைகடல்கூடத் தனது அலைகளின் சத்தத்தைப் பெரிதும் அடக்கிக்கொண்டு அந்த வண்ண மயிலின் கால் தாளத்துக்குச் சரியாக அலைகளைத் தரைமீது 'சர்சர்'ரென்று தாக்கிக் கொண்டிருந்தது. அவள் மென்மையான பாதத்தின் அசைவினால் ஏற்பட்ட சதங்கை, சிலம்பு இவற்றின் இன்னிசை ஒலிகள் மட்டும் பின்னணி வாத்தியங்களின் லேசான ஸ்வர ஜாலங்களுடன் இழைந்து இழைந்து மேலெழுந்து நாதப் பிரம்மத்தை எங்கும் பரப்பத் தொடங்கின. மஞ்சளழகியின் நடனத்தின் சொகுசை இன்பத்தை, சற்றுப் பலமாகத் தொட்டாலும் கெட்டுவிடக்கூடிய புஷ்ப இதழ்கள் போன்ற

பாத விரல்களின் மென்மைத் தன்மையை உணர்ந்து கொண்ட பின்னணி வாத்தியங்கள் சுகத்தின் இருப்பிட மாக மிக மெதுவாகச் சப்தித்தன.

காமேலான் என்று சொர்ணத் தீவினர் அழைத்து வந்த அந்த நடன வாத்தியக் கோஷ்டியில் பெரும் தாளங்கள் இருந்தன. மிருதங்கத்தைவிடப் பெரிதும் பலமானவையு மான சரும வாத்தியங்கள் இருந்தன. புல்லாங்குழல் இல்லா விட்டாலும் அதைப்போல் துவாரங்களையுடைய நீளக் குழல் வாத்தியங்கள் இருந்தன. இவையனைத்துக்கும் தலைமை வகித்து வழி காட்ட ஒற்றைத் தந்தி வாத்திய மொன்றும் இருந்தது. இத்தனை நாள், தோல் வாத்தியங்கள் சேர்ந்தும் அவற்றைக் கையாண்ட பின்னணி இசைப் பாளர்கள் அவற்றிலிருந்து கடுமை கடுகளவும் இல்லாத சுகமான நாதங்களையே எழுப்பினார்கள். ‘சொகசுகா மிருதங்கதாளமு’ என்று பிற்காலத்தில், தியாகய்யர் சங்கீதத்தில் சுகத்தின் அவசியத்தைக் குறிப்பிட்டுத் தாளமும், சரும வாத்தியங்களுங்கூட சொகுசாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தியதற்கு முற்கால அத்தாட்சி யாக விளங்கின அந்தப் பின்னணி வாத்தியங்கள்.

மஞ்சளழகி மேடைமீது பறந்து வருமுன்பே அங்கு தோன்றிவிட்ட பின்னணி வாத்தியக்காரர்கள், பெண் குரலில் அதிக சுருதிக்குத் தக்க சுருதி அமைத்து மேல் ஷட்ஜத்தில் பாதி வாத்தியங்களையும், நேர் கீழ் ஷட்ஜத்தில் மற்றப் பாதி வாத்தியங்களையும், சுருதி கூட்டி ஒலிக்க விட்டதால் கீழே ‘பூம்பூம்’ என்ற சரும வாத்தியங்களின் ஆதார நாதமும், மேலே தந்தி வாத்தியம், நீள்குழல் வாத்தியங்கள், தாள வாத்தியங்கள் இவற்றின் கிண்கிண் கிணி ரீங்கார சப்தமும் கலந்து கிளம்பி நானாவித ஸ்வர ஜாலங்கள் கடற்கரை பூராவையும் ஆக்கிரமித்துக் கொண்டன. அப்படி எங்கும் பரவி நின்ற நாத

வெள்ளத்தின் அபூர்வ சக்தியால் இழுக்கப்பட்ட தேவ அரம்பையென மேடைமீது மஞ்சளழகி வந்தாள்; வணங்கினாள்; பாதசர ஒலிகளைக் கிளப்பினாள். அந்த ஒலிகள், மெல்ல மெல்லக் கிளம்பின. கிளம்பிக் காற்றில் பறந்து வந்தன. வந்து புகுந்தன, பரவின, எதிரேயிருந்த மனித இதயங்களில், சித்தங்களில். காதுகள் மார்க்கம்தான், அனுபவம் இதயத்துக்கும் சித்தத்துக்குமே என்ற தத்துவம் அனைவருக்கும் புரிந்தது. நாதத்துக்குப் பேதமில்லை. கொள்ளையரையும் கோட்டைக்காவலனையும், அங்கிருந்த நல்லவர் பொல்லாதவர் அனைவரையும் அது ஆட்கொண்டது. அந்தக் கூட்டம் முழுமையும் நாதத்தின் வசப்பட்டது. சதங்கையொலி அனைவர் சித்தத்திலும் ஜல் ஜல் என்று ஒலித்தது.

திடீரென்று துவங்கிவிட்ட அந்த நடனத்தைக் கண்டதும் சில விநாடி பிரமித்து நின்றுவிட்டான் இளைய பல்லவன். அந்தப் பிரமிப்பு அந்தச் சில விநாடிகளுக்குப் பிறகும் மாறாது அவன் மனத்தைப் பரிபூர்ணமாகப் பற்றிக் கொள்ளவே, பலவர்மன் காலடியிலேயே உட்கார்ந்து மேடைமீது நிகழ்ந்துகொண்டிருந்த அற்புதத்தைக் கவனித்துக்கொண்டிருந்தான். நடனஉடையில் மஞ்சளழகி மோகனாகாரமாக விளங்கினாள். நடன உடைக்காக அவள் பிறந்தாளா, அவள் பிறக்கப்போகிறாள் என்பதை அறிந்தே அந்த நடன உடை சிருஷ்டிக்கப்பட்டதா என்பதை நிர்ணயிக்க முடியாத வண்ணம் அத்தனை அமைப்பாகவும் பிரமிக்கும்படியாகவும் அவளைப் பற்றி நின்றது அந்த உடை. பாரத நாட்டில் அணியப்படும் நடன உடை போன்றதல்ல அது. ஆனால் முழுவதும் வேறு நாட்டு உடையாகவும் அது தெரியவில்லை! பாரதததின் அமைப்பு ஓரளவு புகுந்து நின்றது. அதில் மட்டுமல்ல, அந்தப் பின்னணி இசையிலும் பாரதம் உறைந்து கிடந்தது.

பாரதத்தின் நாகரிகம் ஆத்மாவாக இருந்தது. உடலில்தான் சிறு வித்தியாசங்கள். ஆனால் அந்த வித்தியாசங்களிலும் ஒரு புதுமையும் இன்பமும் இருந்தது.

மஞ்சளழகியின் சின்னஞ்சிறு இடையைக் கொஞ்சங் கூட அனுதாபமில்லாமல் இறுகப் பிடித்திருந்த பட்டாடை பாவாடைபோல் கீழே பாய்ந்து சென்று பாதங்களுக்கு இரண்டு சாண்களுக்கு முன்னதாக நின்றுவிடவே, அவள் பாதங்கள் மட்டுமின்றி அழகிய கணுக்காலும் ஆடுசதை யின் அடிப்பாகமும் கண்ணுக்குப் புலப்பட்டுக் கொண் டிருந்தன. இடுப்புக்கு மேலே இடைஞ்சலிரண்டின் மீது தாவிச் சென்ற மெல்லிய மேலாடை அவள் இடது தோள்வழியே பாய்ந்து வர அதன் கடைசிப் பாகத்தை மஞ்சளழகி தன் இடது கையை வளைத்து ஏந்தி நின்றாள். தலையின் அழகிய குழல்களை அணைத்து நின்றது வெண்மையான கற்கள் வைத்த கிரீடமொன்று. அந்தக் கிரீடத்துக்கு மேலே படிப்படியாக எழுப்பப்பட்ட குழல் கொண்டையை மும்முறை வலம் வந்தது முத்து மாலை யொன்று. அந்த முத்து மாலைக்குக் கீழிருந்த கிரீடத்தின் முகப்பிலிருந்து இழுத்து விடப்பட்டிருந்த சல்லாவினும் மெல்லிய சின்னஞ்சிறிய சீனத்துச் செம்பட்டு ஒன்று கிரீடத்திலிருந்து புறப்பட்டு அவள் அழகிய வலது தோளில் தொங்கித் தடவிக் கொண்டிருந்தது. அவள் பழைய கால முறைப்படி மார்புக்குக் கச்சையே அணிந்திருந்ததால் அவள் கழுத்தும் மார்பின் ஆரம்பமும் மயக்கமான காட்சியைத் தந்தன. கரங்கள் தோளிலிருந்து திறந்தே கிடந்தன. கைகளிரண்டிலும் கல் வளையல்கள் பல மின்னிக் கொண்டிருந்தன. அவள் அணிந்திருந்த ஆபரணங்களும் சரி, ஆடைகளும் சரி, அவள் ஒவ்வோர் அழகையும் பூர்ணமாக எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. அவள் கழுத்தில் அணிந்திருந்த நவரத்தின மாலையொன்று

நீளமாக மார்பில் தொங்கி அவள் அசைய அசைய ஆசையுடன் அப்படியும் இப்படியும் அடையாளம் காட்டிக்காட்டி அசைந்தது. ஆடவர் மதிமயங்க, பெண்டிர் பொறாமை கொள்ள வைத்தது.

அவள் பாதங்கள் மண்டப மேடையில் மெள்ள மெள்ள அசைந்தன. விரல்கள் எழுந்து எழுந்து கீழ்ப் பலகையை மெல்ல மெல்லத் தட்டின. ஜதியின் அந்த அசைவில் அவள் பாதத்தின்மீது தீட்டப்பட்டிருந்த செம்பஞ்சுக் குழம்புகூட அசைவதாகத் தோன்றியது இளையபல்லவனுக்கு. எழுந்து எழுந்து தாழ்ந்த பாதங்கள் சட்டென்று ஒரு புறம் வளைந்தன. கணுக்கால் பட் பட்டென்று திரும்ப மேலிருந்த ஆடு சதைகள் அசைந்தன. மஞ்சளோடிய வழவழத்த அந்த ஆடுசதைகளின்மீது பின்னாலிருந்து பாய்ந்த சந்திரனின் வெண்மைக் கிரணங்கள், அவற்றுக்கு மஞ்சளோ வெளுப்போ இல்லாத ஏதோ ஒரு மோகனப் புது நிறத்தை அளித்துவிட்டதாகத் தோன்றியது இளையபல்லவனுக்கு. அந்தக் கால்களி லிருந்து கண்ணை மேலுக்கு உயர்த்தக்கூட சக்தி இல்லாமல் அவன் உட்கார்ந்திருந்தான். அவள் அசைவுகள் மேலே ஏற ஏறத்தான் அவன் கண்களும் உயர்ந்தன.

முதன் முதலில் தலைவணங்கிப் பாதங்களை மட்டும் தட்டி நடனத்தைத் துவங்கிய மஞ்சளழகி மெல்ல மெல்ல அசைவுகளை மேலுக்குக் கொண்டு சென்றாள். கணுக் காலும் கணுக்காலுக்குப் பிறகு பாவாடைக்குக் கீழே தெரிந்த ஆடுதசையும் அசைந்த அதே நேரத்தில் வணங்கிய தலையுடன் மெள்ளத் தன் சிற்றிடையை வளைத்தாள். அவள் இடை அசைந்தது. அதை அடுத்து அவள் உடலின் ஒவ்வொரு பாகமும் அசையத் தொடங்கியது. நீண்ட கால சாபத்தின் வசப்பட்டுக் கல்லாகிக் கிடந்த தேவலோக ரம்பை திடீரென சாபம் நீங்கி முழுத்துடிப்புடன் எழுவது போல மஞ்சளழகி தலையை நிமிர்ந்து எழுந்தாள்.

அவள் உடல் பூராவும் நடனக் கலையால் புதுமையான உயிர்த்துடிப்பைப் பெற்றதுபோல் உணர்ச்சி வேகத்தில் அசைந்தது. அழகுகளின் திண்மையும் மென்மையும் மஞ்சளோடிய வெண்மையுங்கூட ஓரளவு புலப்பட்டன. கலையெனும் உயிர் அவள் உடலில் ஊடுருவி வெகு வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. அந்த வேகத்தில் அவள் அங்கங்கள் துரிதமாக பாவங்களை வெளியிட்டன. கண்கள் பின்னணி இசைப் பாவங்களை ஒட்டிச் சுழன்றன, சிமிட்டின, வெட்கப்பட்டன, வருத்தப்பட்டன. புருவங்கள் நிமிர்ந்தன, தாழ்ந்தன, சுருங்கின, விரிந்தன. தலை ஒருபுறம் சாய்ந்தது பிறகு நிமிர்ந்தது. இடை திடீரெனத் துவண்டது, திடீரென நிமிர்ந்தது. நவ ரஸங்களும் அந்த ஆரம்ப ஜதியிலேயே தாண்டவமாடத் துவங்கின. மெள்ள ஆரம்பித்த ஜதிகள் தாளங்களில் காலப் பிரமாணம் மாற மாற அதிக வேகம் பெற்றன. வேகம் பெறப் பெற அவள் அழகிய உடல் வேகம் பெற்றது. ஆட்டத்தில் எழில்கள் துடித்தன. துடித்தது அவள் எழில் மட்டுமல்ல, பார்த்துக் கொண்டிருந்தவர்களின் இதயங்களுந்தான்.

அவள் திடீரென நடனத்தின் போக்கை மாற்றி இடை துவளச் சாய்ந்து சாய்ந்து சோகத்தால் ஆடினாள். கண்கள் பஞ்சடைந்து விட்டன போல் தோன்றின. அவள் கால்கள் கூட தளர்ந்துவிட்டனவா! ஐயோ! அவள் மேடை மீது விழுந்துவிடப் போகிறாளே! இந்தப் பயம் கூட்டத்தைக் கவ்விக்கொண்டது. பயத்தை உயர்த்த பின்னணி மேல் ஸ்தாயி வாத்தியங்கள் தாழ்ந்து கீழ் ஸ்தாயி சரும வாத்தியங்கள் மட்டும் பயங்கர ஒலிகளைக் கிளப்பின. கூட்டம் மூச்சைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தது. பளீரென்று அவள் நடனத்தை மாற்றினாள். அவள் கண்கள் திடீரெனப் பளிச்சிட்டன. முகவாட்டம் எங்கோ மறைந்தது. குறுகிக் கிடந்த புருவங்கள் பழையபடி எழுந்து

வளைந்தன. மாணிக்கக் கனி வாயிதழ்கள் மலர்ந்தன. ஆனந்தத்தின் சாயைகளைக் காட்டத் தொடங்கினாள் மஞ்சளழகி. அவள் இடை நெகிழ்ந்தாலும் உடல் நிமிர்ந்தது. கலகலவென ஒரு சிரிப்பும் உதிர்ந்தது அவளிடமிருந்து. பின்னணி இசையும் அவள் கால் சதங்கையும் அந்தச் சிரிப்புக்கு எப்படித்தான் ஒத்துப் பாடின!

அவள் அங்கங்கள் ஆனந்த உயிர் பெற்றன. வாத்தியங்களின் வேகமும் சப்தமும் அதிகரித்தன. கிர்ரென்று அவள் ஒருமுறை மண்டபத்தின் நடுவில் சுழன்றாள். பாவாடை சக்கரவட்டமாகக் கூட்டத்தின் முன்பு விசிறி எழுந்து படிந்தது. மேலாடை படிந்தபடியே சற்றுப் பறந்தது. தலையில் கிரீடத்தில் தொங்கிய மெல்லிய பட்டும் மந்த மாருதத்தில் மெல்லப் பறந்தது. ஒருமுறை சுழன்றவள் மற்றுமிருமுறை சுழன்றாள். பிறகு காலைத் தட்டித்தட்டி, கைகளைக் கொட்டிக் கொட்டி, மேடைமீது அசைந்து அசைந்து, நடந்து நடந்து, நின்று நின்று ஆடினாள். பின்னணி வாத்தியங்கள் பீறிட்டு எழுந்தன. கூட்டத்தின் மௌனமும் கலைந்தது. அவள் உயிர் பெறக் கூட்டம் உயிர் பெற்றது; அவள் கால் தட்டலுக்கும் கைக் கொட்டலுக்கும் சரியாகக் கொள்ளைக்காரர்கள் கைத்தாளம் போட்டார்கள். அவள் அசைய அசைய அவர்களும் அசைந்தார்கள். அவர்கள் கைத்தாளம் அந்தக் கடற்கரை பூராவும் பரந்து அலைகளின் சத்தத்தைக்கூட அடக்கிவிட்டது. அந்தச் சத்தம் உச்சஸ்தாயியை அடைந்து கொண்டிருந்தது. வெறி பிடித்த கொள்ளைக்காரர் விட்ட பெருமூச்சும் ஹுங்கார சப்தமுங்கூடப் பின்னணி வாத்திய ஒலிகளை அடக்கும் ஸ்திதிக்கு வந்தது. அத்துடன் அந்த நாட்டியம் முடிந்தது என்று நினைத்தான் இளையபல்லவன். அந்த நினைப்பு எத்தனை தவறு என்பதை அடுத்த விநாடி புரிந்துகொண்டான். நடனத்தால் மனிதர்களைத் தன்

இஷ்டப்படி வளைக்கவல்ல மஞ்சளழகி சரேலென நடன முறையை வேறு வழியில் திருப்பினாள்.

கொள்ளையர் வெறிக்கூச்சலுக்கும் கைத் தாளத் துக்கும் இடையே எழுந்த இனிய குரல் மந்தமாருதத்தில் பறந்து வந்தது. கைத்தாளங்கள் சரேலென அடங்கின. வெறிக்கூச்சல் மறைந்தது. எதிர்பார்க்க முடியாத அமைதியும் மௌனமும் மீண்டும் அந்தக் கடற்கரையை ஆட்கொண்டது. மஞ்சளழகியின் இனிய குரல் ஸ்தாயியில் எழுந்தது வேறு எந்த சாரீரமும் எட்டமுடியாத இடங் களைத் தொட்டுத் தொட்டுக் காட்டியது. பல வீணைகளும் குழல்களும் ஒலித்தாலும் கொடுக்க முடியாத இன்பத்தை அவள் குரல் கொடுக்கத் துவங்கியது. பின்னணி வாத்தி யங்கள் அப்பொழுதும் முழங்கிக் கொண்டுதானிருந்தன. ஆனால் மஙசளழகியின் குயில் குரலுக்கு முன்பு அவை இருப்பதாகவே தெரியவில்லை. மெள்ள மெள்ள அவள் மேல் ஸ்வரங்களை தொடத் துவங்கினாள். மேல் ஷட்ஜத்தைத் தொட்டு அதற்கு மேலுள்ள பஞ்சமத்தையும் தொட்டாள். பஞ்சமத்தைத் தொட்டு மீள்வதே கஷ்டம். அந்தப் பஞ்சமத்தில் அவள் சாரீரம் வண்டு போல் ரீங்காரம் செய்து நீண்ட சஞ்சாரத்துக்கு இடம் கொடுத்தது.

அவளது குயில் சாரீரம் இழைந்து இழைந்து குழைந்து மேலே ஏறியும் பெரும் நீர்வீழ்ச்சி போல் கம்பீரமாக விடுவிடு என்று கீழே இறங்கியும், இடையே பற்பல அற்புத புஷ்பங்களை வீசியும், பெரும் மயக்கத்தையே தந்தது. இளையபல்லவனுக்குப் புரியாத சொர்ணத் தீவின் ராகப் பிரஸ்தாரத்தைச் சில நிமிஷங்களே செய்தாள் அவள். பிறகு சரும வாத்தியங்கள் முழங்க, ஒற்றையடி தந்தி வாத்தியம் டங் டங்கென ஒலிக்க, தாள வாத்தியங்கள் ஜல் ஜல் என சப்திக்கக் காவி மொழியில் ஒரு காதற்பாட்டையும் அவள் துவங்கினாள்.

காவி மொழியை நன்றாக அறிந்த இளையபல்லவன் அந்தப் பாட்டிலிருந்து அந்த நடனம் வாஜாங் பூர்ணா என்பதைத் தெரிந்துகொண்டான். வாஜாங் பூர்ணா புராணக் கதை நடன முறையாகையால், பாட்டு, புரா ணத்தைப் பற்றியதாயிருந்தது. சுபத்திரை அர்ஜுனனை நினைத்து ஏங்குவதாக இருந்தது பாட்டின் கருத்து. ராமாயண மகாபாரதக் கதைகள் வாஜாங்கின் அஸ்தி வாரம் என்பதை அறிந்த இளையபல்லவன், தனது நாட்டை நினைத்துப் பெருமிதம் கொண்டான். அடுத்த விநாடி நாடு மறைந்தது, பெருமிதம் மறைந்தது, நின்றது ஒன்றுதான். எதிரே இருந்த மஞ்சளழகியின் நடனந்தான் அது.

சுபத்திரையின் வேதனையைத் திரும்பத் திரும்பப் பலவிதமாக ஆடிக் காட்டினாள் மஞ்சளழகி. அவளுக்குத் தேறுதல் சொல்லப் பக்கத் திரையிலிருந்து பல தோழிகளும் வந்தார்கள். நக்ஷத்திரக் கூட்டத்திடையே தவழ்ந்த முழுமதி யென அந்தத் தோழிகளின் இடையே ஆடினாள் மஞ்சளழகி. அந்த அழகிய தோழிகளின் ஆறுதலையும் சகியாத அவள் காட்டிய பாவங்கள் கூட்டத்தின் இதயத்தைக் கரைத்துக் கொண்டிருந்தன. கடினமான இதயமுடைய கொள்ளைக்காரர் கண்களிலும் கற்பைப் பற்றி அதிகமாகக் கவலைப்படாத அவர்கள் துணைவிகள் கண்களிலும் துக்க நீர் பெருகியோடியது. அத்தனை அழகாக ஆடினாள் அவள். அவள் சாய்ந்து சாய்ந்து, துக்கித்துத் துக்கித்து, பாடிப் பாடி எதிரே திரும்பத் திரும்பக் கைகளை நீட்டினாள். பரந்தாமன் எங்கேயென்று ஆகாயத்தில் கண்களை வீசிப் பரிதவித்தாள். அவள் கண்கள் மீண்டும் இளையபல்லவனைப் பார்த்தன. கரங்களும் அவனை நோக்கியே நீண்டன. இளைய பல்லவன் இதயம் படபடத்தது. சரும வாத்தியங்கள் அந்தப்

படபடப்புக்கு ஆதாரம் தருவனபோல் டமடமவென மெள்ள சப்தித்தன. மதியை அடியோடு இழக்கும் நிலைக்கு வந்துவிட்டான் இளையபல்லவன்.

திடீரென அவள் சோககீதம் மகிழ்ச்சிக் கீதமாக மாறியது. கண்ணன் வந்துவிட்டதாகச் சுபத்திரை அபிநயித்தாள். சற்றே வெட்கம் காட்டினாள். கண்ணன் ஆசி கிடைக்கவே, ஆனந்தத் தாண்டவம் துவங்கினாள். மேடையில் அவள் சுழன்றாள், சுற்றிச் சுற்றி ஓடினாள், ஆடினாள், பாடினாள், பறந்தாள், தோழிகளைக் கட்டித் தழுவினாள். தலையை நிமிர்த்தி முத்துப் பற்கள் தெரிய நகைத்தாள். பின்னணி வாத்தியங்கள் சப்தித்தன. மகிழ்ச்சி உச்சஸ்தாயிக்குப் போய்க் கொண்டிருந்தது. இளைய பல்லவனைக் கைகளை நீட்டி 'வாவா'வென்று பகிரங்கமாக அழைத்தாள் மஞ்சளழகி. அது நாட்டியத்தில் சுபத்திரை கனவில் அழைக்கும் கட்டமென்பதை அறியாத இளையபல்லவன் திடீரென இருப்பிடத்தை விட்டு எழுந்தான். மேடை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தான்.

அவ்வளவுதான், அதுவரை இருந்த அமைதி குலைந்தது. "நில்" என்ற சொல்லொன்று அதிகாரத்துடன் ஒலித்தது. சொல்லுக்குடையவன் பலவர்மனா என்று திரும்பிப் பார்த்தான் இளையபல்லவன். பலவர்மன் ஆசனத்தில் பேசாமல் அமர்ந்திருந்தான். அவனுக்குப் பின்னால் பயங்கரத் தோற்றத்துடனும் பார்வையுடனும் நால்வர் நின்றிருந்தார்கள். அவர்களில் ஒருவனிடமிருந்த கத்தியும் அடுத்த விநாடி இளையபல்லவனை நோக்கி வெகு வேகமாகப் பறந்து வந்தது.

அத்தியாயம் 16

# குறுக்கே புகுந்த குறுவாள்

சீனத்துக் கொள்ளைக்காரனும், கடற் போரில் நிகரற்றவனென்று பிரசித்தி பெற்றவனுமான அகூதாவிடம் ஒரு வருட காலம் பழகியதால் எந்தச் சந்தர்ப்பத்திலும் உணர்ச்சிகளைக் கைவிடாமல் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளக்கூடிய திறனை எய்தியிருந்த இளையபல்லவனின் உணர்ச்சிகளையும் மஞ்சளழகியின் நடன மோகனாஸ்திரம் சிதற அடித்து மேடையை நோக்கி அவனை விரையச் செய்துவிட்டதென்றால், அந்த நடனத்தின் சிறப்பையும் மனிதர்களை இஷ்டப்படி வளைக்க அதற்கிருந்த அபூர்வ சக்தியையும் பற்றி விவரிக்கவா வேண்டும்? வேண்டுவதில்லையென்பதை நடனம் துவங்கிய சில நாழிகைக்குள் இளையபல்லவன் புரிந்துகொள்ளத்தான் செய்தான். மஞ்சளழகி சோகித்த போது கூட்டமே சோகித்ததும், அவள் மகிழ்ச்சி வெறி கொண்டபோது கூட்டமும் மகிழ்ச்சி வெறி கொண்டதையும் அவன் கவனிக்கவும் செய்தான். அன்று காலை கோட்டைத் தலைவன் அறையில் வாஜாங் நடனத்தைப் பற்றி உணர்ச்சிப் பெருக்குடன் பேசிய மஞ்சளழகி, “இன்றிரவு நான் ஆடும்போது வந்து பாருங்கள் உலகமே ஆடும்; அங்கு வரும் கள்வர்கள் ஆடுவார்கள்; கொலைகாரர் ஆடுவார்கள்; ஆண்கள் பெண்கள் சகலரும் ஆடுவார்கள்; உள்ளங்கள் புரண்டெழும்; உணர்ச்சிகள் அலை பெருக்கும்" என்று கூறியபோது அவள் ஒருவேளை மிகைப்படுத்திக் கூறுகிறாளோ என்று நினைத்த இளைய

பல்லவன் அந்த நிகழ்ச்சியை நேரிடையாகக் கண்டதும் அவள் சொன்னதெல்லாம் எத்தனை உண்மை என்று எண்ணவும் எண்ணினான். அப்படி எண்ணிக் கொண்டே நடனத்தில் மனத்தைப் பறிகொடுத்தவன் கொள்ளைக் காரரும் இதரரும் அவள் ஆட்டத்துக்குச் சரியாக ஆடி வெறி கொண்டதையும் கூச்சலிட்டதையும் கண்டு பெரிதும் பிரமிக்கவும் செய்தான். ஆனால் அங்குள்ள சூழ்நிலையைக் கண்டு பிரமித்துக்கொண்டே இருந்த தன்னையும் அந்த நடனம் மெய்மறக்கச் செய்யுமென்றோ உணர்ச்சி வசப் படுத்திவிடுமென்றோ ஆரம்பத்தில் தினையளவும் நினைக் காத காரணத்தினாலும், கலைசிறந்த தமிழகத்தின் ரத்தம் உடலில் ஓடியதால் உள்ளூர இருந்த கலாரசிகத் தன்மை மேலெழுந்து அவனைப் பூராவும் ஆட்கொண்டு விட்ட தாலும், மேடையின் நடனமும் இசையும் உணர்ச்சிகளின் உச்சியைத் தொடத் தொடங்கி விட்டபடியாலும், அங்கு நிலவிய சூழ்நிலையோடு இரண்டறக் கலந்துவிட்ட இளையபல்லவன் சுயநிலையை அடியோடு இழந்தான். அப்படிச் சுயநிலையை இழந்ததால் மஞ்சளழகியின் மோகன உருவமும், சுபத்திரையின் சோகபாவங்களும் சிருஷ்டித்த மாய வலையில் அவன் மனம் சிக்கி நின்றது. மேடையில் ஆடுவது மஞ்சளழகி என்ற நினைப்புகூட அவன் மனத்திலிருந்து மறைந்தது. யாரோ ஓர் அபலை அலறித் தன்னை அழைப்பதாகவே எண்ணும் ஸ்திதிக்கு அவன் மனம் புரண்டுவிட்டது. அங்கிருந்த கூட்டம், கூச்சல், பந்தங்கள், விளக்குகள் அனைத்தும் அவன் கண்களிலிருந்து மறைந்தன. மேடைக்குப் பின் திரையிட்ட வெண்மதி வெள்ளி வானம், பரிதாபமாகத் தன்னைக் கை நீட்டிக் கைநீட்டி அழைத்த நடனப் பாவை, இவையே கண்களில் நின்றன. புத்தியை அந்தப் பாவையின் சோக கீதமும் அதற்குப் பின் மெருகு கொடுத்த ஒற்றைத் தந்தி

வாத்தியத்தின் அழைப்பு நாதமும் இழுத்துக் கொண்டன. இந்த நிலையை அடைந்ததாலேயே மேடையை நோக்கி இரண்டடி விரைந்துவிட்ட இளைய பல்லவனை 'நில்' லென்ற சொல்லொன்று சரேலென நிற்க வைத்தது.

இன்பமான வீணையின் தந்திகளில் சுண்டும் விரலொன்று செய்துவிட்ட தவறின் காரணமாக ஏற்படும் அபஸ்வரமொன்று எப்படி வீணா நாதத்தின் பூரண இன்பத்தையும் கலைத்துவிடுமோ, திவ்ய நாம சங்கீர்த் தனத்தில் ஈடுபட்டுத் தியானத்தில் நிற்பவனைத் தம்பூரின் தந்தி ஒன்று திடீரென அறுந்து விபரீத ஒலி கிளப்பி எப்படி அவன் தியானத்தைக் குலைத்துவிட முடியுமோ அப்படி அந்த வாஜாங்கின் இன்னிசையை ஊடுருவி எழுந்த 'நில்'லென்ற அதிகாரச் சொல் இளையபல்லவன் உணர்ச்சி மயக்கத்தைச் சட்டென்று உடைத்துவிடவே, ஒரே விநாடியில் சுயநிலை அடைந்து உணர்ச்சிகளைக் கட்டுப் படுத்திக் கொண்டு அடுத்த அடி மேடையை நோக்கி நகராமலும், மிக நிதானமாகவும் திரும்பி அந்தச் சொல் எழுந்த திக்கை நோக்கினான் இளையபல்லவன். அந்த 'நில்'லென்ற சொல்லைத் தொடர்ந்து 'கிளிங்' என்ற மற்றொரு ஒலியையும், அந்த ஒலியைத் தொடர்ந்து தன் காலடியில் விழுந்த இரு குறுவாள்களையும் சற்று அசட்டையுடனேயே கவனித்த அந்த வாலிப வீரன் தன்னைக் குறி வைத்துக் கத்தி வீசியவனையும் அந்தக் கத்தி தன்மீது பாயவொட்டாமல் அதை நோக்கிக் குறுவா ளொன்றை வீசித் தடுத்துவிட்ட அமீரையும் திரும்பத் திரும்ப நோக்கியதன்றிப் பலவர்மனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த அந்த நால்வர் மீதும் தன் கண்களை நிலைக்கவிட்டான்.

திடீரென்று ஏற்பட்ட அந்த நிகழ்ச்சி மேடை நடனத்தை மட்டுமல்ல, எதிரேயிருந்த கூட்டத்தையும், கூட்டத்தைச் சுற்றிக் காவல் புரிந்த அக்ஷயமுனைக்

கோட்டைக் காவலரையும்கூட ஸ்தம்பிக்கச் செய்திருந்தது. கூட்டத்தையும் காவலரையும் மட்டுமல்லாமல், பலவர்ம னையும் அவனுக்குப் பின்னால் நின்ற அந்த நால்வரையுங் கூட அது பெரும் பிரமிப்புக்குள் ஆழ்த்தியிருந்ததால் கடற்கரை பூராவும் பயங்கர அமைதி நிலவிக் கிடந்தது. அந்த நால்வரில் இளையபல்லவனை நோக்கிக் குறுவாளை வீசினவன், தனது குறுவாளை அதிவேகமாகப் பாயும் மற்றொரு குறுவாள் தடுக்க முடியுமென்பதைக் கனவில் கூட நினைக்காதவனாகையால், அவன் கண்களில் பிரமிப்புடன் ஆச்சரியமும் மிதமிஞ்சித் துலங்கியது. நடன நிகழ்ச்சியில் ஏற்படும் கலவரங்களுக்கும் கொலைகளுக்கும் அந்தச் சமயத்தில் நடந்த அத்தகைய எதிர்பாராத சம்பவமே வருடா வருடம் காரணமாயிருந்ததால், அதை அடுத்துப் பெரும் கலவரம் ஏற்படலாமென்று எண்ணி யிருந்த பலவர்மன் இதயத்தில், அடுத்து ஏற்பட்ட நிகழ்ச்சிகள் பேராச்சரியத்தை விளைவித்தன. குறுவாளி னால் இளையபல்லவன் மாண்டுவிட்டான் என்றே ஒரு விநாடி நினைத்த பலவர்மன், அடுத்த விநாடி அந்தக் குறுவாள் அமீரின் குறுவாள் வீச்சால் தடுக்கப்பட்டதைக் கண்டதும், 'தூரத்திலிருக்கும் மனிதர்மீது குறி வைப்பதே கஷ்டம். அப்படியிருக்கக் குறுவாள்மீது இவன் எப்படிக் குறி வைத்தான்!' என்று தனக்குள் கேட்டுக்கொண்டு ஆச்சரியத்தில் திளைத்தான். அந்த இரண்டு குறுவாள்களும் ஒன்றுடன் ஒன்று மோதிக் காலடியில் விழுந்ததும் திரும்பிய இளையபல்லவன், அத்தனை ஆபத்திலும் நிதானமாகத் தன் பின்னால் நின்ற அந்த நால்வரை ஏறெடுத்துப் பார்த்ததைக் கவனித்ததும் ஆச்சரியத்தின் எல்லையை எட்டினான் பலவர்மன்.

அவனுக்குப் பின்னால் நின்ற பதக் சாதியாரின் தலைவர் இருவரும், சூளு இனக் கொள்ளைத் தலைவர் இருவருங்கூட அந்த வியப்பில் பங்கெடுத்துக் கொள்ளவே செய்தார்கள். இளையபல்லவன் அங்கு தோன்றியதில் அவர்களுக்கு வியப்பேதுமில்லை. அக்ஷயமுனைக்குப்

புதிதாக மரக்கலம் ஒன்று வந்திருந்ததும், அதன் தலைவனொருவன் கோட்டையிலிருந்து எய்யப்பட்ட விஷ அம்பினால் சாகாத வினோத மனிதனென்றும், அக்ஷயமுனைக் கோட்டைக்குள் பகலெல்லாம் பேச்சாயிருந்ததால், நடன நிகழ்ச்சியை முன்னிட்டுப் பகலிலேயே நகரத்துக்கு வந்துவிட்ட அந்த நால்வரும் இளைய பல்லவனைப் பற்றிய வதந்திகளைக் கேட்டிருந்தார்கள். அவன் கோட்டைத் தலைவனை அவன் மாளிகையிலேயே சந்தித்து வெளியில் மீண்டும் சுதந்திரமாகச் சென்றதையும் இரவு நடன நிகழ்ச்சிக்கு வரவும் அவனுக்கு அனுமதி உண்டென்பதையும் மக்கள் பேசிக்கொண்டதிலிருந்து அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனால் அந்த வினோதங்களுக்குக் காரணத்தை மட்டும் அவர்களால் ஊகிக்க முடியவில்லை. எந்த அபாரமான சக்தியால் புதிதாக வந்தவன் கோட்டைத் தலைவனைத் தன் வலைக்குள் வளைத்து விட்டானென்பதைப் புரிந்துகொள்ள அவர்களால் இயலவில்லையாதலாலும், அது சம்பந்தமாக இல்லாத பொல்லாத வதந்திகள் ஊரில் பரவிக் கிடந்ததாலும், ஓரளவு கோபத்துடனும் வந்தவனை ஒழித்துக்கட்டும் எண்ணத்துடனுமே சொர்ண பூமியின் பூர்வகுடிகளின் தலைவர்களான அந்த நால்வரும் நடன நிகழ்ச்சிக்கு வந்தார்கள்.

நடனத்துக்கு வந்தபோது அவனை ஒழித்துக் கட்டுவது பிரமாதமான காரியமாகவும் தெரியவில்லை அவர்களுக்கு. வருஷா வருஷம் இயற்கையாகவோ, பலவர்மனால் காரியார்த்தமாகத் தூண்டப்பட்டோ நடனம் முடிவடையும் தருணத்தில் ஏற்படும் குழப்பம் அந்த வருஷமும் ஏற்படுமாகையால், அதைப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று வந்த அந்த நால்வரும், தாங்கள் எதிர்பார்த்ததற்கு முற்றும் மாறான ஒரு மனிதனைப் பலவர்மன் காலடியில் கண்டார்கள். பயங்கரத் தோற்றமுள்ள ஒரு பெரும் கடற்படைத் தலைவனுக்குப் பதில், ஓர் அழகிய வாலிபன் அங்கு உட்கார்ந்திருந்ததைக் கண்டதும்

அவன் வேறு யாரோ என்று நினைத்துத் தங்கள் பார்வையை ராட்சதன் போலிருந்த அமீரின் மீது திருப்பினார்கள். இசையிலோ நடனத்திலோ அதிக ஆர்வ மில்லாத அரபுநாட்டு அமீர், அவர்கள் வந்த தோர ணையைக் கவனித்ததுமே அவர்கள் நம்பத் தகாதவர்கள், தீயவர்கள் என்ற தீர்மானத்துக்கு வந்து எச்சரிக்கை யடைந்தான். அமீரின் சுபாவத்தில் மற்ற எந்த அம்சங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் விஷமம் மட்டும் பூர்ணமாக இருந்ததால், அந்த நால்வர் தன்னையும் பார்த்து இளையபல்லவனையும் பார்த்ததையும் பிறகு ஒருவருக் கொருவர் பார்த்துக்கொண்டு தன்னை நோக்கித் தலை அசைத்ததையும் கவனித்தான். அவர்கள் என்ன தீர்மானிக் கிறார்கள் என்பதை நொடிப் பொழுதில் ஊகித்துக் கொண்ட அமீர், தலைவன் தான் அல்ல என்பதை அவர்களுக்கு உணர்த்த மார்பில் கையை வைத்தும் தலையை ஆட்டியும் விஷயத்தை விளக்கி, இளைய பல்லவன்தான் தலைவன் என்பதைத் தன் ஆள்காட்டி விரலால் சுட்டிக் காட்டியும் மரியாதைக்கு அறிகுறியாகத் தலையை வணங்கியும் அறிவித்தான்.

அந்த அறிவிப்பு அந்த நால்வரிடை பெரும் வியப்பை விளைவித்ததை அவர்கள் முகபாவத்திலிருந்து புரிந்து கொண்ட அமீர், அந்த விநாடியிலிருந்து அவர்களிட மிருந்து தன் கண்களை அகற்றவேயில்லை. அவர்கள் பார்வையிலிருந்த ஏதோ ஓர் அம்சம் அவனுக்குப் பெரும் சந்தேகத்தை விளைவித்திருந்தது. அப்படி அவர்களைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த அமீர், அந்த நால்வரில் முதலில் நின்றவன் கச்சையில் கையை வைத்துக் குறுவாளை எடுத்தவுடனேயே, தன் இடையில் வரிசையாக இருந்த குறுவாள்களில் ஒன்றை எடுத்து மின்னல் வேகத்தில் வீசிவிட்டான். அதனால் செயலிழந்த எதிரியின் குறுவாள் நிலத்தில் விழுந்ததும், இருப்பிடத்தை விட்டுப் பயங்கரப் பார்வையுடன் எழுந்த அமீர், மற்றொரு குறுவாளையும் எடுக்கக் கச்சையில் கையை வைத்தான். அந்த விநாடியில்

தான் இளையபல்லவன் கரம் எழுந்து, 'வேண்டாம்' என்று அவனுக்கு சைகை செய்து தடுத்தது.

அடுத்தடுத்து இடையில் செருகப்பட்டிருந்த குறு வாள்களை எறிந்து அந்த நால்வரையும் பட்பட்டென்று மண்ணில் சாய்த்துவிட முடிவுசெய்த அமீரைத் தடை செய்த இளையபல்லவன், மிக நிதானமாக அந்த நால்வரையும் ஏற இறங்க நோக்கினான். நன்றாகத் தீட்டப்பட்ட ஈட்டியின் முனைகளை விடப் பளிச்சிட்ட அவன் பார்வையைக் கண்ட அந்த நால்வர் மேலும் வியப்பே அடைந்தார்கள். அவர்களுக்கு மட்டுமல்ல வியப்பு, இளையபல்லவன் கூட அவர்களைக் கண்டு உள்ளூர வியப்பே எய்தினான். பதக் சாதியாரும் சூளுக்களும் காட்டுமிராண்டிகளென்றும் மனிதர்களைத் தின்பவர்களென்றும் கேள்விப்பட்டிருந்த இளையபல்லவன் அநாகரிக உடையணிந்த சில பயங்கர மனிதர்களையே அந்த நடன நிகழ்ச்சியில் எதிர்பார்த்திருந்தான். பலவர்மனும் மஞ்சளழகியும் அவர்கள் வருகை குறித்துப் பயந்ததிலிருந்தும், அது சம்பந்தமாகத் தன்னை அச்சுறுத்தியதிலிருந்தும் வருபவர்கள் நாகரிக மனிதர்களாயிருக்க முடியாதென்ற முடிவுக்கே வந்திருந்தான். ஆகவே, முகங்களில் கடுமையும் பயங்கர மீசைகளும் இருந்தாலும், மிகுந்த நாகரிகமான உடைகளணிந்து அரசாங்கத்துப் படைத்தலைவர்களைப் போல வந்திருந்த அந்த நால்வரைக் கண்டதும் ஒரு விநாடி வியப்பின் வசப்பட்டான் இளையபல்லவன். ஒருவேளை இவர்கள் பலவர்மன் குறிப்பிட்ட நால்வராயிருக்க முடியாதோ என்ற சந்தேகங்கூட அவன் இதயத்தில் எழுந்தது. ஆனால் அவர்களுக்குப் பின்னால் நின்ற ஐம்பது வீரர்களின் தோற்றத்தையும், முன்னால் அசைவற்று ஆசனத்தில் உட்கார்ந்திருந்த பலவர்மன் முகத்தில் லேசாகத் தெரிந்த பயத்தையும்

கண்டதும், 'அந்த நால்வர் இவர்கள்தான். சந்தேகமில்லை,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அவன் எண்ணங்கள் இந்தத் திக்குகளில் சுழன்றது இரண்டொரு விநாடிகளேயென்றாலும், அந்த இரண்டொரு விநாடிகளில் எதிரேயிருந்த கூட்டத்தின் ஆரம்ப அச்சமும், மௌனமும் கலைந்துவிடவே கொள்ளைக் காரரில் சிலர் பெரும் கூச்சலிட்டு எழுந்தார்கள். உணர்ச்சிகள் புரண்டுவிடும் நிலை எய்திவிட்டதை உணர்ந்த பலவர்மன் தனது காவல் வீரர்களுக்கு ஏதோ சைகை செய்யவே அவர்களில் சிலர் இளைய பல்லவனிருந்த இடத்தை அணுக அடியெடுத்து வைத்தனர். அடுத்த விநாடி அந்தக் கடற்கரையை மிக உறுதியுடன் ஊடுருவிய இளையபல்லவன் சொற்களும் அதிகாரத்துடன் நாற்புறமும் அவனது பார்வையும் கொள்ளையரை நோக்கி எழுந்த அவன் கையின் சைகையும் அமைதியைச் சிருஷ்டித்தன. "உயிர்மீது ஆசையுள்ள எவரும் இருக்குமிடத்தை விட்டு அசைய வேண்டாம்," என்று கூறிவிட்டுத் தன் கூரிய பார்வையை நாற்புறமும் திருப்பிய இளைய பல்லவன் தனக்கு உதவ எழுந்த கொள்ளையரையும் சைகை காட்டி அடக்கியதன்றி, "உட்காருங்கள். எனக்கு ஆபத்தை விளைவிக்க இவர்கள் யாராலும் முடியாது. விஷ அம்பு என் மார்பில் பாய்ந்ததே, என்னைக் கொன்றதா?" என்று கேட்கவும் செய்தான்.

"இல்லை, இல்லை" என்று எழுந்தன கொள்ளைக் காரர் குரல்கள்.

"அப்படியிருக்க இந்த அற்பன் வீசிய குறுவாள் எப்படி என்னைக் கொல்ல முடியும்?" என்று மீண்டும் கேட்டான் இளையபல்லவன் கொள்ளைக் கூட்டத்தை நோக்கி.

"முடியாது. முடியாது" என்று கூச்சலிட்டனர் கொள்ளைக் கூட்டத்தினர்.

"குருவாளெறிந்தவனைக் கொல்லுங்கள்," என்று இடையே எழுந்தது ஒரு கொள்ளைக்காரன் மனைவியின் கீச்சுக் குரல்.

"ஆமாம், கொல்லுங்கள், கொல்லுங்கள்," என்று எழுந்தன பல மாதர்களின் குரல்கள்.

குழப்பம் ஏற்படும் நிலை மீண்டும் வந்தது. பதக்குகளும் சூளுக்குகளும் தங்கள் இடையிலிருந்த கத்திப் பிடிகளில் கையை வைத்தார்கள். இளையபல்லவன் குரல் பலமாக எழுந்தது. "யாரும் யாரையும் கொல்லக்கூடாது. இத்தகைய இன்ப நிகழ்ச்சியில் கொலை எனும் கோரம் தலையெடுக்கக் கூடாது. உட்காருங்கள்" என்று கொள் ளைக்காரர்களுக்குக் கட்டளையிட்ட இளையபல்லவன், "நான் இஷ்டப்பட்டிருந்தால் இந்த நால்வரும் இத்தனை நேரம் மடிந்திருப்பார்கள். இதோ உள்ள அமீரின் இடையில் இன்னும் ஐந்து குறுவாள்கள் உள்ளன. அவன் கை மின்னல் வேகமுடையது. நான் அடக்கினேன் அமீரை. இல்லையேல் இந்த நால்வரும் மண்ணில் சாய்ந்திருப்பார்கள்," என்று விளக்கி, அமீரைச் சுட்டிக்காட்டினான்.

கொள்ளைக்காரர்கள் அமீரை நோக்கிப் பெரும் ஆரவாரம் செய்தார்கள். அமீர் நாடகமேடைக் கதா நாயகன் போல் இரண்டு மூன்று முறை தலை தாழ்த்தித் தாழ்த்திக் கூட்டத்தை வணங்கினான். கொள்ளையர் கரகோஷம் வானைப் பிளந்தது. தனது வலது கரத்தை உயர்த்தி அந்தக் கரகோஷத்தையும், கூச்சலையும் அடக்கிய இளையபல்லவன், "நடனம் அற்புதமாயிருக்கிறது, அதை நாம் இடையில் நிறுத்த வேண்டாம்," என்று சொல்லி நடனம் தொடங்கட்டும் என்பதற்கு அறிகுறியாக மேடையை நோக்கியும் கையை ஆட்டினான்.

"நில்!" அந்தப் பழைய சொல் மீண்டும் அதிகாரக் குரலில் ஒலித்தது, இம்முறை நடன மண்டபத்தில் நடனத்தைத் துவங்கிய மஞ்சளழகியை நோக்கி.

"இங்கு உத்தரவிட நீ யார்?" என்று அமைதியுடன் வினவினான் இளையபல்லவன்.

"என் பெயர் வில்வலன்" என்றான் அந்த நால்வரில் முதல்வன். அதைச் சொல்லித் தன் பயங்கர மீசையையும் ஒருமுறை தடவினான்.

பெரும் விபரீதம் நிகழக்கூடியதான அறிகுறிகள் எங்கும் தென்பட்டன. அந்தப் பெயரைக் கேட்ட சாதாரண நகர மக்கள் நடுங்கினர். கொள்ளைக்காரர்கள் முணு முணுத்தார்கள். அத்தனைக்கும் அசங்காமல் அதுவரை ஆசனத்தில் இடித்த புளியாக உட்கார்ந்திருந்த பலவர்ம னும் ஆசனத்தில் சங்கடத்துடன் அசைந்தான். இந்தக் குறிகளைக் கவனித்தாலும் கவனிக்காதவன் போலவும், இருந்த இடத்தை விட்டு அசையாமலும் இளையபல்லவன் சர்வ சாதாரணமாக நால்வர் தலைவனை நோக்கிக் கேட்டான். "அந்தப் பெயரில் என்ன அத்தனை விசேஷம்?" என்று.

அதுவரை கோபம் துளிர்க்காத வில்வலன் முகத்திலும் கோபம் துளிர்த்தது. "அந்தப் பெயரைக் கேட்டால் இந்த அக்ஷயமுனை வட்டாரமே நடுங்கும்," என்றான் வில்வலன் கோபத்தின் உஷ்ணம் சொற்களில் உறைந்து நிற்க.

"அத்தனை கொடியவனா நீ?" என்று மீண்டும் கேட்டான் இளையபல்லவன்.

இதைக் கேட்டபோது இளையபல்லவன் குரலில் ஏளனம் இருந்ததை வில்வலன் கவனிக்கத் தவறவில்லை. அவனும் விஷமமாகப் பேசத் துவங்கி, "நான் மட்டுமல்ல, என் வாளும் கொடியது" என்று தன் கச்சையில் இருந்து தொங்கிய நீண்ட வாளைத் தட்டியும் காட்டினான்.

"குறுவாளைப் போலவே கொடியதா?" என்று வினவினான் இளையபல்லவன்.

தன் குறுவாள் பயனற்றுப் போனதைக் கண்டதால் ஏற்கெனவே சீற்றமடைந்திருந்த வில்வலன், அதைப் போலத்தான் தன் பெருவாளும் இருக்கும் என்பதை இளையபல்லவன் சுட்டிக் காட்டியதும் சீற்றத்தின் எல்லையை அடைந்தான். "பேச்சிலுள்ள சாமர்த்தியம் உனக்குச் சண்டையில் உண்டா?" என்று வினவவும் செய்தான் வில்வலன் சீற்றத்தால் துடித்த உதடுகளுடன்.

"அதைப் பரீட்சிக்க ஆசையாயிருக்கிறதா உனக்கு?" என்று மீண்டும் அமைதியுடன் வினவினான் இளைய பல்லவன்.

"ஆம். ஆசையாயிருக்கிறது," என்றான் வில்வலன்.

"அப்படியானால் இப்படி வா," என்று வில்வலனைத் தன்னருகில் அழைத்த இளையபல்லவன், "இப்படி உட்கார்," என்று ஓர் இடத்தையும் அவனுக்குக் காட்டினான்.

"எதற்கு உட்கார வேண்டும்?"

"நடனம் முடியட்டும். நல்லதொரு நிகழ்ச்சியை மற்றவர்கள் அனுபவிப்பதை நாம் கெடுக்க வேண்டாம். நடனம் முடிந்தபின்பு உன் ஆசையை நான் தீர்த்து வைக்கிறேன்."

இதைக் கேட்டதும் ஏதோ யோசித்த வில்வலனைப் பார்த்து நகைத்த இளையபல்லவன், "முதுகுப் புறத்தில் குறுவாள் எறியும் பரம்பரையில் பிறந்தவனல்ல நான். பயப்படாதே வா," என்றான்.

அந்தச் சொற்களால் வெட்கம் உள்ளத்தை வாட்ட சீற்றம் தலைக்கேறத் தனது சகாக்களை விட்டுப் பிரிந்து வந்த வில்வலனைத் தனக்குப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்ட இளையபல்லவன், "நடனம் துவங்கட்டும்," என்று மஞ்சளழகியை நோக்கிக் கூறினான்!

சுபத்திரையின் காதல் நடன நாடகம் மீண்டும் துவங்கி மகிழ்ச்சியுடன் முடிந்தது. அது முடிந்த மறு விநாடி அந்தக் கடற்கரை மணலில் துவங்கியது ஒரு கோர நாடகம்.




மக்களை அடக்கி ஆளும் திறனுள்ளவர்கள் உலகத்தில் சிலர்தான் தோன்றுகிறார்கள். அவர்கள் எந்த இனத்தில் தோன்றுகிறார்கள், எந்த இடத்தில் தோன்றுகிறார்கள், ஏன் தோன்றுகிறார்கள் என்று திட்டமாகச் சொல்ல முடியாவிட்டாலும் உலகத்தில் சில பெரும் சாதனைகளைச் செய்யப் பிறக்கிறார்கள் என்று மட்டும் சொல்லலாம். அத்தகைய மனிதர்கள் உலகத்தின் வரலாற்றில் புத்தம் புது நிகழ்ச்சிகளைத் தீட்டுகிறார்கள். காலம் மறவாத கதைகளைச் சிருஷ்டித்துவிட்டுச் செல்கிறார்கள். அவர்களுக்கென ஆண்டவன் ஏதோ அபூர்வ சக்தியை அளிக்கின்றான். அந்தச் சக்தியால் வலுவடைகின்றன அவர்கள் செயல்கள். தமிழகத்தின் வரலாற்றில் பொன் கதையொன்றைப் புனைந்து பேரிலக்கியமொன்றும் உருவாக வாய்ப்பளித்த கருணாகர பல்லவன் அத்தகைய அபூர்வ சக்திவாய்ந்தவன் என்பதை அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனான பலவர்மன் சித்திரா பௌர்ணமியின் அந்த இரவில் சந்தேகத்துக்கு இடமின்றி உணர்ந்துகொண்டான்.

அந்தக் கடற்கரை மணலில் எத்தனையோ நடனங்களை நடத்தியிருந்தாலும், நடனங்களை சாக்காக வைத்துக் கொண்டு எத்தனையோ காரியங்களைச் சாதித்திருந்தாலும், எத்தனையோ பேர்வழிகளைப் பழி வாங்கியிருந்தாலும், மற்ற ஆண்டுகளின் நடனங்களுக்கு வந்த

உறுதியுடனும், திடசித்தத்துடனும் அன்றைய இரவு நடனத்துக்குப் பலவர்மன் வரவில்லை. சொர்ணபூமியின் பூர்வகுடிகளின் தலைவர் நால்வரும் வந்தால் குழப்பமும் பூசலும் விளையுமென்பதைத் திட்டமாக அறிந்திருந்த பலவர்மன் அத்தகைய பூசல்களையும் குழப்பத்தையும் சாதாரணமாக விரும்பும் அக்ஷயமுனைத் தலைவன், அன்று மட்டும் குழப்பத்தையோ பூசலையோ அடியோடு விரும்பவில்லை. ஏதாவது குழப்பம் ஏற்பட்டு இளைய பல்லவன் உயிருக்கு ஆபத்து ஏற்படுமானால் அக்ஷய முனைக்கும் தனக்கும் ஏற்படக்கூடிய பயங்கர விளைவை எண்ணிப் பெரும் பீதியுடனேயே அன்றைய நடனத்துக்கு வந்திருந்தான் பலவர்மன். அகூதா பழிவாங்கும் முறை களையும் அவன் ஓரிடத்துக்கு வந்துவிட்டுப் போனால் அந்த இடம் சுடலைக்குச் சமானமென்பதையும் உணர்ந் திருந்த பலவர்மன், அன்று நடன நிகழ்ச்சி ஏன் நடக்கிற தென்ற வெறுப்புடனேயே வந்திருந்தான். அவனுக்கு அகூதாவிடம் அச்சம் ஒருபுறம், பூர்வகுடித் தலைவர்களிட முள்ள பயம் மற்றொரு புறம். இந்த இரண்டுவித கிலிகளும் அவனை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தன. நடன நிகழ்ச்சிக்கு வரும் பதக் இனத் தலைவர்களையோ சூளுக்களையோ தான் விரோதித்துக் கொண்டாலும், அக்ஷயமுனையில் அதிகநாள் வாழ்வது கஷ்டமென்பதை அவன் உணர்ந்திருந்தான். இராக் காலங்களில் பிசாசு களைப் போல் உலாவும் வழக்கமுடைய அந்த நாகரிக மக்கள், தலைவர்களால் ஏவப்பட்டால் பிரதிதினமும் அக்ஷயமுனைக்கு வந்து தொல்லை கொடுப்பார்களென் பதையும் பிறகு அக்ஷயமுனை வாழ்க்கை பெரும் நரக மாகிவிடுமென்பதையும் அவன் அறிந்திருந்தபடியால், அன்றைய நிகழ்ச்சியில் அதிகக் கலவரம் ஏதும் ஏற்படாம லிருக்கச் சற்று முன்னேற்பாடுடனேயே வந்திருந்தான்.

இளையபல்லவன் உயிருக்குத் தீங்கு ஏற்படும்போல் தோன்றினால் தன் சைகைப்படி நகர்ந்து அவனுக்குப் பாதுகாப்பு அளிக்கும்படி காவல்வீரர்களுக்குக் கண்டிப் பான உத்தரவிட்டதன்றி, பூர்வகுடித் தலைவர்கள் வந்தால் அவர்கள் மீதும் ஒரு கண் வைத்திருக்கும்படியும் கூறியிருந் தான். தவிர மண்டபத்தின் முன்னணியில் இளைய பல்லவன் உட்காருவான் என்பதை அவன் ஊகித்திருந்த தால் அந்த இடத்தில் காவலையும் பலப்படுத்தியிருந்தான்.

இத்தனை முன்னேற்பாடுகளைச் செய்திருந்தும்கூட அவன் உள்ளத்தைச் சந்தேகமும் பயமும் வாட்டி வதைத்துக் கொண்டிருந்தன. பலவர்மன் இயற்கையாகக் கோழை மனம் படைத்தவனல்லவென்றாலும், இளைய பல்லவனின் திடீர் வரவால் ஏற்பட்ட சந்தர்ப்பங்கள் அவனைப் பெரும் பயத்திற்கே உள்ளாக்கியிருந்தன. ஆகவே எந்த விநாடியிலும் குழப்பதையும் பூசலையும் எதிர் பார்த்து, இருப்பினும், மேலுக்கு எந்தவித உணர்ச்சியையும் அதிகமாகக் காட்டாமலும் அமர்ந்திருந்த பலவர்மன் திடீரென்று மண்டபத்தின் முன்பு ஏற்பட்ட நிகழ்ச்சியால் ஒரு விநாடி திகைத்தே போனான். பூர்வகுடித் தலைவர்கள் வழக்கம்போல் அன்றும் நடனம் துவங்கிய சிறிது நேரத் துக்குப் பின்பே வந்தது அவனுக்கு வியப்பாயில்லை. அவர்கள் வந்து தனது ஆசனத்துக்குப் பின்னால் வரிசை யாக நின்றதும் அவனுக்கு விசித்திரமாயில்லை. எந்த இளையபல்லவன் உணர்ச்சிவசப்படாதவன் என்று காலை யில் எடை போட்டானோ அந்த இளையபல்லவன் உணர்ச்சிகளுக்கு இடங்கொடுத்து மேடையை நோக்கி விரைந்தது முதலில் வியப்பாயிருந்தது. அடுத்த விநாடி இரண்டு குறுவாள்கள் மோதித் தரையில் விழுந்தது திகைப்பாயிருந்தது.

திகைப்பும், வியப்பும் கலந்த உணர்ச்சிகளின் வசப்பட்ட பலவர்மன் வெகுசீக்கிரம் திகைப்பை உதறி விட்டு வியப்பின் வசமே சிக்கிக்கொண்டான். வில்வலன் குறுவாள் வீச்சால் ஏற்பட்ட விபரீதம் பெரும் குழப்பத் திலும், கொள்ளையர், பூர்வகுடிகள் கைகலப்பிலும் முடிவடையும் என்று எதிர்பார்த்தான் பலவர்மன். அத்தகைய ஒரு பூர்வபீடிகை அவ்விதக் கைகலப்பில் முடிவது வருடாந்திரப் பழக்கமாதலால் அத்தகைய நிகழ்ச்சிகளையே எதிர்பார்த்த பலவர்மன் நிகழ்ச்சியில் புரட்சி ஏற்பட்டுவிட்டதைக் கண்டு பிரமிப்பின் எல் லையை எய்தினான். திடீரெனக் குழப்பத் தீ மூண்டு பரவி மனித உயிர்கள் பலவற்றைக் கொள்ளை கொண்டுவிடும் என்று எதிர்பார்த்த பலவர்மன், அந்தத் தீ ஆரம்பத்தி லேயே அணைக்கப்பட்டதையும் இளையபல்லவனின் நிதானமும் அதிகாரப் பார்வையும் அந்தக் கூட்டம் முழுமையையும் அடக்கியதன்றி அந்த நால்வரைக்கூடத் திகைக்க வைத்ததையும் கண்டு, 'இவன் சாதாரண மனிதனல்ல, இவனிடம் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும்' என்று எண்ணினான். கொள்ளைக் காரரை இளையபல்லவன் ஏற்கெனவே மித்ரபேதம் செய்து வைத்திருந்ததைப் பற்றியோ அவன் அவர்களுக்குப் பரிசுகள் வழங்கியதைப் பற்றியோ ஏதுமறியாத பலவர்மன், கொள்ளைக்காரர் மட்டுமின்றி அவர்கள் மாதர்களும் இளையபல்லவன் பக்கத்தில் சாய்ந்து அவன் சொன்னபடி கேட்டதைக் கண்டு அதற்குக் காரணம் தெரியாமல் குழப்பத்துக்கே உள்ளானான். அவன் வில்வலனையும் சொல்லால் மடக்கித் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு நடனத்தை மேற்கொண்டு நடத்த உத்தரவிட்ட போது, தான் இருப்பது கனவுலகமா நனவுலகமா என்ற சந்தேகம் கூட ஏற்பட்டது பலவர்மனுக்கு. அத்தனை

சந்தேகத்திலும், குழப்பத்திலும், வியப்பிலும் ஓர் உண்மையைத் திட்டமாகத் தெரிந்துகொண்டான் அக்ஷய முனைக் கோட்டைத் தலைவன். இளையபல்லவன் பெரும் கூட்டங்களை அடக்கி ஆளப் பிறந்தவன் என்ற உண்மை தான் அது.

இளையபல்லவன் அருகில் வில்வலன் அமர்ந்ததுமே கூட்டத்தில் மீண்டும் அமைதி நிலவியது. அந்த நால்வரின் குறைகள் யாதாயிருந்தாலும் அச்சம் அந்தக் குறைகளில் ஒன்றாயிருக்க முடியாது என்ற முடிவுக்கு முன்னதாகவே இளையபல்லவன் வந்துவிட்டான். சுமார் ஐம்பது வீரர்களை மட்டும் துணைகொண்டு குழப்பமும் கொலையும் விளையும் அந்தப் பெரும் கூட்டத்திடை வந்து நின்ற நால்வர் அற்ப சொற்பமானவர்களல்ல வென்பதை இளையபல்லவன் புரிந்துகொண்டான். அந்த ஐம்பது பேரே கொள்ளையரின் பெரும் கூட்டத்துக்கு ஓரளவு அச்சத்தை விளைவித்திருக்கிறார்களென்பதையும் அங்கு ஆரம்பத்தில் ஏற்பட்ட சலசலப்பால் உணர்ந்துகொண்ட இளையபல்லவன், போரிடுவதில் அவர்கள் திறமை அற்பமாயிருக்க முடியாதென்றும் முடிவு செய்தான். பூர்வகுடிகளின் திடகாத்திரமும், வேல்களையும் வாள்களையும் அவர்கள் தாங்கி நின்ற முறையும் 'ஒவ்வொரு வீரனும் குறைந்தபட்சம் பத்துப் பேரையாவது வீழ்த்தும் ஆற்றலுள்ளவன்' என்பதற்கு அத்தாட்சிகளாக விளங்கின. சாதாரண வீரர்களே அப்படியிருந்தால் தலைவர்களின் வீரம் அளவிட முடியாததாயிருக்க வேண்டுமென்று தீர்மானத்துக்கு வந்த இளையபல்லவன், வில்வலன் தன் முதுகுப் புறத்தில் குறுவாளெறிந்ததற்குக் காரணம் கோழைத்தனமல்லவென்பதையும் பழைய பழக்கத்தின் தோஷமேயென்பதையும் அறிந்தான். ஆகவே வீரனாயிருப்பவனை அவன் வீரத்தை எள்ளி நகையாடியே

அடக்க வேண்டுமென்ற தீர்மானத்தால் அத்தனை சாமர்த்தியமாகப் பேசித் தன் வலையில் வில்வலனைச் சிக்க வைத்துப் பக்கத்திலும் அமர்த்திக் கொண்டான். இளையபல்லவன் பக்கத்தில் உட்கார்ந்த வில்வலனும் தன் சகாக்கள் மூவரையும் ஏதும் செய்ய வேண்டாமெனக் கண் மூலமே எச்சரித்துவிட்டு, ஏதும் நடக்காததுபோல் நடனத்தைக் கவனிக்க ஆரம்பித்தான்.

இளையபல்லவன் கட்டளையிடவே அதுவரை சித்திரப் பாவையென நடன மேடையில் நின்றிருந்த மஞ்சளழகி மீண்டும் நடனத்தைத் துவக்கினாள். அந்த நடனத்தில் பழைய விறுவிறுப்பே இருக்காதென நினைத் தான் இளையபல்லவன். இடையே தேக்கப்பட்ட கலை அம்சம் மீண்டும் சோபிப்பது கஷ்டமென்று எண்ணினான் அவன். ஆனால் குழப்பங்களை வருடா வருடம் கண்ட மஞ்சளழகி எந்தத் தடையும் ஏற்படாதது போல் மிக இயற்கையுடன் நடனத்தை மீண்டும் துவங்கினாள். பம்பரம் போல் மேடை மீது சுழன்று சுழன்று ஆடினாள். பாவாடை சக்கர வட்டமாகக் குடையென எழுந்து சுழல, கால் கொண்டைப் பரல்கள் ஜல்ஜல்லென்று ஒலிக்க, கைவளை யல்கள் சிலுசிலுக்க, கொண்டை முத்துச்சரங்கள் முடியின்மீது தாவித் தாவித் தவழ, ஆடினாள் மஞ்சளழகி.

சுபத்திரையின் சோகம் கலைந்தது; விடிமோட்சம் வந்தது. கண்ணனும் வந்தான். இந்த இடத்தில் அவள் கண்ணனைப் போல் குழைந்தாள்; மெல்லச் சிரித்தாள்; விஷமக் கண் சிமிட்டினாள்; சுபத்திரையைப்போல் வெட்கப்பட்டாள்; சேடிகளிடம் விஷமம் செய்தாள்; அர்ஜுன சந்நியாசி போல் கம்பீரமாக நடந்தாள்; சுபத்திரையின் கையைப் பிடித்தாள்; கடைசியில் மண வறைப்படலம் வந்தது; மகிழ்ச்சிவெள்ளம் புரண்டது; கடற்கரை முழுதும் களிவெறி மண்டியது.

நிகழ்ச்சி முடிந்தால் நிலை என்னவாகும் என்பதை நிர்ணயிக்க முடியாததால் அந்தக் களி நடனம் நடந்து கொண்டிருக்கையிலேயே இளையபல்லவன் சரேலென எழுந்து நடனமண்டபத்தின் மீது மின்னல் வேகத்தில் ஏறி நின்று நடனத்தைச் சற்று நிறுத்தினான். கூட்டத்தின் கூச்சலையும் கையமர்த்தி அடக்கினான். அத்துடன் அத்தனை கூட்டத்துக்கும் கேட்கும் வகையில் இரைந்து பேசவும் தொடங்கினான்: "நான் தமிழ் நாட்டவன். நடனத்தில் சிறந்த அந்தப் பெருநாட்டிலிருந்து வந்திருக்கிறேன். இருப்பினும் இத்தகைய அற்புத நடனத்தை நான் இதுவரை பார்த்ததில்லை. நடனத்தின் சிறப்பு மட்டுமல்ல நான் இன்று கண்டது. நடனமாடிய இந்த மஞ்சளழகியின் கலைச் சிறப்பையும் கண்டேன்" என்று கூறினான்.

இந்த வார்த்தைகளை இளையபல்லவன் சொர்ண பூமியின் உயர்குடி மக்கள் பேசிய காவி பாஷையில் மட்டும் பேசவில்லை; கீழ்க்குடி மக்கள் பேசி வந்த குரோமோ மொழியிலும் பேசினான். அந்தச் சிறப்புரை ஒருமுறைக்கு இருமுறை சொல்லப்பட்டதால் மட்டுமல்ல, கீழ்க்குடி மக்களின் மொழியும் அவனுக்குத் தெரிந்தது என்ற காரணத்தால் கொள்ளையர் மட்டுமின்றிக் •குரோமோ மொழியைப் பெரும்பாலும் பேசிவந்த பூர்வகுடித் தலைவர்களைச் சார்ந்த வீரர்களும் பெரிதாகக் கரகோஷம் செய்து ஆர்ப்பரித்தார்கள்.

பிறகு இரண்டு மொழிகளையும் பாதிப்பாதி கலந்து பேசினான் இளையபல்லவன். "இத்தகைய அழகிய நடன நிகழ்ச்சியில் வருடா வருடம் கொலைகளும் குழப்பங்களும் ஏற்படுவதாக அறிகிறேன். இந்த ஆண்டு அத்தகைய

• குரோமோ (KROMO) என்பது சொர்ணபூமியின் தொழிலாளர், கீழ்க்குடி மக்கள் பேசிவந்த மொழி.

விபரீதம் ஏதுமின்றி நடனம் முடிந்திருக்கிறது. இந்த ஆண்டு மட்டுமல்ல, இனி ஒவ்வோர் ஆண்டும் இப்படித்தான் நிகழ்ச்சி முடியும். ஏனென்றால் இனி நான் இந்த அக்ஷய முனையில் தங்கத் தீர்மானித்திருக்கிறேன். அதற்கு அனுமதி அளித்துள்ள அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவர் பலவர்மருக்கு இதோ என் காணிக்கை" என்று சொல்லிக் கொண்டே என்ன நடக்கிறதென்பதைப் பலவர்மன் ஊகிக்குமுன்பே மேடையிலிருந்து இறங்கி இரண்டு எட்டில் அவன் இருப்பிடத்தை அடைந்த இளைய பல்லவன் தன் கச்சையிலிருந்த முத்துமாலையொன்றை அவன் கழுத்தில் சூட்டினான். அத்துடன், "இதோ சொர்ண பூமியின் பூர்வகுடித் தலைவர்களுக்கு என் வெகுமதி," என்று கூறிப் பலவர்மனுக்குப் பின்னால் நின்றிருந்த மூவர் கழுத்திலும் கண்ணிமைக்கும் நேரத்தில் முத்துமாலைகளைச் சூட்டிவிட்டான்.

அடுத்த வினாடி மீண்டும் மேடைமீது தாவி ஏறிய இளையபல்லவன், மடியில் இருந்த மாணிக்க மாலையை எடுத்து விளக்கொளியில் காட்டினான். அதிலிருந்த சிவப்பு ரத்தினங்கள் விளக்கொளியில் பெரும் தீப்பந்தங்களெனச் சுடர் விட்டன. அந்த மாலை மஞ்சளழகியின் முகத்துக்கு எதிரேயிருந்ததால் அதன் சிவந்த ஒளிகள் அவள் முகம் பூராவும் விழுந்து முகத்தையே மாணிக்கங்களால் இழைத்த பிரமையை விளைவித்தன. "இந்த மாணிக்க மாலை விலை மதிக்க முடியாதது; எனக்குப் பாலித்தீவின் மன்னரால் கொடுக்கப்பட்டது. இது அரச வம்சத்தை அலங்கரிக்க வேண்டிய பொருள். ஆகவே உங்கள் நடன அரசிக்கு, நடன மாணிக்கத்துக்கு, இதை நான் பரிசாக அளிக்கிறேன்," என்று மஞ்சளழகியின் கையில் மாலையைக் கொடுத்தான்.

அன்றிரவு ஏற்பட்ட பல நிகழ்ச்சிகளாலும் நிதானம் குன்றாத மஞ்சளழகி மகிழ்ச்சியுடன் அந்த மாலையைப்

பெற்றுக் கொண்டாள். கழுத்திலும் அணிந்து அழகு பார்த்தாள். கூட்டத்தின் மகிழ்ச்சிக் கூச்சல் வானைப் பிளந்தது. "இத்துடன் இந்த விழா முடிகிறது" என்று அறிவித்தான் இளையபல்லவன்.

அவன் இரைந்தே பேசினான். அவன் குரலைவிடப் பலமாக எழுந்தது இன்னொரு குரல். "இல்லை. விழா முடியவில்லை," என்று கூவிய வில்வலன் தனது வாளை உருவிக் கையில் பிடித்துக்கொண்டு மேடைக்கெதிரே பயங்கரமாக நின்றான். "என் ஆசையைத் தீர்ப்பதாக உறுதி கூறியிருக்கிறாய். அது தீர்ந்த பிறகுதான் இந்த விழா முடியும். இல்லையேல் நீ முடிந்துவிடுவாய். இங்கு மற்றும் பலரும் முடிந்துவிடுவார்கள். எடு வாளை," என்று கூறிக் கொண்டே மேடை மீது ஒரு காலையும் எடுத்து வைத்தான்.

கூட்டம் மீண்டும் பயத்தின் வசம் சிக்கியது. பெரும் விபரீதம் அடுத்தபடி நேரிடுவதைத் தடுக்க முடியாதென பலவர்மனும் முடிவுக்கு வந்தான். அதுவரை அச்சம் தோன்றாத மஞ்சளழகியின் முகத்திலும் அச்சத்தின் சாயை பெரிதாகப் படர்ந்தது. அதுமட்டுமல்ல, இளையபல்லவன் இடையில் அவன் வாள் இல்லாததையும் கவனித்ததால் மூர்ச்சை போடும் நிலைக்கு அவள் வந்துவிட்டாள்.





அத்தியாயம் 18

# எதிர்பாராத விபரீதம்

"இத்துடன் இந்த விழா முடிவடைகிறது" என்று இளையபல்லவன் கூறிய அதே சமயத்தில், "இல்லை" என்ற சொல்லைப் பயங்கரக் குரலில் உதிர்த்து, நடன மேடைமீது ஒரு காலையும், மணல் தரையில் மற்றொரு காலையும் ஊன்றிக் கண்களில் கொலைக்குறியுடனும் கையில் உருவிப் பிடித்த வாளுடனும் நின்ற வில்வலனைக் கண்டதும் பெரும்பீதிக்கு உள்ளான மஞ்சளழகி, அந்தக் கொலைகாரனை எதிர்க்க இளையபல்லவன் இடையில் வாளும் இல்லாததைக் கவனித்ததும் தலை சுழலும் நிலைக்கு வந்து விட்டதால், தன் பக்கத்தில் நின்ற தோழி யொருத்தியின் தோளில் கையைப் போட்டுச் சற்று நிதானித்துக் கொள்ள முயன்றாள். உயிரையோ போர்த் தர்மங்களையோ சிறிதும் மதிக்காத பதக் இனத்தில் உதித்த வில்வலன், இளைய பல்லவன் நின்ற இடத்திலேயே வாளால் குத்திக் கொன்றால் ஆச்சரியமில்லை யென்பதை அவள் நன்றாக அறிந்திருந்தாளாதலால், அவன் கதி அடுத்த கணம் என்ன ஆகுமோ என்று எண்ணிப் பெரிதும் கலங்கினாள். வில்வலன் மேற்கொண்டும் பேசத் தொடங்கி, "எடு வாளை!" என்று சொன்னதும் அவன் உடனடியாகக் கொலைத் தொழிலில் இறங்கமாட்டான் என்ற எண்ணத்தால் அவளுக்குச் சிறிது சுரணை வந்தாலும், எடுப்பதற்கு வாளேதும் இளையபல்லவனிடம் இல்லாததாலும், இடையில் செருகியிருந்த குறுவாளைக் கொண்டு வில்வலனுடைய பெருவாளுடன் போரிடுவது தற்கொலைக்குச் சமமென்று அவள் கருதியதாலும், ஆரம்பத்தில் ஏற்பட்ட

அச்சம் அவளைக் கவ்வியே நின்றது. அவளை மட்டுமல்ல அந்தக் கூட்டத்தையும் பேரச்சம் பீடித்திருந்தது சில விநாடிகளுக்கு. எந்த விபரீதம் அந்த வருடம் நடக்கா தென்று சிறிது நேரத்துக்கு முன்பு பலவர்மன் உட்படச் சகலரும் நினைத்தார்களோ, எந்த விபரீதத்தை தடுத்து விட்டதாக இளையபல்லவனின் சகாக்களும் கருதி னார்களோ, அந்த விபரீதம் எப்படியும் நடந்தே தீருமென்ற நினைப்பும் அதற்கு முதல் பலி இளையபல்லவனாகிவிடப் போகிறானே என்ற அச்சமும், வில்வலனின் தோற்றத் தாலும் பேச்சாலும் கூட்டத்தாரிடையே துளிர்விடவே எங்கும் மௌனம் நிலவி நின்றது. ஆயிரக்கணக்கான கண்கள் மேடைமீது நிலைத்திருந்தன. மேடை விளக்கு களின் தீச்சுடர்கள்கூடக் கண் சிமிட்டாமல் அந்த விபரீதத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன.

கோட்டைத் தலைவனும் கூட்டமும் நடன கோஷ்டி யும் அனைவருமே நிலைகுலைந்துவிட்ட அந்தச் சமயத்தில் இளையபல்லவன் மட்டும் சிறிதுகூட நிதானத்தை இழக் காமலும், இதழ்களில் இளநகையுடனும் வில்வலனைத் தன் கூரிய கண்களால் நோக்கினான். அங்கு சூழ்ந்திருந்த மௌனத்தையும் அவனே மெள்ளக் கலைத்து, “மன்னிக்க வேண்டும், நடனமளித்த மயக்கத்தில் உங்களுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதியை மறந்துவிட்டேன்,” என்று வில்வலனை நோக்கிக் கூறியதன்றி, “நான் இங்கு நடன நிகழ்ச்சிக்கு வந்தேன். இந்தப் புது நிகழ்ச்சியை எதிர் பார்க்காததால் வாளை எடுத்து வரவில்லை. ஒரு நிமிஷம் அவகாசம் கொடுங்கள்,” என்று பணிவுடன் சொல்லிக் கொண்டே அவன் என்ன செய்யப்போகிறான் என்பதை வில்வலன் ஊகிக்குமுன்பே வில்வலன் கைவாளைத் தன் இடது கையால் ஒதுக்கிவிட்டு அவனைத் தாண்டி மணலில் குதித்து கண்ணிமைக்கும் நேரத்தில் கண்டியத்தேவனை அணுகி அவன் இடையில் இருந்த வாளை உருவிக் கையிலெடுத்துக் கொண்டான்.

இளையபல்லவனின் கூர்மையான கண்கள் நோக்கிய போதே இந்தப் பார்வையின் காந்த சக்தியில் சிக்கிய வில்வலனின் பயங்கரக் கண்கள் சற்று சலனப் பட்டதாலும், அந்தச் சலனம் தீருமுன்பாகவே இளைய பல்லவன் பேச்சுக் கொடுத்துக்கொண்டு சாதாரணத் தடையைத் தள்ளுவதுபோல தன் வாளை ஒதுக்கித் தள்ளிவிட்டு மணலில் குதித்து, தான் திரும்புமுன்பாகவே வேறொருவன் வாளைக் கையில் பிடித்துக் கொண்டதைக் கண்டதாலும், அப்படி ஓர் அசாதாரணத் துணிவையும் துரிதத்தையும் அவன் கனவிலும் அன்றுவரை காணாத தாலும் சில விநாடிகள் அசந்தே போனான். அந்த அசதி தீருவதற்குள் பிரமிப்பிலிருந்து விடுபட்ட கூட்டமும் அவர்களை நோக்கிக் கவியத் தொடங்கவே பெரும் சீற்றத்துக்குள்ளான வில்வலன், "நெருங்காதீர்கள், யார் நெருங்கினாலும் பிணமாகிவிடுவீர்கள்," என்று கொஞ்ச நஞ்சமிருந்த நிதானத்தையும் காற்றில் பறக்கவிட்டுப் பெரும் குரலில் கூவினான். வாளைப் பிடித்திருந்த தன் கையை முழு நீளத்துக்கு நீட்டிச் சக்கர வட்டமாகச் சுழன்று, கவிந்து வந்த கூட்டத்தைச் சற்று எட்டவே நிற்க வைத்தான். பிறகு வாளை உருவிக்கொண்டு நின்ற இளையபல்லவன் மீது பாயவும் முற்பட்டான்.

வில்வலனின் நிதானமிழந்த நிலையையும், அவசரத் தையும் கவனித்த இளையபல்லவன் தன் இடது கையால் அவனைப் பொறுக்கும்படி சைகை காட்டியதன்றி, "அமைதியாயிருங்கள், தள்ளி நில்லுங்கள்" என்று கூட்டத் தையும் எச்சரித்துவிட்டு, வலது கையிலிருந்த வாளைப் பிடித்த வண்ணமே தனது மேலங்கியைக் கழற்றி அமீரிடம் கொடுத்தான். புத்தி மாறாட்டங்கூட ஏற்பட்டுவிடும் போலிருந்தது வில்வலனுக்கு. எதிரி, வாளுடன் பாய இருக்கும் ஆபத்தான சமயத்தில் மிகவும் நிதானமாக, சீடனுக்கு வாள்பயிற்சி அளிக்கும் குருவைப்போல்

பலமான முன்னேற்பாடுகளைச் செய்ய இளையபல்லவன் முயன்றது அவனுக்குப் பெரும் குழப்பத்தை விளைவித்தது. வாளை எடுத்ததுமே எதிரி வாள்மீது மோதி பழக்கப்பட்ட வில்வனுக்கு, அதுவும் ஒரு குழப்பத்தைத் தொடங்கியதுமே பல கொலைகள் திடீரென ஏற்படும் காட்சியை மட்டுமே வருடா வருடம் கண்டிருக்கும் அந்தப் பூர்வகுடித் தலைவனுக்கு, இந்த நிதானமும் ஏற்பாடும் புதிதாயிருந்ததால், நிதானமிழந்த நிலையிலும் அவன் பெரும் ஆச்சரியத்துக்கு உள்ளானான்.

அப்படி அவன் ஆச்சரியத்தின் வசப்பட்டு நின்ற சமயத்தில் போரிடத் தயாரான அந்த இருவருக்கும் இடையில், பலவர்மன் தன் காவலர் இருவருடன் புகுந்தான். பெரும் வேல்களை ஏந்தி நின்ற காவலர் கோட்டைத் தலைவன் கண்ணசைத்தால் வில்வலன் மீது வேலெறிவதற்குத் தயாராயிருந்தார்கள். தன்னை நோக்கிய அந்த ஈட்டி முனைகளையும் கல்லென உணர்ச்சி ஏதுமற்ற முகத்தை வைத்துக்கொண்டு எதிரே நின்ற பலவர்மனை யும் கண்ட வில்வலன் சித்தத்தில் வியப்பு மறைந்து மீண்டும் கோபம் தலைதூக்கியது. "பலவர்மா! இதில் நீ தலை யிடாதே; அகன்றுவிடு. இல்லையேல்...." என்ற வில்வலன் மீதிப் பேச்சை முடிக்காமல் விட்டாலும், அவற்றின் முடிவு எதுவாயிருக்கும் என்பதை உணர்ந்துகொண்ட பலவர்மன் உணர்ச்சி ஏதுமற்ற வறண்ட குரலில் சொன்னான்: "வில்வலா! இத்தனை வருடங்களாக உன் செய்கை எதையும் நான் ஆடசேபித்ததில்லை. நீ செய்த கொலை களில்கூட நான் தலையிடவில்லை. அவற்றைப்பற்றி விசாரித்ததும் இல்லை. ஆனால் இந்தச் சண்டையில் தலையிட வேண்டிய அவசியம் இருக்கிறது," என்றான்.

"என்ன அவசியம்?" என்று சீறினான் வில்வலன்.

"இந்தக் கோட்டையின் நலன், உன் இனத்தாரின் நலன், இந்தக் கடற்கரை வாசிகளின் நலன், எல்லாம் இந்தச்

சண்டையைத் தடைசெய்ய வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தியிருக்கிறது," என்றான் பலவர்மன்.

இப்படிப் பலவர்மன் பேசிக்கொண்டிருக்கையில் வில்வலனின் சகாக்கள் மூவரும் உருவிய வாளுடன் வில்வலனுக்குப் பின்னால் நெருங்கி வந்துவிட்டார்கள். அவர்கள் அழைத்து வந்த ஐம்பது வீரர்களும் அவர்களைக் காத்து அடைபோல் பின்னால் அணிவகுத்துத் தொடர்ந் தார்கள். அதைக் கண்ட கொள்ளைக் கூட்டத்தின் ஒரு பகுதி அந்த ஐம்பது பூர்வகுடி மக்களையும் நோக்கி நகர்ந்தது. பலவர்மன் கண்கள் நாற்புறமும் சுழன்றன. அவற்றின் ஜாடை கண்ட கோட்டைக்காவலர் இருபது முப்பது பேர் திடீரென வந்து கொள்ளையருக்கும் பூர்வ குடிகளுக்கும் இடையே தடையாக நின்றார்கள்.

"தடுக்காதே, விடு வழியை," என்று கொள்ளைக் காரன் ஒருவன் கத்தினான்.

மற்றும் பலர், "தடுக்காதே, தடுக்காதே!" என்று கூவினார்கள்.

பலவர்மனின் அதிகார விழிகள் மிகுந்த வஞ்சகத் துடனும், பயங்கரத்துடனும் அந்தக் கொள்ளைக் கூட்டத்தை நோக்கின. "இந்தப் பூர்வகுடியில் ஒருவர் தொடப் பட்டாலும் உங்களில் பத்துப் பேர் வெட்டுப் பாறைக்கு வர வேண்டியதிருக்கும்" என்று கடுமையுடன் சொற்களை அவன் உதடுகளும் உதிர்த்தன. அவன் கொடுமையின் எல்லையை உணர்ந்ததாலோ என்னவோ முன்னேறிய கொள்ளையர் சற்றுத் தேங்கி நின்றனர்.

இந்தச் சமயத்தில் வில்வலன் பயங்கரமாக நகைத் தான். "அவர்களைத் தடுக்க வேண்டாம் பலவர்மா! அவர்கள் வரட்டும். என் வீரர்கள் பதில் சொல்வார்கள்" என்று அந்தப் பயங்கர நகைப்புக்கிடையே பேசிய அந்தப்

பதக் இனத் தலைவன், "என்னையும் தடுக்காதே, வழியை விட்டு விலகி நில்," என்று இரைந்தான்.

பலவர்மன் நின்ற இடத்தை விட்டு நகரவில்லை, "நீ கொல்ல முயலும் இந்த வாலிபன் யார் தெரியுமா?" என்று வினவினான் அவன்.

"தெரியாது, தெரியவேண்டிய அவசியமில்லை," என்றான் வில்வலன்.

"அவசியமிருக்கிறது." பலவர்மனின் சொற்களில் எச்சரிக்கை ஒலித்தது.

"என்ன அவசியம்?"

"கோட்டை நலனைப்பற்றிய அவசியம்."

"இவன் அழிந்தால் கோட்டை அழிந்துவிடுமா?"

"ஆம்."

"ஏன்?"

"இவன் அகூதாவின் உபதலைவன்."

உறுதியுடனும், தெளிவுடனும் எல்லோருக்கும் கேட்கும்படியாகவும் உதிர்க்கப்பட்ட அந்த மூன்று சொற்கள், அங்குக் கூடியிருந்த அனைவருடைய உள்ளத்திலும் விவரிக்க இயலாத திகிலை விளைவித்தது. அதுவரை எதற்கும் அசையாத வில்வலன்கூடச் சற்று அசைந்தான். அவனுடன் வந்த மற்ற மூன்று தலைவர்களும் சங்கடத்தாலும், அச்சத்தாலும் லேசாக நடுங்கினார்கள். அந்த அச்சத்தையெல்லாம் நொடிப்பொழுதில் எடை போட்ட பலவர்மன் அவர்கள் மேற்கொண்டு யோசிப்பதற்கு இடங் கொடாமல், "அதுமட்டுல்ல; இன்னும் சில நாள்களில் அகூதா இங்கு வருகிறார். அந்தச் சமயத்தில் அவருடைய உபதலைவர், இந்த இளையபல்லவர், இங்கு இல்லாவிட்டால் இந்த ஊரையும் இவருக்குக் கேடு விளைவித்த அனைவரையும் ஒழித்துக் கட்டிவிடுவதாகச் சபதம் செய்திருக்கிறார். நிலைமை உனக்குப் புரிகிறதென்று நினைக்கிறேன் வில்வலா!" என்றும் கூறினான்.

பேரமைதி அந்தக் கடற்கரையைச் சில விநாடிகளுக்குச் சூழ்ந்தது. அதை, மீண்டும் இளையபல்லவனே உடைத்தான். "அதற்காகக் கோட்டைத் தலைவர் அஞ்ச வேண்டுவதில்லை. நான் இறந்தால் அகூதாவினால் எந்தக் கஷ்டமும் நேரிடாதிருக்க நான் ஏற்பாடு செய்கிறேன்" என்று அந்த அமைதியைக் கிழித்தது இளையபல்லவனின் குரல்.

பலவர்மன் திரும்பி இளையபல்லவனை நோக்கினான். சிந்தையிலிருந்த குழப்பம் அவன் முகத்தில் தெரிந்தது. 'வில்வலனிடம் பிராணனை விடுவதில் இத்தனை ஆசை எதற்கு இவனுக்கு?' என்று தனக்குள் கேட்டுக் கொள்ளவும் செய்தான் பலவர்மன்.

இளையபல்லவன் தொடர்ந்து சொன்னான்: "வில்வலன் ஆசையைத் தீர்க்க நான்தான் ஒப்புக்கொண்டேன். ஆகவே இந்த வாள்போரில் நான் இறந்தால் இந்தக் கோட்டைக்கு எவ்வித ஆபத்தும் நேரிடாமல் காப்பது என் கடமை. இதோ இருக்கும் எனது உபதலைவன் அமீர், இந்தச் சண்டை எனது வேண்டுகோளால் நடந்தது என்பதை அகூதாவுக்குச் சொல்லுவான். இதன் விளைவாக யாருக்கும் தீங்கு ஏற்படக்கூடாதென்பது என் கோரிக்கையென்பதும் தெரிவிப்பான். அகூதா இதுவரை என் கோரிக்கையைத் தட்டியதில்லை. இதோ உங்களைக் காக்க அகூதாவின் இதய நண்பன் அமீர் இருக்கிறான்," என்று.

அத்துடன் அமீரையும் அழைத்து அந்தக் கோட்டையைக் காப்பதாகத் தன்மீது ஆணையும் இடச் சொன்னான்.

இளையபல்லவன் போக்கு எதுவும் அமீருக்கோ, அவன் சகாக்களுக்கோ, பலவர்மனுக்கோ புரியவில்லை. எதற்காக அந்த ஆபத்தில் இளையபல்லவன் சிக்கிக் கொள்ளப் பிரயத்தனப்படுகிறான் என்பதை உணராத

மஞ்சளழகிகூட அச்சம் மிகுந்த கண்களை மண்டபமேடையிலிருந்து அவன்மீது வீசினாள். பிரதி விநாடி நாற்புறமும் நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த இளையபல்லவனின் கண்கள் ஒரே ஒரு விநாடி மட்டும் மஞ்சளழகியின் கண்களோடு உறவாடின. தன்னைப் போரிட வேண்டாமென்று மன்றாடிய அந்தக் கண்களின் கெஞ்சிய தோற்றத்திலிருந்த அழகை, ஆபத்தான அந்தச் சமயத்திலும் அவன் ரசித்தான். அவள் தன் நிலையைப் பற்றிக் கவலைப்பட்டது பெரும் ஆறுதலையும், மகிழ்ச்சியையும் பெருமையையும் கூட அளித்தது அவனுக்கு. அவன் அவளை நோக்கித் தைரியமூட்டும் புன்சிரிப்பொன்றை மட்டும் வீசிவிட்டு மீண்டும் அமீரை நோக்கினான். கனவில் நடப்பவன் போல் அவனிருப்பிடத்தை அடைந்த அமீர் அவன் இஷ்டப்படி ஆணையிட்டான். இளையபல்லவன் குரல் மீண்டும் எழுந்தது பலமாக. "நான் மட்டும் ஆணையிடச் சொல்லிப் பலன் இல்லை. இந்த இடத்தில் குழப்பத்தையும், மேற்கொண்டு கொலையையும் தடுக்க வேண்டுமானால் இதோ இருக்கும் அந்த மூவராலும் அவர்களைச் சார்ந்த ஐம்பது வீரர்களாலும் இங்கு யாருக்கும் எவ்விதத் தீங்கும் நேரிடாதென்பதற்கு வில்வலனும், உறுதி கூற வேண்டும்?" என்றான் இளைய பல்லவன்.

போருக்குச் சித்தமாயிருந்த வில்வலன் கண் சாடை காட்ட, மற்றத் தலைவர் மூவரும் தங்கள் வாள்களை முத்தமிட்டு ஆணையிடவே பலவர்மனை அகலும்படி உத்தரவிட்டான் இளையபல்லவன். பலவர்மனுக்கு என்ன செய்வதென்று தெரியாததாலும், இளையபல்லவன் உறுதிக்கு மேல் நிலைமையும் அவன் கையைவிட்டு மீறியபடியாலும் அவன் அவ்விருவருக்குமிடையில் இருந்து விலகியதன்றி வேல் தாங்கிய காவலரையும் விலகச் செய்தான்.

அடுத்தபடி இருவரும் போர் செய்ய வசதியா யிருக்கும்படி அமீரையும் கண்டியத் தேவனையும் விட்டுக் கூட்டத்தை விலக்கிச் சக்கரவட்டமாக இடம் செய்து கொண்ட இளையபல்லவன், தன் கையிலிருந்த வாளை, அப்படியும் இப்படியும் இருமுறை திருப்பிப் பதம் பார்த்து விட்டு எதிரேயிருந்த வில்வலனை நோக்கி, "இனி உங்கள் ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளலாம்" என்றான். அடுத்தவிநாடி உருவிய தன் பெருவாளை ஓங்கிக் கொண்டு அதிவேகமாக இளையபல்லவன் மீது பாய்ந்துவிட்டான் வில்வலன்.

அந்த இருவரின் வாள்போர் பார்ப்பதற்குக் கண் கொள்ளாக் காட்சியாய் இருந்தது. பயங்கரத்திலும் ஒரு இன்பமிருக்க முடியும் என்பதைக் கொள்ளைக்காரர் மட்டுமின்றி அங்கிருந்த அநாகரிகப் பூர்வகுடிகளும் உணர்ந்து கொண்டார்கள். அந்தப் பூர்வகுடிகளின் தலைவர்களுக்கு இளையபல்லவன் போர் முறை புதி தாகவும் படிப்பினையைத் தருவதாகவும் இருந்தது.

வில்வலனுடைய பயங்கரமான ஆகிருதிக்கு முன்பு அங்கியைக் கழற்றியதும் சிவந்து அழகாகத் தெரிந்த மேனி யுடனும் வீரக்களை சொட்டும் அழகிய முகத்துடனும் காட்சியளித்த அந்த வாலிபனின் மெல்லிய கரங்கள் எதைத்தான் சாதிக்க முடியும் என்று நினைத்தார்கள். பூர்வ குடித் தலைவர்கள் மூவரும் எத்தனையோ பயங்கரப் பிரகிருதிகளை இரண்டு மூன்று நிமிடங்களில் வீழ்த்தி யிருக்கும் வில்வலனின் பெரும் பட்டாக் கத்திக்கு முன்பு இளையபல்லவன் நீட்டித்து நின்ற நீள வாள் அரை விநாடி நிற்க முடியாது என்று தீர்மானித்து, இளையபல்லவனின் முடிவைச் சண்டை துவங்கிய சில விநாடிகளுக் குள்ளாகவே எதிர்பார்த்தார்கள். முடிவு அப்படித்தான் இருக்குமென்று பலவர்மன்கூடப் பயந்தான். ஆனால்

போர் தொடரத் தொடர வியப்பு பலவர்மனை மட்டு மின்றி, கூட்டத்தையும் ஆட்கொண்டது.

பெரும் முள்ளம்பன்றி போல் வெகு வேகத்துடன் தன் ராட்சத சரீரத்தைக் கொண்டு பாய்ந்த வில்வலனின் பட்டாக் கத்தியைச் சற்றுத் தூரத்திலேயே தடுத்து நின்றது இளையபல்லவனின் நீண்ட வாள். அந்த வாள் தன் வாளைப்போல் அத்தனை பட்டையில்லையென்றாலும் அது மிகவும் உறுதியாயிருந்ததை அதன் தாக்குதலினா லேயே உணர்ந்துகொண்ட வில்வலன் மீண்டும் மீண்டும் தன் வாளை இளையபல்லவனை நோக்கி வீசினான். ஒவ்வோர் முறையும், சர்வ சாதாரணமாக அந்த வாளைத் தடுத்தது இளையபல்லவன் வாள்.

நேரம் ஓடியதே தவிர, சண்டை ஒரு முடிவுக்கு வர வில்லை. வில்வலன் ஓடி ஓடித் தாக்கினான். இளைய பல்லவனைச் சுற்றி சுற்றி வந்து பல திக்குகளிலும் தாக்கினான். ஆனால் நின்ற இடத்தை விட்டு இரண்டு அடிகளுக்கு மேல் நகராத சோழர் படைத்தலைவன் வில்வலனின் வாளை மெள்ளத் திருப்பியே தன் வாளால் மடக்கினான். அந்தப் போர் செல்லும் முறையைச் சந்தேகத்துக்கு இடமின்றிப் புரிந்துகொண்ட பலவர்மன் ஓரளவு சாந்தியடைந்தான். அதிகமாகக் குதிப்பதாலும், தாவுவதாலும், கையை வேகம் வேகமாகத் தூக்கித் தூக்கிக் கீழே கொண்டு வருவதாலும் வில்வலன் தன் சக்தியின் பெரும் பாகத்தை இழந்துவிட்டதையும் உடலெல்லாம் வியர்த்து உடை நனைந்து பெருமூச்சு விட ஆரம்பித்து விட்டதையும், இளையபல்லவனோ தன்னை எந்த விதமாகவும் சளைக்கும்படி செய்துகொள்ளாமலும் தற்காப்புப் போர் செய்வதையும் கண்டு முடிவு பயங்கர மாயிருக்காதென்று தீர்மானத்துக்கு வந்தான் அக்ஷய முனைத் தலைவன்.

போரின் போக்கு, கொள்ளையருக்கும் புரிந்ததால் அவர்கள் ஆனந்தக் கூச்சலிட்டார்கள். ஆரம்பத்தில் திகைத்த அவர்கள் மாதர்களிற் சிலர், வில்வலன் ஓடிக் குதிப்பதைக் கண்டு கேலி செய்து நகைக்கவும் முற்பட்டார்கள். வில்வலன் நிதானமிழந்தான். முன்னைவிட அதிவேகத்துடன் போரிட்டான். போரிடப் போரிட எதிரே வாளைச் சுழற்றிய வாலிபனின் பலமும் சாமர்த்தியமும் அவனுக்குத் தெள்ளெனப் புரியலாயிற்று. தான் அதுவரை வாழ்வில் சந்திக்காத ஓர் இணையற்ற வாள் வீரனைச் சந்தித்துவிட்டதையும், ஆழம் தெரியாமல் காலிட்டுக் கொண்டதையும் உணர்ந்த வில்வலன், வேண்டுமென்றே எலியுடன் விளையாடும் பூனைபோலத் தன்னுடன் இளையபல்லவன் விளையாடுகிறான் என்பதையும் புரிந்து கொண்டான். ஆனால் அவன் இதயத்தில் அச்சமும் புகுந்து கொண்டது. தன் மரணம் சமீபித்துவிட்டதை அறிந்த வில்வலன் வீர மரணம் எய்தத் துணிந்து, இளைய பல்லவனை வெகு அருகில் நெருங்கித் தன் வாளை நன்றாக வானில் ஓங்கி திடீரென இளைய பல்லவனின் தலையின் மீது இறக்கினான்.

வில்வலன் பார்வையிலிருந்த உறுதி, வாள் இறங்கிய வேகம், இரண்டையும் கண்ட கூட்டம் இளையபல்லவன் இறந்தான் என்றே தீர்மானித்தது. அந்தத் தீர்மானத்தால் சோக மூச்சுவிட முயன்ற மறுகணமே கூட்டத்தின் சோக மூச்சு மகிழ்ச்சிக் கூச்சலாக மாறியது. அடுத்தகணம் வில்வலனின் பெரிய வாள் ஆகாயத்தில் பறந்து பந்த ஒளிகளில் பளபளத்து வெகு தூரத்தில் போய் விழுந்தது. இரவு நிகழ்ச்சி அந்தக் கட்டத்துடன் முடிந்திருந்தால் மகிழ்ச்சி முடிவு அன்று ஏற்பட்டிருக்கும். ஆனால் அடுத்த விநாடியே எதிர்பாராத விபரீதமொன்று அங்கு நிகழ்ந்தது. ஒரு கொலை நடக்கவே நடந்தது. ரத்தக்கறை மணலில் படிந்தது.

# 19. புதிய பொறுப்பு



அத்தியாயம் 19

# புதிய பொறுப்பு

மனிதனை எது விட்டாலும் விடாவிட்டாலும் இளமையில் ஏற்படும் பழக்க வழக்கங்கள் மட்டும் விடுவதில்லை. இயற்கையின் காரணமாகவோ, செயற்கையின் காரணமாகவோ, பரம்பரையின் காரணமாகவோ, பக்கச் சூழ்நிலையின் காரணமாகவோ, இளவயதில் மனிதனைப் பிடித்துக்கொள்ளும் குணாதிசயங்கள் ஆயுள் முடியுமட்டும் அவனைப் பீடிக்கவே செய்கின்றன. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்ற தமிழ்ப் பழமொழி காரணமில்லாமலா ஏற்பட்டிருக்கிறது?

வாழ்க்கையின் அனுபவத்தின் காரணமாக ஆன்றோர்களால் வகுக்கப்பட்ட அந்தப் பழமொழியை இளைய பல்லவன் அறிந்து தானிருந்தான். ஆனால் அத்தகைய ஒரு தொட்டில் பழக்கம் சுடுகாட்டையே அன்று கடற்கரை மணலில் சிருஷ்டிக்கும் என்பதை அவன் கனவில்கூட எதிர்பார்க்கவில்லை. அப்படி எதிர்பாராதவிதமாக ஏற்பட்ட அந்த விபரீதம் எதற்கும் கலங்காத அவனை மட்டுமல்ல, கடற்கரையில் குழுமி நின்ற அந்த மாபெருங் கூட்டத்தையே திக்பிரமையில் ஆழ்த்திவிட்டது. கண்ணிமைக்கும் நேரத்தில் நிகழ்ந்துவிட்ட அந்த விபரீதத்துக்குக் காரணம் அனைவருக்கும் புரிந்திருந்தாலும், குற்றம் யாருடையது என்பதும், சந்தேகத்துக்கு இடமில்லாதிருந்தாலும், கண்ணெதிரே மணலில் சாய்ந்து கிடந்து குருதியில் தரையை நனைத்துக் கொண்டிருந்த அந்த

மனிதனுடைய மரணத்தால் எந்த விநாடியிலும் அந்தக் கொலையைவிடப் பன்மடங்கு அதிகமான விபரீத நிகழ்ச்சிகள் அந்தக் கடற்கரையில் ஏற்படலாம் என்ற நினைப்பு அங்குக் குழுமியிருந்த மக்களிடையே பெரும் கிலியை விளைவித்திருந்ததால் மூச்சு விடும் சக்தியைக் கூட இழந்தது போல் அந்தக் கூட்டம் நின்றிருந்தது.

திடீரென மின்னல் வேகத்தில் அமீரின் குறுவாள் விளைவித்துவிட்ட அந்தக் கோரக் கொலைக்கு அமீரை எந்தவிதத்திலும் குறைகூற முடியாதென்பதை இளைய பல்லவன் உணர்ந்தே இருந்தான். வெகு வேகமாகத் தன் தலைமேல் இறங்கிய வில்வலன் வாளைத் தன் வாளால் தடுத்துச் சரேலென்று கீழே இறக்கி, பாலூர்ப் பெருந் துறையில் காஞ்சனாதேவி தன்னிடம் கையாண்ட அதே முறையைக் கையாண்டு தன் வாளால் வில்வலன் வாளை ஒரு சுழற்று சுழற்றிக் கையை விட்டுப் பறந்து போகும்படி செய்ததும், அன்றைய இரவு நிகழ்ச்சியின் முடிவு இன்பம் ததும்பும் சுபமுடிவாக இருக்குமெனவும் நினைத்தான் இளையபல்லவன். ஆனால் வில்வலன் எச்சரிக்கையால் கட்டுப்பட்டிருந்தாலும், பூர்வகுடித் தலைவர்களின் இயற்கைக் குணம் போகாதென்பதையும், அவர்கள் ஆக்ரோஷமும் கோபமும் வந்தால் எதற்கும் குறுவாளை எடுத்து வீசிவிடும் பழக்கமும் அவர்களை விட்டு விலகா தென்பதையும் எள்ளளவும் எண்ணாத இளையபல்லவன், வில்வலன் நிராயுதபாணியாய் இரைக்க இரைக்க எதிரில் நின்றதும் தன் வாளைப் பக்கத்திலிருந்த கண்டியத்தேவன் கையை நோக்கி எறிந்துவிட்டு வில்வலனைச் சமாதானப் படுத்தும் நோக்கத்துடன அவனை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தான்.

வில்வலன் போரில் சளைக்க ஆரம்பித்ததுமே, செய்த ஆணையையும் சொந்த நிதானத்தையும் இழந்துவிட்ட மற்ற

மூன்று பூர்வகுடித் தலைவரிகளில் ஒருவன், வில்வலன் வாள் ஆகாயத்தில் பறந்ததுமே அடியோடு நிலைகுலைந்து போய், தன் குறுவாளை இடைக் கச்சையிலிருந்து உருவி இளையபல்லவனை நோக்கிக் குறிவைத்துக் கையை ஓங்கினான். நால்வர் வந்த சமயத்திலிருந்தே அவர்களிடம் சிறிதும் நம்பிக்கை வைக்காமல், அவர்கள் மீதும் ஒரு கண் வைத்துக் கொண்டேயிருந்த அமீரின் பெரு விழிகள், அந்தத் தலைவனின் முகபாவத்தையும் அவன் கை இடையை நாடிக் குறுவாளைச் சரேலென எடுத்ததையும் கவனித்தன. அந்தத் தலைவன் அந்தக் கையைக் குறி வைக்கும் மட்டுமே பொறுத்த அமீரின் வலது கை மின்னல் வேகத்தில் தனது இடையிலிருந்து எடுத்த குறுவாளை வீசிவிடவே, குறி வைத்த கை குறி வைத்தபடியே ஆகாயத்தை நோக்கி நிற்க, அலற முயன்ற வாய் அகலத் திறந்தபடியே நின்றுவிட, பேச்சு மூச்சில்லாமல் வேரற்ற மரம் போல் மணலில் 'தட்' என்ற சத்தத்துடன் சாய்ந்துவிட்டான் அந்தப் பூர்வகுடித் தலைவன். இம்மிகூட அப்படியோ இப்படியோ அகலாமல் சரியாக இதயத்தின் மத்தியில் ஒரு எலும்பையும் முறித்துக் கொண்டு ஊடுருவிப் பாய்ந்துவிட்ட அமீரின் குறுவாளின் பிடி, மிகப் பயங்கரமாக மல்லாந்து கிடந்த அந்தத் தலைவனின் மார்பில் நட்டுக்கொண்டு நின்றது. அதிலிருந்து குமிழியிட்ட குருதி மணலில் ஊறிக் கொண்டிருந்தது.

மிகப் பயங்கரமாக நிகழ்ந்துவிட்ட அந்த விபரீதத்தில் இளையபல்லவன் மட்டுமல்ல, வில்வலனும் பலவர்மனுங் கூடத் திக்பிரமையடைந்து சில விநாடிகள் என்ன செய்வதென்றறியாமல் நின்றுவிட்டார்கள். திக்பிரமை யடைந்த அந்த அத்தனை பேரையும் ஊடுருவியது அமீரின் ராட்சதக் குரல். "எங்கள் தலைவர் இங்கு யாரையும் கொல்ல வரவில்லை. கொலையைத் தடுக்க வந்தார். அவர் முதுகுப் புறத்தில் முதலில் கத்தி வீசப்பட்டது. இப்பொழுது அறப்போரிட்டு வில்வலனைக் கொல்ல இஷ்டப்படாமல்

நிராயுத பாணியாக்கிப் பிழைக்கவிட்ட அவர் மார்புக்குக் கத்தி குறி வைக்கப்பட்டது. ஆகையினால்தான் இன்பமாக முடிய வேண்டிய இந்த விழாவில் இப்படியொரு அனா வசியக் கொலை நடந்தது. எனது கச்சையில் இன்னும் மூன்று குறுவாள்கள் இருக்கின்றன. எங்கள் தலைவருக்குத் தீங்கிழைக்க யார் அசைந்தாலும் அதோ அந்தக் கொலைஞ னுக்கு ஏற்பட்ட முடிவு ஏற்படுமென்பதில் சந்தேகம் வேண்டாம்," என்று கடுமையுடனும் கரகரப்புடனும் அரம் அரத்தோடு ராவினால் ஏற்படும் ஒலியில் எழுந்த அமீரின் சொற்களைக் கேட்ட வில்வலனும் பலவர்மனும் மற்றும் பலரும் அமீர் இருந்த இடத்தை நோக்கினார்கள்.

வட்டமாக நின்ற கூட்டத்திலிருந்து இரண்டடி முன்னால் தள்ளியும், சண்டையிட்ட இருவர், பலவர்மன், முடிந்தவன் ஒருவன் போக மீதியிருந்த இரண்டு பூர்வகுடித் தலைவர்கள், இவர்கள் அத்தனை பேரையும் கூடிய வரையில் கவனிக்கும் வகையிலும், குறுவாள்கள் செருகி யிருந்த இடைக்கச்சையை வலது கையால் தடவிக் கொண்டும் நின்றிருந்தான், அமீர். அவன் இதழ்களில் குரோதக் குறுநகை மண்டிக் கிடந்தது. பெரிய விழிகளில் பயங்கரப் பார்வையிருந்தது. அங்கிருந்த பெரும் கூட்டத்தையே நாசமாக்கி விடக்கூடிய பெரிய அரக்கன் போல் காட்சியளித்த அமீரைக் கண்டு எதற்கும் அஞ்சாத பூர்வகுடி வீரர்களும் அச்சமடைந்தார்கள். யார் இளைய பல்லவனை நோக்கி அசைந்தாலும் அங்கேயே பிணமாக்கி விடவல்ல அரக்கன் கட்டளையை மீறி அசையத் தைரியமில்லாமல் அந்தக் கூட்டம் முழுதுமே பீதியடைந்து சலனமற்று நின்றது.

திடீரென நிகழ்ந்துவிட்ட கொலையின் விளைவாகத் திகைப்பெய்திய வில்வலனை அணுக எடுத்த முயற்சியைக் கைவிட்டுச் சட்டென்று நின்ற இடத்திலேயே ஒரு விநாடி

நின்றுவிட்ட இளையபல்லவன், அமீர் மற்றவர்களை எச்சரித்து முடிந்ததும் தனது கண்களால் பலவர்மனையும் மற்றவர்களையும் ஒருமுறை ஏறெடுத்து நோக்கினான். அமீரின் வன்சொற்கள் வெற்றுச் சொற்களல்ல என்பதை அவர்கள் அனைவரும் உணர்ந்து கொண்டிருப்பதையும், அத்தனை பேரும் அப்பொழுது நிகழ்ந்த கொலையைவிட அடுத்து நிகழ இருக்கும் விளைவுகளைப்பற்றியே கவலை யுடனிருப்பதையும் புரிந்துகொண்டு தனது நடைமுறையை நிர்ணயித்துக் கொண்டான். அனைவரையும் அமைதியுட னிருக்கும்படி கையமர்த்திய இளையபல்லவன் வில் வலனை ஏறெடுத்துச் சில விநாடிகள் நோக்கிவிட்டுக் கேட்டான்: "இந்த விபரீதத்தை இத்துடன் நிறுத்தலாமா மேற்கொண்டு இதன் விளைவுகள் தொடர வேண்டுமா?" என்று.

வில்வலன் முகம் கோபத்தால் கொதித்ததா, பயத்தால் வியர்த்ததா, துன்பத்தால் துக்கித்ததா என்று சொல்ல முடியாதபடி பலவித மாறுபாடுகளை அடைந்து கொண்டிருந்தது. சற்று தூரத்தே இறந்து கிடந்த தன் சக தலைவனையும் பார்த்துப் பலவர்மனையும் பார்த்தான் அவன் ஒரு விநாடி. அமீர் எச்சரிக்கை செய்து முடிந்ததுமே தன் உணர்ச்சிகளை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து அர்த்தபுஷ்டியுடன் தன் காவல் வீரர்களையும் பார்த்துவிட்ட அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் முகத்திலிருந்து அவனது மனப்போக்கை எந்தவிதத்திலும் புரிந்துகொள்ள முடியாத வில்வலன் தனது மற்ற இரு சகாக்களையும் நோக்கினான். அவர்கள் முகத்தில் கோபத்திற்குப் பதில் அச்சமே நிலவிக் கிடந்ததைக் கண்டதும் மிகுந்த வெறுப்புடன் மறுபடியும் இளைய பல்லவனை ஏறிட்டு நோக்கினான். அந்த வெறுப்பு பூர்ணமாக மண்டிய குரலில், "எனது நண்பர்களில் ஒருவன் இறந்து கிடக்கிறான்," என்று கூறவும் செய்தான்.

"வருந்துகிறேன். ஆனால் குற்றம் என்னுடையதல்ல." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"குறுவாளெறிந்தவன் உனது உப தலைவன்," என்று எரிச்சலுடன் சுட்டிக் காட்டினான் வில்வலன்.

"தலைவனின் கொலையை விரும்பாத உப தலைவன் அவன்," என்று பதிலிறுத்தான் இளையபல்லவன்.

"இறந்த எனது நண்பனுக்குச் சுற்றம் அதிகம். அவர்களுக்கு என்ன பதிலை நான் சொல்வது!"

"செய்த குற்றத்தை எடுத்துச் சொல்."

"கொலை முயற்சியைக் குற்றமென்று எங்கள் குலத்தார் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்."

"ஏன்?"

"கொலை எங்களுக்குச் சர்வ சகஜம். அது எங்களுக்குப் பழக்கம்."

"அந்தப் பழக்கத்தையும், இங்கு வருடா வருடம் ஏற்படும் குழப்பத்தையும், தடுக்க அகூதாவின் உபதலைவன் வந்திருக்கிறானென்று உன் குலத்தாருக்குச் சொல்."

"சொல்கிறேன். ஆனால் அதன் விளைவு..."

"விளைவு என்ன?"

"பலவர்மனுக்குத் தெரியும்," என்று கூறிய வில்வலன், இளையபல்லவனை நோக்கி முதுகைத் திருப்பிக் கொண்டு தூர விழுந்து கிடந்த தனது கத்தியைக்கூடத் திரும்பிப் பெற முயலாமல் விடுவிடுவென தனது சகாக்களை நோக்கி நடந்தான். தனது வீரர்களில் இருவருக்குக் கண்ணால் சமிக்ஞை செய்து இறந்தவன் சடலத்தைத் தூக்கிவரச் செய்து அந்தக் கூட்டத்தை விட்டு வெளியேறினான். அவன் சகாக்கள் இருவரும் துணைவீரர் ஐம்பதின்மருங்கூட அவனைத் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் கண்ணுக்கு மறையும் வரையில் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்த கூட்டம் அவர்கள் உருவங்கள் மெள்ள மறைந்ததும் இளையபல்லவனை நோக்கின. இளையபல்லவன் ஏதோ

பெரும் சங்கடம் நீங்கியதற்கு அறிகுறியாக சாந்திப் பெருமூச்சு விட்டுப் பலவர்மனை நோக்கினான்.

வாள்போர் தொடங்கிய விநாடியிலிருந்தே ஆசனத்தைவிட்டு வேறுபக்கம் வந்துவிட்ட பலவர்மன் அத்தனைக்குப் பிறகும் திரும்ப ஆசனத்தை நாடாமல் நின்ற இடத்திலேயே நின்றான். வில்வலன் இருந்தவரையில் கட்டுண்டு கிடந்த அவன் உணர்ச்சிகள் வில்வலனின் தலை மறைந்ததும் சிதறிவிடவே இளையபல்லவனை எரித்து விடுவதுபோல் பார்த்தன அவன் கண்கள். "இளைய பல்லவரே! இன்றைய நிகழ்ச்சியில் நீங்கள் நெருப்பை அணைத்துவிட்டதாக மனப்பால் குடிக்க வேண்டாம். இப்பொழுதுதான் நெருப்பைக் கிண்டி விட்டிருக்கிறீர்கள். அந்த நெருப்பு இந்தக் கோட்டை, இங்குள்ள மக்கள், உமது கப்பல் அனைத்தையும் சுட்டெரிக்கப் போகிறது. இதுவரை வருடா வருடம் ஒருநாள் மட்டும் இந்தக் கடற்கரையில் சில கொலைகள் நடக்கும். இனி ஒவ்வொரு நாளும் கொலை, களவு, மக்கள் கடத்திச் செல்லப்படுதல் அனைத்தும் அக்ஷயமுனையில் நடக்கும். பதக் இனத்தாரின் பழி வாங்கும் சுபாவம் எத்தன்மையது என்பதை நாமனைவரும் வெகு சீக்கிரம் உணருவோம்" என்ற சொற்களைக் கனற்பொறிகள் போல் உதிர்த்தான் பலவர்மன்.

அவன் வார்த்தைகள் அங்கு குழுமியிருந்த கோட்டைக் குடிகளிடமும் கடற்கரைக் கொள்ளைக் கூட்டத்திடமும் மிகுந்த அச்சத்தை விளைவித்ததை அவர்கள் முகபாவங்களிலிருந்து கண்டுபிடித்த இளைய பல்லவன், மிகுந்த நிதானத்துடன் பதில் சொன்னான்; "மக்களைக் காக்க வேண்டியது மன்னன் கடமை. ஸ்ரீவிஜய மன்னனின் பிரதிநிதி இங்கு நீர். இங்கு நாகரிக நிர்வாகம் நடக்காததால் அநாகரிகப் பூர்வகுடிகளின் கொடுமைக்குச் சாதாரண குடிமக்கள் பலியாக வேண்டியிருக்கிறது. உங்கள் காவலரைப் பலப்படுத்துங்கள் பலவர்மரே! ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியொருவன் காட்டுமிராண்டி

களுக்குப் பயந்து அநாகரிக அரசாங்கம் நடத்தினான் என்ற அவப்பெயர் சரித்திரத்தின் ஏடுகளில் ஏறாத வண்ணம் பார்த்துக் கொள்ளுங்கள். மக்களின் துணிவும் அரசாங் கத்தின் திறமையும் இணைந்தால் சாதிக்க முடியாதது உலகத்தில் எதுவும் இல்லை. என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். நான் இந்தக் கொள்ளையருடன் கடற்கரை யில் தங்கப்போகிறேன். இன்னும் சில நாள்களுக்குள் இந்தக் கடற்கரையில் பூர்வகுடிப் பிசாசுகளின் நடமாட்டம் ஒடுக்கப்படும். மனிதனைத் தின்னும் அந்த அநாகரிக வர்க்கத்தின் காற்று இந்தப் பக்கத்தில் அடிக்காது. நீங்கள் ஒத்துழைத்தால் கோட்டைக்குள்ளும் அவர்கள் நடவடிக் கையை நாங்களே ஒடுக்குவோம்."

மிகுந்த அலட்சியத்துடனும், துணிவுடனும் இளைய பல்லவன் கூறிய அந்தச் சொற்களுக்குப் பதில் சொல்லும் நிலையில் பலவர்மன் இல்லை. அவன் உள்ளத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து சுழன்று கொண்டிருந்தன. அந்த இரவு நிகழ்ச்சியில் அதுவரை ஏற்படாத பல அரசியல் சிக்கல்கள் ஏற்பட்டுவிட்டதை அறிந்ததால் விவரமான பதிலேதும் சொல்லாமல், "மீண்டும் நாம் சந்திப்போம்," என்று கூறிவிட்டுக் கடற்கரையை விட்டுச் செல்ல வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தன் வீரர்களுக்கு உத்தரவிட்டான் பலவர்மன். இரண்டே நிமிடங்களில் அவனது பொன்னிறப் புரவியும் மஞ்சளழகியின் வெண்ணிறப் புரவியும் கொண்டு வரப்பட்டன. தனது புரவியில் ஏறிக்கொண்ட பலவர்மன் அனைவரும் செல்லலாம் என்பதற்கு அறிகுறியாகக் கூட்டத்தை நோக்கிக் கையை ஆட்டினான். அதுவரை பலதரப்பட்ட உணர்ச்சிகளின் வசப்பட்டு நடன மேடையில் நின்ற மஞ்சளழகி மேடையைவிட்டு இறங்கித் தனது புரவியருகில் வந்தாள். இளையபல்லவன் அவளை அணுகி அவளுக்குக் கைலாகு கொடுத்து இடையையும் மற்றொரு கையால் தாங்கி அவள் புரவிமீது ஏற உதவினான். புரவி மீதமர்ந்த

அவள் அவனை நோக்கிப் புன்முறுவல் கோட்டினாள். தன் இடையில் அப்பொழுதும் பதிந்து நின்ற அவன் கையைத் தன் கை விரல்களால் லேசாக அழுத்தவும் செய்தாள். அடுத்த விநாடி பெரும் குழப்பத்துக்குள்ளானவள் போல் திடீரெனப் புரவியைத் தட்டிவிட்டாள். அந்தப் புரவியின் வேகத்துக்கிணையாகப் பலவர்மன் புரவியும் விரைந்தது. முன்னும் பின்னும் காவலர் சென்றனர்.

அவர்கள் கோட்டையை அணுகிக் கோட்டைக்குள் நுழையும்வரையில் அவர்களையே பார்த்துக்கொண்டு நின்ற இளையபல்லவன் கடைசியாகத் திரும்பி அந்தக் கொள்ளைக் கூட்டத்தை நோக்கினான். அங்கு யார் முகத்திலும் மகிழ்ச்சி இல்லை. அச்சமும் துன்பமுமே மண்டிக் கிடந்தன. இன்பத்தில் துன்பமிருப்பதால் மஞ்சளழகி சொன்னது எத்தனை உண்மையென்பதை நினைத்த இளையபல்லவன் மிகுந்த மனச் சங்கடத் துடனேயே தனது மாலுமிகளுடன் தனது மரக்கலத்தை அடைந்தான். மரக்கலத்தை அடைந்தவன் நேராகத் தனது அறைக்குச் சென்று பஞ்சணையில் படுத்தான். படுத்து நிலைமையைச் சிந்திக்கச் சிந்திக்கத் தனக்குச் சம்பந்த மில்லாத பெரும் பொறுப்புகள் தனது தலையில் சுமத்தப் படுவதை உணர்ந்தான். அவன் எத்தனையோ பொறுப்பு களைப் பற்றி நினைத்தான். ஆனால் அவன் அடியோடு நினைக்காத, அணுவளவும் எதிர்பார்க்க முடியாத, மற்றொரு பொறுப்பும் அன்றிரவில் அக்ஷயமுனைக் கோட்டைக்குள் உருவாகிக் கொண்டிருந்ததை அவன் உணரவில்லை. அதை மட்டும் அவன் உணர்ந்திருந்தால் கண்டியத்தேவன் இஷ்டப்பட்டாலும் இஷ்டப்படா விட்டாலும் அன்றிரவே அந்தத் துறைமுகத்தை விட்டுத் தன் மரக்கலத்தை வெளிக் கிளப்பியிருப்பான். விதி அவனை ஓட விடவில்லை. அந்தப் பொறுப்பெனும் தளையை அவன் கால்களுக்குப் பூட்டவே செய்தது.

அத்தியாயம் 20

# காதலுக்குப் பொய்யும் தேவை

மரக்கலத்தின் அறையில் மரக்கட்டிலில் மாலுமி யொருவன் விரித்துவிட்டுச் சென்ற பஞ்சணையில் படுத்துக் கிடந்த மாவீரனான இளையபல்லவன் மதியில், மரக்கலத் தின் அடியிலிருந்த ஆழ்கடலின் அலைகளைப் போலவே ஏதேதோ எண்ணங்கள் உருவெடுத்து எழுந்து எழுந்து உருண்டு புரண்டு மோதி மடிந்து கொண்டிருந்தன. இரண்டே சித்ரா பௌர்ணமிகளுக்குள் தனது வாழ்க்கை யில் எத்தனை மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை மட்டுமின்றி அந்த இரண்டு சித்ரா பௌர்ணமி நாள்களும் எத்தனை வித்தியாசமானவை என்பதையும் எண்ணிப் பார்த்தான் அவன். ஒரு வருடத்துக்கு முன்பு சித்ரா பௌர்ணமி தினத்தில் சோழப் பேரரசின் சமாதானத் தூதனாகவும் கௌரவமான படைத் தலைவனாகவும் கலிங்கத்தின் பாலூர்ப் பெருந்துறையில் தான் இறங்கிய தையும், சரியாக ஒரு வருடம் ஓடிவிட்ட இந்தச் சித்ரா பௌர்ணமியில் கேட்பவரெல்லாம் பயந்து நடுங்கும் சீனக் கொள்ளைக்காரனொருவனின் உப தலைவனாகவும் எந்தக் கலிங்கத்துடன் சமாதானத்தை நாடி ஓலை எடுத்துச் சென்றானோ அந்தக் கலிங்கத்தின் கடலாதிக்கத்தை ஒடுக்கப் பழி வாங்கும் எண்ணத்துடன் கொள்ளையரும், அநாகரிக மக்களும் கொலைகாரக் கோட்டைத் தலை வனும் கொண்ட அக்ஷயமுனையில் தானும் ஒரு கொள்ளைக்காரனாகப் பரிமளிக்கும் தீர்மானத்துடன் வந்து, மரக்கலத்தை நங்கூரம் பாய்ச்சி இருப்பதையும்

நினைத்து, விதி மனிதனை எப்படியெல்லாம் ஆட்டி வைக்கிறது என்று நினைத்துப் பெருமூச்சும் விட்டான்.

இந்த இரண்டு சித்ரா பௌர்ணமிகளில் தனது வாழ்க்கையில் வித்தியாசங்கள் பல இருந்தாலும் ஒற்றுமை அம்சங்களும் சில இருப்பதைக் கண்டான் சோழர் படைத் தலைவன். பாலூர்ப் பெருந்துறையில் கால்வைத்த நிமிடத்திலிருந்து அந்தச் சித்ரா பௌர்ணமியிலும் தனக்குச் சண்டையும் சச்சரவும் வாளுக்கு வேலையும் இருந்ததென்பதையும், இந்தச் சித்ரா பௌர்ணமியிலும் அந்தத் தொந்தரவுகளுக்குக் குறைவில்லையென்பதையும், இரண்டு சித்ரா பௌர்ணமிகளிலும் இரண்டு சித்தினிப் பெண்களிடம் தன் சித்தத்தைப் பறிகொடுக்கும்படியான நிலை ஏற்பட்டுவிட்டதையும் எண்ணிப் பார்த்த இளைய பல்லவன் தனக்கு பெரும் மன உறுதியும் நிதானமும் இருப்பதாகச் சோழ நாட்டில் தனது வீரரும் தற்சமயம் தனது மாலுமிகளும் கொண்டாடுவதில் பொருளிருக்கிறதா என்ற சந்தேகத்துக்கும் உள்ளானான். பெண்களைப் பார்த்ததும் மயங்கிவிடும் அத்தனை பஞ்சை மனம் படைத்தவன் தானல்ல என்பதை இளையபல்லவன் உணர்ந்தே இருந்தான். தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட இரு மாதரும் இருவிதப்பட்ட தோற்றத்தையும் அழகையும் கொண்டவர்களாயிருந்தாலும் அந்த இருவித அழகிலும் பெரும் தூய்மையும் காந்த சக்தியும் இருந்ததை அவன் நன்றாகப் புரிந்துகொண்டிருந்தான். 'இரு அழகிகளில் காஞ்சனாதேவி வாள் பயிற்சியுள்ள வீரப் பெண். அவள் முகத்திலும் நடையிலும் வீரம் மிகுந்த எழிலே சுடர் விட்டது. இவளோ நெஞ்சுரமிருந்தாலும் ஆயுதப் பயிற்சியற்றவள். ஆனால் இவள் கலைப் பயிற்சி வாரி வீசும் ஆயிரமாயிரம் காந்தக் கணைகளின் சக்தி இணையற்றது' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். பாலூர்ப்

பெருந்துறையில் மாடியறையில் கனல் வீசும் கண்களைத் தன் மீது பாய்ச்சி வாள் முனையில் தன்னை வரவேற்று, விநாடியில் தன் வாளைக் கையிலிருந்து விசிறியோடும் வண்ணம் வாளைச் சுழற்றிய காஞ்சனா தேவியையும், கொள்ளையர் மத்தியில் அச்சமின்றி உலாவுபவளும், பசுமஞ்சள் நிறத்தைப் பெற்றதால் மாலை நேரப் பூம்பாவை போல் தென்படுபவளும், காலசைவு கண்ணசைவு, இடையசைவு, இவற்றின் கலை அசைவுகளாலேயே தன்னைப் பலர் முன்னிலையில் பைத்தியம் பிடித்து நடன மண்டபத்தை நோக்கி ஓட வைத்தவளுமான மஞ்சளழகி யையும், பலமுறை திரும்பத் திரும்ப ஒப்பிட்டுப் பார்த்தும் இரு பெண்களில் எவள் சிறந்தவள் என்பதை நிர்ண யிக்கமாட்டாமல் திணறினான் அவன்.

அந்த இரண்டு பெண்கள் சித்தத்தில் சுழன்ற நேரத்தில் அழகு மயக்கத்தின் வசப்பட்ட சோழர் படைத் தலைவன் அவர்கள் தன்மீது கட்டிவிட்ட கடமைகளும் பொறுப்புகளும் எத்தன்மையவை என்பதையும் நினைத்துப் பார்த்தான். ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய அரியணையில் தந்தையை அமர்த்த சோழர் பேரரசின் உதவி நாடிவந்த காஞ்சனாதேவியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வது சோழர் படைத்தலைவன் என்ற முறையில் தனது பொறுப்பு என்பதையும், மஞ்சளழகியின் கெஞ்சலையும் மீறி இரவு நிகழ்ச்சிக்கு வந்து அவள் தந்தைக்கும் கோட்டை மக்களுக்கும் பூர்வகுடித் தலைவர்களின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொடுத்ததால் ஏற்படக்கூடிய பயங்கர விளைவுகளிலிருந்து மஞ்சளழகியையும், அவளைச் சேர்ந்தவர்களையும் காப்பது தனது கடமையென்பதையும் அவன் உணர்ந்துகொண்டான். இப்படிப் பல பொறுப் புகள், அளவுக்கதிகமான பொறுப்புகள், 'போர் செய்' என மன்னன் புகன்றால் படைகளை நடத்தும் பொறுப்பை

மட்டுமே ஏற்க வேண்டிய படைத்தலைவனுக்கு அனாவசியமான பல பொறுப்புகள், தன்மீது சுமந்து விட்டதை அவன் எண்ணினான். இத்தனை பொறுப்பு களையும் தன்மீது சுமத்திவிட்டவர்கள் இரண்டு பெண்கள் என்பதை எண்ணிப் படுத்துக் கிடந்த அந்த ஏகாந்த நிலையிலும் தனக்குத் தானே 'களுக்'கென்று சிரித்துக் கொண்டான். சோழப் பேரரசோ, ஸ்ரீவிஜய சாம்ராஜ்யமோ இத்தனை பொறுப்புகளைத் தன்மீது சுமத்தவில்லை யென்பதையும், இத்தனை சாம்ராஜ்யங்கள் சாதிக்காததை இரண்டு பெண்கள் சாதித்துவிட்டதையும் நினைத்துப் புருஷனுடைய பலவீனம் எத்தனை கேவலமானது என்று எண்ணிப் புன்முறுவலும் கொண்டான்.

அமீர், கண்டியத்தேவன் இருவர் உதவியால் அகூதா வின் மரக்கலத்தில் தப்பிய தான் மட்டும் இஷ்டப் பட்டிருந்தால், அகூதா தன்னை ஏதாவதொரு வணிக மரக்கலத்தில் புகாருக்கு அனுப்பி இருப்பானென்பதையும், தானே வேண்டுமென்று கடற்படைப் பயிற்சி பெற ஆசைப்பட்டு அவனுடன் ஒரு வருட காலம் கழித்ததையும் யோசித்துப் பார்த்து, 'இதற்கு மூலகாரணம் என்ன?' என்பதையும் ஆராய்ந்தான். 'கடற்படைப் பயிற்சி பெற்றதற்குக் காரணம் கலிங்கத்தின் கடலாதிக்கத்தை உடைக்கும் ஆசைதான். அதற்கு வித்து விதைத்தது தமிழர்களைக் கலிங்கத்துப் பீமன் படுத்திய கொடுமையும், சோழர்களின் சமாதான கரத்தை அவன் ஏற்க மறுத்ததும் தான். ஆனால் அதற்கெல்லாம் கொள்கைகளை வகுக்கும் பொறுப்பு சோழ மன்னரையும் அமைச்சர் குழுவையும் சேர்ந்ததல்லவா? அவர்கள் வகுக்கும் கொள்கைகளை நிறைவேற்றுவதுதானே படைத்தலைவன் பொறுப்பு?' என்று தனக்குள் கேள்விகளை எழுப்பிக்கொண்ட படைத் தலைவன், தன் போக்குக்கு வித்து விதைத்தது பீமனுடைய

கொடுமையானாலும் அந்த வித்தைத் தாங்கி நின்றது காஞ்சனா என்ற கன்னியே என்ற முடிவுக்கும் வந்தான். முடிவை உள்ளம் ஒப்பவில்லை. ஒப்புவது அதற்குத் தர்ம சங்கடம். ஒப்பவில்லையானாலும் உண்மை அதுதானே!

'அதுதான் போகட்டும்! அக்ஷயமுனைக்கு வந்த நான் இதைத் தளமாக்கிக் கொள்ளவும், மரக்கலத்தைச் செப்ப னிட்டுக் கொள்ளவுமே வந்தேன். அதற்குப் பூர்வாங்கமாகக் கடற்கரைக் கொள்ளைக் கூட்டத்தை மித்ரபேதம் செய்தேன். கோட்டைத்தலைவன் உதவியை அவன் இஷ்டத்துடனோ இஷ்டவிரோதமாகவோ பெறத் தீர்மானித்தேன். ஆனால் இந்த இரவு நிகழ்ச்சிக்கு ஏன் போனேன்? போகாமலிருந்திருந்தால் நடனம் முடிந் திருக்கும். சில கொலைகள் நடந்திருக்கும். காலையில் நிம்மதி நிலவியிருக்கும். இனி நிம்மதி இல்லை. பூர்வ குடிகளின் பெரும் தொல்லை ஏற்படும். அதற்குக் காரணம் நான்தான். ஏன் காரணமானேன்?' என்று மட்டும் சில கேள்விகளைக் கிளப்பிக்கொண்ட இளையபல்லவனுக்கு விடை தெளிவாகத் தெரிந்திருந்தது. 'மஞ்சளழகியின் வசீகரத் தோற்றம்தான் காரணம். அது விரித்த வலைதான் அடுத்து வரும் பல தொல்லைகளுக்கு விதை விதைத் திருக்கிறது' என்ற தீர்மானம் அவன் உள்ளத்தில் ஓங்கி நின்றது.

இப்படி இரண்டு பெண்களையும், அவர்கள் மறைமுகமாகத் தன்மீது சுமத்திவிட்ட பொறுப்புகளையும் எண்ணி எண்ணி வியப்பின் வசப்பட்ட இளையபல்லவன், பெண்ணெனும் ஒரு சிருஷ்டியில்லாவிட்டால் உலகத்தில் மற்ற சிருஷ்டிகளுமில்லை, தொல்லைகளுமில்லை, சண்டை சச்சரவுகளுமில்லை என்று ஆதிகாலம் தொட்டு வந்த புராணங்கள் சொன்ன வேதாந்தரீதியில் எண்ண மிட்டான். அந்த வேதாந்தம் பெருவாரியான மனித

சமூகத்தை என்ன, பெரிய பெரிய அறிவாளிகளையும் எப்படிச் சீர்திருத்த முடியவில்லையோ அப்படியே இளையபல்லவனையும் சீர்திருத்த முடியவில்லை. அப்படிச் சீர்திருத்தாத காரணத்தால், தன் செய்கைகளில் சில நன்மைகளும் விளைந்திருப்பதாக நினைத்தான் சோழர் படைத்தலைவன். 'கொள்ளைக்காரரை ஒரு புறமும் பூர்வகுடிகளை ஒருபுறமும் பாதி திருப்தி செய்தும் பாதி பயமுறுத்தியும் வைத்திருந்த காரணத்தாலேயே அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனின் ஆதிக்கம் பலப் பட்டிருந்தது. கொள்ளையர் மனத்தையும் கலைத்து விட்டேன். பூர்வகுடிகளையும் விரோதப்படுத்தி விட்டேன். ஆகவே இரண்டு சங்கடங்களுக்கு இடையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் கூடிய மட்டும் என் சொற்படிதான் கேட்டாக வேண்டும். இனி அக்ஷயமுனைத் தளம் என் வசந்தான். அது மட்டு மல்ல, சூளுக்களின் பலத்தையே பெரும்பாலும் கடற் பகுதியில் நம்பி இருக்கும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்துக்கு, இன்றைய சச்சரவுக்குப் பிறகு அவர்கள் உதவி அதிக மிருக்காதென்பது உறுதி. சூளுக்கள் திறமைமிக்க மாலுமிகள். அவர்கள் கடற் போராட்ட அரங்கிலிருந்து விலகினால், ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் ஒரு கை உடைந்தது போலத்தான். இது பெரும் லாபம்,' என்று அத்தனை நிகழ்ச்சிகளையும் அவற்றால் ஏற்பட்ட பயன்களையும் கணக்குப் பார்த்துத் தன்னைத்தானே திருப்தி செய்து கொண்டான்.

இருப்பினும் பலவர்மன் கடைசியாகச் சொல்லி விட்டுப் போன சொற்கள் அப்பொழுதும் அவன் காதில் ரீங்காரம் செய்துகொண்டிருந்தன. "இளையபல்லவரே! நெருப்பைக் கிளறிவிட்டிருக்கிறீர். இதனால் பெரும் விபரீதங்கள் விளையும்" என்று அவன் சுட்டிக் காட்டியது,

விளையக்கூடிய விபரீதங்களை (தன் மரக்கலம் தீக்கிரை யாகக்கூடும் என்ற உண்மை உட்பட) விவரித்ததும் அப்பொழுதும் அவன் காதில் ஒலித்துக் கொண்டிருந்தது. அதனால் ஏற்பட்ட பெரும் கவலை, தன் செய்கையால் தன்மீது மண்டிவிட்ட பெரும் பொறுப்புகள், அவன் மனத்தைப் பல திசைகளில் அலைக்கழித்துக் கொண் டிருந்தன. ஆனால் அந்தப் பொறுப்புகளை விடப் பெரும் பொறுப்பு அதே நேரத்தில் அக்ஷயமுனைக் கோட்டைக் குள் அவன்மீது சுமத்தப்பட்டு வந்ததை மட்டும் அவன் உணரவில்லை. அதைப்பற்றி மஞ்சளழகிக்கும் அவள் தந்தைக்கும் நடந்த விவாதத்தை மட்டும் அவன் அறிந் திருந்ததால், நங்கூரத்தை அந்த இரவிலேயே எடுத்துக் கப்பலின் பாய்களை விரித்துக் காற்று வரும் திசையில் போயிருப்பான். அத்தகைய பெரும் பொறுப்பைப் பற்றித் தான் பலவர்மன் தன் மாளிகையில் பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தான்.

வில்வலனும் பூர்வகுடிகளும் சென்றபின்பு இளைய பல்லவனை நோக்கி உஷ்ணமான வார்த்தைகளை உதிர்த்து விட்டு மஞ்சளழகியுடன் கோட்டைக்குள் சென்ற பலவர்மன் தனது மாளிகையை அடைந்த பின்பும் சிதறிய சிந்தனைகளால் கலவரப்பட்ட உள்ளத்துடனிருந்ததால் அவன் முகத்தில் பெரும் கவலையும் குழப்பமும் காணப் பட்டன. இரவு நிகழ்ச்சிக்கு இளையபல்லவன் வந்ததால் தனக்கு மட்டுமின்றிக் கோட்டை மக்களுக்கும் பெ்ரும் தீமை விளையக்கூடிய நிலை ஏற்பட்டுவிட்டதை அவன் சந்தேகமற உணர்ந்திருந்தான். மனிதர்களைத் தின்னும் பதக் இனத்தாரால் கோட்டைக்குள்ளும், சூளு இனத்தா ரால் நீரிலும் ஏற்படக்கூடிய பெரும் விபரீதங்களை அவன் அறிந்திருந்தான். கோட்டையின் காவல் சற்று அயர்ந் தாலும் மக்களை பதக் இனத்தார் தூக்கிச் செல்லவும்

வீடுகளுக்குத் தீ வைக்கவும் தயங்க மாட்டார்களென்பதும், அக்ஷயமுனைத் தளத்தில் இனி எந்தக் கப்பலும் அபாய மின்றி ஓர் இரவுகூட நிற்க சூளுக்கள் அனுமதிக்கமாட்டார் களென்பதும் அவனுக்குத் திட்டமாகப் புரிந்திருந்தது. தவிர, அன்றைய இரவு நிகழ்ச்சியின் விளைவாக ஏற்பட்டுள்ள சூளுக்களின் விரோதம் ஸ்ரீவிஜயத்தின் கடல் சக்தியையும் சிறிது குறைக்குமாதலால், சக்கரவர்த்தியான ஜெயவர்மனுக்கும் தான் சமாதானம் சொல்ல வேண்டி யிருக்குமென்பதும் அவனுக்குப் புரிந்தேயிருந்தது. இத் தகைய சிக்கல்களால் குழம்பிய மனத்துடனிருந்த பலவர்மன் அன்று தனது அறையை அடைந்ததும் பணியாள் கொண்டு வந்த உணவைத் தொடக்கூட மறுத்து ஆசனத்தில் சாய்ந்து கிடந்தான். அவன் எதிரில் அவனைப் போலவே தீவிர சிந்தனைகளுடன், ஆனால் வேறுவித சிந்தனைகளுடன், ஆனந்த நினைப்புகளுடன், அமர்ந் திருந்த மஞ்சளழகியும் தன் எதிரே தங்கக் கலத்திலிருந்த உணவைத் தொட்டுப் பார்க்கவில்லை.

அவள் மனத்தில் கவலையில்லை. பெருமிதமிருந்தது. துக்கமில்லை, மகிழ்ச்சி இருந்தது. கடற்கரை நிகழ்ச்சிகளால் உணர்ச்சிகளின் சுழற்சியும் எழுச்சியும் இருந்தன. அதே அறையில் அன்று காலையில் பெரும் நிதானத்தையும் சாகசத்தையும் காட்டிய இளையபல்லவன் அன்று இரவில் தன் கலையால் இரண்டையும் கைவிட்டதை நினைத்துத் தன் கலையின் சக்தியை எண்ணிப் பெருமிதம் கொண் டாள் அவள். தன் கையாட, அவன் உணர்ச்சிகளாட எழுந்து மேடை நோக்கி வந்ததை நினைத்துத் தான் விரித்த வலை அந்த வாலிபனை எத்தனை சுலபத்தில் வளைத்து விட்டது என்பதை நினைத்து மகிழ்ச்சி கொண்டாள். வில்வலனுடன் போரிட்டதாலும் பிறகு நேர்ந்த கொலை யாலும் கூட்டம் குழம்பி இருந்த சமயத்திலும் அந்த

வாலிபன் தன் இடையைக் கையால் தொட்டுத் தூக்கித் தன்னைப் புரவிமீது அமர்த்தியதை எண்ணி உணர்ச்சி களின் எழுச்சியாலும், சுழற்சியாலும் பெரிதும் தவித்துக் கொண்டிருந்தாள் அந்தப் பேரழகி.

"சே! சே! எத்தனை வெட்கம் கெட்டவள் நான்!" என்று மஞ்சளழகி தன்னைத்தானே கண்டித்துக் கொண் டாள். அது உண்மையில் கண்டனமா? இல்லையென்பது பருவத் துடிப்பின் வசப்பட்ட அந்தப் பைங்கிளிக்குத் தெரியும். தெரிந்தும் தன்னைத்தான் கண்டித்துக்கொண்ட தாகவே பாசாங்கு செய்தாள் அவள். 'இப்படி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதுதான் காதலா? காதலுக்குப் பொய் அவசியமா?' என்றும் தன்னைத்தானே அவள் கேட்டுக் கொண்டாள். 'ஆம், பொய் அவசியம்! காதல் பொய் மற்றப் பொய்களைப் போன்றதல்ல. மெய்யின்பம் தருவது. ஆனால் காதலே பொய்யாகக் கூடாது. காதலைப் பற்றிப் பொய் சொல்லிக் கருத்தை ஏமாற்றலாம். இதயத்தை மட்டும் ஏமாற்றக்கூடாது. எப்படி ஏமாற்ற முடியும்? அதற்குத்தான் உண்மை தெரியுமே. இல்லாவிட்டால் இப்படி ஏன் 'படக் படக்' கென்று இதயம் அடித்துக் கொள்கிறது!' என்று உள்ளத்துக்குச் சொல்லித் தவித்த மஞ்சளழகி, இதயத்தை ஆசுவாசப்படுத்த இதயமிருந்த பகுதியில் கையையும் வைத்துக் கொண்டாள்.

எத்தனையோ குழப்பத்திலும் கவலையிலும் எதிரே உட்கார்ந்திருந்த பலவர்மன் தன் மகளின் முகத்தில் மாறி மாறி விளையாடிய உணர்ச்சிகளைக் கவனிக்கத் தவற வில்லை. எதையும் சுலபத்தில் ஆராயும் சக்தி கொண்ட அவன் கூரிய அறிவுக்கு அவள் இதயத்தைப் புரிந்து கொள்வது ஒரு பிரமாத காரியமாய் இல்லை. தன் மகளின் மனத்தை இளையபல்லவன் ஓரளவு பறித்துக் கொண்டு விட்டானென்பதை நடன நிகழ்ச்சியின்போதே புரிந்து கொண்டான் பலவர்மன். சுபத்திரை நடனத்தின் போது

நீட்டப்பட்ட அபிநயக் கரங்கள் உண்மையில் சுபத்திரை யின் கரங்கள் அல்லவென்பதையும், மஞ்சளழகியின் இதயக் கரங்களேயென்பதையும், அப்பொழுதே புரிந்து கொண்டான் அவன். திரும்பக் கோட்டைக்கு வந்தபோது தன்னுடன் போசாமலே அவள் வந்ததையும், தன்னைப் போலவே உணவைத் தொடாமல் சிந்தனையில் ஆழ்ந்து விட்டதையும், அந்தச் சிந்தனையில் மகிழ்ச்சியின் சாயை எழுந்து முகத்தில் படருவதையும் கண்ட பலவர்மன் சித்தத்தில் திடீரென ஓர் எண்ணம் உருவெடுத்தது. அந்த எண்ணம் மட்டும் ஈடேறினால் பல கஷ்டங்கள் விடிந்து விடும் என்ற முடிவுக்கும் அவன் வந்தான். அதனால் புத்தம் புதிய பெரும் பொறுப்பு இளையபல்லவன் தலையில் சுமத்தப்படும். பிறகு அவன் தன்னிடமிருந்து தப்ப முடியாது என்பதையும் அவன் உணர்ந்தான். அந்தப் பொறுப்பை மட்டும் இளையபல்லவன் மீது சுமத்தி விட்டால், தனக்கும், கோட்டைக்கும், ஏன் அரசாங்கத் துக்குங்கூடப் பெரும் பலமும், பாதுகாப்பும் ஏற்பட்டுவிடும் என்று அறிந்ததால் தன் மகளை அணுகித் தன் யோசனையை மெள்ள மெள்ள விவரிக்க முற்பட்டான். அவன் விவரிக்க விவரிக்க மஞ்சளழகி பெரும் திகைப்புக் குள்ளானாள். தன் இதயத்தில் விளைவித்துக் கொண்ட காதலின் பொய்யல்ல அது, விபரீதமான மெய் என்று எண்ணிய அவள் தந்தையின் மெய்யும் தனது பொய்யும் கலந்த அந்த யோசனை ஏற்க முடியுமா, ஏற்பது முறையா என்று தன்னைத் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டாள். 'நான் ஏற்றாலும் அவர் ஏற்பாரா?' என்ற ஒரு கேள்வியும் அவள் உள்ளத்தே எழுந்தது. அந்தக் கேள்வி விளைவித்தது வேதனையா? வாழ்வின் சோதனையா? புரியவில்லை அவளுக்கு. ஆனால் ஒரு பெரும் இன்ப உணர்ச்சி மட்டும் அவள் நரம்புகளை ஊடுருவிச் சென்றது. அதில் வேதனை யும் இருந்தது, சோதனையும் இருந்தது.

அத்தியாயம் 21

# அவள் அறிந்த ரகசியம்

காதல் வசப்பட்டு கலத்திலிருந்த உணவைக் கணப் பொழுது கூடக் கண்ணெடுத்துப் பாராது, கன வேகத்தில் கருத்திலே துள்ளி எழுந்து கலக்கிக் கொண்டிருந்த கணக்கற்ற எண்ண அலைகளிலும் இன்ப வேதனைகளிலும் சிக்கித் தத்தளித்துக் கொண்டும், அத்தனை தத்தளிப்பிலும் மகிழ்ச்சிச் சாயைகளை மதிவதனத்தில் படரவிட்டுக் கொண்டும் எதிரே ஆசனத்தில் சிலையென அமர்ந்திருந்த மஞ்சளழகியின் மன ஓட்டங்களைச் சந்தேகத்துக்கிட மின்றிப் புரிந்துகொண்ட பலவர்மன் இதயத்தில், ஆரம் பத்தில் சிறிது கோபம் துளிர்த்ததானாலும் இறுதியில் உதயமான புதியதொரு யோசனை அந்தக் கோபத்தை அறவே அறுத்துவிட்டதால் அவன் பெரும் மனச் சாந்தி யையே அடைந்தான். தன் யோசனையில் உருவெடுத்த திட்டம் மட்டும் பலித்துவிட்டால், அந்த இரவு நிகழ்ச்சி யால் விளைந்துவிட்ட எல்லையில்லாத் தொல்லை களனைத்துக்கும் பரிகாரத்தை நிச்சயமாய்க் காணலாம் என்ற உறுதி ஏற்பட்டதால், இளைய பல்லவனைச் சந்தித்ததிலிருந்து அந்த வினாடிவரை அவனுக்கிருந்த மனப் போராட்டங்கள் மறைந்ததன்றி, அவை மறைந்து விட்டதற்கு அடையாளமாக அவன் முகத்திலும் சாந்தியின் சாயை வெகு துரிதமாகப் படர்ந்தது. அன்றைய காலையில் இளையபல்லவன் வந்துவிட்டுப் போனபோதே மஞ்சளழகி யின் மனநிலையில் திடீரென ஏதோ மாறுதல் ஏற்பட்டு விட்டதைக் கண்ட அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் அது காதலாயிருக்க முடியாது என்றே முதலில் எண்ணினான். கண்டதும் காதல் என்பது கற்பனை

நாடகங்களிலும் கட்டுக் கதைகளிலும் தான் ஏற்படுமே தவிர, வாழ்க்கையின் அனுபவத்தில் அத்தகைய திடீர் அன்புக்கு இடமில்லையென்றே நினைத்த கோட்டைத் தலைவன், மஞ்சளழகியின் மன அலைச்சலுக்குக் காரணம் புதியதொரு நாகரிக மனிதனைக் கண்டதேயொழிய வேறு இல்லையெனத் தீர்மானித்திருந்தான். அக்ஷயமுனைக் கோட்டையின் சாதாரணப் பிரஜைகளையும், பதக் முதலிய நாகரிகப் பூர்வகுடிகளையும், அத்தனை அநாகரிகமில்லா விட்டாலும் குடியாலும் குரோதத்தாலும் நிதானமற்ற வாழ்க்கையாலும் கண்ணியமிழந்து கிடந்த கொள்ளைக் கூட்டத்தையுமே பார்த்திருந்த தன் மகளுக்கு அரச தோரணையும் நாகரிகப் போக்கும் கம்பீரமும் உடைய இளையபல்லவன் ஒரு புது மனிதனாகத் தோற்றமளித் திருக்க வேண்டுமென்றும், தவிர அவனைப் பற்றி ஏற்கெனவே சொர்ணபூமியில் பரவிவிட்ட புகழும், அவ ளுடைய மனத்தில் ஓரளவு கவர்ச்சியை உண்டு பண்ணி யிருக்க வேண்டுமென்றும் பலவர்மன் ஆரம்பத்தில் எண்ணினாலும், அன்றையப் பொழுது போகப் போக அவனுக்குத் தான் நினைத்தது சரியா என்பதில் பெரும் சந்தேகம் தோன்றத் துவங்கியது. தான் எதைச் சொன்னா லும் வெடுக் வெடுக்கென்று பதில் சொல்லும் சுபாவம் வாய்ந்த தன் மகள் அன்றையப் பகல் முழுவதும் பெரும் மௌனம் சாதித்ததையும், அவள் சதா ஏதோ யோசனை யில் ஆழ்ந்து கிடந்ததையும், தான் ஏதாவது கேட்ட போதெல்லாம் கனவிலிருந்து மீண்டவள் போல், "என்ன, என்ன கேட்டீர்கள்?" என்று இரண்டாம் முறை தன் கேள்வியைத் திருப்பிச் சொன்னதையும் கண்டதும் சந்தேகம் மட்டுமின்றி ஓரளவு கோபமும் அவன் இதயத்தில் துளிர்க்கலாயிற்று. தான் கேள்வி கேட்டபோதெல்லாம் அவள் சரியாகப் பதில் சொல்லாதது மட்டுமல்லாமல், சில சமயங்களில் அவளாகவே பேசத் தொடங்கி, "ஏனப்பா! இரவு நிகழ்ச்சிக்கு அவர் வந்தால் அவருக்கு ஏதாவது ஆபத்து விளையுமென்று எதிர்பார்க்கிறீர்களா?" என்றும்,

"அந்த நால்வரும் கலவரத்தைத் துவக்கினால் நமது காவலர் தடுக்க முடியாதா?" என்றும் ஏதேதோ கேள்விகளை அவள் அன்றைய பகலில் பலமுறை கேட்டுவிட்டதையும், அக் கேள்விகளை அவள் வீசிய சமயங்களில் அவளது மங்கள முகத்தில் கவலைக்குறி வெகுவாகப் படர்ந்து கிடந்ததையும் கவனித்த கோட்டைக் காவலனான பலவர்மன், 'சில நாழிகைகளே சந்தித்த அந்த வாலிபன் மீது எத்தனை அக்கறை காட்டுகிறாள் இவள்?' என்று எண்ணிக் கோபம் கொண்டானானாலும், 'இந்தப் புது மோகம் சீக்கிரம் பறந்துவிடும்; நிலையற்றது' என்று தீர்மானித்துத் தன்னைச் சற்றே நிதானப்படுத்திக் கொண்டான்.

ஆனால் அந்த முடிவு எத்தனை தவறு என்பதைக் கடற்கரையில் நடந்த நிகழ்ச்சிகளால் சந்தேகமறப் புரிந்து கொண்ட பலவர்மன் பெரும் திகைப்புக்குள்ளானான். மனிதர்களுடைய மனப் போக்கை எடைபோடுவதில் நிகரற்றவனாக அக்ஷயமுனைக் கோட்டைக் காவலன், நடனத்தின்போது பலமுறை பல திசைகளில் அசைந்த மஞ்சளழகியின் அழகிய விழிகள், திரும்பத் திரும்ப ஆசையுடன் தன் காலடியில் அமர்ந்திருந்த இளைய பல்லவன் மீதே பதிந்ததையும், அவள் கரங்களும் திரும்பத் திரும்ப அவனை நோக்கியே நீண்டதும், தன் மகளின் மனம் இளையபல்லவனிடம் அடியோடு லயித்துவிட்டது என்பதை உணர்ந்துகொண்டான். நடனத்தின் முடிவில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் அந்த உணர்வுக்குப் பெரும் ஆதாரத்தை அளித்தன. வில்வலன் இளையபல்லவனை வாள்போருக்கு அழைத்தபோது மஞ்சளழகியின் கண் களில் திகில் மண்டியதையும், வில்வலன் வாள் ஆகா யத்தில், பறந்தபோது அவள் முகத்தில் மகிழ்ச்சியும் பெரு மிதமும் தாண்டவமாடியதையும், இளையபல்லவன் அவள் இடையைத் தொட்டுத் தூக்கிப் புரவியில் அமர்த்திய பின்பும் இரண்டு விநாடிகளுக்கு அவள் புரவியை

நடத்தாமலே இருந்ததையும் பார்த்த பலவர்மன் விஷயம் தான் நினைத்ததைவிடப் பன்மடங்கு முற்றி விட்டதை அறிந்துகொண்டான். அந்த அறிவினால் கற்பனைக் கதைகளிலும் உண்மை நிரம்ப இருக்கிறது என்ற எண்ண மும் அவன் சித்தத்தில் எழுந்தது. உணர்ச்சியில் இருந்து தான் கற்பனையும் விளைகிறது, கதையும் விளைகிறது என்ற உண்மையும் அவன் உள்ளத்தில் அன்றிரவு ஊறவே, கண்டதும் காதல் சாத்தியம்தான் என்ற முடிவுக்கும் அவன் வந்தான். அந்தக் காதல் தன் மகளை நன்றாக வளைத்துக் கொண்டுவிட்டதையும், அதன் விளைவாகவே அவள் உணவைத் தொடாமல் உட்கார்ந்திருக்கிறாள் என்பதையும் உணர்ந்துகொண்டான் பலவர்மன். செவிக்குணவு இல்லாத போதுதான் சிறிது வயிற்றுக்குத் தேவை என்பது வள்ளுவர் முடிவு. ஆனால் காதலே மனத்துக்குப் பெரும் உணவு. அது இருக்கும் போது மற்ற உணவு மாந்தருக்குத் தேவையில்லை என்பதை அன்று மஞ்சளழகி அறிந்து கொண்டாள். அந்தக் கருத்து எத்தனை உண்மை என்பது பலவர்வனுக்கும் நன்றாகப் புரிந்தது.

அப்படிப் புரிந்ததால் முதலில் சற்று கோபத்தின் வசப்பட்ட பலவர்மன், தன் மகள் திடீரெனக் காதல் வசப்பட்டதற்குத் தானும் ஒரு காரணம் என்று எண்ணிய தால் குற்றத்தை அவள்மீது மட்டும் சுமத்த முடியா தென்பதையும், அது குற்றமானால் அதில் தனக்கும் பங்கு உண்டென்பதையும் தீர்மானித்துக் கொண்டதால் அவன் சில வினாடிகள் ஆத்ம சோதனையில் இறங்கினான். பருவ எழில்கள் பூத்துக் குலுங்க எதிரே உட்கார்ந்திருந்த தன் மகளை வயது வந்த பெண் என்ற முறையில் அன்றே எண்ணமிட்டு நோக்கிய பலவர்மன், அன்றுவரை அவள் திருமணத்தைப் பற்றித் தான் தினையளவும் சிந்தித்த தில்லையென்பதையும் நினைத்துப் பார்த்தான். சதா சர்வ

காலமும் அரசியல் விவகாரங்களில் சிக்கி, கொள்ளையர் களைப் பிரித்து வைப்பதிலும், வேண்டாதவர்களைத் தீர்த்துக் கட்டுவதிலும், பூர்வகுடிகளைத் திருப்தி செய்து அக்ஷயமுனையில் தனது ஆட்சியைத் திடப்படுத்திக் கொள் வதிலுமே தான் புத்தியைச் செலவிட்டு வந்ததையும், தன் இல்லத்தில் தன்னிடம் வயது வந்த பெண் வளர்ந்து பருவத்தை எட்டியதைத் தான் அடியோடு அசட்டை செய்து வந்ததையும் நினைத்துப் பார்த்த பலவர்மன், மகளுக்குத் தான் செய்த பெரும் அநீதியை நினைத்துப் பார்த்தான். சொர்ணபூமித் தலைநகரான ஸ்ரீவிஜயத்துக்குத் தான் சென்ற சமயங்களில்கூட அவளை அழைத்துச் சென்று நாகரிக சமூகத்தைக் காட்ட முயலாமல் அக்ஷய முனையில் தோழிகளிடமும் செவிலித் தாயிடமுமே விட்டுப் போனதையும் அவளுக்குப் பழக்கமெல்லாம் கொள்ளைக்காரர்களிடமே யென்பதையும் எண்ணிப் பார்த்த பலவர்மன் நாகரிகம் கொழிக்கும் ஸ்ரீவிஜயத்தை எட்டிப் பார்க்காத அந்தக் காட்டுப் புஷ்பத்தை பிறநாட்டு வீரனொருவன், அதுவும் தான் அறவே வெறுக்கும் தமிழர் களின் தலைவனொருவன் பறிக்க வந்து, அவன் கையை நோக்கி அந்தப் புஷ்பம் சாய்கிறதென்றால் அதற்குக் காரணம், தான் வளர்த்த முறையே என்ற முடிவுக்கும் வந்தான்.

இப்படி விஷயங்களை நினைக்க நினைக்க ஏற்பட்ட விளைவை எண்ணிப் பார்க்க பார்க்க, பலவர்மனுக்கு மஞ்சளழகியின் காதலில் அதிகத் தவறு எதுவும் இருப்ப தாகப் புலப்படவில்லை. மகாவீரனொருவனை, உயர்குடி மகனொருவனை மஞ்சளழகி விரும்புவதிலோ, வதுவை செய்துகொள்வதிலோ தவறு ஏதுமில்லை என்றே தீர்மானித்தான் அவன். ஆனால் மஞ்சளழகிக்கு இருக்கும் பெருங் காதல் இளைய பல்லவனுக்கும் இருக்குமா என்பது

மட்டும் பெரும் சந்தேகம் முளைத்தது பலவர்மன் இதயத்தில். நடன நிகழ்ச்சியின்போது இளையபல்லவன் சற்று நிதானத்தை இழந்து மேடையை நோக்கி விரைந் தானானாலும் அதற்குக் காரணம் ஆழ்ந்த காதல் என்று கூற முடியாதென்றே பலவர்மன் நினைத்தான். அன்றைய காலையில் முதன்முதலாக மஞ்சளழகியைச் சந்தித்த சமயத்தில் அவள் அழகைப் பார்த்து இளையபல்லவன் மலைத்தானானாலும், அவன் நினைப்பெல்லாம் தன் உதவியைப் பெறுவதிலேயே இருந்ததையும் தனக்கு ஏதாவது தீங்கு நேரிட்டால் அகூதா வாங்கக்கூடிய பழியைச் சுட்டிக்காட்டி மிரட்டியதையும் நினைத்துப் பார்த்த பலவர்மன், மஞ்சளழகியைக் கண்ட பிறகும் மனவலிமையை இழக்காதவன் அத்தனை எளிதில் அவளிடம் இதயத்தைப் பறிகொடுத்து மஞ்சளழகியை மணம் செய்துகொள்வதானால் இளையபல்லவனை விடச் சிறந்த மணாளனைத் தான் தன் மகளுக்குத் தேடிக் கண்டு பிடிக்க முடியாதென்று தீர்மானித்த பலவர்மன், அப்படி இளையபல்லவனை மட்டும் தன் மகளுக்கு மணாளனாக்க முடியுமானால் அக்ஷயமுனைக் கோட்டையில் தன் பலமும் செல்வாக்கும் பன்மடங்கு உயர்ந்துவிடும் என்று எண்ணினான். இளையபல்லவனின் போர்த்திறனும் நிதானமும், அகூதாவிடம் அவனுக்குள்ள செல்வாக்கும், பூர்வகுடிகளின் கொட்டத்தை அடியோடு அடக்க முடியு மென்பதில் பலவர்மனுக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. 'தவிர இளையபல்லவனுக்கே கோட்டையைக் காக்கும் பொறுப்பையும் கொடுத்து விட்டால் அவன் ஸ்ரீவிஜயத்தின் படைத் தலைவர்களில் ஒருவனாகி விடுவான். அதனால் ஸ்ரீவிஜயம் பலப்படும், சோழர்களை எதிர்க்க நாம் ஒரு கோடரியையும் தயார் செய்தது போலாகும்,' என்று வஞ்சக எண்ணங்களை உருவாக்கிக் கொண்ட பலவர்மன் அந்த

எண்ணங்களை எப்படிச் செயல்படுத்தலாம் என்ற சிந்தனையில் சில நிமிஷங்கள் செலவிட்டான். திருமண யோசனையைத் திடீரென இளையபல்லவனிடம் வெளியிடுவது முட்டாள் தனமென்பதையும், மிகுந்த எச்சரிக்கையுடன் அவனைப் படிப்படியாகத் தனது வலையில் வளைக்க வேண்டுமென்பதையும் தீர்மானித்துக் கொண்ட பலவர்மன் தன் திட்டத்துக்கு மகளின் துணை தேட முயன்றான். ஆகவே மெள்ளத் தன் ஆசனத்திலிருந்து எழுந்து இடையே இருந்த மஞ்சத்தைச் சுற்றிச் சென்று ஆசனத்தின் பின்புறம் நின்று கொண்டு அவள் தலையை மெள்ள வருடிக்கொண்டே "குழந்தாய்! இல்லை, இல்லை, மஞ்சளழகி!" என்று அன்புடன் அழைத்தான்.

அவள் அதற்கு உடனே பதில் ஏதும் சொல்லவில்லை. சில விநாடிகள் மௌனம் சாதித்துவிட்டுப் பிறகு மெள்ள நகைத்தாள். "ஏன் நகைக்கிறாய்?" என்று வினவினான் பலவர்மன்.

மஞ்சளழகி குனிந்த தலை நிமிராமலே கேட்டாள், "என்ன? புதுப் பெயர் வைத்து அழைக்கிறீர்களே?" என்று.

"புதிய பெயராயிருந்தாலும் பொருத்தமான பெயர் தானே?" என்று மெள்ள அன்புடன் சொற்களை உதிர்த்தன அவன் உதடுகள்.

"உங்களுக்கும் அந்தப் பெயர் பிடித்திருக்கிறதா?" என்று வினவினாள் அவள். அதைக் கேட்டபோது அவள் குரலுக்கிருந்த குழைவைக் கவனித்தான் பலவர்மன். உங்களுக்கும் என்று அவள் ஒரு 'உம்'மையும் சேர்த்ததன் பொருளும் அவனுக்குத் தெள்ளெனப் புரிந்தது. இளைய பல்லவனுக்கு அந்தப் பெயர் பிடித்திருப்பதை அவள் அந்த 'உம்'மில் குழைத்துக் காட்டுகிறாளென்பதை அவன் உணரத் தவறவில்லை. ஆகவே சற்றுப் புன்முறுவல்

கொண்டு, "ஆம், எனக்கும் பிடித்திருக்கிறது," என்று சொல்லி 'உம்'மை அவனும் அழுத்தி உச்சரித்தான்.

"ஏன், 'உம்'மை அப்படி அழுத்திச் சொல்கிறீர்கள்?" என்று அவள் கேட்டாள், சற்று சங்கடத்துடன்.

"இரண்டு பேருக்கும் அந்தப் பெயர் பிடித்தமா யிருப்பதால்," என்று பலவர்மன் லேசாக நகைத்தான்.

அந்த நகைப்பு அவளுக்குப் பெரும் சங்கடத்தை விளைவித்தது. தன் இதயத்தைத் தந்தை புரிந்துகொண்டு விட்டார் என்ற பயமும் அவள் புத்தியில் உருவெடுத்தது. ஆகவே "இரண்டு பேரா!" என்று ஏதோ கேட்க வேண்டு மென்பதற்காகக் கேட்டாள்.

"ஆம், இரண்டு பேர்தான்," என்றான் பலவர்மன் புன்முறுவலுடன்.

"யார் அந்த இரண்டு பேர்?"

"அவரும் நானும்."

"அவர் என்பது யார்?"

"உனக்கு வேண்டியவர்."

"யார் எனக்கு வேண்டியவர்?"

"மன்னர்."

"ஸ்ரீ விஜய சாம்ராஜ்ய மன்னரா?"

"இல்லை, இல்லை."

"வேறு மன்னர் ஏது?"

"உன் மன சாம்ராஜ்யத்தின் மன்னர்."

இதைச் சொன்னதும் சற்றுப் பலக்கவே சிரித்தான் பலவர்மன். அவன் பேச்சின் போக்கையும் முடிவில் ஏற்பட்ட சிரிப்பையும் சிறிதும் ரசிக்காத மஞ்சளழகி, தனது தோளில் பதிந்து கிடந்த தன் தந்தையின் கையைத் தனது இடது கையால் பிடித்து உதறித் தள்ளியதன்றி, தலையைத் திடீரென நிமிர்த்தி ஆசனத்தைவிட்டுச் சரேலென எழுந்து பலவர்மனை நோக்கித் திரும்பினாள். அவள் முகத்தில்

வெட்கமும் கோபமும் கலந்து தாண்டவமாடினாலும் வெட்கத்தைவிடக் கோபமே மேலெழுந்து நின்றதால் அவள் செவ்வரிக் கண்கள் அதிகமாகச் சிவந்து அக்ஷய முனைக் கோட்டைத் தலைவன் மீது கனலைக் கக்கின. எழுந்து திரும்பிய அவள் தனது ஆசனத்தின் முகப்பைக் கைகளால் பிடித்துக் கொண்டும், பின்பக்கம் உணவுக் கலங்கள் வைக்கப்பட்டிருந்த ஆசனத்தின் முகப்பில் சற்றே வளைந்து சாய்ந்து கொண்டும் குற்றவாளியை விசாரிக்க முயலும் பெரிய ராணிபோல் பலவர்மனைச் சுடும் விழிகளால் நோக்கியதன்றி, "என்ன சொன்னீர்கள்?" என்று சீற்றத்துடன் கேட்கவும் செய்தாள்.

அவள் சீற்றத்துக்குக் காரணம், தான் உண்மையை உணர்ந்துகொண்டு விட்டதேயொழிய வேறில்லை யென்பதை அறிந்து கொண்டாலும், தன் ஏற்பாடு பயனுற வேண்டுமானால் தான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்ட பலவர்மன், தனது சிரிப்பைச் சட்டென்று அடக்கிக் கொண்டு அந்தச் சீறும் விழிகளின் மீது அன்பெல்லாம் அள்ளிக் கொட்டிய பார்வையொன்றை வீசினான். அதைத் தொடர்ந்து உதிர்ந்த அவன் வார்த்தைகளிலும் அன்பு பூரணமாகத் தொனித்தது. "தவறாக ஏதும் சொல்லவில்லை, மகளே! உன் உள்ளத்தில் உள்ளதைத்தானே சொன்னேன்?" என்றான் பலவர்மன் அன்பு ததும்பும் குரலில்.

அவனது அன்பான பார்வை, பார்வையைத் தொடர்ந்து வெளிப் போந்த சொற்கள், சொற்களைத் தழுவிய மதுரமான குரல், இவற்றின் விளைவாகச் சீற்றத்தை ஓரளவு தணித்துக்கொண்ட மஞ்சளழகி, வெறுப்பும் இகழ்ச்சியும் மண்டிய குரலில் கேட்டாள், "என் உள்ளத்தையும் அத்தனை எளிதில் புரிந்துகொண்டு விட்டீர்களாக்கும்?" என்று.

"ஆம்." சர்வ சாதாரணமாகப் பதிலிறுத்தான் பலவர்மன்.

"பெண் உள்ளத்தைப் புரிந்துகொள்வது மிகக் கடினம் என்பது ஆன்றோர் கருத்து," என்று சுட்டிக் காட்டினாள் அவள்.

"அதற்கு விலக்கு மூன்று பேர்," என்றான் பலவர்மன்.

"யார் அந்த மூன்று பேர்?"

"தாய், காதலன், தோழி."

"அந்த மூவரில் நீங்கள் யாருமில்லை."

"இல்லைதான். ஆனால் தாயின் பதவியை வகித்திருக்கிறேன். நீ என் கரங்களில் வளர்ந்தவள், தரையில் நீந்தி, தவழ்ந்து, தளர்நடை புரிந்ததிலிருந்து இன்றுவரை என் கவனத்திலிருந்து நீ விலகவில்லை."

இந்த வார்த்தைகளைப் பலவர்மன் சொன்னபோது அவன் நா தழுதழுத்தது. குரல்கூடச் சற்றுக் கம்மியது. அப்படி அவன் தன் விஷயத்தில் உணர்ச்சிக்கு இடங் கொடுத்ததை அவள் அன்றுவரை பார்த்ததில்லை. அன்று நடந்த எல்லாமே புதிதாயிருந்தது அவளுக்கு. எதற்கும் உணர்ச்சி வசப்படாத தந்தை உணர்ச்சி வசப்பட்டது அவளுக்குப் புதிதாயிருந்தது. வேடிக்கைக்குக்கூட விகல்பமாகப் பேசாத பலவர்மன், தன்னையும் இளைய பல்லவனையும் இணைத்துப் பேசியதன்றி, "உன் மனச் சாம்ராஜ்யத்தின் மன்னர்," என்று இளையபல்லவனைச் சுட்டிக்காட்டியதும் பெரும் வினோதமாகயிருந்தது மஞ்சளழகிக்கு. எந்தக் காரணத்தால் தந்தை அப்படித் திடீரென்று மாறிவிட்டார் என்று திகைத்தாள் அவள். ஒரு தந்தை நேரிடையாகத் தனது மகளிடம் விவாதிக்கத் தகாத விஷயங்களைத் தனது தந்தை அவ்வாறு விவாதித்ததும் பெரும் விசித்திரமாயிருந்தது அவளுக்கு. இத்தகைய மாற்றத்துக்குக் காரணம் புரியாததால் அவள் சற்றே தலையைக் குனிந்துகொண்டு சில விநாடிகள் ஏதோ யோசித்தாள். பிறகு தலை குனிந்த வண்ணமே பேசவும் முற்பட்டு, "தந்தையே!" என்று அழைக்கவும் செய்தாள்.

"ஏன் மகளே?" என்று அன்புடன் வினவினான் பலவர்மன்.

"இன்று உங்கள் போக்கு புதுவிதமாயிருக்கிறது."

"ஆம்."

"ஏதேதோ பேசுகிறீர்கள்."

"ஆம்.'

"ஒரு தந்தை மகளிடம் பேசக்கூடாத விஷயங்களைப் பேசுகிறீர்கள்."

"உண்மைதான்."

"ஏன் பேசுகிறீர்கள் அப்படி?" சீற்றமெல்லாம் குரலிலிருந்து பறக்க, வருத்தமும் வெட்கமும் குரலில் தோய்ந்து நிற்கக் கேட்டாள் மஞ்சளழகி.

பலவர்மனிடமிருந்து உடனே பதில் வரவில்லை. "இதோ பார் மஞ்சளழகி," என்று சில விநாடிகள் கழித்து வந்த பதிலில் அதுவரை கேட்காத புதுத் தொனி இருந்தது. மஞ்சளழகி தன் அழகிய விழிகளை ஏறெடுத்துப் பலவர்மனை நோக்கினாள். அவன் கண்களில் ஏதோ புத்தொளியொன்று படர்ந்து நின்றது. முகம் விவரிக்க இயலாத உறுதியைப் பூண்டிருந்தது. அவன் அடுத்துச் சொன்ன வார்த்தைகளும் உறுதியுடனும் திடத்துடனும் வெளி வந்தன. அவன் உதிர்த்த சொற்கள் ஒவ்வொன்றும் அவள் இதயத்தில் பெரும் இடிகளாகத் திடீர் திடீரென விழுந்தன. அதுவரை அறியாத பெரும் ரகசியமொன்றை அன்று அவள் அறிந்துகொண்டாள். அந்த அறிவு பெற்றதால் அவள் தலை சுழன்றது. ஆசனத்தைப் பிடித்திருந்த கைகள் செயலற்றுப் போயின. உடலும் துவண்டது. மயக்கமுற்று விழும் நிலைக்கு அவள் வந்துவிட்டாள்.

அத்தியாயம் 22

# நான் யார்?

அன்றுவரை தான் என்றுமே கேட்டிராத புதுத் தொனி கண்டத்திலிருந்து ஒலிக்கவும், அந்த விநாடிவரை தான் ஆயுளில் பார்க்காத புத்தொளி முகத்தில் படர்ந்து நிற்கவும், "இதோ என்னைப் பார் மஞ்சளழகி" என்று தன்னை அழைத்த தந்தை முகத்தை ஏறெடுத்து நோக்கிய அக்ஷயமுனைப் பாவை, தந்தை குரலிலும் முகபாவத்திலும் ஏற்பட்ட அந்தப் புது மாற்றத்தைக் கண்டதும் குழம்பினாள். எந்தச் சமயத்திலும் வஞ்சகமும் குரூரமும் நிரம்பும் பார்வையை உடையவரும், அந்தக் குரூரத்திலும் வஞ்சகத் திலுங்கூட இனியதொரு தோற்றத்தையும் நிதானத்தையும் முகத்தில் படரவிட்டுக் கொள்ளக் கூடியவருமான தன் தந்தையின் முகத்தில் அந்தச் சமயத்தில் இயற்கையாக வுள்ள துஷ்டத்தனமும், வீரமும் அடியோடு மறைந்து விட்டதையும் பொறுப்பும் கடமையும் தோய்ந்த கவலைத் தோற்றமே அதில் நிரம்பிக் கிடந்ததையும் கண்ட மஞ்சளழகியின் இதயத்தில் தந்தையின் நிலைபற்றிய குழப்பத்தோடு ஆச்சரியமும் கலந்துகொண்டது. ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் உப தளபதியைக்கூடத் தீர்த்துக் கட்டி அவனையும் சித்திரமாகத் தீட்டி ஸ்ரீவிஜயத்தின் சக்தியைக் கூட லட்சியம் செய்யாமல் அதே அறையில் பலரும் பார்க்கும்படியாகப் படத்தை மாட்டி வைத்திருக்கும் நெஞ்சுரமுள்ள தன் தந்தையின் தைரியமெல்லாம் அப்பொழுது பறந்துவிட்டதையும் ஏதோ பெரும் மனச் சுமையொன்று அவர் சித்தத்தை அழுத்திக் கொண்டிருப்

பதையும் கவனித்த மஞ்சளழகி, 'தந்தையின் இதயச் சுமை எதுவாயிருக்கும்' என்று தன்னைத்தானே ஒரு விநாடி கேட்டுக்கொண்டு விடை காணாமல் தவித்தாள். அந்தக் கேள்விக்கு விலை அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் அடுத்துத் துவங்கிய பேச்சிலிருந்தது. விடை காணக்காண, விடையின் பொருள் மெள்ள விரிய விரிய, மஞ்சளழகியின் உணர்ச்சிகள் பெரும் துடிப்பைப் பெற்றன. உணர்ச்சித் துடிப்பினால் அவள் இதயத் துடிப்பும் புத்தியின் வேகமும் அபரிமிதப்பட்டு அவள் எதையும் தாங்க சக்தியை இழந்த நிலையை அடைந்தாள்.

அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன், "இதோ பார் மஞ்சளழகி" என்று அழைத்துவிட்டானே தவிர, அந்தச் சொற்களுக்கும் அவன் சம்பாஷணையைத் தொடங்கு வதற்கும் இடைக்காலம் அவசியத்துக்கு அதிகமாகவே இருந்தது. தன் அழைப்புக்கிணங்கித் தன்னை ஏறெடுத்து நோக்கிய தன் மகளின் விழிகளை அவன் விழிகள் சந்திக்க மறுத்தன. யாரையும் அலட்சியமாக ஆராய்ச்சி செய்யும் சுபாவமுள்ள அவன் வஞ்சகக் கண்கள் ஒரு விநாடி மட்டும் அவள் பார்வையுடன் கலந்தனவே தவிர அடுத்த விநாடி திரும்பி அக்கம் பக்கத்திலிருந்த சுவர்களையே நோக்கின. கைகளைப் பின்புறத்தில் கட்டிக்கொண்டும் சில சமயங் களில் சுவரையும், சில சமயங்களில் தரையையும் நோக்கிக் கொண்டு மஞ்சளழகியை விட்டுச் சற்றுத் தள்ளியே நின்றும் பேசினான் பலவர்மன். மஞ்சளழகியை அழைத்து அவள் ஏறெடுத்துப் பார்த்த சில விநாடிகளுக்குப் பிறகு மிகுந்த தயக்கத்துடனும் ஆனால் கடமையைச் செய்கிறோமென்ற எண்ணத்தால் உறுதியுடனும் மீண்டுமொரு முறை, "மஞ்சளழகி! மகளே!" என்று அழைத்த அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு, "ஏன் அப்பா!" என்று கனிவுடன் பதில் கொடுத்தாள் மனமெல்லாம் காதலால் கனிய உட்கார்ந்திருந்த அந்தப் பருவக் கன்னி.

"மஞ்சளழகி! எத்தனை அழகான பெயர்! உன் பசும் பொன் நிறத்துக்கு இதைவிட அழகான பெயரை யார் சூட்ட முடியும்? உன் மஞ்சள் உடலை நானும் பார்த்திருக் கிறேன். ஆனால் எனக்கு ஏன் இந்தப் பெயர் மனத்தில் பதியவில்லை? உம்... வளர்ப்பவன் பார்வை வேறு; அடைந்து ஆள்பவன் பார்வை வேறு. ஒருவனுக்குத் தோன்றாதது இன்னொருவனுக்கு தோன்றுகிறது" என்று தானே ஏதோ பேசிக்கொண்ட அக்ஷயமுனைத் தலைவன், "மஞ்சளழகி! உனக்கு இந்தப் பெயரே தற்சமயம் இருக் கட்டும். நான் வைத்த பெயர், உன் இயற்பெயர், உலகத் துக்குத் தெரியும் காலம் வந்தாலும் வரும். வராவிட்டாலும் இல்லை. இன்று அதைப்பற்றி நான் எதுவும் நிச்சயமாகச் சொல்ல முடியாது" என்று ஏதோ புதிர் போடும் முறையிலும் கூறினான்.

அவன் சொற்களின் பொருள் எதுவும் அவளுக்குத் தெரியாததால், அவள் குழம்பினாள். அந்தக் குழப்பத் துடன் கேட்கவும் செய்தாள், "நீங்கள் என்ன சொல் கிறீர்கள்?" என்று.

"உள்ளதைச் சொல்கிறேன் மஞ்சளழகி! உள்ளதைச் சொல்லும் காலம் வந்து விட்டது. அது இத்தனை சீக்கிரம் வருமென்று நான் எதிர்பார்க்கவில்லை. வந்தபின் என் கடமையைச் செய்வது அவசியமாகிறது. ஆகவே இனியும் காலம் தாழ்த்துவது முறையல்ல" என்றான் பலவர்மன், எதிரேயிருந்த ஆசனத்தின் குமிழியைத் தடவிக் கொண்டே.

"நீங்கள் சொல்வது பெரும் புதிராயிருக்கிறது தந்தையே," என்றாள் மஞ்சளழகி குழப்பம் ஒலித்த குரலில்.

பலவர்மன் ஒரு விநாடி மட்டும் அவளைத் திரும்பி நோக்கிவிட்டு, "உன் வாழ்க்கையே ஒரு பெரும் புதிர் மகளே?" என்று திடமாகச் சொன்னான்.

"விடுகதையை விண்டுதான் சொல்லுங்களேன்" என்று கேட்டாள் அவள்.

"முழுவதும் விண்டு சொல்ல எனக்கு உரிமை இல்லை மகளே! ஆனாலும் ஓரளவு சொல்லலாம்; சொல்வதை மட்டும் கேட்டுக்கொள். காலம் வரும்போது மற்றதையும் நீ அறிவாய்," என்று மீண்டும் அவளுக்கு முதுகைத் திருப்பிக் கொண்ட அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன், "மகளே! நம் இருவர் வாழ்க்கையிலும் பெரும் திருப்பங்களை ஏற்படுத்திய நாள் இது. இன்று வந்த இளைய பல்லவன் உன் வாழ்க்கையில் மட்டுமல்ல என் வாழ்க்கை யிலும், ஏன், இந்த ஸ்ரீவிஜய சாம்ராஜயத்தின் வாழ்க்கை யிலும் குறுக்கே புகுந்திருக்கிறான். அதன் விளைவு நல்லதா பொல்லாததா எனக்குத் தெரியாது. ஆனால் அவன் குறுக்கீட்டை, செல்வாக்கை இனி இந்த அக்ஷயமுனையில் அவன் துவங்கக் கூடிய அலுவல்களை நானோ நீயோ தடை செய்ய முடியாது. ஆகவே அவற்றை நமக்கும் நமது நாட்டுக்கும் எத்தனை பயனுள்ளதாகச் செய்துகொள்ள முடியுமோ அத்தனை பயனுள்ளதாகச் செய்துகொள்ள வேண்டும். புரிகிறதா?" என்று கேட்டான்.

உண்மையில் அக்ஷயமுனைக் கோட்டைத்தலைவன் எதைச் சொல்ல முயல்கிறான் என்பது அவளுக்குப் புரிய வில்லை. ஆகவே, "புரியவில்லை," என்று உண்மையைச் சொன்னாள் அவள்.

"புரியாதது எனக்கு வியப்பாயில்லை மகளே! உனக்கு இன்று பல விஷயங்கள் புரியவில்லை. உதாரணமாக என் பேச்சும் போக்கும் உனக்குப் புரியவில்லை. ஒரு தந்தை மகளிடம் பேசத்தகாத வார்த்தைகளை நான் பேசினேன் அல்லவா?" என்று கேட்டான் அவன்.

"ஆம், பேசினீர்கள்" என்றாள் அவள், அவன் எதற்காக அந்தக் கேள்வியைக் கேட்கிறான் என்பதை அறியாமல்.

"ஏன் அப்படிப் பேசுகிறீர்கள் என்று நீ கேட்டாய்," என்று பலவர்மன் பழைய கேள்வியை நினைப்பூட்டினான்.

"ஆம், கேட்டேன்," என்றாள் அவள் - எதற்காக அந்தப் பழைய கேள்விகளைத் திரும்ப வலியுறுத்துகிறார் தந்தை என்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் மிகுந்த குழப்பத்துடன்.

"அந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது அத்தனை சுலபமல்ல மகளே!" என்ற பலவர்மன் சோகப் பெருமூச்சு விட்டான்.

"ஏன்? என்ன கஷ்டம் அதில்?" என்று அவள் வினவினாள், குழப்பம் முன்னைவிட அதிகமாக.

"சுமார் பத்தொன்பது வருஷங்களின் பொய்யை உடைப்பது அத்தனை சுலபமென்று நினைக்கிறாயா நீ?" என்று கேட்டான் பலவர்மன்.

"பத்தொன்பது வருஷங்களின் பொய்யா?"

"ஆம்."

"அத்தனை நாள் பொய் ஏன் மறைந்து கிடந்தது?"

"மெய்யைச் சொல்ல அவசியமில்லை."

"இப்பொழுது அவசியம் ஏற்பட்டிருக்கிறதா?"

"சந்தேகத்துக்கிடமின்றி ஏற்பட்டிருக்கிறது. இல்லா விட்டால் இந்த விஷயத்தை இன்று நான் பேசத் துவங்கி இருக்கமாட்டேன்."

அவன் சொற்கள் அவளை மேலும் மேலும் குழப்பின. அன்று காலை முதலே உணர்ச்சிகள் நரம்புகளைப் பல வழிகளில் உருட்டிக் கொண்டிருந்ததால் பெரும் பலவீன மடைந்திருந்தாள் மஞ்சளழகி. இளையபல்லவன் இதயத் தைப் பறித்துக்கொண்டதால் ஏற்பட்ட சிந்தனைகள், கடற்கரை நிகழ்ச்சியில் கண்ட விளைவு களால் உண்டான மனநெகிழ்ச்சி, தவிர நடனத்தில் ஆயாசம் எல்லாமாகச் சேர்ந்து அவள் கைகளுக்கும் கால்களுக்கும் பெரும் சோர்வைக் கொடுத்தன. பலவர்மன் அவளைத் திரும்பிப் பார்க்காமலே மேற்கொண்டும் பேசினான். "மகளே! உனக்கு இப்பொழுது வயது இருபதை எட்டிக் கொண்

டிருக்கிறது. சுமார் பத்தொன்பது ஆண்டுகளாக நீயும் நானும் எத்தனையோ மிகிழ்ச்சியுடனிருந்தோம். அந்த மகிழ்ச்சி மேலும் நீடிக்குமா நீடிக்காதா என்பது நான் சொல்வதைக் கேட்டதும் உன் மனத்தில் விளையக்கூடிய உணர்ச்சிகளைப் பொறுத்தது. ஆம்! நான் சொல்லப் போகும் விஷயம் எத்தகைய மாற்றத்தையும் ஏற்படுத்தக் கூடியதுதான். அந்த மாற்றம் மகிழ்ச்சியையும் அளிக்கலாம், வெறுப்பையும் அளிக்கலாம்" என்று கூறிவிட்டுச் சற்று நிதானித்த அவன், "வெறுப்பை அளிப்பதானால் அதையும் நான் ஏற்கக் கடமைப்பட்டவன். ஒரு தந்தை மகளிடம் பேசக்கூடாத வார்த்தைகளை எப்படிப் பேசினேன் என்று கேட்டாய். பேசினதற்கு உண்மைக் காரணம் தெரியுமா?" என்று கேட்ட பலவர்மன் சரேலெனத் திரும்பி அவளைக் கூர்ந்து நோக்கினான்.

காரணத்தை ஓரளவு அவள் ஊகித்துவிட்டதால் அவள் கண்கள் அவனை வெறித்து நோக்கின. அவள் முகத்தில் ரத்தம் குபீரெனப் பாய்ந்து உணர்ச்சி வெள்ளத் தைக் காட்டின. "உம் தயங்க வேண்டாம், சொல்லுங்கள்," உணர்ச்சி வேகத்தில் வெளிவந்தன அவள் சொற்கள்.

சிரமப்பட்டு பலவர்மன் முகத்தில் பெரும் மாறுதலும் உறுதியும் தாண்டவமாடின. அவன் பதில் கூறியபோது சொற்களும் திடமாகவே உதிர்ந்தன. "நீ என் மகளுமல்ல; நான் உனக்குத் தந்தையுமல்ல" என்ற பலவர்மன், ஏதோ பெரும் தியாகத்தைச் செய்தவன் போல் அவளை உற்று நோக்கினான்.

திடீரென திடப்படுத்திக் கொண்ட மஞ்சளழகியின் இதயம் வெடித்துவிடும் ஸ்திதிக்கு வந்துவிட்டது. அவன் விஷயத்தை விடுகதையாகத் துவங்கி மெள்ள மெள்ள விவரிக்க முற்பட்டதிலிருந்தே ஏதோ பெரும் ரகசியம் தன் வாழ்வில் புதைந்து கிடக்கிறதென்பதை அவள் ஊகித்துக் கொண்டாளானாலும் அந்த ரகசியம் அத்தனை விபரீத

மாக இருக்குமென்று கனவுகூடக் காணாததால், எதிர் பாராத விதமாக வெளிப்பட்ட அந்த விபரீத உண்மை அவள் புத்தியை அடியோடு கலக்கித் தலையைச் சுழல வைக்கவே உட்கார்ந்திருந்த ஆசனத்தை அவள் கெட்டி யாகப் பிடித்துக்கொண்டாள். கைகளும் செயலிழந்து போகவே ஆசனத்திலிருந்து விழவும் போனாள். அவள் தலை சுழன்றதையும் அவள் தள்ளாடியதையும் பார்த்த பலவர்மன் வெகு வேகத்தில் தாவி அவளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். பிறகு குழந்தையைத் தூக்குவது போல் தன் இரு கைகளிலும் தூக்கிக்கொண்டு சற்று எட்ட இருந்த பஞ்சணையில் அவளைப் படுக்க வைத்துவிட்டு அறைக் காவலரை அழைத்துப் பன்னீரும் விசிறியும் கொண்டுவர உத்தரவிட்டான். பன்னீருடனும் விசிறியுட னும் மஞ்சளழகியின் தோழிமாரும் வந்தனர்.

அவர்களை வெளியே போகச் சொன்ன பலவர்மன் மஞ்சளழகியின் முகத்தில் தானே பன்னீர் தெளித்து விசிறினான். அவன் செய்த சைத்தியோபசாரங்களால் கண் விழித்த மஞ்சளழகி தன் பக்கத்தில் அமர்ந்திருந்த பலவர்மனைக் கண்டு மெள்ளப் புன்னகை புரிந்தாள். அந்தப் புன்னகை பலவர்மன் இதயத்தில் அமுதமெனப் பாய்ந்தது. அத்தனை நாள் அவள் பிறவி ரகசியத்தை மறைத்ததற்காக அவள் தன்னை வெறுப்பாளென்று நினைத்த பலவர்மன் அவள் தன்னை வெறுக்கவில்லை யென்பதை அவள் அழகிய அதரங்களில் விளையாடிய புன்னகையிலிருந்து புரிந்துகொண்டதும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தையே அடைந்துவிட்டதாக எண்ணினான். அந்த எண்ணத்தாலும் சுமார் பத்தொன்பது வருஷ காலம் வளர்ந்த பாசத்தாலும் அவள் குழல்களைக் கோதிவிடவும் செய்தான்.

அந்தச் சில நிமிடங்களில் பலவர்மன் அவனிடம் உறைந்து கிடந்த நல்ல குணங்களுக்கு இருப்பிடமாக விளங்கினான். நல்லதும் கெட்டதும் கலந்த மனித

ஜன்மத்தில் சிலரிடம் நல்லது அதிகமாவும் சிலரிடத்தில் கெட்டது அதிகமாகவும் காணக்கிடக்கிறது. ஆனால் எப்பேர்ப்பட்ட கெட்டவனிடமும் அடிப்படையாகப் பிறவியில் உறைந்துள்ள நல்ல குணங்கள் ஏதாவதொரு சமயத்தில் வெளிவரவே செய்கின்றன. அத்தகைய ஒரு நிலையிலிருந்த பலவர்மனிடம் இதய வஞ்சகம், சுயநலம் எல்லாம் அந்தத் தருணத்தில் மறைந்து அன்பும் பாசமும் மேலெழுந்து நின்றன. ஆகவே அன்பெல்லாம் ததும்ப மஞ்சளழகியை அழைத்தான் அவன், "மகளே!" என்று.

அவள் புன்முறுவல் மேலும் முகத்தில் நன்றாகப் படர்ந்தது, "ஏன்?" என்று கேட்டாள் அவள்.

"இப்பொழுது எப்படியிருக்கிறது?"

"பாதகமில்லை."

"அதிர்ச்சி தரும் செய்தியைச் சொல்லிவிட்டேன்."

"ஆமாம்."

"எத்தனையோ நிதானமாகத்தான் சொன்னேன்."

"ஆமாம்."

"இருப்பினும் மூர்ச்சையாகிவிட்டாய். உன்மேல் பிசகில்லை. எனக்குச் சொல்லும் முறை தெரியவில்லை. நாகரிக சமூகத்தில் நான் உலாவி வெகுநாள் ஆகிவிட்ட தல்லவா?"

அவள் சிரித்தாள் "ஏன் சிரிக்கிறாய்?" என்று வினவினான் பலவர்மன்.

"நீங்கள் நாகரிக சமூகத்தில் பழகி நாளாகிறது. நான் அதைக் கண்டதேயில்லை" என்றாள் அவள்.

"இருப்பினும் நீ...'

"சொல்லுங்கள்," என ஆசையுடன் கேட்ட மஞ்சளழகி பலவர்மன் கையைப் பிடித்துக் கொண்டாள். அந்தப் பிடிப்பில் புத்திரியின் வாஞ்சை பூர்ணமாக ஓடுவதை உணர்ந்த பலவர்மன் அவள் கன்னத்தைத் தடவிக் கொடுத்து, "வேண்டாம் மகளே! மேற்கொண்டு

விவரம் கேட்காதே. நீ எனக்குப் பிறந்த மகளல்ல. அதை மட்டும் தெரிந்துகொள், போதும்," என்றான்.

"போதாது. முழுதும் சொல்லுங்கள், நான் யார்? எங்கிருந்து என்னைக் கொண்டு வந்தீர்கள்!" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"நான் கொண்டு வரவில்லை," என்று சொன்ன பலவர்மன் வருத்தம் தோய்ந்த புன்முறுவலொன்றைத் தன் வதனத்தில் படரவிட்டுக் கொண்டு, " நான் எங்கிருந்தோ உன்னைத் தூக்கிக்கொண்டு வந்ததாக நீ நினைப்பதில் தவறில்லை மகளே! என் தற்கால வாழ்க்கை யாரையும் அபகரித்துச் செல்லும் கொள்ளைக்காரனையே யாருக்கும் நினைப்பூட்டும். நான் நல்லவனல்ல. என் வாழ்வில் நான் பல கொடிய செயல்களைப் புரிந்திருக்கிறேன். ஆனால் உன் விஷயத்தில் நான் எந்தப் பாவத்தையும் செய்யவில்லை. சுமார் பத்தொன்பது வருஷங்களுக்கு முன்பு நீயாக என்னிடம் வந்து சேர்ந்தாய்" என்று கனவில் பேசுவது போல் பேசினான். "ஆம். பத்தொன்பது வருஷங்களுக்கு முன்பு நடந்த கதை அது. அப்பொழுது நல்ல மழைக்காலம். அக்ஷயமுனையில் வெய்யில் எவ்வளவு உக்கிரமோ மழையும் அப்படி உக்கிரமென்பதுதான் உனக்குத் தெரியுமே. நான் சொல்லும் வருஷத்தில் மழை மிகப் பலம். அக்ஷயமுனையின் துறைமுகத்திலிருந்த கப்பல்களில் இரண்டு கவிழ்ந்துவிட்டன. இருளைக் கிழித்த மின்னலும் அக்ஷயமுனைக் கோட்டையைப் படுதூளாக்குவதுபோல் சப்தித்த இடிகளும் பிரளயத்தைச் சிருஷ்டிக்க முற்பட்டது போல் இருந்தன. நான் இதே அறையில்தான் அன்றும் உட்கார்ந்திருந்தேன். வெளிக்கதவு தடதடவென்று இடிபட்டது. என்ன காரணத்தாலோ காவலரை ஏவாமல் அன்று நானே சென்று வெளிப் பெருங் கதவைத் திறந்தேன். சொட்டச் சொட்ட மழையில் நனைந்த வீரனொருவன்

கையில் சுற்றிய ஒரு துணியுடன் நின்றிருந்தான். என்னை இடித்துத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்த அவன் என்னையும் கூட வரும்படி சைகை செய்தான். நான் அவனை அழைத்துக்கொண்டு இந்த அறைக்கு வந்தேன். இதோ நீ படுத்திருக்கும் அதே மஞ்சத்தில் அவன் துணிச் சுருளை வைத்துப் பிரித்தான். அதற்குள் நீ இருந்தாய். அப்பொழுது உனக்கு ஒரு வயது. உன் மலர்க் கண்கள் மூடிக்கிடந்தன். உன் கனி இதழ்கள் மிகவும் சிவந்திருந்தன. அப்பொழுதும் இதே மஞ்சள் நிறம் நீ..." என்று சற்று அவள் சரிதையை நிறுத்திய பலவர்மன். "இன்றும் இங்கு படுத்திருக்கிறாய். அதே மஞ்சம். அதே பெண். ஆனால் எத்தனை வேறுபாடு?" என்று கூறினான்.

மஞ்சளழகியின் சித்தம் பல திசைகளில் சுழன்றது. "வந்தவன் யார்?" என்று மெள்ளக் கேட்டாள்.

"அவன் ஒரு வீரன்."

"என்னை மட்டும் இங்கு விட்டுப் போய் விட்டானா?"

"இல்லை. உன்னுடன் ஓர் ஓலையையும் விட்டுப் போனான்."

"அந்த ஓலையில்?" மஞ்சளழகி கேள்வியுடன் கண்களை உயரத் தூக்கினாள்.

"நீ யார் என்பது இருந்தது," என்றான் பலவர்மன்.

"நான் யார்?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"சொல்ல எனக்கு உரிமையில்லை. துணிவும் இல்லை." திட்டமாக வந்தது பலவர்மனின் பதில்.

# கடல்





# புறா

சாண்டில்யன்

## 23 கரும்பும் கூலியும்

அத்தியாம் 23

# கரும்பும் கூலியும்

**த**ந்தை சொன்ன சொற்களால் சிந்தை நெகிழ்ந்து பஞ்சணையில் கிடந்த மஞ்சளழகியின் மலர் விழிகளில் கனவுச் சாயை பல விநாடிகளுக்குப் படர்ந்து நின்றது. பெற்ற தந்தையென்று அன்று வரை தான் நினைந்திருந்தவர் திடீரென வளர்ப்புத் தந்தையாக மாறிவிட்டதை எண்ண, எண்ண அவள் மனத்தில் விவரிக்க இயலாத குழப்பமும் வருத்தமும், இன்பமும் கலந்து தாண்டவமாடின. இளைய பல்லவன் தன் வாழ்வில் அன்று காலையில்தான் காலடி எடுத்து வைத்தானானாலும் அந்த ஒரே நாளில் ஏற்பட்டு விட்ட பல சிக்கல்ளை நினைத்தால் குழப்பமும், தனது பிறவியே பெரும் கதையாகி உண்மைத் தாய் தந்தையர் யாரென்பதை அறிய முடியாத காரணத்தால் வருத்தமும், இடையிடையே இளைய பல்லவனின் வீரமும் சிந்தையில் வளைய வந்ததால் இன்பமும் ஒன்றுக்கொன்று பின்னிப் பின்னி ஏதேதோ கனவு அலைளை அவள் மனத்தில் பாய்ச்சிக் கொண்டிருந்தன. அந்தக் கனவின் விளைவாகப் பஞ்சணையில் தன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்ட பலவர்மனைக் கூட அவள் நீண்ட நேரம் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் சொன்ன தன் பிறவிப் பெரும் கதைக் காட்சியைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்தாள். பத்தொன்பது வருடங் களுக்கு முன்பு பெய்த அந்தப் பெருமழை அவள் சிந்தையில் அப்பொழுதும் பெய்தது. அந்தப் பெரும் காற்று அந்த விநாடியிலும் அவள் இதயத்தின்மீது விர்விர்ரென்று அடித்தது. தன்னைத் துணியில் சுற்றித் தூக்கி வந்த

வீரனையும் அவள் மனக் கண் பார்த்தது. அவன் வெளிப் பெருங் கதவைத் தடதடவெனத் தட்டின தட்டல் அவள் இதயத்தைப் பலமாகத் தட்டியது. 'எங்கிருந்து வந்தேன்? எதற்காக இங்கு வளர்ந்தேன்? நான் யார், நான் யார்?' என்ற கேள்விகள் திரும்பத் திரும்ப அவள் புத்தியில் எழுந்ததால் வேதனை விளைந்ததேயொழிய விடை எதுவும் கிடைக்க வில்லை அவளுக்கு. இந்த வேதனையுடன் வேதனையாக இளையபல்லவனையும் நினைத்துப் பார்த்த மஞ்சளழகி அவனிடம் சீற்றம் கொள்வதா காதல் கொள்வதா என்பது சரியாக விளங்காததால், உள்ளது காதலானாலும் அதை மறைத்துச் சீற்றம் கொண்டுவிட்டதாகத் தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டாள் - அன்றுவரை அக்ஷயமுனைக் கோட்டைத்தலைவனின் அருமந்த செல்வியாக, கொள் ளையரைக் கவர்ந்த ராணியாக, எந்தக் கல்மஷமும் அற்ற சுதந்திரப் பறவையாக திரிந்து வந்த தன் வாழ்வு, இளைய பல்லவன் வருகையால் எத்தனை மாற்றத்தை அடைந்து விட்டது என்பதை எண்ணி, 'இவர் ஏன் வந்தார் இங்கே?' என்று கடும் கோபத்துடன் தன்னைக் கேட்டுக்கொண் டாள். அந்தக் கோபத்தின் ஊடே எழுந்த இளைய பல்லவனின் சிரித்த முகம், சிங்கத்தின் குகைக்குள் புகுந்து சிங்கத்தையே மிரட்டுவது போல் தன் தந்தையை மிரட்டிய காட்சி, வில்வலனது வாளை அனாயாசமாகத் தன் வாளால் சுழற்றி வானத்தில் விசிறிவிட்ட அற்புதம், இவை அந்தக் கோபத்தைப் பெரிதும் சமனப்படுத்தின. அத்துடன் கடைசியாக அவன் தன் இடையைத் தொட்டது, தொட்ட கை தொட்ட இடத்தில் நின்றது, இவற்றை நினைக்க நினைக்க நினைக்க இன்ப அலைகள் அவள் உடலை ஊடுருவிச் சென்றன.

இப்படி மாறுபட்ட உணர்ச்சிகளால் ஏற்பட்ட மன அலைச்சலாலும், அவற்றின் விளைவாக எழுந்த கனவுக் காட்சிகளாலும் பேசாமலே நீண்ட நேரம் படுத்துக் கிடந்த

மஞ்சளழகி கடைசியாக, தன் மனத்தைச் சற்றே திடப் படுத்திக் கொண்டு மெள்ளப் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து கனவிலிருந்து விழித்தவள்போல் தன் கண் களைக் கசக்கிக் கொண்டாள். அவள் மன ஓட்டத்தையும் நெகிழ்ச்சியையும் இன்ப துன்பங்களையும் மாறிமாறித் தெரிந்த முக பாவங்களிலிருந்து உணர்ந்து கொண்ட பலவர்மன் அவள்மீது பரிதாபம் கலந்த பார்வையை வீசியதன்றி, "மகளே! பெருங்குடி மக்கள் எந்த அதிர்ச்சி யையும் தாங்கக் கடமைப்பட்டவர்கள். நாட்டு வரலாற்றில் பிணைபட்டிருப்பவர்கள். மன அலைச்சலுக்கு இடம் கொடுப்பதில் அர்த்தமில்லை" என்று அன்புடன் கூறவும் செய்தான்.

அவன் பேச்சில் பெரும் பொருள் புதைந்து கிடப் பதை மஞ்சளழகி உணர்ந்துகொண்டாள். தான் பெருங்குடி மகளென்பதையும், தன்னைச் சூழ்ந்திருக்கும் மர்மத்தாலும் தான் மனம் நெகிழ்வது உசிதமில்லையென்பதையும் கடமையை முன்னிலையில் வைத்துக் காரியம் செய்வதே தன் பொறுப்பு என்பதையும் தந்தை சுட்டிக் காட்டுகிறார் என்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்ட மஞ்சளழகி "தந்தையே" என்று மேலும் விளக்கம் கேட்கக் கொஞ்சும் குரலில் பலவர்மனை அழைத்தாள்.

அசுர குணமுள்ள பலவர்மனின் முகத்திலும் அந்தச் சொல் பெரும் இன்பத்தை விளைவித்தது. "மகளே!" என்று அவனும் அவளை அழைத்தான்.

மஞ்சளழகியின் மலர்விழிகள் அவனை ஏறெடுத்து நோக்கின. "ஏன் தந்தையே?" என்று வினவினாள் அவள், அன்பு ததும்பும் குரலில்.

பலவர்மன் கூறிய பதிலில் உணர்ச்சி பெரிதும் பிரவாகித்தது. "உனக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன் மகளே!" என்ற பலவர்மன் குரலில் ஒரு குழைவும் இருந்தது.

அந்தச் சில நாழிகைகளில் பலவர்மன் அத்தனை தூரம் மாறிவிட்டது மஞ்சளழகிக்குப் பெரும் வியப்பாயிருந்தது. உணர்ச்சிகளைச் சிறிதும் வெளிக்குக் காட்டாதவரும், திடமாகப் பேச வல்லவருமான தன் தந்தையின் பேச்சும் இதயமும் இத்தனை தூரம் குழையும் என்பதை அவள் சொப்பனத்திலும் நினைக்காததால் வியப்பு விகசித்த முகத்துடன் பலவர்மனை நோக்கி, "எதற்குக் கடமைப்பட்டிருக்கிறீர்கள்?" என்று வினவினாள்.

"நான் உன் தந்தையல்ல என்பதைத் தெளிவு படுத்தினேன்..." என்றான் பலவர்மன் சற்றுத் தயக்கத்துடன்.

"ஆம், தெளிவுபடுத்தினீர்கள்," என்றாள் மஞ்சளழகி அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதை அறியாமல்.

"தந்தையல்ல என்று தெரிந்த பின்பும், தந்தையே என்று அழைக்கிறாய்?" இதைச் சொன்ன பலவர்மனின் குரல் பெரிதும் தழுதழுத்தது. அவள் குழலைக் கோதிய கையும் லேசாக நடுங்கியது.

அவன் இதய தாபத்தை மஞ்சளழகி நன்றாகப் புரிந்து கொண்டாள். தந்தை மற்றவருக்கு ஆயிரம் துஷ்டரானாலும், தான் சம்பந்தப்பட்டவரை அவர் அன்பின் சொரூபம் என்பதையும், தானில்லாவிட்டால் அவர் வாழ்வே அவருக்கு அர்த்தமற்றதாகிவிடும் என்பதையும் அறிந்துகொண்ட மஞ்சளழகி, தந்தையின் தாபம் மிகுந்த இதயத்தின் வறட்சிக்கு அன்பு நீரை ஊற்ற, "எனக்குத் தெரிந்த தந்தை நீங்கள்தானே?" என்று கூறினாள்.

"ஆம் இருப்பினும் மாற்றம் தெரிந்தபின் மனம் மாறுவது இயற்கை," என்றான் பலவர்மன்.

"இயற்கை அப்படியும் இருக்கலாம்," என்றாள் அவள்.

"வேறெப்படி இருக்கும்?"

"தெரிந்து பழகிய இடத்தில் ஊறிவிட்ட அன்பும் உறவும் தெரியாத இடத்துக்குத் திடீரென மாறாதிருப்பதும் இயற்கைதான்."

"அப்படியானால் உன் அன்பு-?"

"உங்களிடமிருந்து எப்படி மாறும்?"

"ஏன் மாறக்கூடாது? நீ யாரென்பதையே நான் மறைத்து வைக்கவில்லையா?"

"மறைத்தாலென்ன? மகளைப்போல் வளர்த்தீர்கள்."

"வளர்க்க வேண்டிய கடமையிருந்தது. வளர்த்தேன்."

"எல்லோரும் கடமையை நிறைவேற்றுகிறார்களா?"

"இல்லை. ஆனால் நிறைவேற்ற எனக்கு அவசிய மிருந்தது."

"என்ன அவசியம்?"

"உன்னைப் பெற்றவரின் ஆணை."

"யார் அவர்?"

இதைக் கேட்டதும் பலவர்மனின் இதழ்களில் வருத்தம் தோய்ந்த புன்முறுவலொன்று படர்ந்தது. "சொல்ல எனக்கு உரிமையுமில்லை, துணிவுமில்லை," என்று அந்தப் பழைய பல்லவியையே அவன் பாடினான்.

அந்தப் பதிலைத் தொடர்ந்து மஞ்சளழகி ஏதேதோ கேள்விகளைக் கேட்டும் பலவர்மனிடமிருந்து மர்மத்தை விளக்கக்கூடிய சொல் எதுவுமே வரவில்லை. அவளது பிறவி மர்மத்தை உடைக்கத் திட்டமாக மறுத்துவிட்ட அக்ஷயமுனைக் கோட்டைத்தலைவன் ஒன்று மட்டும் சொன்னான், "மகளே! உன் பிறவியின் மர்மம் ஒருநாள் வெளிப்பட்டாலும் வெளிப்படலாம். மறைந்தே இருந்தாலும் இருக்கலாம். ஆனால் ஒரு விஷயம் நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். இளையபல்லவனுக்கு நீ எந்தவிதத்திலும் தாழ்ந்தவள் அல்ல. அவன் எத்தனை பெருங்குடி மகனோ அத்தனை பெருங்குடியில் நீயும் பிறந்தவள். உனக்கு அவன் தகுதியல்லவென்று எனக்குத் தோன்றியிருக்கும் பட்சத்தில், உன் ரத்தத்துக்கு இணையான ரத்தம் அவன் உடலில் பாயவில்லையென நான் கருதும் பட்சத்தில் அகூதாவி னால் அந்த அக்ஷயமுனைக் கோட்டம் அழிந்து போவதா

னாலும் இளையபல்லவன் உன்னை அணுகக்கூட விட மாட்டேன். நீண்ட யோசனைக்குப் பிறகே உன்னை இளையபல்லவனுக்குக் கொடுப்பதில் தவறில்லையெனத் தீர்மானித்தேன். பிற்காலத்தில் ஒருவேளை உன் பிறவி மர்மம் வெளிப்பட்டாலும் உன் திருமணத்தை யாரும் ஆட்சேபிக்க முடியாது. நீ அவனை மணப்பதால் உன் விருப்பம் பூர்த்தியாவது மட்டுமல்ல, அக்ஷயமுனைக்குப் பூர்வகுடிகளால் ஏற்படும் ஆபத்து சமாளிக்கப்படுவது மட்டுமல்ல, ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்துக்கும் பெரும் பலன் ஏற்படும்," என்றான் பலவர்மன்.

"ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்துக்கு என்ன பலன் ஏற்படும்?" என்று வினவினாள் மஞ்சளழகி.

"பெரும் படைத்தலைவன் ஒருவன், அதுவும் தற்சமயம் கடற்படைப் போரில் வல்லவனொருவன் சோழர்களிடமிருந்து ஸ்ரீவிஜயத்திடம் இழுக்கப்படுவான்," என்றான் பலவர்மன்.

"இழுபட அவர் இஷ்டப்படாவிட்டால்?"

"நீ கிடைக்கமாட்டாய் அவனுக்கு."

"அதை அவர் பொருட்படுத்தாவிட்டால்?"

பலவர்மனின் இதழ்களில் புன்முறுவல் தாண்டவமாடியது. "மனிதனை அறியும் சக்தி ஓரளவு உன் தந்தைக்கு உண்டு மகளே! ஆடலில் உன் கை நீட்டுக்கு இழுபட்ட அந்த ஆடவன் நீ நினைத்தபடி ஆடுவான் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. கரும்பு தின்னக் கூலியா என்று ஒரு தமிழ்ப் பழமொழி உண்டு," என்று சுட்டிக் காட்டினான் பலவர்மன்.

"உண்டு." என்றாள் மஞ்சளழகி சங்கடத்துடன்,

"கரும்பும் தருகிறேன், கூலியும் தருகிறேன். கசக்கிறதா அவனுக்கு?"

"கூலியா?"

"ஆம். நீ கரும்பு; அக்ஷயமுனைக் கோட்டையில் எனக்கு அடுத்த பதவி யாருக்கும் எளிதில் கிட்டாத பெரும் பதவி அதையே கூலியாக அளிக்கிறேன்."

"இரண்டையுமே அவர் வெறுத்தால்?"

பலவர்மன் சிறிது நேரம் பதிலேதும் சொல்லவில்லை. ஏதோ யோசித்துவிட்டுச் சொன்னான், "வெறுக்காம லிருக்கும்படி பார்த்துக் கொள்வது உன் பொறுப்பு" என்று.

"என் பொறுப்பா!" அவள் கேள்வியில் வியப்பு மண்டிக் கிடந்தது.

"ஆம்."

"என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"மீண்டும் ஒரு தந்தை மகளிடம் பேசக்கூடாத வார்த்தைகளைப் பேசச் சொல்கிறாய் மகளே! பேச இஷ்டமில்லை எனக்கு. ஆனால் கடமையை முன்னிட்டுப் பேசுகிறேன். வண்டை வசிகரிக்கும் முறையை மலருக்கு யாரும் சொல்லித் தருவதில்லை. மனத்தை ஒருவனிடம் பறிகொடுத்த கற்புடைய மகளிருக்கு அவனை மணாள னாக அடைவதற்கான அவசியத்தையும் யாரும் புகட்டுவது இல்லை" என்று கூறிவிட்டு, அதற்குமேல் அங்கிருக்க இஷ்ட மில்லாமல் எழுந்திருந்து விடுவிடுவென அந்த அறையை விட்டு வெளியேறினான் பலவர்மன். மஞ்சளழகிக்குப் படுக்கும் அறை, மாளிகையில் தனியே இருந்தாலும் அந்த அறைக்குப் போகாமல் இந்த இரவு முழுவதும் பஞ்சணை யிலேயே படுத்துக் கிடந்தாள். தந்தை கூறிய பல விஷயங்கள் மனக்கூடத்திலேயே எழுந்து போராட, திரும்பத் திரும்ப நினைத்த விஷயங்கள் சிந்தையில் உலாவி வர, பஞ்சணை யில் புரண்டாள் அவள். நித்திரையின்றி அப்படிப் புரண்டவளின் மனநிலை, பொழுது விடிந்ததும் பெரும் குழப்பத்திலிருக்கவே அந்தக் குழப்பத்தை நீக்கிக்கொள்ளும் நோக்கத்துடன் பல் துலக்கி முகம் கழுவிச் சிறிது பாலை

மட்டும் பருகிவிட்டு மாற்றுடை அணிந்து மாளிகையை விட்டு வெளியே நடந்தாள். எங்கு செல்ல வேண்டும் என்ற நிர்ணயமில்லாமல் கால் சென்ற வழியே நடந்த மஞ்சளழகி, கடைசியில் கடற்கரைக்கே வந்து சேர்ந்தாள். அவள் கால்கள்தான் காரணமின்றி அவளை அங்கு இழுத்து வந்தனவா அல்லது அவள் மனம்தான் கால்களை அந்தக் கடற்புறத்துக்குத் திருப்பிவிட்டதா என்பதை எண்ணியும் விளங்காத சிந்தையுடன் கொள்ளையர் குடிசைகளை நாடிச் சென்றாள் மஞ்சளழகி. செல்லும் வழியில் ஒரே ஒரு விநாடி மட்டும் நின்று இளையபல்லவனின் மரக் கலத்தை ஏறிட்டு நோக்கினாள் அவள். அடுத்த விநாடி அந்த மரக்கலம் இருந்த திசைக்கு நேர் எதிர்த்திசையில் நடந்தாள் அவள். எந்தக் காரணத்தை முன்னிட்டும் அன்று இளைய பல்லவன் கண்களில் படக்கூடாதென்று உறுதிகொண்ட மஞ்சளழகி, கடற்கரையில் கிழக்குக் கோடியில் இருந்த யவனர்கள் குடிசைகளை நோக்கி வேகமாக நடந்தாள். அந்தக் குடிசைக் கூட்டத்தின் யவன மாலுமிகளின் தலைவ னின் குடிசைக்குள் நுழைந்து அங்கிருந்த துணைவியின் உதவியால் நீராடும் இடையாடையும் மேலாடையும் அணிந்த மஞ்சளழகி தன் இதய தாபத்தையும், அதனால் ஏற்பட்ட உடல் வெப்பத்தையும் தணித்துக் கொள்ளக் கடலில் நீராடும் நோக்கத்துடன் கடலலைகள் தரைமீது மோதிக் கொண்டிருந்த இடத்தை அடைந்தாள். அவள் போகும் நிலையைப் பார்த்த யவன கொள்ளைக்காரர் களும் அவர்கள் துணைவிகளும் அவள் முகத்திலிருந்த ஏக்கத்தையும் கண்களில் சிவப்பையும் கண்டு அவளை அணுகாமல் எட்டவே நின்றார்கள். அப்படி எட்ட நிற்கா மல் விசாரிக்க அருகில் வந்த ஓரிரு கொள்ளைக்காரர் களைக் கையால் விலக்கிவிட்டு நீர்க் கரையை நோக்கிச் சென்ற மஞ்சளழகி படகுகளோ வலைஞரோ இல்லாத

தனி இடமாகப் பார்த்துக் கடல் நீரில் இறங்கி அலைகளில் மூழ்கினாள். அவள் அழகிய உடலை அலைகள் ஆசையுடன் தூக்கி தூக்கிப் புரட்டிக் கொடுத்தன. அவள் அலைகளில் நீந்திச் சென்றாள். கடலின் அலைக்கரங்கள் அவள் உடல் அசதியைப் போக்கப் பிடித்துப் பிடித்துச் சுழன்றன. அலைகள் எழுப்பிய காற்றின் சத்தமும் அவள் சித்தத்தின் குழப்பத்தைத் துடைத்துச் சுத்தம் செய்தது. காலை வெய்யில் கிளப்பிய இதமான உஷ்ணம்கூட அவளுக்குப் பெரும் சாந்தியை அளித்தது. எந்தத் துன்பத் தையும் குழப்பத்தையும் துடைக்கும் இயற்கையின் இணை யிலாச் சக்தியை எண்ணி அவள் வியப்பெய்தினாள். அந்த வியப்புடனும் மனச் சாந்தியுடனும் ஓரளவு மகிழ்ச்சி யுடனும் நீண்ட நேரம் அலைகளில் திளைத்து விளை யாடிய மஞ்சளழகி, ஓர்அலையில் புரண்டு கரைக்கு வந்து தன்னிரு கால்களையும், தரையில் ஊன்றி எழுந்து நின்றாள். "இனி நான் என் வாழ்வைப்பற்றி நிதானமாக யோசிக்க முடியும்," என்று தன்னைத்தானே தேற்றிக்கொண்டு அலைகள் காலில் திரும்பத் திரும்ப நுரையைப் பாய்ச்ச நீர்க்கரையோரமே நடந்து சென்றாள். கடைசியாக தலையைத் துவட்ட முயன்று மணல் வெளிக்கு முதுகைக் காட்டிக்கொண்டு கடல்நீர்ப் புறம் திரும்பி மேலாடையைப் பிழிந்து தலையைத் துவட்ட முயன்றாள். தலையில் வைக்கும் தருணத்தில் துவட்ட வேண்டிய மேலாடை கை தவறிக் கீழே விழுந்தது. அதை எடுத்து நீட்டியது ஒரு கரம். அதிர்ச்சியுற்று திரும்பினாள் மஞ்சளழகி. முகத்தை வேறுபுறம் திருப்பிக்கொண்டு கை மட்டும் ஆடையை நீட்ட நின்று கொண்டிருந்தான் இளையபல்லவன்.

அத்தியாயம் 24

# நீர் மோகினி

துணியை எடுத்த கரம் துவட்டிக்கொள் எனத் துணிந்து நீள, துணிவற்ற வீர முகம் வேறுபுறம் திரும்பி நோக்க, உறுதியுள்ள கால்களிலும் ஓரளவு சலனம் காண, எங்கோ பார்ப்பவன்போல் பரம சங்கடத்துடன் நின்றிருந்த இளையபல்லவனைக் கண்டதும் மஞ்சளழகி வெட்கம், திகில், சஞ்சலம் முதலிய பலவித உணர்ச்சிகளுக்கு இலக்காகி, அவன் நீட்டிய மேலாடையைச் சரேலென அவன் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு, நெடுங்கடலின் நீரப்பரப்பை நோக்கித் திரும்பி, சிறிது வளைந்தும், ஒடுங்கியும் நின்றாள். அந்த 'மெல்லியல்' வளைந்தபோது 'பார்க்கவும் அஞ்சினான் அப்பணையினும் உயர்ந்த தோளான்' என்றால் அதற்குக் காரணங்கள் ஆயிரமாயிரம் இருந்தன. எல்லாக் காரணங்களையும் விட, உயர்குடியில் பிறந்தவர்களுக்கு இருக்க வேண்டிய முக்கியமான பண்பாடு பெரும் காரணமாயிற்று இளையபல்லவனின் அந்தத் துணிவற்ற நிலைக்கு. அழகை ஊன்றிப் பார்ப்பதும் எளிது, புலன்களுக்கு வழிவிட்டு மனத்தைப் புண்படுத்திக் கொள்வதும் எளிது. ஆனால் அவற்றுக்கு அறத்தின் வேலியிட்டுப் பயன்படுத்திக் கொள்வது மிகக் கடினம். பார்ப்பதைவிட பார்க்காததில் பெருமை இருப்பதைப் பெரியோர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். 'பிறன் மனை நோக்காத பேராண்மை' என்று வள்ளுவரும் சொல்லுவார். பிறன் மனைவியை நோக்காத திடசித்த முள்ளவன் எவனோ அவனே பேராண்மை படைத்தவன்

என்பது வள்ளுவர் கருத்து. அந்தக் கருத்து நாம் உரிமை கொண்டாட முடியாத எந்தப் பெண்ணைப் பற்றியும் பொருந்தும். அத்தகைய சிறந்த ஆண் மக்கள் வர்க்கத்தில் சேர்ந்தவனான இளையபல்லவன், எழிலின் இருப்பிடமாக விளங்கிய மஞ்சளழகி அத்தனை அருகில் வந்ததும் அவன் இதயத்தைப் பண்பாடு விளைவித்த அச்சம் பலமாகச் சூழ்ந்து கொண்டது. முந்திய இரவும் அன்றைய காலையும் எழுப்பிய இதயக் கிளர்ச்சியை அந்தப் பண்பாடு பெரும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவே, அவன் கோட்டைப் புறம் திரும்பிய தலையை மஞ்சளழகியிருந்த புறத்துக்குத் திருப்பவே இல்லை. அப்படித் திரும்பாத அந்த நேரத்திலும், அத்தனைக் கட்டுப்பாட்டிலும், மனம் சபலத்தின் சிற்றலை களை அவன் இதயத்தில் மெல்ல மெல்ல மோத விட்டுக் கொண்டுதான் இருந்தது.

மஞ்சளழகியை அந்தச் சமயத்தில் அந்த நிலையில் சந்திப்போம் என்பதைக் கனவிலும் இளையபல்லவன் நினைத்துப் பார்க்காமலே அன்று காலை அந்தக் கடற் கரையை அடைந்தானானாலும், அவளைப் பற்றிய வேறு கனவுகள் மட்டும் அவன் மனத்தை முதலிலிருந்து அலைக்கழித்துக் கொண்டுதானிருந்தன. முதல் நாளிரவு மஞ்சளழகிக்கு எப்படி உறக்கமும் உணவும் சரிவரப் பிடிக்க வில்லையோ அப்படித்தானிருந்தது இளையபல்லவன் நிலையும். பஞ்சணையில் படுத்த நிலையில் அவன் பாலூர்ப் பெருந்துறையையும், கடாரத்துப் பைங்கிளியை யும், தனக்கு இரு பெண்களாலும் ஏற்பட்டுவிட்ட பெரும் பொறுப்புகளையும் எண்ணினாலும், திரும்பத் திரும்ப இரவு நடன நிகழ்ச்சியும் மஞ்சளழகியும் இணையற்ற எழில்களும் எழில்களின் கருத்தழிக்கும் அசைவுகளும் அவன் சித்தத்திலே வலம் வந்தன. மஞ்சளழகியின் பாவாடை நடனத்தில் விசிறிய விசிறல், கண்களின்

மயக்கமான பார்வை, சங்குக் கழுத்தின் அசைவுகள் இத்தனையும் மாறி மாறி அவன் மனத்திலே தோன்றி அவனை உறங்கவொட்டாமல் அடித்தன. உறக்கமே மனிதனுக்கு இன்பமும் சாந்தியும் அளிப்பதென்பதை இளையபல்லவன் உணர்ந்திருந்தான். ஆனால் அந்த உறக்கதை விட இன்பமானவை மஞ்சளழகியைப் பற்றிய நினைப்புகள் என்பதை அவன் அறிந்து கொண்டானா னாலும் அதில் சாந்தி மட்டும் பூஜ்யம் என்பதைப் புரிந்து கொண்டான்.

இப்படி மஞ்சளழகியைப் பற்றியும், அவளாலும் அன்றைய இரவில் கடற்கரையில் நிகழ்ந்துவிட்ட விபரீத சம்பவத்தாலும் தனக்கு ஏற்பட்டுவிட்ட பொறுப்பைப் பற்றியும் நினைத்தே, இராப்பொழுதை ஓட்டிவிட்ட இளையபல்லவன் கருக்கல் சமயத்தில் படுத்துச் சிறிது நேரம் மட்டுமே கண்ணயர்ந்து உதய காலத்துக்குச் சன்று முன்பே எழுந்து தளத்துக்கு வந்து சேர்ந்து சுற்றுமுற்றிலும் பார்த்தான். அக்ஷயமுனையின் உதயகாலம் பேரின்பத்தை யும் பெரும் பயத்தையும் கலந்து அளித்துக் கொண்டிருந்தது. தூரத்தே புகைந்து கொண்டிருந்த பகிட்பாரிஸான் எரிமலைத் தொடர் உச்சியும், ஏதோ பல வருஷங்களுக்கு முன்னால் அது கக்கிவிட்ட கந்தகம் கலந்த கனிப்பிழம்பின் காரணமாகப் பழுப்புத் தட்டிக்கிடந்த அதன் சரிவுகளும் அருணோதயத்தின் சிவப்பில் அக்ஷயமுனையை நாடி வருபவர்களை எரித்து விடுவனபோல் காட்சியளித்தன. அதன் பழுப்புக் கற்களைக் கொண்டே கட்டப்பட்ட கோட்டையும் மதிலும் பெரும் காராக்கிரகமாகவே கண்ணுக்குத் தென்பட்டன. அந்தப் பகுதியை ஒருமுறை கூர்ந்து நோக்கிவிட்டு மீண்டும் நீர்ப்பகுதியையும், எழும்பி எழும்பி வந்த திரைகளை மடித்துக் கொடுத்துக் கொண் டிருந்த அலைகளையும் கவனித்த இளைய பல்லவன்,

அருணோதயத்தில் அந்த நீர்ப்பகுதி அளித்த மனோகரக் காட்சியில் மனத்தைப் பெரிதும் பறிகொடுத்தான். அந்த நீரில் மிதந்துவந்த காலையின் சில்லென்ற காற்று அவன் முகத்தை மிகுந்த சுகத்துடன் தடவிக் கொடுத்து, முந்திய நாள் இரவு தூக்கமின்மையால் ஏற்பட்ட உடல் உஷ் ணத்தைச் சமனம் செய்ய முயன்றது. சாரதி அருணனைத் தொடர்ந்து கிழக்குப்புறத்தில் தலை காட்டிய பரிதியும் அந்தக் கடல்பகுதியை தன் கிரணங்களால் மிக அற்புதமாக அடிக்கத் துவங்கினான்.

சித்திரைத் திங்களின் அந்தக் காலை நேரம் சிறிது ஏறினாலும் வெப்பம் மிகவும் ஏறி அந்தக் கடற்கரைப் பிராந்தியத்தைத் தகிக்கத் தொடங்கிவிடும் என்பதை முதல்நாள் காலையில் அறிந்திருந்த இளையபல்லவன், குளிர்ந்த சமயத்தில் அந்தக் கடலில் தனது நீராட்டத்தை முடித்துக் கொண்டால், சற்று வெய்யில் ஏறி கோட்டைப் புறம் விழித்தெழுந்ததும் தான் பலவர்மனைச் சந்தித்து மேற்கொண்டு நடக்க வேண்டியதைக் கவனிக்கலாமென்ற முடிவுக்கு வந்தான். ஆகவே கீழே அரபு நாட்டுச் சராயொன்றை அணிந்து, மேலே துவட்டிக் கொள்ளச் சிறு துண்டொன்றையும் தோளில் போட்டுக்கொண்டு மார்பில் புலிநகத் தங்க ஆரம் ஆட ஆயுதமேதும் எடுத்துக் கொள்ளா மல், படகொன்றில் ஏறி, தானே படகைத் துடுப்புகளால் துழாவிக் கொண்டு கரையை அடைந்தான். கரையை அடைந்ததும் அந்த இடத்தில் தன் நீராட்டத்தைத் துவங்காமல் கொள்ளைக்காரர் குடிசைகளுக்கு அப்பா லிருந்த தனியிடத்தை நோக்கிச் சென்று அலைகளில் இறங்கி நீந்தினான். நீண்ட நேரம் அப்படி நீந்தி விளை யாடியதால் உடலின் உஷ்ணம் மட்டுமின்றி, சிந்தனைச் சூடும் பெரிதும் குளிர்ந்ததால் ஓரளவு சந்துஷ்டியுடன் அலைகளில் வந்து சர் சர் என்று மோதிய கடல் முகப்பின்

தரையில் தனது இரு கால்களையும் நீட்டி உட்கார்ந்து கொண்டு கடலின் இணையற்ற லாவண்யத்தை ஆசை யுடன் கண்களால் பருகினான். அவன் கால்களை அலைநீர் திரும்பத் திரும்பத் தடவிச் சென்றதே பெரும் இன்பமா யிருந்தது இளையபல்லவனுக்கு. அத்துடன் கண்களுக்கும் கிடைத்தது பெரு விருந்து.

வடமேற்கு நோக்கித் தலையை நீட்டிக் கொண் டிருந்த அக்ஷயமுனையின் கடலில் கிழக்கிலிருந்து குறுக்கே பாய்ந்த கதிரவன் ஒளி நீரின் நீல நிறத்திற்கு அதிக நீலத்தை யும் எழுந்து மடிந்த அலைகளின் வெண்மைத் திரைகளுக்கு அதிக வெண்மையையும் அளித்ததால், நீலக்கல் ஆபரணத் துக்கு இடையே வைரங்களின் வரிசையைப் பதித்த தோற்றத்தை அளித்தது. மெல்லக் காற்றிலாடிய தனது மரக்கலமும், அதைச் சுற்றிலும் போர்க்கலங்களுடன் அசைந்து கொண்டிருந்த கொள்ளையரின் மரக்கலங்களும் எதிரேயிருந்த கோட்டையைத் தாக்கத் தயார் செய்து கொள்ளும் படையணியைப் போல் காட்சியளித்தன. அலைகள் மீது உலாவிய கடல் நாரைகளைத் தவிர, தரையிலிருந்து நீர் முனைக்கு நகர்ந்து மீன்களையும் நண்டுகளையும் பிடிக்க முயன்று கொண்டிருந்த பெரும் கொக்குகளும் அந்தக் கடற்கரைக்குக் கண் கவரும் அழகைக் கொடுத்துக் கொண்டிருந்தன. அந்தப் பெரும் வெண் கொக்குகளிலொன்று நண்டொன்றைத் தன் அலகில் கொத்திக் கொண்டு ஓட ஆரம்பிக்க, அதைக் கண்களால் தொடர்ந்த இளையபல்லவன் அந்தக் கடற் கரையில் வேறு கவர்ச்சியும் இருப்பதைத் திடீரென்று உணர்ந்தான். உணர்ந்ததால் திகைத்தான். திரும்பிப் படகில் ஏறி மரக்கலத்துக்குப் போய்விடலாமா என்றுகூட நினைத்தான். மனம்தான் அதற்கு இடங் கொடுக்கவில்லை. கொக்கு சென்ற திசையில் தானிருந்த இடத்துக்கு

வெகுதூரம் தள்ளி மஞ்சளழகி அலைகளில் துளைந்து விளையாடுவதைக் கண்டான் இளையபல்லவன்.

கண்ட கண்கள் கண்டதைக் கண்டுகொண்டே இருந்தன. மருண்ட மனம் உருண்டெழுந்து உணர்ச்சி அலைகளைப் பாய்ச்சின. சிந்தனையில் எழுந்தன அந்தச் சித்தினியைப் பற்றி எத்தனையோ கற்பனைக் குவியல்கள். அலைகளைப் பற்றிய பொறாமையும் அவன் இதயத்தில் ஓரளவு எழுந்தது. அவள் கை மாற்றிப் போட்டபோது படகுத் துடுப்புகள் போல் துழாவிய அந்த வெண்மைக் கரங்களின் அழகைக் கண்டு பிரமித்தான் அவன்.

அவள் நீந்தல் விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்த இளையபல்லவன் ஓரளவு தைரியத்துடன் தான் அதைப் பார்த்தான். ஆனால் அவள் கரைமீது ஏறி வந்ததும் அந்தத் தைரியமெல்லாம் எங்கோ பறந்தது. அவள் கரைமீது வந்ததும் அந்தப் பகுதியில் யாருமில்லை யென்ற நினைப் பால் மேலாடையைக் களைந்து தலையைத் துவட்டிக் கொள்வாளோ எனப் பயந்தான் அவன் ஒரு விநாடி. அந்தப் பயத்துக்கு இடமில்லாமல் அவள் செய்து விட்டா லும் வேறு பயத்துக்கு இடம் வைத்தாள். கரையேறியதும் கீழே தார்ப்பாய்ச்சாகக் கட்டியிருந்த சிற்றாடையை லேசாகப் பிழிந்துவிட்டு மேலாடையைப் பிழியாமலே சில விநாடிகள் நின்று கடற்புறத்தை ரசித்தாள். பிறகு ஏதோ நினைத்துத் தலையை ஆட்டி விட்டுத் தானாகச் சிரித்துக் கொண்டு கடல்நீர் தரையில் முட்டிக் கொண்டிருந்த இடத்தின் ஓரமே தரையைப் பார்த்துக்கொண்டு நடந்தாள். அவள் தான் இருப்பதை அறியாமல் தன்னை நோக்கி வருவதைக் கண்ட இளையபல்லவன், தான் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை உணரும் சக்தியை அறவே இழந்தான்.

அவள் அழகு அவன் அறிவைப் பறித்துக்கொண்டது. கடலிலிருந்து கிளம்பிய நீர்மோகினியொருத்தி இந்தத் தரணியின் தரையிடம் ஆசைப்பட்டு வருவதுபோல் நடந்து வந்தாள் மஞ்சளழகி. கீழ்ச்சிற்றாடை வரிந்து கட்டப் பட்டதாலும், மேலாடை நீரினால் உடலில் ஒட்டிக் கிடந்ததாலும் புலப்பட்ட அழகின் மனோகரத் தோற்றம் காந்தமென அவன் கண்களை இழுத்தது. மஞ்சள் நிறத்தின் மீது கதிரவன் பாய்ச்சிய காலை நேரச் செங்கிரணங்கள் அந்த மஞ்சளுக்கு ஓரளவு சிவப்பையும் கொடுத்ததால், கண்ட இடத்தில் அவள் செம்பஞ்சுக் குழம்பை வாரித் தெளித்துக் கொண்டிருக்கிறாளோ என்ற பிரமையை அளித்தது. முகத்திலும் காலிலும் கைகளிலும் இருந்த நீர் முத்துகள் காலை வெய்யிலில் பளபளத்து உடலெங்கும் முத்திழைத்துக் கொண்ட மோகினியாக அவளைச் செய்து கொண்டிருந்தது.

இப்படிப் பற்பல ஊகங்களுடனும் கற்பனைகளுட னும் அவள் தன்னை நோக்கி வருவதைக் கண் கொட் டாமல் பார்த்துக்கொண்டிருந்த இளையபல்லவனின் மன உறுதி அந்தக் காலைக்காற்றில் பறந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு தேவதை தன்னை நோக்கி வருவதுபோல் வந்து கொண்டிருந்த மஞ்சளழகியின் உடல் கட்டுகளின் தோற்ற மும் நடை துலங்கிய எழில்களும் அவனைப் பெரும் சங்கடத்துக்குள்ளாக்கின. ஆகவே அவள் தானிருக்குமிடத் துக்குச் சற்றுத் தூரத்தில் வரும்போதே இளையபல்லவன் சரேலென எழுந்து நீர்க்கரையிலிருந்து சற்றுப் பின் னடைந்து நின்றான். அவள் வெகு அருகில் வந்ததும் பிறந்த நாட்டின் பண்பாடுகள் உள்ளத்துக்கு அணை போடவே பார்வையை அவளை விட்டு நிலத்திலும் தாழ்த்தினான். ஏதேதோ யோசனையின் காரணமாக இளையபல்லவன் இருப்பதைப் பாராமலே அவனை நெருங்கி நீர்ப்புறத்

துக்குத் திரும்பி, தலை துவட்டிக் கொள்ள மேலாடையை நீக்கி, அது கீழே விழுந்ததன் விளைவாக இளையபல்லவனைப் பார்த்துவிட்ட மஞ்சளழகியின் உடலில் நாணமும் திகிலும் பாய்ந்து சென்றன.

இளையபல்லவன் தன்னை அப்பொழுது பாராமல் தலையைத் திருப்பிக் கொண்டு துணியை எடுத்து நீட்டியதால் ஓரளவு அவன் பண்பாட்டைப் புரிந்துகொண்டாலும், மஞ்சளழகியின் மனத்தில் சங்கடம் பெரிதும் ஓங்கி நின்றது. சரேலென அவள் கை நீட்டித் துணியை பறித்துக் கொண்டு அலைகள் வந்துகொண்டிருந்த பெரும் நீர்ப் பரப்பை நோக்கினாள். அந்த அலைகளைவிடத் தன் இதய அலைகள் தன்னைத் தூக்கிப் பல திசைகளில் எறிவதை அவள் உணர்ந்தாள். அவன் தன்னை, தன் நடையை, தன் எழில்களைப் பெரிதும் பார்த்திருப்பான் என்று தீர்மானித்த மஞ்சளழகி, 'யாருமிருக்க மாட்டார்கள் என்பதால் தானே இங்கு நீராட வந்தேன். இங்கும், அதுவும், போயும் போயும் இவர் வந்து சேர்ந்தாரே!' என்று எண்ணினாள். 'அவர் முகம் திரும்பித்தானிருக்கிறது, எண்ணங்கள் திரும்பியிருக்காதே, தூர வரும்போது கண்ணால் கண்டதையெல்லாம் திரும்பவும் கற்பனையில் காண்பாரே இவர். ஊனக் கண்ணைவிட உள்ளக்கண் பொல்லாததாயிற்றே!' என்று சிந்தித்து சிந்தித்து இன்பமும் துன்பமும் கலந்து வாட்டத் தலை துவட்டினாள் அவள். இல்லை இல்லை, இளையபல்லவன் இதயத்தைத் துவட்டினாள். இதயத்தை இளையபல்லவன் இரும்பாகத்தான் செய்துகொண்டிருந்தான். ஆனாலும் இரும்பை உருக்கும் சக்தி அந்தக் கரும்புக்கு இருந்ததை உணர்ந்தான். அந்த நீர்மோகினி அவன் இதயத்தைப் பல மலர்க்கணைகளால் பிளந்தாள். தலை மீண்டும் கடற்புறத்தை நோக்கித் திரும்பியது. சற்று தூரத்தே இருந்து அந்த நாடகத்தை வேறு ஓர் உருவமும் கவனித்தது.

அத்தியாயம் 25

# மதி சொன்ன கதை

இன்னோர் உருவமும் சற்று தூரத்தே கரையில் இழுக்கப்பட்டுத் தளைகளில் பிணைக்கப்பட்டிருந்த பெரும் படகுகளின் மறைவில் நின்று இமை கொட்டாமல் தங்களைக் கவனித்துக் கொண்டிருந்ததை அறியாமலும், தங்களிருவரைத் தவிர வேறோர் உலகம் சுற்றிலும் உண்டு என்பதைக்கூட நினையாமலும், தனித்த தங்கள் நிலையை மட்டுமே எண்ணி இன்பம் உடல் பூராவும் துழாவிக் கிளம்பிய ஏதேதோ இன்ப உணர்ச்சியால் தத்தளித்துக் கொண்டும், நீண்ட நேரம் பேசாமலே இளையபல்லவனும் மஞ்சளழகியும் நின்றபடி நின்றுவிட்டார்கள். அப்படி நின்ற அந்த இருவரில் இளையபல்லவன் நிலையே மிகவும் பரிதாபத்துக்குரியதாயிருந்தது. வாழ்க்கையின் இன்ப நாடகம் துவங்கும் சமயங்களில், பலவீனமான இனம் என்று கூறப்படும் பெண்ணினமே பலத்துடன் நிற்கிறது. பலமுள்ள இனத்தைச் சேர்ந்த ஆண் வர்க்கத்தின் நிலைதான் அதிக சங்கடத்துக்கும் சித்திரவதைக்கும் இலக்காகிறது. இதற்குக் காரணம் பெண்ணினம் தன் கவர்ச்சியின் பலத்தையும் ஆணினத்தின் பலவீனத்தையும் உணர்ந்திருப்பது தான். பெண் இனத்துக்கே இலக்கணமாக விளங்கிய மஞ்சளழகியும் அந்தக் காலை வெய்யிலில், கடலலைகளை நோக்கி நின்ற அந்த நேரத்தில், தன் சக்தியையும் இளையபல்லவனின் பலவீனத்தையும் நன்றாகப் புரிந்துகொண்டிருந்தாள்.

அவனளித்த மேல்சீலையை வாங்கிக் கொண்டும் அவனுக்கும் கரைக்கும் முதுகைக் காட்டிக் கொண்டு பெருங்கடலின் நீர்ப்பரப்பை நோக்கித் தலை துவட்ட முயன்ற மஞ்சளழகி, பின்னால் நின்ற இளையபல்லவனின் கண்கள் தன் ஒவ்வோர் அசைவையும் கவனிக்கும் என்பதை உணர்ந்திருந்தாளாதலால், உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாளானாலும் அந்த உணர்வால் மிகுந்த நாணமும் அவளை ஆட்கொள்ளவே அவள் கைகளை நன்றாக மேலுக்குத் தூக்காமல் அவசியத்துக்குக் குறை வாகவே தூக்கித் தலையில் சீலையை விரித்துக் குழலில் சுற்றி முறுக்கி அதைத் தோள்புறமாக முன்னுக்கு இழுத்துப் பிழிந்தாள். குழலை நன்றாகச் சீலையால் முறுக்கிப் பிழிந்த பின் கூந்தலை நன்றாக உதறித் தட்டி மறுபடியும் முதுகுப் புறம் அதை விசிறிவிட்டாள். நீண்டு அடர்ந்த அவள் குழல்கள் நன்றாக முதுகுப்புறத்தில் படர்ந்து அதுவரை இளையபல்லவன் கண்களைப் பறித்துக் கொண்டிருந்த அவள் மஞ்சள் நிறத் தங்க முதுகுப்புறத்தை மட்டுமின்றி, இடுப்புச் சீலைக்கு வெகு தூரம் கீழிறங்கிய அழகிடங்களை அந்த ஆண்மகன் துஷ்டப் பார்வையிலிருந்து காக்க இஷ்டப்பட்டனபோல் மறைத்துத் திரையிட்டன.

அவள் கைகள் அசைந்தபோது கைகளின் அசைவால் முதுகுச் சதை அசைந்தபோது அந்த முதுகில் கிடந்த நீர் முத்துகளும் அசைந்ததைக் கண்ட சோழர் படைத் தலைவன், ‘இயற்கையும் பெரிய பொற் கொல்லன்தான். இல்லாவிட்டால் இந்த மஞ்சள் நிறத் தங்கத் தகட்டில் வெண் முத்துகளைப் பொருத்தி இப்படியும் அப்படியும் இழுத்துக் காட்டுவானா?’ என்று அந்த அசைவுக்குக் காரணமும் கூறினான்.

பிழிந்து உதறிவிட்ட குழல்கள் ஒரே சீராக இருந்த தையும் அவற்றின் இணையற்ற கறுமையில் அடுத்திருந்த

தோள்கள் இன்னுமதிக மஞ்சளுடன் ஒளிவிட்டதையும் கண்ட இளையபல்லவன் சற்றுத் துணிவுடன் அவளை நெருங்கி, பட்டையாகப் பின்னால் தொங்கிய அவள் குழல்களைத் தன் இரு கைகளாலும் கோதிக் கோதிப் பிரித்துவிடத் தொடங்கினான்.

'இத்தனை சீராகக் குழல்களைப் பிரிக்க எங்கு கற்றுக் கொண்டார் இவர்? ஒருவேளை வேறு இடத்தில் இதே வித்தையைப் பயின்றிருக்கிறாரோ?' என்ற நினைப்பால் ஓரளவு பொறாமையும் சந்தேகமும்கூடக் கொண்டாள் அந்தத் தங்கக் கிளி. அந்தப் பொறாமைக்கும் சந்தேகத் துக்கும், சந்தேகத்தால் ஏற்பட்ட கோபத்துக்கும் காரண மிருக்கவே செய்தது. தன் வளர்ப்புத் தந்தையால் தன் கணவனாக வரிக்கப்பட்டவர் இன்னொருத்தியிடமும் இந்தப் பணிகளைப் புரிந்திருக்க முடியும் என்று நினைத்த மாத்திரத்திலேயே வெகுண்டாள் அவள். வளர்ப்புத் தந்தையின் திட்டமும், யோசனையும் இளையபல்லவ னுக்கு அடியோடு தெரியாதென்ற நினைப்புகூட அந்த சமயத்தில் இல்லை அவளுக்கு.

தனக்குத்தானே ஏற்படுத்திக் கொண்ட உரிமையிலும் அதனால் விளைந்த கோபத்திலும் திளைத்த மஞ்சளழகி சரேலென்று தன் கைகளைப் பின்புறம் கொண்டு போய்க் குழல்களைத் தோள்புறமாக முன்னுக்கு வாங்கித் தன் இரு கைகளாலும் பிரிக்க ஆரம்பித்தாள். சிலையென அதுவரை நின்றிருந்தவள் திடீரென சிணுங்கியபடி தன் கையிலிருந்த குழல்களைப் பிடுங்கி முன்புறம் கொண்டு போய்விட்டதன் காரணத்தை அறியாத இளையபல்லவன், "மஞ்சளழகி!" என்று மெல்ல அழைத்தான்.

"ஏன்?" கோபத்துடன் வந்தது அவள் கேள்வி.

கோபத்துக்குக் காரணம் அவனுக்குப் புரியவில்லை. கோபித்துக் கொண்டவளுக்கும் அது புரியவில்லை. அந்த

நிலையில் புரியாத விஷயங்கள் நடக்குமென்பது மட்டும் அந்த இருவருக்கும் புரிந்திருந்தது. அப்படிப் புரிந்த நிலையிலும் குழம்பிய அந்த இருவரில் இளையபல்லவனே பேச்சைத் தொடர்ந்து, "இந்த இடத்தில் உன்னை நான் எதிர்பார்க்கவில்லை," என்று ஏதோ சொல்ல வேண்டு மென்பதற்காகச் சொன்னான்.

மஞ்சளழகியின் பதில் பட்டென்று வெளிவந்தது. "நான் யாரையுமே எதிர்பார்க்கவில்லை?" என்றாள் அவள்.

"யாரையுமே எதிர்பார்க்கவில்லையா!" அவன் குரலில் வியப்பு ததும்பி நின்றது.

"இல்லை"

"ஏன்?"

"இந்த இடத்திற்கு யாரும் வருவது கிடையாது. அக்ஷயமுனைத் தீவின் ஒதுக்குப்புறம் இது."

"ஆமாம்."

"என்ன ஆமாம்?"

"ஒதுக்குப்புறமாகத்தானிருக்கிறது."

"இப்பொழுதுதான் தெரிந்ததா அது?"

"இல்லை, முன்பே தெரிந்தது."

"முன்பே தெரிந்ததா!" என்று சீறினாள் மஞ்சளழகி.

"ஆம், தெரிந்ததால்தான் நான் இங்கு நீராட வந்தேன்," என்று நகைத்தான் இளையபல்லவன்.

அதற்குமேல் என்ன சொல்வதென்றும் மஞ்சளழ கிக்குப் புரியவில்லை.

"ஒதுக்குப் புறமென்பதால்தான் நானும் நீராட வந்தேன் என்று சொல்வதா? சே! சே! என்ன கேவலம்?" என்று நினைத்தாள் அவள். அந்த நினைப்பிலும் தனக்கும் அவனுக்கும் எத்தனை ஒற்றுமையிருக்கிறது என்பதை

எண்ணிப் பார்த்து மகிழ்ச்சியும் கொண்டாள். இருந்தாலும் அந்த மகிழ்ச்சியை வெளிக்குக் காட்டாமல் பொய்க் கோபத்துடன் கேட்டாள், "வந்தபின் இங்கு நான் நீராடு வதைப் பார்த்தீர்களல்லவா?" என்று.

"பார்த்தேன்." இளையபல்லவனின் குரலில் சங்கடம் ஒலித்தது.

"பார்த்தபின் உங்கள் கடமை என்ன?" என்று வினவிய அவள் குரலில் அப்பொழுதும் கோபம் தெரிந்தது.

"கடமையா!" மென்று விழுங்கினான் இளைய பல்லவன்.

"ஆம், கடமை."

"எந்தக் கடமையைச் சொல்கிறாய்?"

"பண்பாடு உணர்த்தும் கடமை."

"விளங்கத்தான் சொல்லேன்."

"இன்னும் என்ன விளக்கிச் சொல்ல வேண்டும்? பெண்ணொருத்தி நீராடுவதைப் பார்த்தபின் அந்தப் பகுதியை விட்டு அகல வேண்டியதுதானே பண்புள்ள ஆண்மகன் கடமை?"

வேகத்துடனும், ஆணித்தரமாகவும் எழுந்த அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாத இளையபல்லவன் அவளது இன்னொரு தோளையும் பற்றி, "மஞ்சளழகி! இன்று காலையில் சூரிய உஷ்ணந்தான் அதிகமாயிருக்கிறது என்று எண்ணினேன்," என்று பேச்சை மாற்றினான்.

"வேறு எந்த உஷ்ணம் அதை மீறியிருக்கிறது?" என்று கேட்டாள் அவள்.

"உன் சொற்களின் சூடு", என்று சொல்லிக் கொண்டே அவளைப் பின்னுக்கு இழுத்த அவன் அவளை யும் மணலில் உட்கார வைத்துத் தானும் அவள் பக்கத்தில் அமர்ந்துகொண்டான். நீட்டிய கால்கள் நான்கையும்

அலைகள் வந்து வந்து தடவிச் செல்ல, உட்கார்ந்த அவ்விருவரும் ஒருவரையொருவர் பாராமல் கடலையே பார்த்துக் கொண்டு பேசினார்கள்.

"இப்பொழுது கொஞ்சம் உஷ்ணம் குறையும்" என்றான் இளையபல்லவன்.

"எப்படிக் குறையும்?" என்று மஞ்சளழகி கேட்டாள்.

"அலைகள் கால்களில் பாய்கின்றன."

"ஆம்! அலைகள் பாய்கின்றன. மெய் குளிரும் உள்ளம் குளிருமா?"

"குளிரப் பண்ணிக்கொள்."

"என்னால் முடியாது."

"வேறு யாரால் முடியும்?"

"விதியால் முடியும்."

"விதியா!"

"ஆம். இதோ பாருங்கள்; இந்த அலை வந்து காலைத் தடவுகிறது. மீண்டும் போய் விடுகிறது. மறுபடியும் வருகிறது, போகிறது. அற்ப கால ஸ்பரிசம் இது. விட்டு விட்டு விலகும் நிலை. என் வாழ்க்கையில் நீங்களும் இப்படித்தான் மோதியிருக்கிறீர்கள். அலை போலப் போய்விடுவீர்களா? போய்ப் போய் வருவீர்களா? போகாமல் பகிட் பாரிஸான் மலைபோல் நிலைத்து நிற்பீர்களா? எனக்குத் தெரிய வில்லை. அது உங்களுக்கும் தெரியாது. விதிதான் அதை நிர்ணயிக்கும். காலம்தான் முடிவு சொல்லும். ஆனால் என் மதி மட்டும் ஒரு கதை சொல்கிறது," என்றாள் மஞ்சளழகி.

"என்ன சொல்கிறது உன் மதி?" என்று கேட்டான் இளையபல்லவன்.

ஆழ்கடலிலிருந்து பார்வையை அவன்மீது திருப்பி னாள் மஞ்சளழகி. நீண்ட நேரம் அவள் கண்கள் அவனை உற்று நோக்கின. அந்தக் கண்களில் பெரும் மயக்கம்

இருந்தது. கனவும் பரந்து கிடந்தது. "மதி சொல்லும் கதையைச் சொல்லட்டுமா?" என்று கனவிலிருந்து கேட்பவள் போல் கேட்டாள் அவள்.

"சொல் மஞ்சளழகி!" என்றான் அவன் சஞ்சலத்துடன்.

கதையை அவள் சொன்னாள். மதி சொன்ன கதையானதால் உண்மை புதைந்து கிடந்தது. அந்த இருவரைப் பற்றிய உண்மை மட்டுமல்ல அது. இரு நாடுகளைப் பற்றிய உண்மை. இரு நாடுகளின் வரலாறுகளைப் பற்றிய பேருண்மை அக்கதையில் விரிந்தது.



அத்தியாயம் 26

# சதுரங்கக் காய்கள்

கண்களில் கனவு படர்ந்துலாவ, கால்களை அலைகள் தடவிச் செல்ல, உணர்ச்சிகள் உள்ளத்தைக் குலுக்கி எடுக்க, தன் மதி சொன்ன கதையைக் கூறத் துவங்கிய மஞ்சளழகி, கதையை உடனே துவங்காமல் நீண்ட நேரம் கண் கொண்ட மட்டும் கடலின் நீர்ப் பரப்பையே கவனித்துக் கொண்டிருந்தாள். சற்று நேரம் கழித்து எதையோ நினைத்துக் கொண்டு மெல்லச் சிரிக்கவும் செய்தாள்.

அவள் அழகிய இடையை இழுத்து அணைத்த இடது கையை எடுக்காமலும், இன்பச் சுழலில் சிக்கியும் கிடந்த இளையபல்லவனும் அக்கம் பக்கத்தை மறந்து கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தானானாலும், அவள் சிரிப்பின் விளைவாகக் கனவிலிருந்து சற்றே விடுபட்டு, "ஏன் சிரிக்கிறாய் மஞ்சளழகி?" என்று வினவினான்.

மஞ்சளழகி நீட்டிய தன் கால்களைப் பாதி தூரம் மடித்துத் தன் கைகளைச் சேர்த்து முழந்தாள்களைக் கட்டிக் கொண்டு, "என் நிலையை நினைத்துச் சிரித்தேன்." என்று கூறினாள். அவள் சொற்கள் உள்ளத்தே எழுந்து கொண்டிருந்த உணர்ச்சிகளையும், கனவையும் நன்றாகப் பிரதிபலிக்கவே அவள் மனம் பெரிதும் குழம்பியிருக்கிறது என்பதை மட்டும் இளையபல்லவன் புரிந்து கொண்டானா னாலும் அந்தக் குழப்பத்துக்குக் காரணம் எதுவாயிருக்கும் என்பதை மட்டும் அவனால் புரிந்துகொள்ள முடிய

வில்லையாகையால், "ஏன்?, உன் நிலைக்கு, என்ன குறைச்சல்?" என்று வினவினான்.

தன் வாழ்வைப் பற்றிய எண்ணங்களில் இதயத்தைப் பறிகொடுத்திருந்த மஞ்சளழகி தன் கையால் அவன் முகத்தைத் திருப்பி, "இதோ என் முகத்தைப் பாருங்கள்," என்று கூறினாள். அவள் எழில் முகத்தை அவன் கண்கள் விழுங்கி விடுவனபோல் பார்த்தன. "நன்றாகப் பாருங்கள்" என்று மீண்டும் அவள் கூறினாள்.

எதற்காக அப்படி உற்றுப் பார்க்கச் சொல்கிறாள் என்பதை அறியாத இளையபல்லவன், "நன்றாகத்தான் பார்க்கிறேன் மஞ்சளழகி! எத்தனை முறை பார்த்தாலும் தெவிட்டாத அமுதம் உன் முகம்," என்றான்.

அவள் இதழ்களில் மோகனப் புன்முறுவல் படர்ந்தது. "அழகை வர்ணிக்க உங்களைப் பார்க்கச் சொல்லவில்லை," என்றாள் மஞ்சளழகி, அன்பும் உறுதியும் கலந்த குரலில்.

இதற்கு என்ன பதில் சொல்வது என்று புரியாத இளையபல்லவன் சொன்னான்: "வேண்டுமென்று வர்ணிக்கவில்லை. உள்ளத்தில் எழுந்ததை உதடுகள் உதிர்த்தன, அவ்வளவுதான்."

"ஆண் பிள்ளைகளின் பசப்பு வார்த்தை," என்றாள் மஞ்சளழகி.

"ஆனால் கசப்பு வார்த்தையல்ல," என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

மஞ்சளழகி பெருமூச்சு விட்டாள். "இனிப்பு வார்த்தைக்கும் காலம் இருக்கிறது."

"இது காலம் அல்லவா?"

"அல்ல."

"ஏன்."

"பேச்சில்லாமலே இன்பத்தின் பிடியில் இருக்கிறோம்."

"அப்படியானால்..."

"முகத்தைப் பார்க்கச் சொன்ன காரணம் வேறு."

"என்ன காரணம்?"

"நேற்றைக்கும் இன்றைக்குமுள்ள வேறுபாட்டைக் காணப் பார்க்கச் சொன்னேன்."

"என்ன வேறுபாடு?"

"உற்றுப் பாருங்கள் தெரியும்."

இளையபல்லவன் அவள் முகத்தை நன்றாக உற்று நோக்கினான். மெள்ள மெள்ள அவனுக்கு உண்மை புரியலாயிற்று. இருப்பினும் உள்ளம் அறிந்ததை உதடுகளின் மூலம் உதிர்க்கவில்லை அவன். அவளே சொல்லட்டும் என்ற நினைப்பில், "எனக்கு வேறுபாடு எதுவும் தெரியவில்லையே மஞ்சளழகி!" என்று கூறினான்.

"நேற்றுப் பார்த்த முகத்தையா இன்று பார்க்கிறீர்கள்" என்று அவள் கேட்டாள் மீண்டும்.

"ஆம்." என்றான் அவன்.

"இல்லை, இல்லை, பொய் சொல்கிறீர்கள். முகம் மனத்தின் கண்ணாடி. என் மனம் பெரிதும் மாறியிருக்கிறது. முகம் மட்டும் எப்படி மாறாதிருக்க முடியும்? நேற்றுவரை நான் ஒரு சுதந்திரப் பறவை. யாருக்கும் அஞ்சாமல், உள்ளத்தில் களங்கமில்லாமல் இஷ்டப்படி இந்தக் கடற்கரையில் பறந்துகொண்டிருந்தேன். இன்று அந்த நிலை இல்லை. என் வாழ்வின் போக்கு மாறிவிட்டது. மனம் மாறிவிட்டது. புத்திகூட சரியாயில்லை. ஒன்று தெரியுமா உங்களுக்கு?"

"என்ன மஞ்சளழகி?"

"இன்றுவரை நான் தனிமையை நாடியதில்லை."

"பின்?"

"கடலில் மற்றக் கொள்ளைக்காரருடன் நானும் நீந்துவேன். இந்த மறைவிடத்துக்கே நான் வந்ததில்லை. இன்று மறைவை நாடுகிறேன். தனிமையை நாடுகிறேன். உலகத்திலிருந்து, ஏன் உங்களிடம்கூட விலகச் சொல்லி ஏதோ ஒன்று என்னை எச்சரிக்கிறது."

இளையபல்லவன் அவள் கைகளிலொன்றைத் தன் கைக்குள் சிறைப்படுத்திக் கொண்டு, "வீண் பிரமை மஞ்சளழகி! இல்லாததையெல்லாம் கற்பனை செய்யாதே," என்றான்.

மஞ்சளழகி சொன்னாள்: "கற்பனை எது? உண்மை எது? நேற்று உண்மையாயிருக்கிறது இன்று கற்பனை யானது. இன்று உண்மையாகத் தோன்றுகிறது நாளை கற்பனையாகலாம்."

"என்ன புதிர் போடுகிறாய்?"

"புதிரல்ல, உண்மைதான்."

"எது உண்மை?"

"நேற்று உண்மையென நினைத்தது இன்று கற்பனை யாவது," என்ற மஞ்சளழகி, "விளங்கச் சொன்னாலொழிய உங்களுக்குப் புரியாது. நேற்றுவரை நான் இந்தக் கோட்டைத் தலைவர்தான் என் தந்தை என்று நினைத் திருந்தேன். அது இன்று கற்பனையாகிவிட்டது. நேற்று வரை என் சுதந்திரம் நிரந்தரம் என்று எண்ணியிருந்தேன். அதுவும் இன்று கற்பனையாகி விட்டது," என்று சொன்னாள்.

இளையபல்லவன் அவள் கையைத் திடீரென வலிக்கும்படி இறுகப் பிடித்தான். அவள் திடீரென வெளியிட்ட அந்தச் செய்தியால் ஓரளவு திகைப்பும்

எய்தினான். "என்ன என்ன! நீ பலவர்மன் புதல்வி யில்லையா!"

கையை அவன் அப்படித் திடீரென நெறித்துப் பிடித்தது அவளுக்கு வலிக்கத்தான் செய்தது. ஆனால் மனவலியைவிட அந்த வலி ஒரு பிரமாதமல்லவென்று எண்ணிய மஞ்சளழகி, "இல்லை, நான் அவர் மகளல்ல. அது கனவாகி விட்டது." என்றாள்.

"பின் யார் மகள் நீ?" இளையபல்லவன் கேள்வி மீண்டும் எழுந்தது சற்றே பெருத்த குரலில்.

"எனக்குத் தெரியாது."

"பலவர்மனுக்கு."

"தெரியும்; சொல்ல மறுக்கிறார்."

"காரணம் இந்த நாட்டைப் பற்றியதாம்."

"இருக்காது, இருக்காது."

"கண்டிப்பாய் இருக்கும்."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"என் மதி சொல்லுகிறது?"

"என்ன சொல்லுகிறது உன் மதி?"

"இரண்டு நாடுகளின் வரலாறுகளின் சரித்திரச் சதுரங்கத்தில் நகர்த்தப்படும் காய் நான் என்று சொல் கிறது."

"சே! சே! எதையெதையோ கற்பனை செய்கிறாய்," என்று அவளைச் சாந்தப்படுத்தப் பார்த்தான் இளைய பல்லவன்.

"வீணாக என்னைச் சாந்தப்படுத்தப் பார்க்காதீர்கள். நான் நன்றாக யோசித்துவிட்டேன். விதி என்னை வைத்துச் சரித்திரச் சதுரங்கத்தில் விளையாடப் பார்க்கிறது. விதி

மட்டுமல்ல. மனிதர்களும் விளையாடப் பார்க்கிறார்கள்," என்று மஞ்சளழகி கூறிப் பெருமூச்சு விட்டாள்.

"மனிதர்களா!" என்று இளையபல்லவன் வினவினான் குழப்பத்துடன்.

"ஆம், மனிதர்களுந்தான். முதலில் என் வளர்ப்புத் தந்தை விளையாடப் பார்க்கிறார்."

"இருக்காது" என்றான் இளையபல்லவன்.

"இருக்கிறது. இல்லாவிட்டால் உங்களை மணக்கச் சொல்லி எனக்கு யோசனை சொல்வாரா?" என்றாள் அவள் வெறுப்புடன்.

எதிர்பாராத விதமாக அவள் வீசிவிட்ட அந்த வெடி அவன் இதயத்தில் பேரிடியென விழுந்தது. அடியோடு திகைத்துப் போய் ஏதும் பேசச் சக்தியற்று நீண்ட நேரம் மௌனம் சாதித்தான் இளையபல்லவன். மௌனத்தை மஞ்சளழகியே உடைத்தாள். "அதற்காக அஞ்ச வேண்டாம் இளையபல்லவரே! என்னை மணம் புரிந்து கொள்ளும்படி நான் உங்களை வற்புறுத்தவில்லை. என் வளர்ப்புத் தந்தை விஷயத்தில் நீங்கள் எச்சரிக்கையுடனிருக்க வேண்டும் என்பதற்காகவே உங்களுக்கு இதைச் சொல்கிறேன். உங்களுக்கு என்னை மணம் செய்வித்துக் கோட்டைப் பாதுகாப்பையும் உங்களிடம் ஒப்படைத்தால் ஸ்ரீவிஜயத்துக்கு லாபம் என்று என் வளர்ப்புத் தந்தை நினைக்கிறார். அதுவும் நேற்றைய விழாவின் நிகழ்ச்சிக்குப் பின்பு சூளு இனத்தின் பகை ஏற்படுமாகையால், அகூதாவின் உப தலைவர் உதவி ஸ்ரீவிஜயத்தின் கடற்படைக்கு இன்றியமையாதது என்றும் தந்தை நினைக்கிறார். நீங்கள் ஒரு மரக்கலமானால் அந்த நங்கூரம் நானாகத்தான் இருக்க முடியும் என்பது தந்தையின் நினைப்பு. உங்களை இங்கேயே நிறுத்திக்கொள்ள அவர் என்னை உபயோகப்படுத்தப் பார்க்கிறார் இளையபல்லவரே! ஆனால் இங்கு நீங்கள்

நிற்கமாட்டீர்கள்," என்றாள் மஞ்சளழகி தீர்க்க சிந்தனையுடன்.

"ஏனப்படி நினைக்கிறாய் மஞ்சளழகி?" என்றான் இளையபல்லவன் உணர்ச்சி உள்ளத்தில் அலைமோத.

"என் மதி அப்படித்தான் சொல்கிறது. 'திடீரென அவர் நேற்றுதான் வந்தார் மஞ்சளழகி! வந்த அன்றே உன்னைத் தொட்டார். இந்த அலையுந்தான் உன்னைத் தொடுகிறது, தொட்டுவிட்டுப் போய்விடுகிறது. அவரும் அலைபோலத்தான். மீண்டும் போய்விடுவார். நீ கடற்கரை; அவர் அலை. ஆனால் ஒரு வித்தியாசம் உண்டு. அலை மோதுவதில் கடற்கரையில் வடு ஏற்படுவதில்லை. உன் மனத்தில் காயமும், காயத்தின் விளைவாக நிரந்தர வடுவும் ஏற்படும். வந்திருப்பவர் வீரர், மாதரைவிட நாட்டை அதிகமாக மதிப்பவர். உன்னைத் தொட அவர் இங்கு வரவில்லை. கலிங்கத்தின் கடலாதிக்கத்தை உடைக்கத் தளம் தேட வந்ததாக அவரே சொல்லவில்லையா? அதற்காகத்தான் வந்தார். வந்த இடத்தில் நீ கண்ணில் பட்டாய். அவ்வளவுதான். உன்னைத் தொட்டுச் சென்றுவிடுவார் மஞ்சளழகி, திரும்பவும் வரமாட்டார்' என்று மதி சொல்கிறது. அது மட்டுமல்ல..." என்று மஞ்சளழகி தன் உணர்ச்சி வேகத்தைச் சிறிதே தடை செய்தாள்.

"வேறு எது?" இளையபல்லவன் குரல் வறண்டு கிடந்தது.

"உங்கள் மனம் வேறு ஒருத்தியையும் தொட்டிருப்பதாகவும் என் புத்தியில் பட்டிருக்கிறது," என்றாள் மஞ்சளழகி துயரம் தோய்ந்த குரலில்.

"உனக்குப் புத்தி மாறாட்டம் ஏற்பட்டிருக்கிறது" என்றான் இளையபல்லவன் கோபத்துடன்.

"புத்தி மாறாட்டமாயிருந்தால் மிகவும் மகிழ்ச்சியடைவேன்."

"ஏன்?"

"வேறொருத்தியை நீங்கள் விரும்பவில்லையென்பதற்கு அத்தாட்சியாகும்."

இளையபல்லவன் பதிலேதும் சொல்லாமல் தலை குனிந்து கொண்டான். மஞ்சளழகி சொல்வதில் உண்மை பெரிதும் நிரம்பிக் கிடந்ததை அவன் உணர்ந்தான். காஞ்சனாதேவியும் அந்தச்சமயத்தில் அவன் மனக்கண் முன்னே எழுந்து இடிஇடியென நகைத்தாள்.

"உங்களிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டேன். இருப்பினும் உங்களை இங்கு நிறுத்திக்கொள்ள நான் இஷ்டப்படவில்லை. சீக்கிரம் இந்த அக்ஷயமுனையை விட்டுப் போய்விடுங்கள்," என்று அவள் ரகசியமாகச் சொன்னாள்.

"ஏன்?" வியப்புடன் கேட்டான் இளையபல்லவன்.

"இல்லையேல் என்னை மணந்து கொள்ளும்படியாயிருக்கும்," என்றாள் அவள்.

"மணந்து கொள்ளாவிட்டால்?" சிரித்துக் கொண்டே கேட்டான் அவன்.

"சிரிக்காதீர்கள். விளைவு பெரும் விபரீதம்," என்ற அவள் கண்ணில் பயம் தாண்டவமாடியது.

"என்ன விபரீதம்?" என்று கேட்டான் இளையபல்லவன்.

அவள் சற்றே நடுங்கினாள். "நினைப்பதற்கே என் உடல் நடுங்குகிறது. சொல்ல நா எப்படி எழும்?" என்று கேட்டாள் அவள்.

"சொல்" என்று இளையபல்லவன் அழுத்திக் கேட்டான். "என்னைப் பார்ப்பதுபோல் அந்தப் படகுகளின் மறைவைக் கவனியுங்கள்," என்றாள் அவள், படகுகள் இருந்த பகுதியில் கண்களை ஓட்டி.

படகுகளிருந்த இடத்தைத் திரும்பிப் பார்த்தான் இளையபல்லவன். அதுவரை படகுகளின் மறைவிலிருந்த ஓர் உருவம் எழுந்து விடுவிடுவென்று மணலில் நடந்து சென்றது.

"அது!" ஒரே சொல்தான் இளையபல்லவன் வாயி லிருந்து கிளம்பியது.

"ஆமாம்!" என்ற ஒற்றைச் சொல்லையே பதிலாகச் சொன்னாள் மஞ்சளழகி. பதிலில் பெரும் திகில் மண்டிக் கிடந்தது. திகிலுக்குக் காரணம் அவனுக்குப் புரியவில்லை. அவனை எதிர்நோக்கியிருந்த பெருத்த அபாயத்தை அவள் விளக்கினாள். "அப்படியொரு பழக்கம் இங்கு உண்டா?" என்று இளையபல்லவன் வினவினான்.

"உண்டு," என்றாள் அவள்.

அவள் மட்டுமல்ல, வரலாற்றுச் சதுரங்கத்தில் தானும் ஒரு காய் என்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண் டான் இளையபல்லவன்.



கடல் புறா

அத்தியாயம் 27

சாண்டில்யன்

## 27. பெண் தைரியம்

மஞ்சளழகியின் செவ்வரி விழிகள் கடலை நோக்க, உடலும் உள்ளமும் நெருங்க இருவரும் உட்கார்ந்திருந்த அந்த இன்ப நிலையிலும் திடீரென அவள் உடல் லேசாக நடுக்கமெடுத்ததையும், "என்னை மணக்காவிட்டால் பெரும் விபரீதம் நேரிடும்" என அவள் சோகம் நிறைந்த சொற்களை உதிர்த்ததையும் கவனித்த இளைய பல்லவன் அவளுக்கு ஆறுதலூட்டத் தன் இரு கைகளாலும் அவள் இடையை இறுக்கிப் பிடித்தானானாலும், அந்தப் பிடியிலும் ஆறுதலடையாத அந்த அக்ஷயமுனை அழகி, "அதோ அந்தப் படகுகளின் மறைவைக் கவனியுங்கள்," என எச்சரிக்கவே அந்தப் பகுதியை நோக்கிக் கண்களைத் திருப்பினான். கண்களைத் திருப்பியவன் அந்த மறைவி லிருந்து ஓர் உருவம் எழுந்ததைக் கவனித்தது மட்டுமின்றி, அந்த உருவம் யாரென்பதைக் கண்டு கொண்டானாகை யால் மஞ்சளழகியின் அச்சத்துக்கு ஓரளவு காரண மிருக்கிறதென்பதையும் புரிந்துகொண்டான். அத்தனை நேரம் மஞ்சளழகி சொன்ன சொற்களில் எத்தனை உண்மை புதைந்து கிடக்கிறதென்பதையும், இரண்டு நாடுகளின் சரித்திரத்தில் அவளை மட்டுமல்ல, தன்னையும் ஒரு வரலாற்றுக் காயாக நகர்த்தத் திட்டமிட்ட முயற்சி நடக்கிறதென்பதையும் சந்தேகமற உணர்ந்தான் சோழர் படைத்தலைவன்.

படகுகள் இருந்த இடத்துக்கும், தானும் மஞ்சளழகியும் உட்கார்ந்திருந்த இடத்துக்கும் கூப்பிடு தூரம் இருந்த போதிலும், காலைக் கதிரவன் நன்றாக எழுந்துவிட்டதால் வாரி வீசிய கடுங்கதிர்களின் பேரொளி அந்தப் பிரதேசத்தை நன்றாகப் பளிச்சென்று அடித்திருந்ததால் படகுகளின் மறைவிலிருந்த உருவம் இளையபல்லவன் கண்களுக்கு நன்றாகவே தெரிந்தது. மறைவிலிருந்தபோதே தெரிந்த அந்த உருவம் சரேலென எழுந்து மறைவை விட்டு விலகியதும் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் இளைய பல்லவன் நெஞ்சிலிருந்து நீங்கிடவே, "அது?" என்று சற்று தயக்கத்துடனேயே கேட்டான் அவன்.

அவன் எதைக் கேட்கிறான் என்பதை நன்றாக உணர்ந்துகொண்ட மஞ்சளழகி, "ஆம், என் தந்தைதான்," என்று கூறியவள் மேற்கொண்டும் தந்தையின் போக்கை கவனிக்கும்படி இளையபல்லவனைத் தூண்டத் தன் காற் பெரு விரலினால் அவன் காலைச் சற்று அழுந்த மிதித்த தன்றி கண்களையும் தந்தை சென்ற புறத்துக்குத் திருப்பி உருட்டிக் காட்டினாள். அந்த திசையைக் கவனித்த இளையபல்லவன் தனக்குப் புரியாத பல விஷயங்கள் தூரத்தே நடப்பதைக் கண்டு பெரும் வியப்புக்குள்ளாகி, அதன் காரணத்தைப் பற்றி மஞ்சளழகியிடம் வினவி உண்மையை அறிந்ததும் பெரும் பிரமிப்புக்கும் குழப்பத் துக்கும் உள்ளானான். அது மட்டுமல்ல, பெரும் தந்திர சாலியும் எடுத்த காரியத்தைச் சாதிக்க எதையும் செய்யத் தயங்காதவனுமாகிய கொடூரமான ஒரு மனிதனைத் தான் சமாளித்தாலொழிய அக்ஷயமுனையை விட்டுத் தான் கிளம்புவது குதிரைக் கொம்புதான் என்பதையும் புரிந்து கொண்டான்.

காலை வெய்யிலில் கடலோரத்தில் உட்கார்ந்து காமன் கணைகளின் வசப்பட்டிருந்த மஞ்சளழகியையும்

இளையபல்லவனையும் நீண்ட நேரம் படகுகளின் மறைவிலிருந்தே கவனித்த பலவர்மன், திடீரெனப் படகு களின் மறைவை விட்டு வெளியேறி மிகவும் நிதானமாக யவன கொள்ளையர் இருந்த குடிசைகளை நோக்கி நடந்தான். பிறகு தூரத்தே வந்துகொண்டிருந்த இரு கொள்ளையரைச் சைகை செய்து அழைத்துத் தன் பக்கத்தில் நிறுத்திக்கொண்டு, இளையபல்லவனும் தன் மகளும் இருந்த இடத்தைத் தன் கையால் சுட்டிக் காட்டினான். அடுத்தவிநாடி அந்த இடத்தில் நிற்காமல் மிகுந்த வேகத்துடன் கோட்டை வாயிலை நோக்கி விரைந்து சென்றான். அவன் சென்ற சில விநாடிகளுக் கெல்லாம் கொள்ளையர் இருவரும் தங்கள் துணைவிகளை அழைத்து வந்து இளையபல்லவனையும் மஞ்சளழகி யையும் சுட்டிக் காட்டினார்கள். பிறகு அந்த நால்வரும் ஏதோ புரிந்துகொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்து விட்டுத் தங்களிருப்பிடங்களை நோக்கிச் சென்று விட்டார்கள்.

பலவர்மன் அவர்களை அழைத்துத் தங்களைச் சுட்டிக் காட்டிச் சென்றதையும், பிறகு கொள்ளையரும் தங்கள் துணைவிகளை அழைத்து வந்து காட்டியதையும், அவர்கள் ஒருவருக்கொருவர் ஏதோ பேசிக் கொண்டதை யும், பிறகு ஏதும் நடக்காதது போல் தங்கள் அலுவலைப் பார்த்துக் கொண்டு சென்று விட்டதையும் கண்ட இளைய பல்லவன் அத்தனைக்கும் பொருள் என்னவென்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறினான். பருவப் பெண்ணொருத்தி, திடீரென அறிமுகமான ஒரு வாலிப னுடன் தனிமையை நாடுவதும் உடலுடன் உடலுரா உட்காருவதும் முறை பிசகான காரியமென்பதை அவன் உணர்ந்திருந்தான். அத்தகைய நிலையில் தன் பெண்ணைப் பார்க்கும் தந்தையின் மனம் எந்த நிலைக்குச் செல்லும்

என்பதை அறிந்துகொள்வதும் அவனுக்கு ஒரு பெரிய காரியமில்லை. ஆனால் அப்படித் தங்களிருவரையும் பார்த்த பலவர்மன் அடுத்தபடி நடந்துகொண்ட முறை அவனுக்குப் பெரும் வியப்பையும் ஓரளவு குழப்பத்தையும் அளிக்கவே மஞ்சளழகியின் மீது தன் கண்களைத் திருப்பி னான் இளையபல்லவன். அவன் முகத்தில் வியப்பும், குழப்பமும் விளைந்து கிடந்ததை அவள் கண்டாள். அவன் விழிகளில் எழுந்து கிடந்த கேள்வியையும் கண்டாள். ஆனால் பதிலேதும் சொல்லவில்லை அவள். பதிலுக்குப் பதில் சோகப் பெருமூச்சொன்றையே வெளியிட்டாள்.

அந்தப் பெருமூச்சிலிருந்தும் அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து அவள் கையொன்று தன் கையை அழுத்திப் பிடித்ததிலிருந்தும் அவள் பெரும் வேதனைக்குட்பட்டிருக் கிறாளென்பதை அறிந்துகொண்ட இளையபல்லவன், அவளிடம் தன் உள்ளத்தே எழுந்த அனுதாபத்தால் தன் இடது கையைப் பிடித்திருந்த அவள் கையைச் சற்றே தன் வலது கையால் அழுத்திக் கொடுத்ததன்றி, தன் இடது கையை விடுவித்துக்கொண்டு அதை அவள் இடுப்பைச் சுற்றி வளையவிட்டு வலது கையை அத்துடன் கோத்துச் சுற்றிலும் ஒரு வளையத்தை ஏற்படுத்தினான். புருஷ னுடைய அரவணைப்பும் பாதுகாப்பும் பெண்களுக்கு எத்தனை இன்றியமையாதவையென்பதை அந்தச் சில விநாடிகளில் உணர்ந்துகொண்டாள் அக்ஷயமுனைக் கோட்டை அழகி. அத்தனை பாதுகாப்பிலிருந்தும் தன் வாழ்வில் ஏற்படக்கூடிய அபாயங்களை அவள் இதயம் எண்ணிப் பார்த்து நடுங்கியது. மனம் சொன்ன கதை பொய்க்கதை அல்லவென்பதை புத்தி மீண்டும் மீண்டும் அறிவுறுத்தியது. காலைத் தொட்டுச் செல்லும் அலைபோல் அப்பொழுது அணைத்துள்ள புருஷனும் தன்னைத் தொட்டுச் சென்றுவிடுவான் என்பதை மறுபடியும்

மறுபடியும் அவள் எண்ணவே செய்தாள். அந்த எண்ணம் எழுந்த அந்த நிலையிலும் தொட்டுச் சென்றுவிடக்கூடிய அந்தப் புருஷனுக்கு ஏற்படக்கூடிய அபாயமே அவள் மனத்தில் ஓங்கி நின்றது. பெண் மனத்தின் உயர்வு பெண்ணான அவளுக்கு அந்தத் தருணத்தில் புலனாகி அவளைப் பெரும் வியப்புக்குள் ஆழ்த்தியது. 'இவர் என்னைத் தொட்டுவிட்டுச் சென்றுவிடுவார் என்பது எனக்குத் தெரிகிறது. இருப்பினும் இவருக்கு என் தந்தையால் ஏற்படும் ஆபத்தே எனக்குக் கவலையை அளிக்கிறது. எனக்குத் துரோகம் செய்யக்கூடிய இவருக்கு ஏன் என் மனம் இரங்குகிறது! பெண் ஆணுக்கு அன்பளித்துச் சீரழியவே பிறந்தவளா? சீரழிந்தாலும் அவன் சீரையும் உயிரையும் காப்பாற்றக் கடமைப் பட்டவளா? அப்படித்தான் தோன்றுகிறது. நல்ல ஜன்மம் பெண் ஜன்மம்! தியாகமே அதன் கடமையா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள் மஞ்சளழகி. பதில் அவளுக்குப் புரிந்திருந்தது. கடமை அதுதானென்பதை உணர்ச்சிகள் சந்தேகமற உணர்த்தின. அந்த வினோத உணர்வை எண்ணி அவள் மெல்ல நகைத்தாள். நகைத்த வண்ணம் தன் தலையை அவன் தோள்மீது தைரியமாகச் சார்த்தியும் கொண்டாள்.

பலவர்மனும் கொள்ளைக்காரரும் நடந்துகொண்ட விசித்திர முறையைப் பற்றித் தனது கண்கள் கேட்ட கேள்விக்குப் பதிலேதும் சொல்லாமல் மஞ்சளழகி சிந்தனையில் இறங்கியதும் பிறகு நகைத்ததும், தன்மீது தலையைச் சாய்த்துக் கொண்டதும் இளையபல்லவனுக்கு விந்தையாயிருக்கவே அவன் கேட்டான், "ஏன் நகைக்கிறாய் மஞ்சளழகி?" என்று.

செவ்விய உதடுகளை விரித்துச் சொன்னாள் அவள், "என் ஜன்மத்தை நினைத்துச் சிரித்தேன்," என்று.

"ஏன், உன் ஜன்மத்திற்கு என்ன?"

"பெண் ஜன்மம்," என்றாள் அவள்.

"அதென்ன குறைவா?" என்று கேட்டான் அவன்.

"குறைவுதான்," என்றாள் அவள்.

"அறிவீனர்கள்தான் அப்படிச் சொல்வார்கள்." பதிலிறுத்தான் படைத்தலைவன்.

"அப்படியா?"

"சந்தேகமென்ன?"

"உங்களுக்குச் சந்தேகமில்லைபோல் இருக்கிறது!"

"எனக்கென்ன யாருக்குமே இருந்ததில்லை. வேதத்துக்கு இருந்ததில்லை, சாத்திரத்துக்கு இருந்ததில்லை, புராணங்களுக்கும் இருந்ததில்லை. பெண்குலம், தாய்க் குலம்."

"அது சரிதான்," மீண்டும் சிரித்தாள் அவள்.

"நகைப்பதற்கு ஏதுமில்லை மஞ்சளழகி! தெய்வத்துக்கு அடுத்தபடியாகத் தாய்க்குலத்தை வணங்கும்படி வேதம் சொல்லுகிறது. 'மாத்ரு தேவோ பவ. பித்ரு தேவோ பவ. ஆசார்ய தேவோ பவ' என தாய்க்குலத்துக்கு முதலிடத்தையும், தந்தைக்கு இரண்டாமிடத்தையும், குருவுக்கு மூன்றாமிடத்தையும் வேதமளிக்கிறது. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' எனத் தமிழ் மூதுரையும் உண்டு" என்று சுட்டிக் காட்டினான் படைத் தலைவன்.

"கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது," என்றாள் மஞ்சளழகி.

"எங்கள் நாட்டில் செயலிலும் அது உண்டு."

"எது உண்டு?" என்று கேட்டாள் அவள்.

"தாய்க்குலத்தை மதிக்கும் வழக்கம்."

"களவொழுக்கமும் அந்தச் செயலில் ஒன்றா?"

"மஞ்சளழகி!" கோபத்துடன் எழுந்தது இளைய பல்லவன் குரல்.

"கோபிக்காதீர்கள். உங்கள் நாட்டு இலக்கியத்தைப் பற்றியும், புராணங்களைப் பற்றியும் நான் கேட்டிருக் கிறேன். காதலின் வழியில் களவொழுக்கம் சிலாகிக்கப் படுகிறது உங்கள் இலக்கியத்தில். தாய் தந்தையர் அறியாமல் தலைவியைத் தலைவன் சந்திப்பது உயரிய காப்பியமென்று கூறப்படுகிறது. அவன் கைவிட்டால் அவள் கதியென்ன வென்பதை யார் யோசித்தார்கள்? முதலில் கோவலன், கண்ணகியைப் புறக்கணித்த போது அவள் கதியென்ன? பிறகு மாதவியைக் கைவிட்டபின் அவள் கதியென்ன? இருவர் கதியும் விரும்பத்தக்கதல்ல படைத்தலைவரே? அது மட்டுமா? வேதம் சொல்லிவிட்டுச் சென்றது பெண் குலத்தின் உயர்வை. ஆனால் பெருவியாதிக் கணவனை வேசி வீட்டுக்கு மனைவி சுமந்து செல்ல வேண்டிய அவசியத்தையும், அரக்கனிடம் அவதிப்பட்ட மனைவியை அக்னியில் விழச் சொன்ன பெருமையும், ஊர் வம்புக்காகக் கர்ப்பிணியைக் காட்டுக்கு ஓடச் சொன்ன உன்னதத்தை யும், புராணங்கள் வர்ணிக்கின்றன. புராணங்கள் புகல்வது தான் நடைமுறை படைத்தலைவரே? பெண் ஜன்மம் கேவலமானது. ஆடவனுக்கு ஆடும் பாவை பெண் ஜன்மம். கணவனுக்குக் கைப்பொம்மையின் நிலைதான் கட்டிக் கொண்டவள் நிலை. அவளுக்குச் சுதந்திரம் கிடையாது. சுய வாழ்வு கிடையாது. அவள் பரதந்திரை என்று உங்கள் சாத்திரங்கள் கோஷிக்கின்றன. ஆனால் ஒன்று பார்த்தீர் களா?"

"என்ன மஞ்சளழகி?"

"இத்தனைக்குப் பிறகும் புருஷனுக்கு அடிமையா யிருப்பதையே பெண் விரும்புகிறாள்!"

"உண்மையாகவா?"

"ஆம். புராணத்தைப் பாருங்கள்; விதேகன் குமாரியை விடுவிக்கிறேன் என்று தூதன் துடித்த போதும் 'எனக்குச் சுதந்திரமில்லை உன்னுடன் வர, அவர் வந்து விடுவிக்கட்டும்' என்று சிறையிலேயே கிடந்தாளே அந்தப் பெண்."

"ஆம் கிடந்தாள்."

"அதுதான் உண்மை நிலை படைத்தலைவரே! இயற்கையே பெண்களுக்கு விரோதி. ஆண்களுக்கு அடிமையாக அவர்களைப் படைத்திருக்கிறது. ஆகவே பெண் ஜன்மம் மட்ட ஜன்மம். இல்லையேல்..." மேலே ஏதோ சொல்லப் போனவள் சட்டென்று பேச்சை நிறுத்தினாள்.

"சொல் மஞ்சளழகி," என்று கேட்டுக் கொண்டான் இளையபல்லவன்.

"இயற்கை அப்படியில்லையேல் நான் என்ன செய்து கொள்ள வேண்டும் தெரியுமா?"

"தெரியவில்லை எனக்கு?"

"என் தந்தையின் செய்கையில் திருப்தியடைய வேண்டும்."

"என்ன செய்திருக்கிறார் உன் தந்தை?"

"நாம் இருவரும் நெருங்கி உட்கார்ந்திருப்பதை மறைந்திருந்து பார்த்திருக்கிறார்."

"ஆமாம்."

"பிறகு இரு கொள்ளைக்காரர்களை அழைத்து அவர்களுக்கும் நமது நிலையைக் காட்டியிருக்கிறார்."

"அதையும் கவனித்தேன்."

"அவர்கள் தங்கள் துணைவிகளை அழைத்துக் காட்டினார்கள்."

"ஆம். அதையும்தான் பார்த்தேன்."

"இதில் ஒன்றும் புரியவில்லையா உங்களுக்கு?"

"இல்லை. புரியவில்லை."

மஞ்சளழகி அவன் தோளிலிருந்து தலையை நீக்கி அதன் விளைவாக நிமிர்ந்த அவன் முகத்தைத் தன் அழகிய விழிகளால் ஏறிட்டு நோக்கினாள். "உங்கள் அசட்டுத் தனத்தை என்ன சொல்லட்டும்!" என்று பரிதாபத்துடன் சொல்லவும் சொன்னாள்.

இளையபல்லவன் அந்தச் சமயத்தில் உண்மையாக அசட்டுப் பார்வையாகப் பார்த்தான். "என் அசட்டுத் தனமா?" என்று கேட்டான் குழப்பத்துடன்.

"ஆமாம்."

"என்ன அசட்டுத்தனம்?"

"ஒன்றும் புரியவில்லையே உங்களுக்கு?"

"என்ன புரியவில்லை?"

"மகளை இன்னொருவன் அணைப்பில் பார்க்கும் எந்தத் தந்தையும் என்ன செய்வார்?"

"உம்."

"எரிமலையாக மாறுவார். அணைத்தவனைக் கொல்ல முயல்வார். ஏதும் செய்யாமல் மற்றவர்களையும் கூப்பிட்டு அந்தக் காட்சியைக் காட்டுவாரா? காட்டி விட்டுத் தனக்குச் சம்பந்தமில்லாதது போல் வீட்டை நோக்கி நடக்கத்தான் செய்வாரா?"

இளைய பல்லவன் மூளையில் அப்பொழுதுதான் ஏதோ விபரீதத்துக்குப் பலவர்மன் விதை விதைக்கிறான் என்பது உதயமாயிற்று. "ஆம் மஞ்சளழகி! தந்தையின் போக்கு விசித்திரமாகத்தானிருக்கிறது," என்றான்.

அவன் சொன்ன பதில் அவளைத் தூக்கி வாரிப் போட்டது. "விசித்திரம் என்பதல்ல அதற்கு வார்த்தை.

பயங்கரம் என்று சொல்லுங்கள் பொருந்தும்," என்றாள் மஞ்சளழகி.

"என்ன பயங்கரமிருக்கிறது இதில்!" என்று கேட்டான் இளையபல்லவன்.

"இந்த நாட்டுப் பழக்கம் விளைவிக்கும் பயங்கரம்." என்று அவள் கூறினாள்.

"என்ன பழக்கம் அது?" என்று அவன் வற்புறுத்திக் கேட்டான்.

அவள் விளக்கினாள் நாட்டுப் பழக்கத்தை, பழக்கத்தின் விளைவை, விபரீதத்தை. அச்சமென்னவென்பதையே அறியாத இளையபல்லவன் இதயத்திலும் அந்த விளக்கம் சிறிது அச்சத்தை விளைவித்தது. அந்த அச்சத்திலும் ஒன்று அவன் நினைவில் நிலைத்தது. பெண் ஜன்மத்தின் உயர்வுதான் அது. 'பெண் ஜன்மம் சிறந்த ஜன்மம். அதற்கு இணை எதுவுமில்லை. அதற்கு உவமை இந்த மஞ்சளழகியைவிட யாருமில்லை,' என்று அவன் இதயத்துக்கு மீண்டும் மீண்டும் அறிவுறுத்திக் கொண்டான்.

அவள் தனக்குச் செய்யத் துணிந்த மகத்தான தியாகத்தை எண்ணி எண்ணி வியப்பும் திகிலும் ஒருங்கே அடைந்தான் படைத் தலைவன்.

அத்தியாயம் 28

# விளங்கிய சம்பத்து

'பெண்ணைவிட்டு விலகிச் செல்' என்று சாத்திரங்கள் எச்சரிக்கின்றன. கருங்கல்லின் கடினத்தன்மையையும், விஷத்தின் கொல்லும் தன்மையையும் எடுத்து இணைத்துத் தான் பெண்ணை பிரம்மன் சிருஷ்டித்தான் என வடமொழியிலுள்ள சாடு சுலோகம் ஒன்றும் கூறுகிறது. விஷத்தின் கொல்லும் தன்மை பெண் சிருஷ்டியில் வந்து விட்டதால்தான் அதை உண்டும் பரமசிவன் பிழைத்தார். கருங்கல்லின் கடினத் தன்மை போய்விட்டதால்தான் சேது கட்டிய காலத்தில் பாறைகள் சமுத்திர ஜலத்தின்மீது மிதந்தன என்று வேடிக்கைக் கதைகளும் அந்தக் கூற்றுக்கு உவமையாகக் காட்டப்படுகின்றன. விஷய சுகம் ஜன்ம விடுதலைக்கு விரோதி என்ற தத்துவமும் உறுதியாக ஏடுகளில் விளக்கப்படுகிறது. இத்தனையையும் இளைய பல்லவன் படித்துத்தான் இருந்தான். ஆனால் அந்தப் போதனைகளில் எதையும் நம்பத் தகுந்த நிலையில் அவன் அன்று இல்லை.

பக்கத்தில் அமர்ந்திருந்த பைங்கிளி எடுத்துக் காட்டிய ஆபத்தையும், அந்த ஆபத்தை விளைவிக்கவல்ல அக்ஷயமுனைப் பிராந்தியப் பழக்கத்தையும், அப்படியொரு பழக்கமிருந்தும் தன்னைத் தப்புவிப்பதிலேயே எண்ணங்களை ஓடவிட்ட அந்தப் பைங்கிளியின் தியாக புத்தியையும் நினைக்க நினைக்க, பெண்ணைப் பற்றி எச்சரித்த சாத்திரங்களும் தத்துவங்களும் அவனுக்கு வேப்பங்காயாக

மாறின. பெண்களின் மகத்தான தியாகத்தை வேடிக்கைக்கு இகழ்வது கூடப் பெரும் பாவம் என்று அந்த நேரத்தில் இளையபல்லவன் திடமாக நினைத்தான். அவள் விவரணத்தில், விவரணம் தந்த வார்த்தைகளில், வார்த்தை களை உதிர்த்த குரலில், அத்தனை கருணையும் தியாகமும் மண்டிக்கிடந்தன. "இந்த நாட்டின் பழக்கம் பயங்கரம்" என்று அவள் குறிப்பிட்ட போது, 'அப்படியென்ன பெரும் பயங்கரம் அதில் இருக்க முடியும்?' என்று நினைத்த இளையபல்லவனுக்கு அவள் அதை விளக்க விளக்கத்தான் விஷயத்தின் எல்லை, தன்னை விழுங்கப் பலவர்மன் விதைத்த விபரீதத்தின் ஆழம், என்ன என்பது புரியலாயிற்று. தந்தை தன்னை மறைந்திருந்து கவனித்து, கொள்ளையரிடமும் சுட்டிக் காட்டிப் போய்விட்டதை அல்பமாக எண்ணிய இளையபல்லவனுக்குத் தந்தையின் இயற்கைக்கு மாறான நடத்தையை எடுத்துக் காட்டிய மஞ்சளழகி, "இந்த நாட்டில் அப்படியொரு பழக்கம் இல்லாவிட்டால் என் தந்தை ஒன்று உங்களைச் சிறை செய்வார். அல்லது என்னிடம் அவர் அனுமதியின்றித் திருமணமின்றி உறவு கொண்டாடியதற்காகக் கொன்றாவது விடுவார். இது தானே இயற்கை இளையபல்லவரே?" என்று கேட்டாள்.

இளையபல்லவன் சற்று யோசித்துவிட்டு, "ஆம் மஞ்சளழகி! அதுதான் இயற்கை!" என்று பதில் சொன்னான்.

"ஆனால் இயற்கைக்கு மாறாக ஏன் நடக்கிறார் என் தந்தை தெரியுமா?" என்று வினவினாள் மஞ்சளழகி.

"தெரியவில்லை மஞ்சளழகி," என்றான் இளைய பல்லவன்.

"அப்படி நடப்பதில் அவருக்கு லாபமிருக்கிறது," என்று மஞ்சளழகி சுட்டிக் காட்டினாள்.

"என்ன லாபம்?"

"உங்களை இங்கேயே இருத்திக்கொள்வது பெரும் லாபம் அவருக்கு. நீங்கள் போய்விட்டால் பெரும் நஷ்டம். இந்த நிலையும் உங்களால் விளைந்ததுதான்."

"என்னாலா! நான் என்ன செய்தேன்!" மஞ்சளழகி அத்தனை சோகத்திலும் இந்தப் பதிலைக் கேட்டதும் கலகலவென நகைத்தாள்.

இடையை முன்னைவிடப் பலமாக இழுத்தணைத்து அவள் முகவாய்க் கட்டையை வலது கையால் பிடித்துத் திருப்பிய இளையபல்லவன், "எதற்குச் சிரிக்கிறாய் மஞ்சளழகி!" என்று கேட்டான் சற்றுக் கடுமையுடன். அந்த கடுமை, குரலில் தெரிந்த அதட்டல் இரண்டையும் மஞ்சளழகி பெரிதும் விரும்பினாள். "ஆண்கள் கடிந்து கொண்டால்தான் அழகாயிருக்கிறது. எதற்கெடுத்தாலும் குழைந்து கொடுப்பவன் ஆண்பிள்ளையேயல்ல. அதட்டல், கெடுபிடி, இத்துடன் அன்பு இத்தனையும் கலந்து பரிமாறும் ஆண்மகனைத்தான் பெண்கள் விரும்பு கிறார்கள். இதுவும் ஒரு வேடிக்கைதான். வேடிக்கை யென்ன? சிருஷ்டியின் ரகசியமும்தான். இது இல்லா விட்டால்_?" என்று சொல்லி மீண்டும் சிரித்தாள் அவள்.

"இப்பொழுது எதற்குச் சிரிக்கிறாய்?" என்று மறு படியும் கடுமையுடன் கேட்டான் இளைய பல்லவன்.

"முதலில் உங்கள் நிலை குறித்துச் சிரித்தேன். இப்பொழுது என் நிலை குறித்துச் சிரித்தேன்" என்றாள் மஞ்சளழகி புன்சிரிப்பு உதடுகளில் தவழ.

அவள் கண்களை உற்றுத் தன் கண்களால் நோக்கி னான் இளையபல்லவன். அதன் அழகில் அவள் மனக் கடுமை பறந்தது. சித்தத்தில் மீண்டும் அனுதாபம் பிறந்தது. தனக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராயிருக்கும்

அந்த ஏந்திழையின் ஏரார்ந்த கண்களை நோக்கிக் கொண்டே கேட்டான் இளையபல்லவன், "ஏன்? உன் நிலைக்கு என்ன மஞ்சளழகி?" என்று.

"சற்று முன் உங்கள் கேள்வியில் கடுமையிருந்தது. அதட்டிக் கேட்டீர்கள்," என்று மெள்ளச் சொன்னாள் மஞ்சளழகி, அவன் கண்களுடன் தன் கண்களை உறவாட விட்டு,

"ஆம்! சற்றுக் கடுமையாகத்தான் கேட்டுவிட்டேன்" என்றான் இளையபல்லவன் வருத்தத்துடன்.

இருவர் முகங்களும் வெகு அருகில் நேர் எதிரில் ஒன்றையொன்று பார்த்துக்கொண்டிருந்தன. சற்று நெருங்கினாலும் முகங்கள் இணையும் நிலை. அந்த நிலையில் உணர்ச்சிகள் பொங்க குரல் குழைய மஞ்சளழகி சொன்னாள். மிக மெதுவாக, "வருத்தப்படுவதற்கு ஏதுமில்லை?" என்று.

"ஏன்?" ரகசியத்துடன் எழுந்தது இளையபல்லவனின் கேள்வி. அவன் விட்ட பெருமூச்சு அவள் முகத்தில் அடித்தது. அவள் இதயம் படக் படக்கென்று அடித்துக் கொண்டது.

"அந்தக் கடுமை எனக்கு வேண்டியிருந்தது" என்றாள்.

"கடுமை வேண்டியிருந்ததா!"

"ஆம், வேண்டியிருந்தது!"

"ஏன் வேண்டியிருந்தது?"

"பெண்ணின் நிலை அது?"

"கடுமையை வேண்டும் நிலையா!"

"ஆம். காதலித்தவன் கடிந்து கொள்வதில்தான் பெண்களுக்கு இன்பம். ஆடவனிடம் அடங்கத்தான் பெண் விரும்புகிறாள். ஆளத் தெரியாதவனிடம் பூமி எப்படி

நிலைப்பதில்லையோ அப்படியே அடக்கத் தெரியாதவனிடம் பெண்ணும் நிலைப்பதில்லை."

"பெண்களுக்குச் சுதந்திரம்" என்று எதையோ முணு முணுத்தான் இளையபல்லவன்.

"வெறும் பேச்சு," என்றாள் மஞ்சளழகி.

"ஏனப்படிச் சொல்லுகிறாய் மஞ்சளழகி?" என்று மெதுவாகக் கேட்டான் இளையபல்லவன்.

"சுதந்திரம் அவள் அழகைக் கெடுக்கிறது. அடக்கம் அவள் அழகைக் கூட்டுகிறது?" என்றாள் மஞ்சளழகி.

"விசித்திரமாயிருக்கிறது உன் வாதம்" என்றான் இளையபல்லவன்.

"சிருஷ்டியைப் புரிந்து கொள்ளாதவர்களுக்குத்தான் விசித்திரம்."

"நீ புரிந்து கொண்டுவிட்டாயா?"

"புரிந்துகொண்டுதான் சொல்லுகிறேன்," என்ற மஞ்சளழகி அவன் கண்களைத் தன் கண்களால் தொட்டு விடுவதுபோல் பார்த்துக் கொண்டே ஏதோ புது ரகசியம் சொல்வது போல் பேசினாள். "இதோ பாருங்கள் இளைய பல்லவரே! என் வாதமல்ல இது. உண்மையைச் சொன்னேன். இயற்கையை நன்றாக உற்றுப் பாருங்கள். அடக்கமுள்ள பெண்களுக்கு இருக்கும் அழகு அடக்கமில்லாத பெண்களுக்கு இருப்பதில்லை. தலைகுனிந்த பெண்ணிடமிருக்கும் அழகு தலைகுனியாமல் நிமிர்ந்து நடக்கும் தருணிகளிடம் கிடையாது. அச்சப்பட்டும், வெட்கப் பட்டும் கூனிக்குறுகும் குமரிகளிடமுள்ள அழகு, உணர்ச்சிகளைக் கைவிட்டு உலாவும் காரிகைகளிடம் கிடையாது. சுதந்திரத்தை ஆடவனிடம் பறிகொடுத்து அடங்கி அவனிடம் வாழும் பெண்ணின் அழகு தெய்வீகமானது. அந்த அடக்கத்தில் சுதந்திரத்தை இழப்பதில் மகத்தான

சக்தி பெண்களுக்கு ஏற்படுகிறது...” என்று ஏதோ பெரும் தத்துவத்தைச் சொல்வதுபோல் மிக ரகசியமாகச் சொற்களை உதிர்த்த மஞ்சளழகி சிறிது தன் விளக்கத்தை நிறுத்தினாள்.

நிறுத்திய அதே நேரத்தில் பெரும் இன்ப வலை அந்த இருவரையும் சூழ்ந்துகொண்டது. “சுதந்திரத்தை இழப்ப தில் சக்தி ஏற்படுகிறதா?” என்று மெள்ள வினவினான் அவன்.

“ஆம்!”

“சுதந்திரமே சக்தியல்லவா?”

“நாட்டுக்கு அது சக்தி; ஆடவர்களுக்கும் அதுதான் சக்தி.”

“பெண்களுக்கு?”

“சுதந்திரத்தில் சக்தியில்லை. சுதந்திரத்துடன் உலாவும் பெண்களை ஆடவர் வேடிக்கை பார்ப்பார்கள். அழகை ரசிப்பார்கள். அடையப் பிரியப்படவும் செய் வார்கள். ஆனால் மதிக்கமாட்டார்கள்.”

“சுதந்திரமிழந்தால்?”

“சக்தி அதிகம்.”

“எப்படி?”

“அகூதாவுடன் உங்களுக்கு நெருங்கிய பழக்கந் தானே?”

“ஆமாம்.”

“சீனத்துக்குப் போயிருக்கிறீர்களா?”

“போயிருக்கிறேன்.”

“அங்கு வாணம் விட மருந்து தயார் செய்கிறார்கள்.”

“தெரியும் எனக்கு.”

"அந்த மருந்து சுதந்திரமாக உதிர்க்கப்படும் போது தீப்பட்டால் பரவலாகத்தான் எரியும்."

"ஆமாம்."

"அதைச் சீனத்துக் களிமண் செப்பில் அடைத்து வைக்கிறார்கள். அந்தச் செப்பில் தீயை வைத்துப் பாருங்கள். சீறி வெளிவந்து பெரும் தீப்பொறிகளைப் பயங்கரமாகக் கக்கும். வீட்டிலடைக்கப்படும் பெண்ணும் அப்படித்தான். அடைத்தவுடன் அவள் சக்தி அபரிமிதமாகிறது. சுதந்திரமிழந்த மருந்து போல்தான் அவள் சக்தி. அந்தச் சக்திக்கு ஆடவன் அஞ்சுகிறான்."

அடக்கத்தின் சக்தியை விவரித்த மஞ்சளழகி முகத்தில் அந்தத் தருணத்தில் பெரும் பொலிவு ஏற்பட்டதை இளையபல்லவன் கவனித்தான். இத்தகைய அழகும், ஆசையும் பெண்களுக்கு இருக்கும்வரை உலகத்துக்குக் குறைவில்லையென்று நினைத்த இளைய பல்லவனை நோக்கி மேலும் சொன்னாள் மஞ்சளழகி: "அதனால்தான் உங்கள் கடுமையை நான் ரசித்தேன். உங்கள் அதட்டலை நான் விரும்பினேன். ஓர் ஆடவன் ஒரு பெண்ணை அதட்டுவதில் அர்த்தமிருக்கிறது."

"என்ன அர்த்தம்?" ஏதும் புரியாமல் வினவினான் இளையபல்லவன்.

"யார் அதட்ட முடியும்?" என்று பதிலுக்குக் கேட்டாள் மஞ்சளழகி.

"நீதான் சொல்."

"சொந்தக்காரன்தான் அதட்ட முடியும்."

"ஓகோ!"

"ஆம். சொந்தமிருப்பவன் அதட்டுகிறான். தான் அவனுக்குச் சொந்தம் என்பதை உணர்த்தும் சொற்களின் கடுமை பெண்களுக்குத் தரும் இன்பம் சொல்லி முடியாதது

இளையபல்லவரே!" என்ற மஞ்சளழகி புன்னகை பூத்தாள். அத்துடன் வேறொரு கேள்வியும் கேட்டாள், "சுதந்திரத்தை இழப்பதில் எத்தனை இன்பமிருக்கிறது இளையபல்லவரே! இப்பொழுது புரிகிறதா என் நிலை உங்களுக்கு?" என்று.

அவள் நிலை படைத்தலைவனுக்குச் சந்தேகமறப் புரிந்துவிட்டது. தன் அதட்டலையும், கடுமையையும் தான் ஆள்வதையும் அவள் பெரிதும் விரும்புகிறாளென்பதை இளையபல்லவன் மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டான். அப்படி ஏற்பட்ட பராதீனமான நிலையை நினைத்தே அவள் ஆரம்பத்தில் நகைத்தாள் என்பதும் புரிந்தது அந்த வாலிபனுக்கு. அவள் நிலையை அறிந்த அவன், அவள் உணர்ச்சிகளின் பெருக்கைப் புரிந்துகொண்ட அவன், அவள் செய்ய உத்தேசிக்கும் தியாகத்தின் எல்லையைப் புரிந்துகொண்ட அவன், என்ன செய்வதென்று தெரியாமல் திணறினான்.

முகத்துக்கருகில் முகமும், கண்களுக்கருகில் கண்களும் உதடுகளை எதிர்நோக்கி உதடுகளும் இருந்த அந்த நிலையில் எதிரேயிருந்த புஷ்பங்களைப் பறித்துக் கொள்ள உணர்ச்சி தூண்டியது. அப்படிப் பறிக்க இஷ்டப்பட்டால் தடையில்லாதது மட்டுமல்ல, அந்தப் புஷ்பம் அதை எதிர்பார்க்கவும் செய்கிறது என்பதையும் புத்தி குறிப்பிட்டது. "கிடைக்கிறது என்பதற்காக எதையும் பறித்துக் கொள்வது கயவன் செயல். அதில் நீ ஈடுபடாதே! இவளுடன் நீ இங்கேயே வாழ முடியுமானால் இஷ்டத்துக்கு இணங்கு. இல்லையேல் நாணயமாக விலகிவிடு. எதற்கும் அவள் இந்த நாட்டுப் பழக்கத்தைப் பற்றிக் குறிப்பிட்டாளே அது என்னவென்றும் கேட்டுப் பார்,' என்று பண்பட்ட அவன் இதயம் மட்டும் வலியுறுத்தியது.

ஆகவே உணர்ச்சிகள் உரிமை கொண்டாடத் தூண்டிய அந்த நிலையிலும் அவன் மெள்ளத் தன்னைத்

திடப்படுத்திக் கொண்டு கேட்டான்: "ஆம் மஞ்சளழகி, உன் நிலை அப்படி, என் நிலையையும் நாட்டுப் பழக்கத்தையும் பற்றி ஏதோ குறிப்பிட்டாயே அது என்ன?"

காதல் விரிந்து கிடந்த அந்த கமலச் செவ்வரிக் கண்களில் அனுதாபத்தின் சாயை மெல்லப் படர்ந்து சென்றது ஒரு விநாடி. அந்த விநாடியில் அவள் உதடுகளி லிருந்தும் சோகம் ததும்பும் சொற்கள் உதிர்ந்தன. "அக்ஷய முனை சொர்ணபூமியின் ஒரு பகுதிதான் என்றாலும் இங்குள்ள பழக்கங்கள் சில, நாட்டின் இந்தப் பகுதிக்குத் தனிப் பட்டவை..." என்று தயக்கத்துடன் சொன்னாள்.

அவள் தயக்கத்துக்குக் காரணம் புரியாத இளைய பல்லவன், "என்ன பழக்கங்கள்?" என்று வினவினான்.

"திருமணம் சம்பந்தமான சில பழக்கங்கள்."

"என்ன பழக்கங்கள் அவை?"

"சொர்ணபூமியின் மற்ற பகுதிகளில் இல்லாத ஒரு முக்கிய கண்டிப்பு இங்குள்ள பூர்வக் குடிகளிடம் உண்டு."

"விளக்கமாகச் சொல் மஞ்சளழகி."

"பல ஆடவர்கள் மத்தியில் பெண்கள் அலைந்து திரிவதைப் பதக் சாதியார் பொருட்படுத்துவதில்லை. ஆனால் ரகசியத்தில் ஆடவனும் பெண்ணும் சந்தித்து விட்டால்..." மேற்கொண்டு சொல்ல அஞ்சினாள் மஞ்சளழகி.

"சந்தித்துவிட்டால்" என்று இளையபல்லவன் கேட்டான்.

மஞ்சளழகியின் கண்களில் சோகம் மீண்டும் படர்ந்தது. வார்த்தைகள் மிக மெதுவுடன் வெளிவந்தன. குரலிலும் நடுக்கம் தெரிந்தது. "ஒன்று மணம் அல்லது மரணம்," என்று தயங்கித் தயங்கிச் சொன்னாள் அவள்.

இளையபல்லவன் கண்களில் ஆழ்ந்த யோசனை தெரிந்தது. ‘மஞ்சளழகியை மணம் செய்துகொள்ள வேண்டும். இவ்வளவுதானே! இல்லாவிட்டால் கொன்று விடுவார்கள். பூ இதுதானா!’ என்று எண்ணிய இளைய பல்லவன் கண்கள் முகத்தை நன்றாக ஆராய்ந்தன. மஞ்சள் பாய்ந்த அந்தத் தங்க முகத்தில் கருநீலக் கண்கள் இரண்டு சுழன்றன. மாணிக்க அட்டிகைச் சரம் போலப் பட்டை யிட்ட உதடுகளின் சேர்க்கை பெரிதும் சிவந்து அசைந்தது. வெட்கம் தாடைக்கு இட்ட மருதாணிச் சிவப்பை அலட்சியம் செய்த மாணிக்க அதரங்கள் மெல்லத் துடித்தன. அவள் உடலும் துடித்தது. உணர்ச்சிகள் துடித்தன. ‘இந்தச் செல்வத்தைப் பெற்றுக்கொள்வதில் ஆபத்து என்ன இருக்க முடியும்? இதுவே பெரும் சம்பத்து,’ என உள்ளம் உந்த, உணர்ச்சிகள் துடிதுடிக்க, அவனும் அவளை நோக்கினான். அவள் முகம் விகசித்துக் கிடந்தது. உதடுகள் மொட்டுப் போல் கூம்பி நின்றன. கூம்பிய மொட்டு நகரவும் செய்தது. ஒரே விநாடி! இதழ்கள் இணைந்திருக்கும். ஆனால் ஒரே விநாடியில் மனித எண்ணங்கள்; மனித வாழ்வின் மாற்றங்கள் எத்தனை, எத்தனை!




வாழ்வில் விநாடி என்பது அற்ப காலம். ஆனால் அந்த அற்பகாலம் பெரும் மாற்றங்களை ஏற்படுத்துவதும் உண்டு. மாற்றங்கள் எண்ணங்களில் ஏற்படலாம். சரீரத்தில் ஏற்படலாம். உயிரைப் பற்றிக்கூட ஏற்படலாம். ஆகையால் விநாடிதானே என்று காலத்தை ஒதுக்குவதற்கில்லை. விநாடியாயிருந்தாலும் அது காலம்தான். அதன் வேகம் இணையற்றது என்பதை உணருவதுதான் விவேகம். அந்த விவேகம் மறையும் காலமும் உண்டு. அதை மயக்கம் தரும் காலம் என்று வேதாந்தம் சொல்லும். அப்படி மயக்கம் தரும் காலங்களில் காதல் வசப்படும் காலமும் ஒன்று. அப்படிக் காதல் மயக்கத்தில் இருந்த அந்த இருவரையும் பிரித்தது ஒரே விநாடிதான்.

அவன் முத்திரையை விரும்பி, கூம்பிச் சென்ற மஞ்சளழகியின் இதழ்கள் திடீரென கடைசி விநாடியில், அமுதம் கிட்டும் நிலையில் தாழி கவிழ்ந்ததுபோல, வேறு பக்கம் திரும்பின. அவன் கரங்களின் பிடியிலிருந்து உடலும் திமிறிப் பிரிந்து தனித்து உட்கார்ந்த அவள் முகத்தில் அச்சம் பெரிதும் உதயமாகியிருந்தது. அவள் திடீர் மாற்றத்துக்குக் காரணத்தை அறியாத இளையபல்லவன், "ஏன்! மஞ்சளழகி! என்ன நேர்ந்துவிட்டது? ஏன் இந்த மாற்றம்?" என்று கவலை நிரம்பிய குரலில் வினவினான்.

மஞ்சளழகியின் கண்களின் பார்வை அவன் தோளுக்கு மேல் பாய்ந்து பின்னால் சென்றுகொண்

டிருந்தது. ஏதோ யோசனைகள் புத்தியின் அதிவேகத்துடன் சுழல்வதை அவள் முகம் சந்தேகமற எடுத்துக் காட்டியது. புத்தியில் பல எண்ணங்கள் சுற்றிக் கொண்டிருந்ததால் அவள் நீண்ட நேரம் பதில் சொல்லவில்லை. பதில் சொன்னபோது குரல் மெல்ல ஆட்டம் கண்டிருந்தது. "பின்புறம் திரும்பிப் பாருங்கள்" என்று மட்டும் கூறினாள் அவள்.

பின்புறம் திரும்பிப் பார்த்த இளைய பல்லவனின் விழிகளில் ஆச்சரியம் பெரிதும் படர்ந்தது. கொள்ளைக் கூட்டம் பலமாகக் கூடி, தன்னையும் மஞ்சளழகியையும் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்ட இளையபல்லவன் இதயத்தில் ஆச்சரியத்துடன் சினமும் ஏற்படவே, "இதென்ன அநாகரிகம்! ஒரு பெண்ணும் ஆணும் தனித்திருப்பதை வெறித்து வெறித்துப் பார்க்கும் பழக்கம்!" என்று கோபத்துடன் கேட்டான் மஞ்சளழகியை நோக்கி.

"அதுதான் சொன்னேனே முன்பே! இந்த நாட்டுப் பழக்கம் இது" என்றாள் மஞ்சளழகி குரலில் துயரம் தோய.

"என்ன பழக்கம், விளக்கித்தான் சொல்லேன்" என்று வினவினான் இளையபல்லவன் அலுப்புடன்.

"பெண்ணும் ஆணும் தனிப்படச் சேர்ந்து சல்லாபித்திருக்கக் கூடாது. இருந்தால்..."

"இருந்தால்?"

"அந்தப் பெண்ணை அவன் மணம் செய்துகொள்ள வேண்டும்."

"செய்துகொள்ள மறுத்தால்?"

"விசாரணைக்கூடம் அமைக்கப்படும்."

"அமைக்கப்படட்டுமே."

"அந்த இருவர் தனியாயிருந்ததற்கு, சாட்சிகள் அழைக்கப்படுவார்கள்."

"அதைப் புரிந்துகொண்டேன். அந்தச் சாட்சிகளை ஏற்பாடு செய்ய உன் தந்தை கொள்ளைக்காரர்களை அழைத்து நம்மிருவரையும் காட்டியிருக்கிறார்."

"ஆம், அதுதான் அவர் எண்ணம். சாட்சிகள் விசாரிக்கப்பட்டு நீங்கள் குற்றவாளியெனத் தீர்மானிக்கப் படுவீர்கள்."

"என்ன குற்றம்?"

மஞ்சளழகி தலையைக் குனிந்து கொண்டாள்; சற்றுத் தயக்கத்துடன் மெல்லச் சொன்னாள், "என்னைச் சீரழித்த குற்றம்," என்று.

"பொய்! பொய்! அப்படி வரம்பு மீறி நான் என்ன செய்தேன்?" என்று இளையபல்லவனும் சங்கடத்துடன் பேசினான்.

"வரம்பு மீறினாலும் மீறாவிட்டாலும் மீறியதாகக் குற்றம் சாட்டப்படும் உங்கள்மீது. அதை ஜோடித்து நிரூபிக்கும் திறமை என் தந்தைக்கு உண்டு. உங்கள் விஷயத்தில் அந்தத் திறமையும் தேவையில்லை," என்றாள் மஞ்சளழகி.

"ஏன் தேவையில்லை?"

"நாமிருவரும் அத்தனை லட்சணமாக நடந்து கொண்டிருக்கிறோம்."

"என்ன தவறுதலாக நடந்துவிட்டோம்?"

"நடன நிகழ்ச்சியின்போது நீங்களும் நானும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டதைத் தந்தை கவனித்திருக்கிறார். தந்தை என்ன, எல்லோரும் பார்த்திருக் கிறார்கள். இல்லாவிட்டால் தந்தை என்ற முறையை மீறி உங்களை மணந்துகொள்ள என் தந்தை தூண்டுவாரா? அது இருக்கட்டும். இத்தனை நேரம் நாமிருவரும் இருந்த நிலை...நிலை... எந்தத் தவறான பொருளுக்கும் இடங்

கொடுக்கும்..." என்று வெட்கத்துடனும் பயத்துடனும் பதில் சொன்னாள் மஞ்சளழகி.

அப்படி நிரூபிக்கப்பட்டால் ஏற்படக்கூடிய ஆபத்து என்ன என்பதை மட்டும் இளையபல்லவன் அறியாததால் மீண்டும் கேட்டான், "சரி மஞ்சளழகி! விசாரணை நடக்கிறது. என்னைக் குற்றவாளியாகத் தீர்மானிக்கிறார்கள். அப்புறம் என்ன?" என்று.

"ஏற்கெனவே சொன்னேனே, நீங்கள் ஒன்று என்னை மணக்கலாம். அல்லது மரணத்துக்கு உள்ளாகலாமென்று," எனக் குறிப்பிட்டாள் மஞ்சளழகி.

"என்னைப் பற்றிய விவரங்கள் பல உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கின்றன அல்லவா?" என்று வினவினான் இளையபல்லவன் உறுதியான குரலில்.

"ஆம்."

"நான் மரணத்துக்கு அஞ்சாதவன் என்ற விவரம் மட்டும் உங்கள் காதுக்கு எட்டவில்லையா?"

"அதுவும் எட்டியிருக்கிறது."

"அப்படியிருக்க இஷ்ட விரோதமாக என்னை யார் எதைச் செய்யக் கட்டாயப்படுத்த முடியும்?"

மஞ்சளழகி சற்று நிதானித்தாள். பிறகு சற்றே குரல் நடுங்கச் சொன்னாள். 'இந்த மரணம் சாதாரண மரணமல்ல," என்று.

"சாதாரண மரணமல்ல வென்றால், சித்திரவதை செய்வார்களா?" என்று வினவினான் படைத்தலைவன்.

"சித்திரவதையென்பது சாமானிய வார்த்தை."

"அதைவிடக் கடுமை தரும் மரணமா?"

"ஆம், இளையபல்லவரே! மிகவும் கொடிய மரணம். என் விரோதிக்குக்கூட அத்தகைய மரணம் விளைவதை நான் விரும்ப மாட்டேன். நன்றாகக் கேளுங்கள் விளையக்

கூடிய கொடுமையை," என்ற மஞ்சளழகி, "அதோ அந்தக் கோட்டையின் மத்தியப் பகுதியைக் கவனியுங்கள்," என்று தன் கையால் சுட்டிக் காட்டினாள்.

தலையைத் திருப்பி அந்தப் பகுதியைப் பார்த்த இளையபல்லவன், "ஆம், அங்கொரு பெரும் கொடி பறக்கிறது," என்றான்.

"அந்தக் கொடி எந்த நாட்டுக் கொடியென்பதை பார்த்தீர்களா?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"பார்த்தேன், அது சொர்ணபூமியின் கொடியல்ல. ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய சின்னமாகத் தோன்றவில்லை அது," என்றான் இளையபல்லவன்.

"இல்லை, ஸ்ரீவிஜயத்தின் கொடி அல்ல அது. அக்கொடி இதோ இருக்கிறது," என்று வேறொரு பகுதியில் பறந்து கொண்டிருந்த கொடியைச் சுட்டிக்காட்டினாள் மஞ்சளழகி.

இரண்டு கொடிகளையும் மாறி மாறிப் பார்த்த இளையபல்லவன், "ஆம்! ஆம்! இரண்டு கொடிகளுக்கும் பெரும் வித்தியாசமிருக்கிறது." என்று கூறினான். "அந்தக் கொடி யாருடையது?" என்று வினவினான்.

"இந்நாட்டுப் பூர்வகுடிகளில் பெரும் பகுதியினரான பதக் ஜாதியினரின் கொடி அது," என்று சொன்னாள் மஞ்சளழகி.

இளையபல்லவன் விழிகளில் ஆச்சரியம் தெரிந்தது. "அரசாங்கக் கொடியிருக்கும் கோட்டையுள் இன்னொரு கொடி அனுமதிக்கப்படுகிறதா?" என்று ஆச்சரியம் குரலிலும் பூர்ணமாகப் பிரதிபலிக்கக் கேட்டான் அவன்.

"சாதாரணமாக அனுமதிக்கப்படுவதில்லை. விசேஷ காலங்களில் அனுமதிக்கப்படுகிறது. முக்கியமாக விசாரணைக்குப் பூர்வாங்கமாக இக்கொடி உயர்த்தப்படும்."

"ஏன்?"

"இங்கு இன்னும் பதக் இனத்தவரின் சட்டதிட்டங்கள்தான் பழக்கத்தில் இருந்து வருகின்றன. ஸ்ரீவிஜயத்தின் நாகரிகப் பழக்கங்கள் இன்னும் இங்கு வழக்கத்துக்கு வரவில்லை. ஆகவே முக்கிய விசாரணைக் காலங்களில் அரசாங்கத்தாரே பதக்குகளின் கொடியை உயர்த்துகிறார்கள். அவர்கள் வழக்கப்படித்தான் விசாரணை நடக்கும். அவர்கள் வழக்கப்படித்தான் தண்டனையும் அளிக்கப்படும்."

"அப்படியா?"

"ஆம். கொடியை உயர்த்த முக்கிய காரணமுண்டு."

"என்ன காரணம்?"

"சுற்றுப்புறமுள்ள பதக்குகளை வரவழைக்க இது ஒரு வழி. இந்தக் கொடி உயர்த்தப்பட்ட மறுவிநாடி இங்கிருந்து பதக்குகளின் இருப்பிடங்களுக்கு ஒற்றர்கள் பறந்துவிடுவார்கள். விசாரணையின் போது பதக் இனத்தாரின் பெண்களும், ஆண்களும் பெருவாரியாக வந்து கூடுவார்கள். ஆசையுடன் எதிர்பார்ப்பார்கள்."

"என்ன? திருமணத்தையா?"

"இல்லை. உங்கள் மரணத்தை."

"என் மரணத்தில் என்ன அவர்களுக்கு அத்தனை திருப்தி?"

மஞ்சளழகி மேற்கொண்டு பேசமுடியாமல் திணறினாள். அதுவரை அவனைப் பார்த்துப் பேசிய அவள் தன் இரு கைகளிலும் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். 'என்ன திருப்தி என்று கேட்கிறாரே! எப்படிச் சொல்லுவேன்!' என்று ஏக்கப் பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து தயங்கித் தயங்கித் துக்கம் குரலில் அலைமோதப் பேசினாள். "இளையபல்லவரே!

உமக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டால் வெட்டுப் பாறைக்கு உம்மை அழைத்துச் செல்லமாட்டார்கள். அதோ அந்தப் பதக்குகளின் கொடிமரத்துக்கு அழைத்துச் செல்லுவார்கள். அழைத்துச் சென்று..." என்று சொல்லிக் கொண்டே போன அவள் குரல் கம்மியது.

"அஞ்சாதே! சொல் மஞ்சளழகி," என்றான் இளைய பல்லவன். "அழைத்துச் சென்று தூக்கிலிடுவார்களா?" என்று கேட்டான்.

"அதுவும் அத்தனை கோரமல்ல..." என்று தேம்பினாள் அவள்.

இளைய பல்லவனின் இதயத்தில் அந்த ஏந்தியழையின் துக்கத்தைக் கண்டு பரிதாபம் பெருக்கெடுத்து ஓடியது. அவளை மீண்டும் தன்னருகில் இழுத்தான். "சொல் மஞ்சளழகி, சித்திரவதைக்கு அஞ்சாதவன் நான்" என்று ஆதரவாகப் பேசவும் செய்தான்.

"அந்தக் கொடி மரத்தில் கட்டுவார்கள். அந்தக் கொடி மரம் பதக் சாதியருக்குச் சொந்தம். ஆகவே அதில் கட்டப்படுபவர்களும் அவர்களுக்குச் சொந்தம்..." இதைச் சொன்ன மஞ்சளழகி லேசாக நடுங்கினாள்.

"என் உடல் அவர்களுக்குச் சொந்தமாகிவிடும் அவ்வளவுதானே?" என்றான் இளையபல்லவன்.

அவள் திடீரென்றுத் தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் நிரம்பி நின்றது. "இளைய பல்லவரே, பதக்குகள் நரமாமிசம் புசிப்பவர்கள். ஆகவே உமது உடல் சின்னாபின்னப்படுத்தப்படும். அந்தக் கொடி மரத்தில் உம்மைக் கட்டியதும் அக்ஷயமுனைக் காவலர் அகன்றுவிடுவார்கள். ஆயிரக்கணக்கான பதக்குகள் உம்மைச் சூழ்ந்துகொள்வார்கள். ஒவ்வொருவரும் உமது உடலின் ஒவ்வொரு புறத்தில் தசையைக் கத்தியால் அறுத்து

எடுத்துக் கொள்வார்கள். கழுகுகள் உடலைக் குத்தினால் கூட ஏற்படாத இம்சை உங்களுக்கு ஏற்படும். உயிர் சிறிது சிறிதாகத்தான் போகும். உடலும் சிறிது சிறிதாகத்தான் அழியும். குருதியை அவர்களில் சிலர் வாய் வைத்துக் குடிப்பார்கள். இந்தக் கோரத்துக்குப் பூர்வாங்கமாகக் கண்கள் தோண்டப்படும். மிகப் பயங்கரம்! மிகப் பயங்கரம்!" என்று திணறினாள் மஞ்சளழகி.

இளையபல்லவன் கூடத் தனக்கு ஏற்படக்கூடிய அந்த விபரீத மரணத்தைக் குறித்து அச்சத்தின் வசப் பட்டான். அதுவரை அவன் கேட்டுமிராத அந்தக் கொடு மையை எண்ண எண்ண அவன் உள்ளம் நடுங்கியது. 'வாளேந்திப் போரிட்டு அடையும் வீரமரணம் வேறு. மனிதர் மனிதனை அறுத்துத் தின்று குதூகலிக்கும் இந்தப் பயங்கர மரணம் வேறு.' என்று நினைத்த அவன் தீவிர சிந்தனையில் இறங்கினான். கடைசியில் கேட்டான், "ஆம் மஞ்சளழகி! இது பயங்கரப் பழக்கம்தான். இத்தகைய தண்டனையை நீ முன்பு பார்த்திருக்கிறாயா?" என்று.

"பார்த்ததில்லை. இரண்டொரு சமயம் இப்படி நடந் திருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்," என்றாள் மஞ்சளழகி.

"உன் தந்தை எதற்காக இத்தகைய பயங்கர மரணத்தை எனக்கு அளிக்கப் பார்க்கிறார்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"நீங்கள் மணம் செய்துகொண்டாலும் அவருக்கு லாபம்; மரணம் அடைந்தாலும் லாபம்" என்றாள் அவள்.

"மரணமடைந்தால் என்ன லாபம்?"

"நீங்கள் பூர்வக்குடியினரில் ஒருவனைக் கொன்று விட்டீர்களல்லவா?"

"நான் கொல்லவில்லை, அமீர் கொன்றான்."

"அமீர் உங்களைச் சேர்ந்தவர். அவர் கொன்றாலும் நீங்கள் கொன்ற மாதிரிதான் இங்குள்ளவர்களுக்கு. தவிர வில்வலனைப் பலர் முன்பு அவமானப்படுத்தியிருக் கிறீர்கள். இந்த இரண்டு செய்கைகளாலும் பூர்வகுடிகள் வெகுண்டிருக்கிறார்கள். உங்களை அவர்களுக்கு அளித்து விட்டால் பதக்குகள் சாந்தி அடைந்துவிடுவார்கள். அவர்கள் ஒத்துழைப்பு என் தந்தைக்கு இனிமேலும் இருக்கும்."

"நான் மணம் செய்துகொண்டால்?"

"அப்பொழுது பதக்குகளை நிலத்திலும் சூளுக் களைக் கடலிலும் எதிர்க்கக்கூடிய திறமை மிக்க படைத் தலைவர் கிடைக்கிறார் தந்தைக்கு. அப்பொழுதும் அவருக்கு லாபம்தான். இப்படி இரண்டு வழிகளிலும் உங்களைக் கட்டவே இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறார் தந்தை. ஆகவே..."

"ஆகவே?"

மஞ்சளழகி மீண்டும் முகத்தைக் கவிழ்த்துக் கொண் டாள். பிறகு மெல்லச் சொன்னாள், "இந்த அக்ஷய முனையை விட்டுப் போய்விடுங்கள் இளையபல்லவரே!" என்று.

இளையபல்லவன் சற்று யோசித்துவிட்டுக் கேட் டான், "மஞ்சளழகி என்னைக் கொல்வது அத்தனை சுலபமென்று நினைக்கிறாயா?" என்று.

"ஏன் சுலபமில்லாமலென்ன?"

"எனக்குப் பின்னால் அகூதா இருக்கிறாரென்பதை மறந்துவிட்டாயா? அவரிடமுள்ள பயத்தாலேயே உன் தந்தை என்னை தன் மாளிகையை விட்டு உயிருடன் வெளியில் அனுப்பினார் என்பதுதான் உனக்கு நினைப் பில்லையா?" என்றான் இளையபல்லவன்.

"எதையும் நான் மறக்கவில்லை இளையபல்லவரே இந்த ஒரு விஷயத்தில் அகூதாவும் எதுவும் செய்ய முடியாது" என்றாள் அவள்.

"ஏன்?"

"அகூதாவும் இந்தப் பழக்க வழக்கங்களுக்கும், சட்ட திட்டங்களுக்கும் கட்டுப்பட்டவன். அகூதா எதையும் மன்னிப்பானாம். பெண்களையும் ஆண்களையும் கொல் வதைக்கூட. ஆனால் ஒரு பெண் மட்டும் கெடுக்கப் பட்டால் கெடுத்தவன் யாராயிருந்தாலும் அவன் மன்னிப்பதில்லையாம்."

இதைக்கேட்ட இளையபல்லவன் வியப்பின் எல்லையை எய்தினான். ஒரு வருட காலமாக அகூதாவைப் பற்றித் தான் அறியாத ஒரு புது தர்மத்தை மஞ்சளழகி எடுத்துச் சொன்னது அவனுக்குப் பெரிய ஆச்சரியத்தை முதலில் விளைவித்தாலும் பிறகு உண்மையும் மெல்ல மலர்ந்தது அவன் இதயத்தில். எந்த இடம் சூறையாடும் போதும் பெண்களை மட்டும் தொடக்கூடாதென அகூதா இட்ட உத்தரவு, அவனுக்கு அப்பொழுதுதான் நினைவுக்கு வந்தது. கொள்ளைக்காரன் இத்தனை வினோத உத்தரவை இடுகிறானே என்று அந்தச் சமயங்களில் சாதாரணமாகத் தோன்றியது இளையபல்லவனுக்கு. இப்பொழுது அதை நினைக்க நினைக்க அகூதாவின் புரிபடாத பல செயல்கள் அவனுக்குப் புரியலாயின. அகூதாவின் வாழ்க்கையில் பெண் சம்பந்தமான பெரும் விபரீதம் ஏற்பட்டிருக்க வேண்டுமென அவன் எண்ணினான். அந்த எண்ணங் களுடன் அகூதாவின் குணத்தின் பலன் தன் நிலையை அக்ஷயமுனையில் எத்தனை தூரம் பாதிக்கிறது என்பதை நினைத்துச் சற்று சிந்தை கலங்கவும் செய்தான். 'அகூதா விடம் உள்ள பயம் ஒன்றுதான் எனக்கு இங்கு கவசம். அதை உடைத்துவிட்டான் பலவர்மன். இனி என் உயிர்

அவன் கையிலிருக்கிறது,' என்று எண்ணமிட்ட இளைய பல்லவன் திடீரென ஒரு முடிவுக்கு வந்து, "வா! மஞ்சளழகி!" என்று அவளை அழைத்தான்.

அவள் எழுந்து நின்றாள். அவள் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டே கொள்ளையர் கூட்டமாக நின் றிருந்த இடத்தை நோக்கி நடந்தான் இளையபல்லவன். அவன் முகத்தில் உறுதி மண்டிக் கிடந்தது. அந்த உறுதிக்குக் காரணம் அவளுக்குப் புரியவில்லை. உடைந்த கவசம் அளித்த உறுதி அது என்பது அவளுக்கு விளங்கவில்லை.





# கடல் புறா

30.

## வினை விதைத்தலும் வினையறுத்தலும்

சாண்டில்யன்

அத்தியாயம் 30

# வினை விதைத்தலும் வினையறுத்தலும்

**ம**ஞ்சளழகியின் மயக்கும் எழிலில் மனத்தைப் பறிகொடுத்துக் காலை நேரத்தில் கடலோரத்தில் தான் கழித்த சில நாழிகைகளை அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவனான பலவர்மன் பெரிதும் பயன்படுத்திக் கொண்டு விட்டதையும், அகூதாவிடம் அவன் கொண்டிருந்த பயமெனும் கவசமும் இனித் தன்னைக் காப்பாற்றா தென்பதையும் மஞ்சளழகியின் சொற்களிலிருந்து புரிந்து கொண்ட இளையபல்லவன், திடீரென ஒரு முடிவுக்கு வந்து மஞ்சளழகியைக் கையைப் பிடித்துத் தூக்கி, “வா மஞ்சளழகி,” என்றழைத்துக் கொண்டு கொள்ளையர் கூடி நின்ற இடத்தை நோக்கி நடக்கத் துவங்கினான். அப்படி நடக்கத் துவங்கிய படைத்தலைவன் முகத்தில் உறுதி பெரிதும் மண்டிக் கிடந்ததைக் கண்ட மஞ்சளழகி, தான் உணர்த்திய பேராபத்தைப் பற்றிக் கேட்டும் அவன் சிறிதும் மலைக்காமல் திடீரென ஏதோ முடிவுக்கு வந்துவிட்டதை யும் அந்த முடிவைத் தொடர்ந்து கொள்ளையர் பார்க்கும் படியாகத் தன்னைக் கையைப் பிடித்துத் தூக்கியதன்றி, தன் கையுடன் அவன் கையைச் சேர்த்துக் கோத்துக் கொண்டே நடக்க முற்பட்டு விட்டதையும் பார்த்ததும் ‘எதற்காக இவர் இந்தச் சாகசத்தில் இறங்குகிறார்?’ என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டு விடை காணாமல் தவித்தாள்.

தந்தை எடுக்கக்கூடிய நடவடிக்கைகளுக்குத் தானும், இளையபல்லவனும் நெருங்கி இழைந்த நிலையே போது

மானதாயிருக்க, தன்னைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு கொள்ளையர் முன்பு சென்று மேலும் தங்களிருவர் உறவுக்கும் அத்தாட்சி கூட்ட படைத்தலைவன் ஏன் முயலுகிறான் என்பதை எண்ணிப் பார்த்த மஞ்சளழகிக்கு. அதற்குக் காரணம் விளங்கவில்லையானாலும் அவன் இணையற்ற நெஞ்சுரம் படைத்தவன் என்பது மட்டும் சந்தேகமற விளங்கியது.

வெய்யில் அப்பொழுது சிறிது ஏறிவிட்டதால் அஷயமுனைக் கடற்கரைப் பழுப்பு மணல் சிறிதே சுடத் தொடங்கினாலும், அதைவிட இளையபல்லவன் ஆபத்தை எண்ணிய மனம் அவளைச் சுட முற்பட்ட வெப்பத்தின் விளைவாகக் காலின் கடுமையை அவள் லட்சியம் செய்யாமலே அவன் பக்கத்தில் நடந்தாள். அத்தனை ஆபத்து முன்னிருந்த போதும் அவன் நடையிலிருந்த திடத்தையும் அலட்சியத்தையும் அவள் பெரிதும் வியந்தாள். 'இப்பேர்ப் பட்ட ஒரு திட புருஷனை எப்படியும் காப்பாற்றிவிட வேண்டும். அதனால் என் வாழ்வு நாசமாகிவிட்டாலும் பாதகமில்லை,' என்று தனக்குள் எண்ணமிட்ட அவள், இருவரும் பத்தடி தூரம் நடந்ததும் மீண்டும் பேச்சைத் துவங்கி, "என் யோசனையையும் கொஞ்சம் கேளுங்கள்," என்று கெஞ்சும் குரலில் சொன்னாள்.

உறுதி நிரம்பி நின்ற படைத்தலைவனின் கண்கள் அவளை நோக்கித் திரும்பின. "கொஞ்சமென்ன, உன் யோசனை எதுவாயிருந்தாலும் முழுதும் கேட்கிறேன்" என்ற சொற்கள் அவன் உதடுகளில் இருந்து ஏளனத்துடன் உதிர்ந்தன.

மஞ்சளழகியின் காதலும் பரிதாபமும் கலந்த கண்கள் அவன் கண்களைச் சந்தித்தன. "கேலிக்கு இது சமயமல்ல படைத்தலைவரே," என்று சற்றே கடிந்துகொண்ட மஞ்சளழகியின் சொற்களை இடையே மறித்த இளைய

பல்லவன் தன் வீர முகத்தில் உறுதியுடன் சிறிது அலட்சியமும் மகிழ்ச்சியும் கலந்துலாவ அவை குரலிலும் தாண்டவமாடச் சொன்னான். "படைத்தலைவரே என்ற கூட்டுச்சொல் தேவையில்லை மஞ்சளழகி. தலைவரே என்றழைத்தாலே போதும்," என்று கூறி, தன் கையுடன் கலந்து நின்ற அவள் கை விரல்களைச் சற்று நெறித்துச் சிரிக்கவும் செய்தான்.

பெரும் ஆபத்து சூழ்ந்த சமயத்திலும் சிரிக்கவல்ல அந்த ஆண்மகனை ஆச்சரியத்துடன் பார்த்தாள் மஞ்சளழகி. "ஏன்? படைத்தலைவர் என்ற பெயர் பிடிக்கவில்லையா உங்களுக்கு?" என்று சற்று கோபத்துடன் வினவவும் செய்தாள்.

"பிடிக்கிறது. ஆனால் இந்தச் சமயத்துக்குப் பொருத்தமில்லை." என்றான் இளையபல்லவன்.

"ஏன் பொருத்தமில்லை?" காரணமில்லாத சீற்றத்துடன் எழுந்தது அவள் கேள்வி.

"இப்பொழுது தலைமை தாங்கி நடத்தப் படை எதுவுமில்லை," என்று குறிப்பிட்டான் இளையபல்லவன்.

"தலைவர் என்ற சொல் மட்டும் பொருந்தும் போலிருக்கிறது."

"உம். பொருந்தும்."

"எதற்குத் தலைவர் நீங்கள்?"

"நாடகத்துக்கு."

"நாடகமா?" சரேலென நின்று திரும்பி நோக்கினாள் மஞ்சளழகி.

"ஆம். நாடகம்தான், நில்லாதே, வா," என்று அவளை இழுத்துக் கொண்டு நடந்தான் இளையபல்லவன்.

"என்ன நாடகம்?" என்று கேட்டாள் மஞ்சளழகி கால்கள் பின்ன, தட்டுத் தடுமாறி நடந்துகொண்டே.

"கடற்கரை நாடகம். அதில் நான் தலைவன். நீ தலைவி. அத்தகைய நாடகப் பாத்திரங்கள் நாம். நடத்திக் கொடுத்தவர் உன் தந்தை, ரசிகர்கள் அதோ," என்று கையால் தூரத்தே நின்ற கொள்ளையரைச் சுட்டிக் காட்டிய அவன் சற்றுப் பெரிதாகவே நகைத்து அவள் கையை விட்டுத் தன் கையால் அவள் இடையை வளைத்துக் கொண்டான்.

அவன் போக்கு அவளுக்கு மெள்ள மெள்ளப் புரிந்ததால் அவள் மீண்டும் வியப்புக்கும் கவலைக்கும் உள்ளானாள். கடற்கரை நாடகத்தைத் தன் தந்தை மட்டும் நடத்தவில்லையென்றும் இளையபல்லவனும் ஏதோ ஒரு பதில் நாடகத்தைத் துவங்கியிருக்கிறானென்பதையும் அவள் உணர்ந்துகொண்டாள். அந்த நாடகத்தை முன்னிட்டே கையைப் பிடித்திருந்த கை இடையில் தவழ்ந்து விட்டதென்பதையும் புரிந்துகொண்டாள் மஞ்சளழகி. தந்தை வகுத்த படுகுழியில் விழுவதற்கோ அல்லது அதிலிருந்து தப்புவதற்கோ அவன் பதில் திட்ட மொன்றை உள்ளூர சிருஷ்டித்து விட்டானென்பதும் அவனுடைய உறுதியான நடையிலிருந்தும் கேலிப் பேச்சி லிருந்தும் அவளுக்குத் தெள்ளெனத் தெரிந்தது. ஆகவே அடுத்தபடி என்ன செய்யப் போகிறானென்பதை அறியாமலே சில விநாடிகள் மௌனமாக நடந்த அவள் மறுபடியும், "என் பேச்சைக் கேளுங்கள். இந்த அக்ஷய முனையிலிருந்து சென்றுவிடுங்கள்," என்று சொன்னாள் குரலில் கவலை பாய.

"ஏன்? என்னைப் பிடிக்கவில்லையா உனக்கு?" என்று சொன்னான் இளையபல்லவன்.

"என்னைக் கேட்க வேண்டாம் அதற்கு," என்றாள் மஞ்சளழகி மனம் கரைய, உணர்ச்சிகள் பொங்கி வழிய.

"பின் யாரைக் கேட்பது?"

"உங்கள் மனத்தைக் கேளுங்கள்."

இதைக் கேட்டதும் இளையபல்லவன் முகத்தில் பரவிக் கிடந்த கேலி நகை மறைந்து, கவலை அதிலிருந்த இடத்தை ஆட்கொண்டது. அவன் மனமென்ன, உணர்ச்சிகள் அனைத்துமே அவள் சொற்களுக்குப் பதில் கூறின. ஒரே நாளில் வாழ்வு முழுவதையுமே தன் பாதங் களில் அர்ப்பணித்துவிட்ட மஞ்சளழகியின் இதய தாபத் தையும், தியாக வேகத்தையும் பற்றிய உண்மைகளை உணர்ச்சிகள் அவன் சிந்தையில் வாரித் தெளித்தன. அவற்றின் வேகத்துக்கும் வேகத்தின் விளைவாக மின்னல் போல் சித்தத்தில் வீசிய கேள்விகளுக்கும் செவி சாய்த்த இளையபல்லவன் சிறிது ஆயாசப் பெருமூச்சு விட்டான். 'இந்த அழகி செய்த இத்தனை தியாகத்துக்குப் பிறகும் அவளை என்ன கேள்வி கேட்கிறாய்?' என்று அவன் மனம்கூட அவனைச் சுரீரெனச் சுட்டது. அதன் விளை வாக அவன் குரலின் தொனியை மாற்றிக்கொண்டு சொன்னான்: "மஞ்சளழகி! அக்ஷயமுனையையும் என்னை யும் விட்டுப் போகச் சொல்லும் ஒரு யோசனையை மட்டும் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். வேறு எதை வேண்டு மானாலும் சொல், கேட்கிறேன். நம்பிய பெண்ணைக் கைவிட்டுச் சென்றான் அந்தப் பாதகன் என்று அதோ உள்ள அந்தக் கொள்ளையர் கூற நான் விடமாட்டேன். நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன்."

"என்ன முடிவு?" அச்சத்துடன் வினவினாள் மஞ்சளழகி.

"மங்களமான முடிவு. வா சீக்கிரம்," என்று இடையை அணைத்த கை இறுகத் தழுவிய வண்ணமே அவளை இழுத்துக்கொண்டு கொள்ளையர் குழுமி நின்ற இடத்துக்கு வந்து சேர்ந்த இளையபல்லவன், கொள்ளையர் கூட்டத்தை ஒருமுறை தன் கண்களால் சற்று வளைத்து அளவெடுத் தான்.

கொள்ளையர் முகங்களில் மகிழ்ச்சியின் அறிகுறி சிறிதும் தெரியவில்லை. எல்லா முகங்களிலும் கடுமையும் கவலையும் தாண்டவமாடின. அவர்கள் துணைவிகளின் முகங்களில் பயத்தின் சாயை பெரிதும் படர்ந்து நின்றது. முதல் நடனத்தின் முடிவில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளாலும் வில்வலன் கூறிச் சென்ற சொற்களாலும் அச்சத்தின் வசப் பட்டிருந்த அந்தக் கொள்ளையர் கூட்டம், அந்த அச்சத்தி லிருந்து அப்பொழுதும் விடுபடவில்லையென்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் அவர்கள் முன்பு மிகவும் கம்பீரத்துடன் நிமிர்ந்து நின்றான். மஞ்சளழகியின் இடையிலிருந்த கையை இறுக்கி, அவள் உடலைத் தன் பக்கத்தில் சேர்த்து நன்றாக அணைத்தும் கொண்டான். 'இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம்?' என்று கொள்ளையரை நோக்கி வினவுவது போலிருந்தது அவன் செய்கை.

அவன் செய்கையையும் துணிவையும் கண்டு கொள் ளையருக்கு என்ன செய்வதென்று புரியாததால் அவர் களனைவரும் பிரமித்துப் பேசவும் சக்தியற்று நிற்கவே செய்தார்கள். வெட்கத்தை அதிகமாக அறியாத கொள்ளை மாதர்கூட இளைய பல்லவன் வெட்கம் கெட்ட முறையில் பகிரங்கமாக மஞ்சளழகியின் இடையைத் தழுவி நின்றதைக் காண இஷ்டப்படாதவர்கள் போல ஏளனக் குறியை முகத்தில் காட்டினார்கள். சிலர் இதழ்களை மடித்துத் தங்கள் வெறுப்பைப் பகிரங்கமாகக் காட்டவும் செய்தார்கள். இருந்தும் அந்தக் கூட்டத்தில் ஒருவர் கூடப் பேச முற்படாது போகவே இளையபல்லவனே பேசத் தொடங்கி, "இந்த வரவேற்புக்கு என்ன காரணம்?" என்று வினவினான்.

முன் வரிசையில் நின்ற கொள்ளையர், ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். பின்னாலிருந்தவர்கள் ஏதோ முணுமுணுத்தார்கள். "ஏன் நான் கேட்பது உங்கள்

காதில் விழவில்லையா?" என்று சற்றுக் கடுமையுடன் கேட்டான் இளையபல்லவன் இரண்டாம் முறை.

கொள்ளையர் முன் வரிசையிலிருந்த யவனன் ஒருவன் மட்டும் சற்றுத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "இது முறையல்ல," என்று மஞ்சளழகியிருந்த நிலையைத் தன் கையால் சுட்டிக்காட்டினான்.

"ஆம், ஆம்," என்று பல குரல்கள் பின்னணியிலிருந்து ஆமோதித்தன.

"எது முறையல்ல?" என்று மீண்டும் கேட்டான் இளையபல்லவன்.

"இவள் மணமாகாதவள்," என்று மற்றொரு கொள் ளைக்காரன் ஆரம்பித்தான்.

"அதைப்பற்றி உங்களுக்கென்ன கவலை?" இளைய பல்லவன் குரலில் சீற்றம் மிகுந்திருந்தது.

"கவலையிருக்கிறது. அக்ஷயமுனையில் பழக்கம் ஒன்று உண்டு" என்றான் இன்னொரு கொள்ளைக்காரன்.

இளையபல்லவன் இதழ்களில் இகழ்ச்சி நகை மண்டியது. "மணம் செய்துகொள்ளப் போகும் பெண் ணுடன் தனித்துச் சில விநாடிகள் பேசக்கூடாது என்பது தான் அந்தப் பழக்கமா?" என்று பெரும் வெடியொன்றை எடுத்து அவர்களிடையே வீசினான் இளையபல்லவன்.

அந்தப் பதில் கொள்ளையர்களைச் சில விநாடிகள் ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது. பிரமை தீர்ந்ததும் கூட்டத்தி லொருவன், "அப்படியானால் நீங்கள் இவளை...இவளை..." என்று குழறினான்.

"திருமணம் செய்துகொள்ளப் போகிறேன். ஏன் என்னையும் உங்களைப் போல் நெறியற்ற கொள்ளைக் காரன் என்று நினைத்தீர்களா? உங்கள் துணைவிகளில் எவ்வளவு பேர் மனைவிகள்? எத்தனை பேர் ஆசை

நாயகிகள்?" என்று சீறிய இளையபல்லவன், "நெறியற்ற உங்கள் சாட்சியம்தான் பலவர்மனுக்குத் தேவை போலிருக்கிறது? பூர்வகுடிகளிடம் கிலிபிடித்த பேடிகளென்று உங்களை நேற்றே புரிந்துகொண்டேன். காதலரை வெறிக்க வெறிக்க வெட்கங்கெட்டுப் பார்த்துப் பலவர்மனுக்குச் சாட்சி சொல்லக் கூட்டம் கூடும் கயவர்கள் என்பதையும் இன்று அறிந்துகொண்டேன். சென்று சொல்லுங்கள் பலவர்மனிடம், இந்த மஞ்சளழகியை நான் மணக்கத் தயார் என்று. இன்று பகலில் கோட்டை மாளிகையில் சந்திப்பதாகச் சொல்லுங்கள் அந்த சூழ்ச்சிக்காரனிடம்," என்று மிக வேகமாகக் கூறிவிட்டு, "மஞ்சளழகி! நீ மாளிகைக்குச் செல், சீக்கிரம் வருகிறேன்," என்று அவளை நோக்கியும் சொல்லி விடை பெற்றுக்கொண்டு விடுவிடு என்று தன் படகிருந்த இடத்தை நோக்கி நடந்தான். அதற்குப் பிறகு கரையைத் திரும்பிப் பார்க்காமலே படகின் துடுப்புகளைத் துழாவித் தன் மரக்கலத்தை நோக்கிச் சென்றான். மரக்கலத்தை அடைந்து தன் அறைக்குச் சென்று மாற்று உடை அணிந்ததும் தன் உபதலைவர்களைத் தன் அறைக்கு அழைத்து வரும்படி மாலுமியொருவனுக்குக் கட்டளையிட்டான்.

உபதலைவர்கள் அனைவரும் அறையில் கூடியதும் இளையபல்லவன் கடற்கரையில் நடந்த அனைத்தையும் ஒளிவு மறைவின்றி அவர்களிடம் விவரித்துவிட்டு, "தலைவர்களே! மிகுந்த ஆபத்தான நிலையில் நாமிருக்கிறோம். இங்கேயே நாம் தங்கினால் அக்ஷயமுனையைக் காக்கும் பொறுப்பு, அதாவது பயங்கரமான பூர்வகுடிகளை எதிர்த்து நிற்கும் கடமை நம்மீது சுமரும். நாம் சென்று விட்டால் எப்படியும் பூர்வகுடிகள் அக்ஷயமுனை வாசிகளைப் பழி வாங்குவார்கள். கொலையும் கொள்ளையும்

நடக்கும், அதற்குப் பொறுப்பும் நாமாவோம். அது மட்டுமல்ல..." என்று சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

"சொல்லுங்கள்," என்றான் அமீர்.

"கடலில் நம்மை அகூதா பழி வாங்கினாலும் வாங்கலாம்,' என்றான் இளையபல்லவன்.

"நம்மையா !"

"ஆம்."

"ஏன் ?"

"பெண்ணின் கற்பு பாதிக்கப்படுவதை மட்டும் அகூதா விரும்புவதில்லையாம்."

இதைக் கேட்டதும் வியப்பிலாழ்ந்த உபதலைவர்களில் கண்டியத்தேவன் சொன்னான். "விசித்திரமாயிருக்கிறது இது" என்று.

"ஆம் எனக்கும் விசித்திரமாகத்தானிருந்தது முதலில். இப்பொழுது நினைத்துப் பார்க்கும்பொழுது முற்றும் உண்மையென்று தெரிகிறது. சென்ற ஒரு வருட அனுபவத்தில் பெண்களை மானபங்கப்படுத்துவதை மட்டும் அகூதா அனுமதிக்கவில்லை."

"ஆம், ஆம்," என்று பதிலுக்கு எழுந்தன உபதலைவர்களின் குரல்கள்.

இதை அடுத்து அறையில் மௌனமே சில விநாடிகள் நிலவியது. மௌனத்தை முதலில் அமீரே உடைத்தான். "இப்பொழுது நாம் செய்ய வேண்டியது என்ன ?" என்று வினவினான்.

"நான் இங்கு தங்கப் போகிறேன்," என்று உறுதியுடன் கூறினான் இளையபல்லவன்.

"நாங்கள் ?" அமீர் கேட்டான் வறண்ட குரலில்.

"நீங்கள் ஒன்று இந்த ஆபத்தில் பங்கு கொள்ளலாம். அல்லது மரக்கலத்தை உங்களுக்கு அளிக்கிறேன், நீங்கள் தமிழகம் செல்லலாம்," என்றான் இளையபல்லவன்.

"மரக்கலம் செல்லும் நிலையில் இல்லை," என்று கண்டியத்தேவன் சுட்டிக் காட்டினான்.

"அதற்கு வசதி செய்து தருகிறேன்," என்றான் படைத்தலைவன்.

"நீங்களா?"

"ஆம். மஞ்சளழகியை மணந்துகொள்ள ஒப்புக் கொண்டு அக்ஷயமுனைக் கோட்டையின் காவல் பொறுப்பை ஏற்றால் பலவர்மனுக்கு அடுத்த அதிகாரி நான்தான். உங்களுக்குத் தேவையான சகலத்தையும் அளிக்க என்னால் முடியும்."

மீண்டும் மௌனம் நிலவியது அந்த அறையில். கடைசியாக அமீர்தான் தன் ஆசனத்தைவிட்டு எழுந்து இளையபல்லவனைத் தனது பெருவிழிகளால் நோக்கி னான். பிறகு அந்த ராட்சத விழிகள் மற்ற உபதலைவர்கள் மீதும் சுழன்றன. மீண்டும் இளையபல்லவனை நோக்கிய விழிகளில் திட்டமான முடிவு இருந்தது. "இளைய பல்லவரே! பல ஆபத்துகளை நாம் இதுவரை பகிர்ந்து கொண்டு இருக்கிறோம். இனியும் பகிர்ந்துகொள்வோம். நானும் உங்களுடன் இங்கேயே தங்கத் தீர்மானித்து விட்டேன். மிஞ்சினால் ஆபத்தின் முடிவு மரணம்தானே? அதற்கு நான் தயார்," என்றான் அமீர்.

அமீரின் முடிவு மற்றவர்களின் முடிவையும் நிர்ண யித்துவிட்டது. இளையபல்லவனுக்கு ஏற்படும் கதி தங்களுக்கும் ஏற்படட்டும் என்று அவனுடன் தங்கவே தீர்மானித்தார்கள் மற்ற உபதலைவர்களும். அந்த முடி வுக்குப் பிறகு தன் ஆசனத்தைவிட்டு எழுந்த இளைய

பல்லவன், அவர்களை நோக்கிக் கூறினான்: "தலைவர்களே! உங்களுக்கு என்னிடமிருக்கும் அன்பை நான் அறியாதவன் அல்ல. ஆனால் என் செய்கைகளால் விளைந்துள்ள ஆபத்தை உங்கள்மீது சுமத்த நான் விரும்பாததாலேயே உங்கள் முடிவைத் தெரிந்துகொள்ள விரும்பினேன். நீங்கள் என்னுடன் தங்கத் தீர்மானித்துவிட்டதால் இனி என் திட்டத்தைக் கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள்," என்று கூறி அறையில் உலாவிய வண்ணம், பலவர்மனை வெற்றி கொள்ளவும் பூர்வகுடிகளை முறியடிக்கவும், எந்த ஒரு பணியை நாடி அக்ஷயமுனை வந்தானோ அந்தப் பணியை நிறைவேற்றவும் உதவக்கூடிய மிகவும் துணிகரமான திட்டமொன்றை விவரிக்கலானான் இளைய பல்லவன். அந்தத் திட்டத்தின் ஆபத்து எல்லையற்றது என்பதையும், தங்கள் ஒவ்வொருவர் வாழ்வும் ஒவ்வொரு விநாடியிலும் சோதனையில் இருக்கும் என்பதையும் உபதலைவர்கள் புரிந்துகொண்டார்கள். அது மட்டுமல்ல, ஆரம்பத்திலேயே இரண்டொருவர் உயிர் போய்விடுமென்ற உண்மையும் புரிந்திருந்தது அவர்களுக்கு. தங்களுடைய நிலையைவிட இளையபல்லவன் நிலை பேராபத்து வாய்ந்தது என்பதை அவர்கள் புரிந்துகொண்டதால் அவனைப் பற்றிக் கவலைப்படவும் செய்தார்கள்.

இளையபல்லவன் இதயத்தில் மட்டும் அச்சமில்லை. அவன் சம்பந்தப்பட்ட மட்டில் அது தலைக்குமேல் போய்விட்ட ஆபத்து. 'தலைக்கு மேல் ஓடிய வெள்ளம் சாண் போனாலென்ன, முழம் போனாலென்ன?' என்று எண்ணி மனத்துக்குள்ளேயே நகைத்துக் கொண்டான் இளைய பல்லவன்.

அத்தியாயம் 31

# நிதிப் பெட்டியா? சதிப் பெட்டியா?

அக்ஷயமுனைக் கடற்கரையில் அன்றைய காலை நீராட்டத்தை அடுத்து ஏற்பட்ட நிகழ்ச்சிகளையும் அந்த நிகழ்ச்சிகளின் விளைவாக உருவெடுத்துள்ள புது நிலையை யும், அந்தப் புது நிலையைச் சமாளிக்கத் தான் வகுத்துள்ள திட்டத்தையும் தன் உபதலைவர்களுக்கு விளக்கிச் சொன்ன இளையபல்லவன், தன் சம்பந்தப்பட்ட வரையில் ஆபத்து தலைக்குமேல் போய்விட்டதை எண்ணி, 'தலைக்கு மேல் ஓடிய வெள்ளம் சாண் போனாலென்ன? முழம் போனாலென்ன?' என்று உள்ளூர நகைத்துக் கொண்டா னானாலும் தனது உபதலைவர்களின் மனப்போக்கைப் பூரணமாக அறிந்துகொள்ள அவர்கள்மீது மீண்டு மொருமுறை தன் கண்களை ஓடவிட்டான். மரக் கலத்தின் அந்த அறையில் கூடியிருந்த உபதலைவர்களின் முகங்களில் அச்சம் லவலேசமும் இல்லையென்றாலும் கவலை மட்டும் அதிகமாகப் பரவிக் கிடந்ததைக் கவனித்த இளைய பல்லவன், அவர்களை நோக்கி, "திட்டத்தில் உங்களில் யாருக்காவது ஆட்சேபணையிருந்தால் சொல்லலாம். வேறு சிறந்த திட்டம் இருந்தாலும் சொல்லலாம். அதையும் அலசிப் பார்த்து ஒரு முடிவுக்கு வருவோம்" என்று கூறினான்.

உபதலைவர்களின் முகங்களில் கவலை மேலும் அதிகமாக விரிந்ததேயொழிய உதடுகளிலிருந்து சொற்க ளேதும் உதிராததால் சில விநாடிகளுக்கு அந்த அறையில்



இந்த இதழ் அட்டைப்படம்
'கடல்புறா'வில் வரும் ஒரு காட்சியைச்
சித்திரிக்கிறது.

மௌனமே நிலவியது. தனது பெரும் கைகளால் தலை மயிரை அடிக்கடி துழாவிவிட்டுக் கொண்டு தீவிர யோசனையிலிருந்த அமீர் மட்டும் இறுதியில் படைத் தலைவனுக்குப் பதில் சொல்லத் துவங்கி, "இல்லை, வேறு வழியே இல்லை. நீங்கள் சொன்ன திட்டம் ஒன்றுதான் பயனளிக்கக் கூடியது. ஆனால் அதில் ஓர் இடந்தான் பலவீனமுள்ளது," என்றான்.

"எந்த இடம் அமீர்?" என்று வினவினான் படைத் தலைவன்.

"நீங்கள் பலவர்மன் மாளிகையிலேயே தங்க உத்தேசித்திருப்பது," என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

"அதில் என்ன பலவீனமிருக்கிறது!" என்று மீண்டும் கேட்டான் படைத்தலைவன்.

"நீங்கள் எப்பொழுதும் பலவர்மனின் நேர் கண் பார்வையிலிருப்பீர்கள்," என்று அமீர் சொன்னான். குரலில் கவலை பாய.

"ஆமாம், இருப்பேன்," என்றான் படைத்தலைவன் அமீரின் முகத்தை உற்று நோக்கி.

"அவசியமானால் எந்த விநாடியிலும் உங்களைப் பலவர்மன் தீர்த்துக் கட்டிவிட முடியும். உறக்கத்தில் கழுத்தை யறுத்தாலும் கேட்பதற்கு ஆளிருக்காது" என்றான் அமீர்.

"மருமகனை அழிப்பதால் பலவர்மனுக்கு என்ன லாபம்?"

"மருமகனாவதற்கு முன்பே அழிப்பதால் லாப மிருக்குமல்லவா?"

"ஆம், ஆம். இருக்கும்."

"தலைவரான உங்களைத் தீர்த்துக் கட்டிவிட்டால் நகருக்குள் காவல் புரியும் என்னையும் இந்த மரக்கலத்தின்

மாலுமிகள் ஐம்பது பேரையும் ஒழித்துவிடுவது பலவர்ம னுக்கு மிகவும் எளிதல்லவா?"

"ஆம். எளிதுதான்" என்று ஒப்புக்கொண்ட இளைய பல்லவன் சில விநாடிகள் ஆழ்ந்த யோசனையில் இறங்கி னான். பிறகு சொன்னான், "அமீர், ஒரு முக்கிய விஷயத்தை மறந்துவிட்டுப் பேசுகிறாய். நம் அனைவரையும் காரண மின்றி அழித்தால் அகூதாவின் சீற்றத்துக்கு இலக்காக வேண்டியிருக்கும் என்ற அச்சம் பலவர்மனுக்கு இருக் கிறது." என்று.

இதற்கும் அசையாமலே அமீர் கூறினான், "இருந்தது என்று சொல்லுங்கள்?" என்று.

இளையபல்லவன் தன் கூரிய விழிகளை அமீர்மீது திருப்பினான். அவன் கண்களில் பலமான கேள்வி தொக்கி நின்றதைக் கவனித்த அமீர் தன் கருத்தை விளக்கினான். "அந்தப் பயம் பலவர்மனுக்கும் கொள்ளையருக்கும் இன்று காலை வரையில் இருந்தது. இப்பொழுது இருக்கக் காரணமில்லை என்று நீங்கள்தானே சொன்னீர்கள்?" என்று கேட்டான் தன் பெருவிழிகளைப் படைத்தலைவன் மீது நாட்டி.

"உண்மைதான் அமீர். அகூதாவிடமுள்ள அச்சமென் னும் கவசம் உடைந்துவிட்டதற்கு, மஞ்சளழகிக்கும் எனக்கு முள்ள உறவைப்பற்றி வீண் புரளி கிளப்பிக் கொள்ளை யரையும் சாட்சிக்கு அழைத்திருப்பது காரணம். ஆனால் நான் மஞ்சளழகியை மணம் செய்துகொள்ள முடிவு செய்துவிட்டதால் நிலைமை மீண்டும் பழைய ஸ்திதிக்கு வரவில்லையா? மஞ்சளழகியை முறைப்படி திருமணம் செய்துகொள்ளச் சம்மதித்ததன்றி அக்ஷயமுனையையும் பூர்வகுடிகளிடமிருந்து காப்பாற்ற ஒப்புக்கொண்ட தனது உபதலைவனைக் கொன்றால் அகூதாவின் கரம் கண்டிப்

பாய்ப் பழிவாங்கும் என்பது பலவர்மனுக்கு விளங்காதா?" என்று வினவினான் படைத்தலைவன்.

"விளங்கும் படைத்தலைவரே. ஆனால் பழைய நிலை மீண்டும் ஏற்பட முதலில் மஞ்சளழகியை நீங்கள் திருமணம் செய்துகொள்ள வேண்டும்."

"ஆம்."

"அப்படித் திருமணமாகு முன்பே நீங்கள் கொல்லப் பட்டால்?"

"அகூதா பழி வாங்குவார்."

"மாட்டார்."

"ஏன்?"

"நீங்கள் மஞ்சளழகியைக் கெடுத்துவிட்டதாகப் பலவர்மன் பறைசாற்றுவான். அகூதாவிடமுள்ள பயத்தால் கொள்ளையர் அவன் சொல்வதற்குத் தலையாட்டு வார்கள். மஞ்சளழகியை நீங்கள் மணமுடிக்க ஒப்புக் கொண்டது வெளியில் வராமலே போனாலும் போகும்?"

"இதனால் பலவர்மனுக்கு என்ன லாபம்?"

"முதலில் அகூதாவிடமிருந்து பாதுகாப்பு. பெண் ணைக் கெடுத்தவனுக்காக, அகூதா பழிவாங்க முற்பட மாட்டார். இரண்டாவதாக, பூர்வகுடிகளிடமிருந்து பாதுகாப்பு. அவர்கள் தலைவனொருவனைக் கொன்ற தற்குப் பலவர்மன் பழி வாங்கிவிட்டதால் அவர்களையும் திருப்தி செய்தவனாகிறான். மூன்றாவதாக ஸ்ரீவிஜய மன்னரிடமிருந்து பாராட்டு கிடைக்கும். நிலத்திலும் கடலிலும் அரசாங்கத்தின் பெரும் துணையாயிருக்கும் பூர்வகுடிகளைத் தன்னிடமிருந்து மாறுபடச் செய்த தமிழனைத் தொலைத்து, நாட்டின் கடற்காவலரைத் திருப்தி செய்ததற்காக மன்னரின் நம்பிக்கை பலவர்ம னிடம் அதிகப்படும்," என்று அமீர் தன் கருத்தைத் தெளிவாக விளக்கிச் சொன்னான்.

அமீர் கூறியதில் மிகுந்த பொருளிருந்ததைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் தன் ஆசனத்தில் நன்றாகச் சாய்ந்துகொண்டு தீவிர யோசனையில் இறங்கினான். பலவர்மனுக்கு மஞ்சளழகியிடம் பூர்ணமான அன்பிருந்ததை இளையபல்லவன் சந்தேகமறப் புரிந்துகொண்டிருந்தான். அந்த அன்பின் காரணமாக அவள் மனத்துக்குத் துயரத்தைத் தரும் நடவடிக்கையில் பலவர்மன் இறங்கமாட்டான் என்ற அஸ்திவாரத்திலேயே தன் திட்டத்தை வகுத்திருந்தான் படைத்தலைவன். 'அந்த அன்பு ஒருவேளை உண்மையாகி விட்டால்? அந்த அன்பைவிடச் சுயநலம் பெரிதாயிருந்தால்? அமீர் சொன்ன வழியைக் கையாளலாம் பலவர்மன். திருமணமாகுமுன்பே என்னைக் கொலை செய்துவிட்டுத் திருமணம் செய்துகொள்வதாக நான் கூறியது வெறும் ஏமாற்று வித்தை என்று பறைசாற்றலாம். அதற்குக் கொள்ளையரும் ஒப்புக்கொள்வார்கள். நான் அழிந்துவிட்டால் அகூதாவிடமுள்ள பயத்தால் பலவர்மன் சொல்லும் எதையும் கொள்ளையர் ஒப்புக்கொள்வார்களா?' என்று எண்ணிப் பார்த்த படைத்தலைவன், 'அமீர் சொல்வதிலும் அர்த்தமிருக்கிறது' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். இருப்பினும் தாங்களிருந்த நிலையில் வேறெந்தத் திட்டமும் பலனளிக்காது என்பதையும் புரிந்துகொண்டதால் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து மீண்டும் தன் உபதலைவர்களை நோக்கி, "அமீர் சொல்வதில் உண்மை இருக்கிறது. ஆனால் நான் சொன்ன திட்டத்தைத் தவிர வேறு திட்டம் எனக்குத் தோன்றவில்லை. அக்ஷயமுனை நமது வசமாக வேண்டுமானால் துணிவுடன் அதைக் கையில் எடுத்துக் கொள்வதுதான் விவேகம். என் திட்டத்தின் முதல் படியை இந்தப் பகலிலேயே துவங்கிவிடுகிறேன். இன்றே நான் அக்ஷயமுனையைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்கிறேன். ஏற்றதும் இங்குள்ள கொள்ளையருக்குக் கண்டியத்தேவரையும் கோட்டைக்குள்ளிருக்கும் படைக்கு அமீரையும்,

பொக்கிஷத்துக்குச் சேந்தனையும் பொறுப்பாளிகளாக நியமித்துவிடுகிறேன். இப்படிக் கடற்கரையும் கோட்டையும், பொக்கிஷமும் நம் வசமானால் பலவர்மனும் நமது வசமானது போலத்தான். அப்பொழுது முதல் திட்டப்படி நமது மாலுமிகள் கொள்ளையர் உதவி கொண்டு நமது மரக்கலத்தைச் செப்பனிடட்டும். அமீர் கோட்டையின் வாயில்களைக் காக்கட்டும். அந்தக் காவலுக்கு வேண்டிய பணத்தைச் சேந்தன் அள்ளிவிடட்டும்," என்றான்.

"இதெல்லாம் நடக்கப் பலவர்மன் அனுமதிக்க வேண்டுமே?" என்று வினவினான் கண்டியத்தேவன்.

"அனுமதிக்கும் அவசியத்தை நான் ஏற்படுத்துகிறேன்" என்று உறுதியுடன் கூறிய இளையபல்லவன் ஒரு முடிவுக்கு வந்து திடீரென ஆசனத்திலிருந்து எழுந்தான். எழுந்து மரக்கலத்தின் சாளரத்துக்குச் சென்று தூரத்தே தெரிந்த அக்ஷயமுனைக் கோட்டையைச் சிறிது நேரம் உற்று நோக்கினான். பிறகு, அமீரைத் தன் அருகில் வரும்படி சைகை செய்து, "அமீர்! கோட்டையை நன்றாகக் கவனி," என்று கோட்டையைச் சுட்டிக் காட்டினான். அமீர் தன் பெரு விழிகளால் கோட்டையை நன்றாக ஆராய்ந்து விட்டு, "மொத்தம் வாயில்கள் மூன்று இருக்கின்றன." என்று கூறி விட்டுப் படைத்தலைவனை உற்றுநோக்கினான்.

இளையபல்லவன் அவனைத் திரும்பிப் பார்க்காமலே, "இதோ பார் அமீர்! நான் சொன்ன திட்டம் நினைப்பிலிருக்கிறதல்லவா?" என்று கேட்டான்.

"அதற்குள்ளா மறந்துவிடுவேன்?" என்றான் அமீர்.

"மறதிக்காகச் சொல்லவில்லை. கோட்டையை நன்றாக உற்றுப் பார். நம் நாட்டுக் கோட்டைகளுக்கு வாயில்கள் எத்தனை உண்டு?"

"நான்கு."

"ஆமாம். ஆனால் இங்கே நான்காவது வாயில் இல்லை. நான்காவது வாயில் இருக்க வேண்டிய இடத்தில் மதில் பெரிதாக இருக்கிறது."

"ஆம்."

"அதை அடுத்து பகிட்பாரிஸான் மலைக்காடு இருக்கிறது.

"ஆம்."

"பூர்வகுடிகள் வரும் வழி அது என்று நினைக்கிறேன்."

"ஏன்?"

"பூர்வகுடிகள் காட்டுவாசிகள். தவிர இந்த நகரத்தின் மீது கண்ணோட்டம் வைக்க ஒன்றுதான் இடம். அங்கு எப்பொழுதும் பூர்வகுடிகளின் நடமாட்டம் இருக்கும் என்று நினைக்கிறேன்."

"இருக்கலாம்."

"ஆகவே அந்தப் பகுதியில் காவலைப் பலப்படுத்திக் கொள். கோட்டையின் கடற்கரை வாயிலையும் மற்ற வாயில்களையும் நான் கவனித்துக் கொள்கிறேன்."

"அதற்கு நாமிருவரும்..." என்று இழுத்தான் அமீர்.

"உயிருடனிருந்தால்தான் முடியும். நீ அங்கு காவல் புரியும்போது உன்னையும் உன்னுடன் இருப்பவரையும் வில்வலன் வீரர்கள் கொன்றாலும் கொல்லலாம். மாளிகையில் இருக்கும்போது நான் இறந்தாலும் இறக்கலாம். இந்த இரண்டையும் இரண்டு நாள்களுக்கு நாம் தவிர்த்துக் கொண்டால் நமது கால் அக்ஷயமுனையில் பலமாக ஊன்றிவிடும். பிறகு பலவர்மனோ பூர்வகுடிகளோ யாரும் நம்மை அசைக்க முடியாது. ஆகவே இரண்டு நாள் எச்சரிக்கை தேவை. தவிர இந்த இரண்டு நாளும் அக்ஷயமுனைக் கோட்டை மக்களை நமது பக்கத்தில் இழுக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கும் வழி இருக்கிறது." என்றான் படைத் தலைவன்.

"என்ன வழி?" என்று கேட்டான் அமீர்.

"பொறுத்துப் பார் அமீர்," என்று கூறிய இளைய பல்லவன் மற்ற உபதலைவர்களை நோக்கி, "உபதலைவர்களே, நானும் சேந்தனும் இன்னும் சில நாழிகைகளில்

கோட்டைக்குள் செல்லப்போகிறோம். என்னிடமிருந்து செய்தி வரும்வரை நீங்கள் யாரும் மரக்கலத்தை விட்டு நகர வேண்டாம்," என்று கூறிவிட்டு, "சேந்தா! நீயும் நம்மிட முள்ள ஆறு பெட்டிகளும் என்னைத் தொடர வேண்டும். அதற்கு வேண்டிய மாலுமிகளைப் பொறுக்கிக்கொள்," என்று சேந்தனை நோக்கி உத்தரவிட்டான்.

"ஆறு பெட்டிகளுமா?" என்று வாயைப் பிளந்தான் சேந்தன்.

"ஆம். ஆறு பெட்டிகளும்தான். ஒன்றுகூட மரக் கலத்தில் இருக்க வேண்டாம்," என்று திடமாக உத்தர விட்டான் இளையபல்லவன்.

சேந்தன் முகத்தில் பெரும் சோகம் மண்டிக் கிடந்தது. பரிதாபம் மிக்க விழிகளை அவன் அமீர் மீது திருப்பினான். அமீரின் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லாதிருக்கவே மீண்டும் இளையபல்லவன் மீது கண்களைத் திருப்பிய கூலவாணிகன் சேந்தன், "சென்ற ஒரு வருட காலத்தில் நாம் சேமித்த அத்தனை செல்வமும் அந்த ஆறு பெட்டிகளில் இருக்கின்றன" என்று சுட்டிக் காட்டினான்.

"தெரியும் எனக்கு," என்றான் இளையபல்லவன்.

"அத்தனையும் கோட்டைக்குள் சென்றால் திரும்பி வருமா?"

"வந்தாலும் வரலாம். வராவிட்டாலும் இல்லை."

"அப்படிச் சொத்து முழுவதையும் பறிகொடுப்பது விவேகமா?"

"இதைவிடப் பெரிய சொத்து ஆபத்திலிருக்கிறது."

"இதைவிடப் பெரிய சொத்தா?"

"ஆமாம்."

"அப்படி என்ன சொத்தோ அது?"

"உயிர் எனும் சொத்து," என்று கூறிய இளைய பல்லவன், "உயிர் இருந்தால் இதைவிட அதிகம் சம்பாதிக்க

லாம். உயிர் போய்விட்டால் இவை இங்கிருந்துதான் என்ன பயன்?" என்று கேட்டான்.

உயிரைவிடச் செல்வத்தை அதிகமாக ஆயுள் முழுவதும் மதித்து வந்த கூலவாணிகனுக்கு அத்தனை பொக்கிஷத்தையும் கோட்டைக்கு மாற்ற இஷ்டமில்லை யென்றாலும் வேறு வழியின்றிப் படைத்தலைவன் சொற்படி நடக்கத் தீர்மானித்தான். அத்துடன மந்திரா லோசனை முடிவுற்றது என்பதைக் குறிப்பிடத் தலையை அசைத்த இளையபல்லவன், அறையை விட்டுத் தளத் துக்குச் சென்று மீண்டும் நீண்ட நேரம் கோட்டையைக் கவனித்தான். கோட்டையின் காவல் வழகத்துக்கு அதிக மாகப் பலமாயிருந்தது. கோட்டைமதில்கள் மீது முதல் நாளை விட அதிக வீரர்கள் நடமாடியதைக் கவனித்த இளைய பல்லவன் மிகுந்த திருப்தியுடன் தலையை அசைத்துக் கொண்டான். 'காவல் நேற்றைய காலையை விட இன்று காலை பலமாக இருக்கிறது. காரணம், என்னிடமுள்ள பயம்தான். பயம் இருக்கிற இடத்தில் பலவீனமும் இருக்கிறது. அந்தப் பலவீனத்தை நான் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட இளையபல்லவன் மீண்டும் தன் அறைக்குச் சென்று கோட்டைக்குச் செல்ல ஆயத்தமா னான்.

அடுத்து நாலைந்து நாழிகைகளுக்குள் இளைய பல்லவன் கூலவாணிகனுடனும் ஆறு பெரும் மரப்பெட்டி களுடனும் அவற்றைத் தூக்கமுடியாமல் தூக்கிய பத்துப் பதினைந்து மாலுமிகளுடனும் படகொன்றில் இறங்கிக் கரையை நோக்கிச் சென்றான். படகு கரையை அடைந்ததும் தான் இறங்கிப் பெட்டிகளைக் கீழே இறக்கச் சொன்ன இளையபல்லவன், மாலுமிகளைப் பெட்டி களைத் தூக்கிவரச் சொல்லிக் கூலவாணிகன் பின் தொடரக் கோட்டையை நோக்கி நடந்தான்.

நாழிகைகள் ஓடிவிட்டதால் கதிரவன் கொடுமை அதிகமாகிப் பெரும் உஷ்ணக் காற்று கடற்கரையில் வீசிக் கொண்டிருந்தது. அந்த உஷ்ணக் காற்றையும் தகிக்கும் மணலையும் லட்சியம் செய்யாத கொள்ளையர் ஆங்காங்கு கும்பல் கூடி இளையபல்லவனையும் அந்தப் பெரும் மரப்பெட்டிகளையும் வியப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெரும் பெட்டிகளையும் அதன் பலமான இரும்புத் தாழ்களையும் பார்த்ததும் பெட்டிகளில் இருப்பது என்னவென்பதைப் புரிந்துகொண்ட கொள்ளையர், இளையபல்லவனின் செய்கைக்குக் காரணம் தெரியாமல் விழித்தனர். கப்பலிலிருந்த அத்தனை செல்வத்தையும் இளையபல்லவன் கோட்டை மாளிகைக்குக் கொண்டு செல்கிறானென்பதை உணர்ந்துகொண்ட கொள்ளையர் பலவர்மனின் கையில் சிக்கும் அந்தப் பெட்டிகள் மீண்டும் இளையபல்லவனின் மரக்கலத்துக்குத் திரும்பாதென்பதை உணர்ந்து, 'இத்தனை செல்வத்தையும் ஏன் பறிகொடுக்கிறான் இவன்?' என்று எண்ணிப் பரிதாபத்துடன் படைத்தலைவனையும் பெட்டிகளையும் பார்த்தார்கள்.

பெட்டிகளுக்குள் அடைபட்டிருந்த செல்வம் அவர்களுடைய எண்ணத்தில் பெரும் புரட்சியை விளை வித்தது. முதல் நாள் நிகழ்ச்சிகளையும், கடற்கரைச் சாலைச் சம்பவங்களையும் அவர்கள் அடியோடு மறந்தார்கள். பதக்குகளை மறந்தார்கள்; பயத்தையும் மறந்தார்கள். பெட்டிகளில் அடங்கிய பெரும் பொருள், பேராசை பிடித்த கொள்ளையர் மனத்தில் வேறெந்த உணர்ச்சியும் நில்லாது விரட்டிவிடவே பெரும் கூச்சலுடன் அவர்கள் அந்தப் பெட்டிகளைத் தொடர்ந்து சென்றார்கள். தன்னையும் பெட்டிகளையும் கொள்ளையர் தொடர்ந்து வருவதைக் கவனித்தும் கவனிக்காதவன் போலவே வெகு வேகமாக நடந்து சென்ற படைத்தலைவன் கோட்டைக்குள் நுழைந்து பலவர்மன் மாளிகையின் முன்புறத்தை அடைந்தான். மாளிகையை அவன் அடையுமுன்பே அவனைத் தொடர்ந்து வந்த கூட்டம் அளவுக்கு மீறிப்

பெருகிவிட்டது. கூட வந்த கொள்ளையருடன் அக்ஷய முனை நகரவாசிகளும் கூடிக்கொண்டதால் இளைய பல்லவனைத் தொடர்ந்து பெரும் புரட்சிக் கூட்டம் வருவதைப் போலிருந்ததை மாளிகைச் சாளரத்தின் மூலம் கவனித்த பலவர்மன் ஓரளவு சினத்துக்கும், பயத்துக்கும், குழப்பத்துக்கும் உள்ளானான். அந்தக் குழப்பம், பயம், சினம் இவற்றுடன் திடுதிடுவென்று மாளிகை வாயிலை அடைந்த பலவர்மன் அங்கிருந்த நிலைமையைக் கவனித் தான். நிலைமை தனக்கெதிராகப் பெரிதும் உருவெடுத்து விட்டதாகப் புரிந்துகொண்டதால் மிகவும் கலங்கவும் செய்தான். கூரிய அறிவு படைத்த பலவர்மன், இளைய பல்லவன் எந்த யோசனையுடன் பெட்டிகளைக் கொண்டு வந்திருக்கிறானென்பதைப் புரிந்துகொண்டதால் உள் ளூரத் திகிலும் அடைந்தான். அந்தத் திகிலை உச்ச நிலைக்குக் கொண்டு செல்லும் ஒரு நூதனப் பணியில் அடுத்த விநாடி இறங்கினான் இளையபல்லவன். அந்தப் பணி பலவர்மன் திட்டங்களை, விநாடி நேரத்தில் சுக்கல் சுக்கலாக உடைத்தெறிந்தது. இளையபல்லவனின் பிடியில் தான் பலமாகச் சிக்கிக்கொண்டு விட்டதை உணர்ந்த பலவர்மன், இளையபல்லவனைச் சுடும் விழிகளால் நோக்கினான். இளையபல்லவன் முகத்தில் எந்தவிதக் கலவரமோ குழப்பமோ இல்லை. அவன் உதடுகளில் இகழ்ச்சிப் புன்முறுவல் தவழ்ந்து கிடந்தது. 'தங்கள் அடிமையின் காணிக்கை இதோ,' என்று மரப்பெட்டி களைச் சுட்டிக் காட்டிய அவன் சொற்களிலும் இந்த இகழ்ச்சி பூரமணாக மண்டிக் கிடந்தது. பலவர்மன் கண்ணெதிரே அந்த ஆறு பெட்டிகளில் ஒன்று பெரிதாகக் காட்சியளித்தது. அது நிதிப் பெட்டியா அல்லது தன்னைக் கவிழ்க்க வந்த சதிப்பெட்டியா என்று ஊகிக்க முடிய வில்லை பலவர்மனுக்கு.



அத்தியாயம் 32

# வணங்காத தலை! இணங்காத குரல்!

**வெ**ளியே பெரும் புரட்சிக்கூட்டம் போல் வந்து கொண்டிருந்த கொள்ளையர் குழாத்தையும் நகர மக்கள் கும்பலையும் இளையபல்லவன் தனது மாலுமிகள் தலையில் தூக்கி வந்த ஆறு பெட்டிகளையும் மாளிகைச் சாளரத்தின் மூலமே கவனித்துவிட்டதால் வெகுவேகமாக மாளிகை வாயிலை அடைந்த அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனான பலவர்மன் தன் காலடியில் இறக்கப்பட்ட அந்த ஆறு பெட்டிகளும் பெரும் நிதிப் பெட்டிகளென்பதை அறிந்ததும் தனது திட்டங்கள் அனைத்தையும் இளைய பல்லவன் சுக்கல் சுக்கலாக உடைத்தெறிந்துவிட்டதை உணர்ந்து, அந்த ஆறும் நிதிப் பெட்டிகளா அல்லது தன்னைக் கவிழ்க்க வந்த சதிப் பெட்டிகளா என்பதை அறிய முடியாமல் கலங்கினானென்றால், அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. அந்தக் காரணத்தின் ஆரம்பப்பலனும் உடனே கிடைக்கும்படியான செயலில் இளைய பல்லவனும் அடுத்த விநாடி இறங்கிவிடவே தன்னை விடப் பலமடங்கு அதிகப் புத்திக்கூர்மையும் தந்திரமும் படைத்த மனிதனைத் தான் சமாளிக்க வேண்டிய அவசியத்தைப் புரிந்துகொண்ட பலவர்மன், உள்ளூரக் கலங்கினாலும், உணர்ச்சிகளை அடக்கிக் கொள்வதில் பெரும் திறமை படைத்தவனாதலால்

முகத்தில் ஓரளவு மகிழ்ச்சிக் குறியையே சில விநாடி களுக்குள் தவழவிட்டுக் கொண்டான்.

மாளிகை வாயிலுக்குப் பலவர்மன் வந்ததுமே அவன் காலடியில் நிதிப்பெட்டிகளை இறக்கச் சொல்லி மாலுமி களுக்குக் கட்டளையிட்ட இளையபல்லவன், பலவர்மன் முகத்தில் ஆரம்பத்திலிருந்த குழப்பத்தையும் பிறகு நிலவிய மகிழ்ச்சிச் சாயையையும் கடைக் கண்ணாலேயே கவனித்து உணர்ச்சிகளை அடக்கிக் கொள்வதில் பலவர்மனுக்கிருந்த ஆற்றலைப் பற்றி உள்ளூர வியந்து கொண்டதன்றி அந்த ஆற்றல் வெளியே சொற்களின் மூலம் பிரதிபலிக்க இடம் கொடாமல், "உம்! திறவுங்கள் பெட்டிகளை," என்று தனது மாலுமிகளுக்கு உத்தரவும் இட்டான். அவன் உத்தரவுப்படி சரேலெனப் பெட்டிகளின் மூடிகள் திறக்கப்பட்டதும் கூட்டத்திலே ஏற்பட்ட பெரும் மாறுதலையும் இளைய பல்லவன் கவனிக்கவே செய்தானாகையால் எதிர் பார்த்தது முடிந்துவிட்டது என்ற காரணத்தால் உள்ளே உவகையும் கொண்டான்.

மனிதர்களின் எண்ணங்களை எடை போடுவதில் நிகரற்ற வல்லமை படைத்த இளையபல்லவன் பண மென்றால் பிணமும் வாயைத் திறக்கும் என்ற தமிழ்ப் பழமொழி எத்தனை உண்மையாது என்பதை எண்ணி எண்ணி உள்ளுக்குள் சிரித்துக்கொண்டான். மூடிகள் திறக்கப்பட்ட ஆறு பெட்டிகளுக்குள்ளிருந்து மேல் நோக்கி விழித்த பெரும் செல்வத்தைக் கண்ட கொள்ளையர் கூட்டமும் நகர மக்கள் கும்பலும் நீண்ட நேரம் திகைத்தே நின்றனர். அவர்கள் ஆயுளில் கண்டிராத செல்வம், பல வகை நகைகள், பலவகை நவ மணிகள், பலவகை நாணயங்கள், ஏதேதோ பண்டங்கள், பாத்திரங்கள் இவை யனைத்தும் கண்ணுக்கெதிரே மின்னியதும் பெரும் பிரமையை அடைந்தது கூட்டம். விழித்த கண்கள் விழித்தபடி நின்றன. திறந்த வாய்கள் திறந்தபடி இருந்தன. கைகால்கள் கூட அசைவற்றுச் சில விநாடிகள் ஸ்தம்பித்து விட்டன. ஏதோ அணுகத் தகாத பெரும் புதையலைக்

கண்டு பயப்படுபவர்கள் போல் அருகில் நின்ற கொள்ளையர் கடைசியில் சற்றுப் பின்னும் அடைந்தனர். ஆறு பெட்டிகளில் ஒன்றில் தங்க நாணயங்களும் வெள்ளி நாணயங்களும் கலந்து வழிந்தன. இன்னொன்றில் வைர, கோமேதக, நீலவைடூரிய, மாணிக்கங்களும் அவை பதிக்கப் பட்ட பற்பல ஆபரணங்களும் நிரம்பி நின்றன. மற்றொரு பெட்டியில் மன்னர் மாளிகைகளிலிருந்து கொண்டு வரப்பட்ட பற்பலவித தங்க வெள்ளிப் பத்திரங்கள் காட்சி யளித்தன. இன்னொரு பெட்டி பட்டுகளாலும் பீதாம் பரங்களாலும் நானாவித வண்ணச் சேலைகளாலும் நிரம்பிக் கிடந்தன. கடைசி இரண்டு பெட்டிகளில் வாள்கள், குறுவாள்கள், கேடயங்கள் இவை தானிருந்தன வென்றாலும் ஒவ்வொரு குறுவாள் பிடியிலும் வாள் பிடியிலும் கேடயச் சக்கரங்களிலும் பதிக்கப்பட்டிருந்த மணிகளும் செய்யப்பட்டிருந்த வேலைப்பாடுகளும் அவை ஒவ்வொன்றும் மன்னர்கள் அரண்மனையிலும் மந்திரிகள் படைத்தலைவர் இல்லங்களிலும் இருக்கத் தக்கவை என்பது சந்தேகமறத் தெரிந்தது. அந்தப் பெட்டிகள் தந்த காட்சியைக் கண்டு அதிர்ச்சியுற்று நின்றது எதிரேயிருந்த கும்பல் மட்டுமல்ல, அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவ னான பலவர்மனும் அச்சமுற்று அவற்றை நோக்கினான்.

எதிரே வாயைப் பிளந்துகொண்டு நின்ற கொள்ளை யரை மரக்கலங்களில் அனுப்பிப் பல நாள்களாகத் தான் கடலில் சம்பாதித்த கொள்ளைப் பொருள்களைவிடப் பத்து மடங்கு அதிக மதிப்புப் பெற்ற பெரும் செல்வம் தன் கண் முன்னே விரிந்ததும் அச்சம் அவன் இதயத்தில் எழுந்த தற்குக் காரணங்கள் இரண்டு இருந்தன. ஒன்று அபரிமித செல்வம் தன் கண்முன்னே எழுந்தது. இன்னொன்று அந்தச் செல்வத்தைக் கொள்ளையரும் மற்றோரும் கண்ட தால் தன் திட்டத்தில் ஏற்பட்ட பெரும் தோல்வி. எதிரே வாயைப் பிளந்துகொண்டு பிரமித்து நின்ற கொள்ளையர் இனி எந்தக் காரணத்தை முன்னிட்டும் இளையபல்லவ னுக்கு எதிராகத் திரும்பமாட்டார்கள் என்பதை தனது

ஒரே பார்வையால் தீர்மானித்துக் கொண்ட பலவர்மன், தான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளாவிட்டால் இளையபல்லவன் தனது பிடியில் சிக்குவதற்குப் பதில் தான் இளையபல்லவன் பிடியில் சிக்க வேண்டியிருக்கு மென்பதைச் சந்தேகமறப் புரிந்துகொண்டான். நிதிப் பெட்டிகளைக் கொண்டு வந்ததற்கும், மாளிகை வாயிலில் அந்தக் கூட்டத்திற்கு முன்னால் அவற்றை இளைய பல்லவன் திறந்து காட்டியதற்கும் காரணம் கொள்ளை யரையும் நகரத்தாரையும் பிரமிக்க அடித்துத் தன் வசப்படுத்திக் கொள்ளவே என்பதையும் பலவர்மன் உணர்ந்துகொண்டான். முதல்நாள் நாட்டியத்திற்கு முன்பமாக சிலைகளையும் ஆபரணங்களையும் கொள்ளை யருக்கும் அவர்கள் துணைவிகளுக்கும் பரிசளித்ததிலிருந்து அவனிடம் பெரும் பிரமை கொண்டிருந்த கொள்ளையர், நாட்டியத்திற்குப் பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகளாலும் பூர்வகுடிகளிடமுள்ள கிலியாலும் சிறிது மாறுபட்டிருந் தாலும் மஞ்சளழகியும் இளையபல்லவனும் தனித்திருந் ததைச் சுட்டிக் காட்டி, படைத்தலைவன் நடத்தையிலும் உண்மை எண்ணத்திலும் அவர்களுக்குத் தான் சற்றுச் சந்தேகத்தை விளைவித்திருந்தாலும், அந்தக் கிலி, சந்தேகம் அனைத்தும் பணத்தைக் கண்ட மாத்திரத்தில் பறந்து விட்டதென்பது அவர்களின் முக பாவத்தில் தெள்ளென விளங்கியதையும் கண்டான் பலவர்மன். அப்படிக் கண்ட தால் தன் செல்வாக்குப் பெரிதும் மங்கிவிட்டதையும் இளையபல்லவன் மதிப்பு அவர்களிடம் ஓங்கிவிட்டதை யும்கூடப் புரிந்துகொண்டு மனிதர்களை மாற்றுவதில் செல்வத்துக்குள்ள திறமையைக் கண்டு உள்ளூர வியக்கவும் செய்தான்.

அந்த வியப்பை மேலும் உயர்த்த இளையபல்லவன் பலவர்மனை நோக்கி, "கோட்டையின் காவலரே! அகூதா விடம் ஓராண்டு உப தலைவனாயிருந்த நான் சம்பாதித்த செல்வம் இது. சரியாக மதிப்பீடு செய்பவர்கள் மட்டும் இங்கிருந்தால் இதைக் கொண்டு ஒரு பெரும் அரசை

விலைக்கு வாங்கலாமென்பதை உணர்த்துவார்கள். அப்படி மதிப்பீடு செய்ய இங்கு யாருமில்லையென்றால், இதோ இருக்கும் எங்கள் நாட்டுக் கூலவாணிகன் சேந்தன் அவற்றின் மதிப்பைக் கூறுவான்," என்று சொன்னான். அப்படிச் சொல்லிக்கொண்டே அந்தப் பெட்டிகளில் ஒன்றிலிருந்து ஒரு பெரும் மாணிக்கத்தை எடுத்துத் தன் கட்டை விரலாலும் ஆள்காட்டி விரலாலும் அதைச் சூரிய வெளிச்சத்தில் பளபளக்க விட்டு அது எழுப்பிய செங்கதிர்களை அனைவருக்கும் காட்டிக்கொண்டே, "சேந்தா! இந்த மாணிக்கம் என்ன பெறுமானமுள்ளது?" என்று வினவினான்.

சேந்தனின் ஆராய்ச்சிக் கண்கள் அந்த மாணிக்கத்தைப் பயபக்தியுடன் பார்த்தன; "ஸ்ரீவிஜயத்தின் தங்க நாணயங்களில் ஐயாயிரம் நாணயங்கள் பெறும்" என்றான் அவன் சில விநாடிகளின் ஆராய்ச்சிப் பார்வைக்குப் பிறகு.

இளையபல்லவன் ஏதோ வித்தை காட்டுபவன் போல் அந்தக் கல்லை நாற்புறமும் காட்டிக்கொண்டு கொள்ளையரை நோக்கி, "இதைப்போல் சுமார் ஆயிரம் கற்கள் இந்தப் பெட்டியில் இருக்கின்றன. தவிர ஏராளமான நகைகள் இருக்கின்றன" என்று கூறிவிட்டு மிக அலட்சியமாக அந்த மாணிக்கத்தைப் பெட்டியில் விட்டெறிந்தான். பிறகு மற்றொரு பெட்டியைச் சுட்டிக் காட்டி, "இதிலுள்ள தங்கப்பாத்திரங்களை ஸ்ரீவிஜய நகரத்தின் கடைத்தெருவில் வெளிநாட்டவருக்கு விலை கூறினால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு அக்ஷயமுனைக் கோட்டையைக் காக்க இப்பொழுது இருப்பதுபோல் இரண்டு மடங்கு படையைத் திரட்டலாம். ஆனால் அது என் உத்தேசமல்ல..." என்று மேலும் ஏதோ இருக்கிறதென்பதை ஊகத்துக்கு விட்டுப் பேச்சைப் பாதியில் நிறுத்தினான்.

அதுவரை கூட்டத்தைப் பற்றி நின்ற பிரமை மெள்ள மெள்ள விலகியது. அவ்வளவு பெரும் செல்வத்தை இளையபல்லவன் என்ன செய்ய உத்தேசிக்கிறான்

என்பதில் எண்ணம் போகவே கூட்டத்திலிருந்தவர்கள் கசமுசவென்று ஏதோ பேசத் துவங்கினார்கள். குளத்தில் சிறு கல் வீசப்பட்டதும் மெள்ளத் துவங்கும் ஓர் அலை பல அலைகளைக் கிளப்பி விடுவதுபோல் சலசலப்பு அதிகமாகக் கூட்டத்தில் ஏற்படத் தொடங்கியதன்றிச் சில விநாடிகளில் கேள்விகளும் சற்று பலமாகவே எழுந்தன. "இத்தனை நகைகளையும் பொன் நாணயங்களையும் என்ன செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டான் கொள்ளையரில் மிக உயரமாக நின்ற யவனன் ஒருவன்.

"இவற்றை இருக்க வேண்டிய இடத்தில் வைத்துச் செய்ய வேண்டிய பணிக்கு உபயோகப்படுத்துவதாக உத்தேசம்" என்றான் இளையபல்லவன் அந்த யவனன் மீது கண்களைத் திருப்பி.

"இருக்க வேண்டிய இடம் எது? செய்ய வேண்டிய பணி எது?" கொள்ளையர் கூட்டத்தில் நின்ற அரபு நாட்டான் ஒருவன் இந்தக் கேள்வியை வீசினான்.

"இருக்க வேண்டிய இடம் கோட்டைத் தலைவனின் மாளிகையிலுள்ள பொக்கிஷ அறை. செய்ய வேண்டிய பணி இந்தக் கோட்டையிலுள்ள மக்களைக் காப்பது," என்று இளையபல்லவன் கூறினான் அந்த அராபியனைப் பார்த்து.

"செய்ய வேண்டிய பணி இந்தக் கோட்டை மக்களைப் பாதுகாப்பதானால் படை திரட்ட வேண்டும். அதைத்தான் நீங்கள் செய்ய உத்தேசிக்கவில்லையே?" என்று சந்தேகம் கிளப்பினான் சீனன் ஒருவன்.

"ஆம் ஆம்! பின் என்ன செய்ய உத்தேசம்?" என்று பல குரல்கள் கிளம்பின.

இளையபல்லவன் அவர்களைச் சுற்றித் தன் கண்களை ஓடவிட்டான். "படை எதற்காகத் திரட்ட வேண்டும்? இந்தக் கோட்டையில் எத்தனை காவல்

வீரர்கள் இருக்கிறார்கள்?" என்று வினவினான் குரலில் ஏதோ புது அர்த்தம் தொனிக்கும் முறையில்.

"இரண்டாயிரம் பேர்தான் இருக்கிறார்கள்," என்றான் நகர மக்கள் கூட்டத்திலிருந்து முன்னணிக்கு வந்த ஒருவன்.

அவனைக் கூர்ந்து நோக்கிய இளையபல்லவன், "நகர மக்களாகிய உங்கள் தொகை எவ்வளவு?" என்று வினவினான்.

"அதிகமில்லை, சுமார் ஆயிரம் குடும்பங்கள்தான் உண்டு," என்றான் அந்தக் குடிமகன்.

"அவற்றில் சுமார் ஐந்நூறு பேர் போருக்குத் தேற மாட்டார்கள்?"

"தேறுவார்கள். ஆனால்..."

"என்ன ஆனால்..."

"போர்ப் பயிற்சி இல்லை அவர்களுக்கு."

இதைக் கேட்டதும் இளையபல்லவன் ஆச்சரியம் ததும்பும் விழிகளைப் பலவர்மன் மீது திருப்பி, "இது உண்மையா கோட்டைத் தலைவரே?" என்று வினவினான்.

எதற்காக அந்தக் கேள்வியை இளையபல்லவன் அத்தனை பேர் முன்னிலையில் தன்னைக் கேட்கிறான் என்பதைப் புரிந்துகொண்டதால் உள்ளூரக் கோபத்தால் கொந்தளித்த பலவர்மன் உணர்ச்சிகளை வெளிக்குக் காட்டாமலே 'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தான்.

இளையபல்லவன் முகத்தில் ஆச்சரிய ரேகை பலமாகப் படர்ந்தது. "என்ன விந்தை இது! ஸ்ரீவிஜயத் தலை நகரத்திலிருந்து வெகு தூரத்திலிருக்கிறது இந்தக் கோட்டை. பின்னாலுள்ள காட்டைத் தாண்டி நெடுந்தூரம் சென்றால் தான் நாகரிகத்தையும் பெரு நகரங்களையும் கண்ணால் பார்க்கலாம். இங்கோ சதா பூர்வகுடிகளைப் பற்றிப் பயமும்

இருக்கிறது. இத்தனை இருக்கையில் நகரமக்களைப் போர்ப் பயிற்சியின்றி எப்படி வைத்திருக்கிறீர்கள்!" என்று வியப்பு பெரிதும் குரலில் மண்ட பலவர்மனை நோக்கி வினவிய இளையபல்லவன் மீண்டும் கூட்டத்தை நோக்கித் திரும்பி, "ஆட்களின் தொகையால் மட்டும் ஒரு நகரம் பாதுகாக்கப் படுவதில்லை. அவர்கள் துணிவு, எச்சரிக்கை இவற்றா லேயே காக்கப்படுகிறது. இந்தக் கோட்டையின் இரண்டா யிரம் வீரர்களையும், நீங்கள் கூறும் ஐந்நூறு பெரு மக்களையும் திரட்டி, சரியான போர் முறைகளையும் பாதுகாப்பு முறைகளையும் சொல்லிக் கொடுத்தால் இந்தக் கோட்டையைப் பெரும் சைன்னியங்களிடமிருந்தும் பாதுகாக்கலாம். உள்ளே இரண்டாயிரத்து ஐந்நூறு பேர். வெளியே கடற்கரையில் குடிசை போட்டுத் தங்கியுள்ள இந்த ஆயிரம் கொள்ளையர் - அனைவரையும் ஒன்று கூட்டினால் பதக்குகளாகட்டும், சூளுக்களாகட்டும் என்ன செய்ய முடியும்? இங்கு தேவை ஆள் பலமல்ல, ஆள் பலம் இருக்கிறது. சரியான ஆயுதங்கள் தேவை. பயிற்சி தேவை. பயிற்சி பெற்றவர்களை நடத்த படைத்தலைவன் தேவை. துணிவு தேவை. எதையும் சாதிக்கப் பணம் தேவை. அது இதோ இருக்கிறது," என்று மீண்டும் பெட்டிகளைச் சுட்டிக் காட்டினான்.

மீண்டும் கூட்டத்தில் பெரும் சலசலப்பு ஏற்பட்டது. எல்லோரும் ஏக காலத்தில் பேச முற்பட்டதால் ஓரளவு குழப்பமும் ஏற்பட்டது. அந்தக் குழப்பத்தின் ஒலிகளுக்கு மேல் எழுந்தது இளையபல்லவன் குரல்: "சொல்வதை அமைதியுடன் கேளுங்கள். இந்த அக்ஷயமுனைக்குக் காரணத்துடன் வந்தேன். இந்தக் கோட்டையின் பலத்தைப் பற்றியும், பலவர்மனின் திறமையைப் பற்றியும் நான் ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகவே அத்தகைய ஒரு சிறந்த தளபதியின் கீழ் எனது வாழ்வை வளப்படுத்திக்

கொள்ளத் தீர்மானித்தேன். இங்குள்ள கொள்ளையரைப் பற்றியும் கேள்விப்பட்டேன். அவர்கள் செல்வம் பறி போவது, பூர்வகுடியால் ஏற்படும் அட்டகாசம், அதனால் வருஷா வருஷம் நடக்கும் கொலைகள் அனைத்தையும் கேள்விப்பட்டேன். இங்கு கொலைகள் விழாமல் தடுத்து இந்தத் தளத்தை இங்குள்ள மக்களைக் கொண்டு பலப் படுத்த முடியுமானால் திரை கடலோடும் கொள்ளையர் படை சரியான கடற்படையாக மாற்றப்படுமானால் இங்கு செல்வமும் அமைதியும் கொழிக்கும் என்று தீர்மானித் தேன். நிலத்திலும் நீரிலும் இது ஸ்ரீவிஜயத்தின் பெரும் பாதுகாப்பாக அமையும் என்பதையும் முடிவு செய்தேன். என் எண்ணங்களை நிறைவேற்றவே இங்கு வந்தேன். முதலில் கடற்கரையில் கொள்ளையர் மத்தியில் குடிசை யிட்டு உறையவும், என் மரக்கலத்தைச் செப்பனிடவும் எண்ணினேன். ஆனால் நிகழ்ச்சிகள் என் எண்ணங்களை அதிதுரிதமாக மாற்றிவிட்டன. விதியின் கரங்கள் என்னை உங்கள் கோட்டைக்குள் பிடித்துத் தள்ளின. ஆகவே நான் சம்பாதித்த முழுச் செல்வத்தை உங்கள் நலனுக்கும் இந்தக் கோட்டையின் நலனுக்கும் செலவிட முடிவு செய்தே இந்தப் பெட்டிகளை இங்கு கொண்டு வந்தேன். உங்களுக் காக இந்த ஆறு பெட்டிகளையும் பலவர்மனிடம் ஒப்படைக்கிறேன்," என்று சற்று நிறுத்திய இளையபல்லவ னின் பேச்சு கூட்டத்தின் பெரும் கூச்சலில் மூழ்கியது.

கூச்சலைக் கையமர்த்தி அடக்கிய இளைய பல்லவன், "ஆனால் ஒரு நிபந்தனை," என்றான்.

"என்ன நிபந்தனை?" உணர்ச்சிகளை வெளிக்குக் காட்டி முதன் முதலாகக் கோபத்துடன் கேட்டான் பலவர்மன்.

"இதோ இந்த சேந்தன் உங்கள் பொக்கிஷத்தின் அதிகாரியாயிருப்பான்" என்று இளைய பல்லவன் சேந்தனைச் சுட்டிக் காட்டினான்.

"இப்பொழுது என்னிடமுள்ள பொக்கிஷ அதிகாரிக் கென்ன?" என்றான் பலவர்மன் கோபத்துடன்.

"உங்கள் பொக்கிஷ அதிகாரி இதுவரை பணத்தைச் சேர்த்து வந்தான். இவன் செலவிடுவான்," என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"அவ்வளவு ஊதாரியா?"

"ஊதாரியா! சேந்தன.r! ஒருக்காலுமில்லை. பணத்தில் மிகவும் கெட்டி. ஆனால் பூட்டி வைப்பவனல்ல. அதை உபயோகிக்கும் முறை இவனுக்குத் தெரியும். ஆயுதங் களைத் தயாரிக்கவும், கோட்டையைப் பாதுகாக்கவும் இவன் இந்தப் பணத்தை இங்குள்ள மக்களுக்கே செல வழிப்பான்."

"இளையபல்லவரே! நீர் சொல்வது விளங்குகிறது எனக்கு. உங்கள் கையாள் பொக்கிஷத்தை வசப்படுத்திக் கொள்வான், நீங்கள்..."

"கோட்டைக் காவல் பொறுப்பை ஏற்பேன்; எல்லாம் உங்கள் திட்டப்படிதான் நடக்கிறது."

"என் திட்டமா?" பலவர்மன் கேள்வி உக்கிரத்துடன் எழுந்தது."

"ஆம், உங்கள் திட்டம்தான். நடன நிகழ்ச்சியால் பதக்குகள், சூளுக்கள் பகை உங்களுக்கு ஏற்பட்டுவிட்டது. கோட்டை மக்களைக் காக்க உங்கள் வீரர்களால் முடியாது என்பது உங்களுக்குத் தெரியும். ஆகையால் என்னை உங்கள் வலையில் சிக்க வைக்க முயன்றீர்கள். அதற்காக ஏதும் அறியாத உங்கள் மகளையும் என்னையும் கொள்ளை யருக்குச் சுட்டிக்காட்டிச் சாட்சியம் சேகரித்தீர்கள். உங்களுக்கு ஏன் அத்தனை கஷ்டம்? அத்தனை பொறுப் பையும் நானே ஏற்கிறேன். பெரும் கோட்டைகளைப் பாதுகாத்தும் எனக்குப் பழக்கம் உண்டு.. தகர்த்தும்

எனக்குப் பழக்கம் உண்டு." என்று பலவர்மனை நோக்கிக் கூறிய இளையபல்லவன் கொள்ளையரை நோக்கி, "உங்களுக்குச் சம்மதம்தானே?" என்று வினவினான்.

"சம்மதம், சம்மதம்," என்று கொள்ளையரிடமிருந்து மட்டுமின்றி நகர மக்களிடமிருந்தும் குரல்கள் கிளம்பி வானைப் பிளந்தன.

பலவர்மன் உள்ளம் பெரும் எரிமலையாகிக் கொண்டிருந்தது. இளையபல்லவன் கூறிய திட்டம், தான் வகுத்த திட்டம் தானென்றாலும், பெண்ணை மணக்கக் கட்டாயம் செய்து கோட்டைப் பாதுகாப்பையும் அவனிடம் ஒப்படைக்கத் தான் திட்டம் வகுத்தது உண்மைதானென்றாலும் அந்தத் திட்டத்தில் இளையபல்லவன் அத்தனை வலுவில் வந்து வேண்டுமென்று விழுந்ததன் காரணம் புரியவில்லை பலவர்மனுக்கு. பாலூர்ப் பெருந்துறையில் காஞ்சனாதேவிக்கும் இளையபல்லவனுக்கும் ஏற்பட்ட உறவைப் பற்றி வந்த வதந்திகளை அறிந்திருந்த பலவர்மன், அத்தனை எளிதில் மஞ்சளழகியை மணக்க இளைய பல்லவன் ஒப்புவானென்பதை எதிர்பார்க்கவில்லை. கலிங்கத்தின் படைபலத்தை அழிக்க வந்ததாகவும், அதற்காகவே கடற்படை திரட்டத் தன் உத்தேசமென்றும், தன்னிடம் நேரிடையாக அறிவித்த இளையபல்லவன், மறுநாளே கலிங்கத்துடன் நட்பு கொண்டு சோழரிடம் தீராப் பகைமையுள்ள ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதியின் கோட்டைத் தளபதியிடம் பணிபுரிய ஏன் தீர்மானித்தான் என்பது விளங்கவில்லை பலவர்மனுக்கு. ஒன்றுமட்டும் விளங்கியது அவனுக்கு. ஏதோ பெரும் சூது இளைய பல்லவன் போக்கின் அடிப்படையாக அமைந்துள்ளது என்பதை மட்டும் புரிந்துகொண்டான் பலவர்மன். அது என்ன என்பதை உடனே அறிந்துகொள்ள முடியாததால் பொறுத்துப் பார்க்க முடிவு செய்தான். ஆகவே இளைய

பல்லவன் மேற்கொண்டு செய்ய முயன்ற எதையும் அவன் தடை செய்யவில்லை.

கோட்டையைப் பாதுகாப்பதாக இளையபல்லவன் அந்தக் கூட்டத்துக்கு உறுதி கூறிவிட்டு நிதிப்பெட்டிகளை மாளிகைக்குள் எடுத்துச் செல்லத் தன் மாலுமிகளுக்கு உத்தரவிட்டதையும் அவன் தடை செய்யவில்லை. மாளிகைத் தளத்தில் கடற்கரையையும் பகிட்பாரிஸான் மலையையும் நோக்கியிருந்த இரு வாசல் அறையை படைத் தலைவன் ஆக்கிரமித்துக் கொண்டதையும் அவன் தடை செய்யவில்லை. அடுத்த மூன்று நாள்களில் கோட்டைப் பாதுகாப்பில் நடந்த மாறுதல்களையும் அவன் தடுக்க வில்லை. ஆனால் இளையபல்லவன் நடவடிக்கை ஒவ்வொன்றையும் அவன் ஒற்றர்களால் கவனித்து வந்தான். சுமார் ஒரு வாரம் கழிந்தது. அந்த வாரத்தின் ஒவ்வொரு நாளும் எதையோ எதிர்பார்த்துக்கொண்டு நள்ளிரவு வரை விழித்துக்கொண்டே அவன் உட்கார்ந்திருந்தான். வாரம் முடிவடையும் நாள் அது. அந்த நாளிரவில் அவன் எதிர்பார்த்தது நடந்தது. நள்ளிரவு வந்ததும் இரண்டு கோட்டான்கள் தூரத்திலிருந்து பலமாகக் கூவின. அதைக் கேட்டதும் பலவர்மன் தன் மஞ்சத்திலிருந்து எழுந்து பெரும் போர்வையொன்றால் தன் தலைக்கு முக்காடிட்டு உடலையும் போர்த்திக்கொண்டு மாளிகையின் பின்புறம் சென்றான். அங்கிருந்த மரத்தின் நிழலில் இருவர் நின்றிருந்தனர். அவர்களில் ஒருவன் பலவர்மனுக்குத் தலை வணங்கினான். மற்றொருவன் வணங்காத தலையுடனும் அலட்சியமும் கோபமும் நிரம்பிய பார்வையுடனும் நின்றிருந்தான். பலவர்மனைக் கண்டதும் பலவர்மன் கருத்துக்குச் சற்றும் இணங்காத குரலில் சொற்களும் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

அத்தியாயம் 33

# பாதுகாப்பு ஏற்பாடுகள்

அக்ஷயமுனைக் கோட்டை மாளிகைக்குள் தான் நிதிப் பெட்டிகளைக் கொண்டு வந்த நாளிலிருந்து அடுத்த ஒரு வாரம் முடிய பலவர்மன் பெரும் சாதுவாகி விட்டதையும் மாளிகையிலும் கோட்டையின் இதர பகுதிகளிலும் தான் ஏற்படுத்திய மாறுதல்களில் ஒன்றுக்குகூட அவன் எந்த எதிர்ப்பையும் காட்டாததையும், சகலத்தையும் ஆதரித்தும் ஆமோதித்தும் வந்ததையும் கவனித்த இளைய பல்லவன் சித்தத்தில் அந்த வாரம் முழுவதும் பெருத்த சந்தேகம் எழுந்து உலாவிக் கொண்டிருந்ததாகையால் தான் புரிந்த அலுவல்கள் அனைத்தையும் மிகுந்த தீர்க்காலோசனையுடனே செய்து வந்தான். எழுந்து நடந்துவரும் புலியைவிட உறங்குவதுபோல் இருக்கும் முக்கால் கண் மூடிய புலி பெரும் அபாயத்தை விளைவிக்கக்கூடிய தென்பதை அறிந்திருந்த சோழர் படைத்தலைவன், பலவர்மன் மீது ஒரு கண் வைத்தே தன் வேலைகளைச் செய்து வந்தான். சொர்ணத்தீவின் பூர்வகுடிகளிடம் அக்ஷயமுனைக் கோட்டை மக்களுக்குள்ள பயத்தை உடைப்பதும், பூர்வகுடிகளின் எதிர்ப்பு ஏற்பட்டால் அதை மக்களைக் கொண்டே சமாளிப்பதும், இடையே அக்ஷயமுனைத் தளத்தில் தனது மரக்கலத்தைத் திடப்படுத்திக் கொள்வதும் ஆகிய மூன்றும் முக்கிய பணிகளென்பதைத் தீர்மானித்துக் கொண்ட இளையபல்லவன் அதற்கான பணிகளில் மும்முரமாக இறங்கினான். அத்தகைய

பணிகளிலும் அக்ஷயமுனைக் கோட்டைவாசிகளின் ஒத்துழைப்பும் கடற்கரைக் கொள்ளையர் ஒத்துழைப்பும் பூர்ணமாயிருந்தது சோழர் படைத்தலைவனுக்கு. காண் பதற்கரிய பெரும் செல்வத்தைக் கண்களால் கண்ட அக்ஷயமுனை நகரவாசிகளும் சரி, கொள்ளையரும் சரி, 'இத்தகைய பெரும் செல்வத்தைத் திரட்டுவதானால் பெரும் சாதனைகளுக்குப் பின்புதான் திரட்ட வேண்டும். இத்தகைய செல்வத்தை ஓர் உபதலைவன் பெற அகூதா அனுமதித்திருக்க வேண்டுமானால் அந்த உபதலைவனின் திறமை அற்ப சொற்பமானதாயிருக்க முடியாது' என்ற முடிவுக்கு வந்தார்களாதலாலும், அத்தனை செல்வமும் அக்ஷயமுனையைப் பலப்படுத்தவே உபயோகப்படுமாத லால் அக்ஷயமுனையில் தொழிலுக்கும் ஊதியத்துக்கும் குறைவிருக்காதென்பதை உணர்ந்து கொண்டார்களாத லாலும், இளையபல்லவன் எள்ளென்பதற்கு முன்பு எண்ணெயென முனைந்து நின்றார்கள்.

அத்தகைய ஒத்துழைப்பைப் பூரணமாகப் பயன் படுத்திக் கொள்வதில் இளையபல்லவன் ஒரு விநாடிகூட அலட்சியம் காட்டாமல் விடுவிடுவெனத் தன் அலுவல் களைச் செய்தான். அந்த அலுவல்களில் இறங்குவதற்கு முதல் நடவடிக்கையாகத் தனக்கெனப் பிரத்தியேமாக ஓர் அறையை வேண்டிய படைத்தலைவன் பலவர்மன் மாளிகையின் மாடியறையைத் தனது இருப்பிடமாக்கிக் கொண்டான். அந்த அறையைத் தான் உபயோகிப்பதால் ஏதாவது அசௌகரியமுண்டாவென இளையபல்லவன் கேட்டதற்கு, "எந்த அசௌகரியமுமில்லை. இந்த மாளிகையே தங்களுக்குச் சொந்தம்," எனப் பதில் வந்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனிடமிருந்து. அந்தப் பதிலும் அது சொல்லப்பட்ட இனிப்பான முறையும் சற்று அதிர்ச்சியைத் தந்ததானாலும், அந்த அதிர்ச்சியைச் சற்றும்

வெளிக்குக் காட்டாமல் புன்னகை தவழும் வதனத்துடன் அக்ஷயமுனைக் கோட்டைக் காவலனுக்கு நன்றி தெரிவித்துவிட்டு அந்த அறையில் தங்குவதற்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் செய்துகொண்டான் சோழர் படைத் தலைவன். நிதிப் பெட்டிகளை பொக்கிஷ அறைக்குக் கொண்டு செல்லவும் பாதுகாக்கவும் சேந்தனுக்கு உத்தரவிட்ட பிறகு, மாளிகையைச் சுற்றிப் பார்த்த இளையபல்லவன், மாளிகையின் மாடியறையை விடத் தன் வேலைக்குச் சிறந்த இடம் வேறு எதுவுமில்லையென்பதை முடிவு செய்துகொண்டான். அக்ஷயமுனை நகரத்தின் மற்றக் கட்டடங்களைவிடச் சற்று உயரத்தி லிருந்ததன் காரணமாக அந்த ஒற்றை அடுக்கு மாளிகை யின் கீழ்த்தளத்திலிருந்தே ஊரின் அமைப்பு கண்ணுக்கு நன்றாகத் தெரிந்ததென்றால் மேல்தளத்தின் அறையிலிருந்து ஊர் மட்டுமின்றி ஊருக்குப் பின்புறமிருந்த பகிட்பாரிஸான் மலைத்தொடரும் முன்புறமிருந்த கடற் பகுதியும்கூட மிகத் தெளிவாகத் தெரிந்தன.

அந்த மாளிகை பார்ப்பதற்கு ஒற்றையடுக்கு மாளிகையே தவிர, மேல்தளத்தில் ஒரே ஒரு விசாலமான அறை மட்டுமே நடுவில் இருந்தது. அதைச் சுற்றிலும் பெரும் தாழ்வறைகள் இருந்தனவேயொழிய, வேறு அறைகள் ஏதுமே இல்லை. தவிர, அந்த ஓர் அறையிலும் பலவர்மன் என்றும் தங்கியதில்லையென்பதற்கான அடையாளங் களும் இருந்தன. இளையபல்லவன் முதலில் அதைப் பார்வையிட்டபோது சுவர்களின் அலங்காரத்துக்கான வசதிகளோ, மஞ்சங்களைத் தரையில் பொருத்துவதற்கான ஏற்பாடுகளோ பெரும் சரவிளக்குகளைக் கூரையிலிருந்து தொங்க விடுவதற்கான அமைப்புகளோ ஏதுமில்லாததைக் கவனித்த இளையபல்லவன், கோட்டைத் தலைவன் என்றும் அந்த அறையில் தங்கியதில்லை யென்பதைப் புரிந்துகொண்டான். தவிர, அந்த அறைச் சுவர்களில்

பொருத்தப்பட்டிருந்த மர ஆணிகளிலிருந்த இரண்டொரு வாள்கள், ஈட்டிகள் முதலியனவும் அறைக்கு வெளியே இருந்த இரும்பு வளையங்களில் பொருத்தப் பட்டிருந்த தீப்பந்தங்களும் அது காவல் வீரர் அறையாக இருக்க வேண்டும் என்பதையே வலியுறுத்தின. மற்றபடி அறை விசாலமானதாயும் அக்ஷயமுனைக் கோட்டை முழு வதையும் கண்வீச்சால் அளந்து விடக்கூடிய முறையிலும் அமைந்திருந்ததால் இத்தகைய இடத்தைப் பலவர்மன் தனக்குச் சொந்தமாக ஏன் வைத்துக்கொள்ளவில்லை யென்பதை எண்ணிப் பார்த்த இளையபல்லவனுக்கு விடையேதும் விளங்கவில்லையென்றாலும், அதற்குத் தக்க காரணமிருக்குமென்பதில் மட்டும் அவனுக்குச் சந்தேக மில்லை. இருப்பினும் அந்த அறையே தனக்கு வாசஸ்தல மாக இருப்பதற்குத் தகுதியுள்ளது என்பதை முடிவு செய்தான் படைத்தலைவன். அதனுடைய விசாலம், கடலை நோக்கியும் மலையை நோக்கியும் எதிரும் புதிருமாக இருந்த இரண்டு வாயில்கள், சுற்றிலுமிருந்த தாழ்வறைகள் எல்லாமே அவனுக்குப் பெரும் வசதியா யிருந்தன. அந்த அறையின் நடுவிலிருந்து பகிட்பாரிஸான் மலைக்காட்டுப் பகுதியையும், கொள்ளையர் இருந்த கடற் பகுதியையும், ஒரே காலத்தில் கவனிக்கலாமாகையால் அந்த அறையின் நட்டநடுவில் தனது மஞ்சத்தை அமைக்க மாளிகை வீரர்களுக்குக் கட்டளையிட்டான் படைத் தலைவன்.

தனது இருப்பிடத்துக்கு ஏற்பாடு செய்துகொண்டு பலவர்மன் அனுமதி பெற்றுப் பொக்கிஷ அறை மேற் பார்வைக்கும் சேந்தனை நியமித்த இளையபல்லவன் அந்த நாள் முழுவதும் அமீருடனும் மற்ற இரு உபதலைவர் களுடனும் அந்த நகரத்தைச் சுற்றிச் சுற்றி நகரத்தின அமைப்பு நுட்பங்களை ஆராய்ந்தான். நகரம் அதிகப் பெரிதாயில்லாமல் கால்காதச் சுற்றளவேயுடையதா யிருந்ததையும், நகரப் பாதைகள் விசாலமாகவும், ஆயுத வண்டிகள் போவதற்கு வசதியாகவும் அமைக்கப்

பட்டிருந்ததையும், எல்லாப் பாதைகளும் திரும்பத் திரும்ப கோட்டைத்தலைவன் மாளிகையில் வந்து முடிவதையும் கண்டான் படைத்தலைவன். நகரத்துக்கு மொத்தம் மூன்று வாயில்களே இருந்ததை முன்பே அறிந்திருந்த படைத் தலைவன் அந்த மூன்று வாயில்களில் கடற்கரையை நோக்கியிருந்த முதல் வாயிலைத் தான் வந்த அன்றே பார்த்திருந்தாலும் மற்ற வாயில்களைப் பார்க்கவில்லை யாகையால் நகரத்துக்குக் கிழக்கிலும் மேற்கிலும் இருந்த அந்த வாயில்களின் பலத்தையும் சோதித்தான். கடற்கரை வாயிலைப்போலவே அந்த இரண்டு வாயில்களும் பலமாக இருந்ததாலும் அவற்றின் பெரும் கதவுகளில் செருகப்பட்டு வெளி நோக்கிக் கூரிடப்பட்டிருந்த இரும்பு ஆணிகளைப் பெரும் மரத் துண்டுகளைக் கொண்டும் இடித்துத் தகர்ப்பது சாத்தியமில்லையென்பதையும் புரிந்து கொண் டான் இளையபல்லவன்.

கதவுகளைப் போலவே கோட்டைச் சுவர்களும் பலமாயிருந்தன. சுவர்களின் தளம் சுமார் நான்கடி அகலத்தில் அமைக்கப்பட்டு நகரத்தைச் சுற்றி ஓட்டிக் கொண்டிருந்தது. அந்த நான்கடி அகலச் சுவர்களின் பகுதிகள் சில ஆங்காங்கு இரண்டடி முன் தள்ளப்பட்டு அவற்றில் தூரப்பார்வைக் கூடங்கள் அறைகளைப்போல் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றிலிருந்து சதா கண் காணித்து வந்த காவலரின் பார்வையிலிருந்து சுற்றும் காத தூரத்துக்குள் வரும் எதுவும் தப்ப முடியாதென்பதை அறிந்த இளையபல்லவன், அந்தக் கோட்டையமைப்பு பாரத நாட்டின் கோட்டைகளின் அமைப்பு போலவே இருந்ததைக் கவனித்து, 'பாரதத்தின் நாகரிகம் நாட்டி யத்தில் மட்டுமல்ல, போர்த் துறைகளிலும் சொர்ண பூமியில் பரவியிருக்கிறது. பாரதம் வழி காட்டாவிட்டால் இந்த நாட்டின் கதி என்ன?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டு அந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டதில் ஓரளவு திருப்தியும் அடைந்தான். இத்தனை ஏற்பாட்டிலும் ஒரு முக்கிய வித்தியாசமிருந்ததையும் கண்ட

இளையபல்லவன், அதற்குக் காரணம் என்னவென்பதை மட்டும் அறியாமல் திணறினான். கோட்டைக்கு மூன்றே வாயில்கள் இருந்தன. அந்த மூன்று வாயில்களில் ஒன்று கூட மலைப்பக்கம் இல்லை. காடு அடர்த்தியாயிருந்த பகுதியில் வாயிலும் இல்லை, காவலும் அதிகம் இல்லை. காட்டில் வாழும் பூர்வகுடிகளைக் கண்டு நகர மக்கள் நடுங்கிக் கொண்டிருக்க அந்தப் பூர்வகுடிகள் வரும் அந்த வழியில் கூர்மையான ஆணிகள் உள்ள பெரும் கதவுகளுள்ள வாயிலையும், தளத்தில் பலமான காவலையும் வைப்பது நியாயமாயிருக்க, அந்தப் பகுதியை ஏன் பரம பலவீனமாக வைத்திருக்கிறான் பலவர்மன் என்பதை எண்ணிப் பார்த்தும் விடை கிடைக்கவில்லை இளைய பல்லவனுக்கு. இருப்பினும் பலவர்மன் செய்த தவறைத் தான் செய்யாமல் அந்த விஷயத்தில் பலமான காவலையும் அமைக்கத் தீர்மானித்தான் இளையபல்லவன்.

இப்படி நகரம் முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டு அன்று மாலை அவன் கோட்டைத்தலைவன் மாளிகைக்குத் திரும்புவதற்குள் மேல் தள அறையில் அவனுக்கு வேண்டிய சகல வசதிகளையும் அவனது மாலுமிகள் செய்து முடித்திருந்தார்கள். இளையபல்லவனின் ரசிகத் தன்மையை உணர்ந்திருந்த கூலவாணிகன் சேந்தன் பெரும் மன்னனின் சயன அறைபோல் அதை அலங்கரிக்க மாலுமிகளுக்கு உத்தரவிடவே இளையபல்லவன் மரக்கல அறையிலிருந்தே மஞ்சம் முதற்கொண்டு சகல வசதிகளும் அந்த அறைக்குக் கொண்டு வரப்பட்டன. அப்படி வசதி செய்யப்பட்ட அந்த அறையில் அன்றிரவு இளைய பல்லவன் தன் உப தலைவர்களனைவரையும் வரவழைத்துச் செய்யவேண்டிய ஏற்பாடுகளை விவரித்து, அதற்கான உத்தரவுகளையும் பிறப்பித்தான். தனது மரக்கலத்தைக் கயிறுகள் கட்டித் தரைக்கு இழுத்துச் செப்பனிடும் வேலையைத் துவங்கும்படி கண்டியத்தேவனுக்குக் கட்டளையிட்ட இளையபல்லவன், "தேவரே! மரக்கலத்தின் அமைப்பிலும் சிறிது மாறுதல் தேவை

யிருக்கிறது. மரக்கலத்தைத் தரையில் இழுத்து அடிப் பகுதியைப் பழுது பார்த்த பிறகு என்னிடம் சொல்லும். மாறுதல் எப்படிச் செய்ய வேண்டுமென்று சொல்கிறேன்," என்று கூறினான்.

"இப்பொழுதிருக்கும் அமைப்புக்கு என்ன?" என்று கேட்டான் கண்டியத்தேவன்.

"போர் வசதி போதாது," என்று விடையளித்தான் இளையபல்லவன்.

"அகூதா அளித்த மரக்கலம்," என்று முணுமுணுத்தான் கண்டியத்தேவன்.

"ஆம்."

"பல போர்களைக் கண்டிருக்கிறது."

"ஆம்."

"இதைவிடச் சிறப்பாக எப்படி அமைப்பது ஒரு போர்க்கலத்தை?"

இந்தக் கேள்விக்கு இளையபல்லவன் பதிலேதும் சொல்லவில்லை. "பிறகு சொல்கிறேன் தேவரே?" என்று சட்டென்று வார்த்தையை முடித்துவிட்டுக் கோட்டையின் பாதுகாப்புக்கான உத்தரவுகளை இடுவதில் முனைந்தான். தனது உப தலைவர்களில் இருவரைக் கிழக்கு வாயிலையும், இருவரை மேற்கு வாயிலையும் காக்க உத்தரவிட்டான். மற்றும் இருவருக்கு நகர மக்களில் போருக்குத் தகுதியுள்ளவர்களாகப் பொறுக்கிப் பாதுகாப்பு முறைகளில் பயிற்சியளிக்க உத்தரவிட்டான். கடைசியாக அமீரை நோக்கி, "அமீர்! இந்த நகரத்தின் அபாயமான பகுதியைக் காக்கும் பொறுப்பை உன்னிடம் அளிக்கப் போகிறேன். அந்த இடத்தைக் காப்பதில் உன் உயிருக்கு ஆபத்துத்தான். ஆனால் வேறு யாரிடமும் அதை ஒப்படைக்க எனக்குத் தைரியமில்லை," என்றான்.

'புரிகிறது' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் அசைத்தான் அமீர்.

"குறுவாள்கள் உனக்கு அதிகம் தேவையாயிருக்கும்" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

குறுவாள்களைப் பற்றிப் பிரஸ்தாபம் வந்ததும் அமீரின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. "தேவையானதை நமது மரக்கலத்திலிருந்து எடுத்துக் கொள்கிறேன். மேலும் தேவையாயிருக்குமானால் இங்குள்ள பட்டறைகளில் தயாரித்துக் கொள்கிறேன்" என்றான் அமீர் தன் பெரு உதடுகளை விரித்துப் புன்முறுவல் செய்து.

"பகிட்பாரிஸான் மலைக்காட்டுப் பகுதியை நீ பாதுகாக்க வேண்டும்" என்றான் இளைய பல்லவன்.

"முன்பே தெரிந்ததுதான்" என்றான் அமீர்.

"நினைப்பூட்டவே மீண்டும் சொன்னேன்," என்றான் இளையபல்லவன்.

ஆபத்தை இனிப்புப் பண்டம்போல் வரவேற்கும் சுபாவமுடைய அரபு நாட்டு அமீரின் பெருவிழிகள் மகிழ்ச்சியைக் கக்கின. "உம்" என்று எழுந்த ஆமோதிப்புக் குரலிலும் உற்சாகம் இருந்தது.

"அந்தப் பகுதியில் கண்ணோட்டம் வைக்க எத்தனை வீரர்கள் தேவை?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"இருபது பேர் போதும்" என்றான் அமீர்.

அமீரின் திறமையையும் முன் யோசனையையும் உள்ளூர வியந்தான் இளையபல்லவன். 'அதிகப்படி வீரர்களை அந்தப் பகுதியில் நடமாட விட்டால், பூர்வ குடிகள் எச்சரிக்கையடையலாம். ஊருக்குள் புக வேறு முறைகளைக் கையாளலாம். அதைத் தவிர்க்கவே அமீர் குறைந்த வீரர்களைக் கொண்டு அப்பகுதியைக் கண் காணிக்க முயலுகிறான்' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட இளையபல்லவன், "அப்படியானால் உனக்கு

நமது மரக்கலம் ஊதும் கொம்புகளில் ஒன்று தேவையா யிருக்கும்" என்றான்.

"ஆம் ஒன்று எனக்கு, இன்னொன்று உங்களுக்கு" என்றான் அமீர்.

"நம்மிருவர் கொம்புகளில் எது ஊதப்படுகிறதோ அங்கு வீரர்கள் விரைந்தால் போதும்" என்று ஆமோதித்த படைத்தலைவன் அத்துடன் தனது உத்தரவுகளை முடித்துக் கொண்டான்.

மறுநாள் முதற்கொண்டு கோட்டைப் பாதுகாப்பு வேலைகள் மும்முரமாகத் துவங்கின. இரும்புப் பட்டறை களில் பெரு வேல்களும், வேல்களை வீசும் இரும்பு விற்களும் குறுவாள்களும் அடித்தும் வளைத்தும் தீட்டப் பட்டும் தயாராகிக் கொண்டிருந்தன. கடல்புற மதில் மேலிருந்த காவல் வீரரும் விஷ அம்பு எய்யும் வில்லாளி களும் குறைக்கப்பட்டு மதில்சுவரின் இடையிடையே இருந்த காவற்கூடங்களில் மட்டும் வீரர்கள் பத்துப் பத்துப்பேர் நிற்க வைக்கப்பட்டனர். எதிர்ப்பு ஏற்பட்டால் சுவர்களில் ஏணி போட்டு ஏறவும், எண்ணெய்க் குடங் களைத் தீயிட்டுக் கவிழ்க்கவும் நகரவாசிகளுக்குப் பயிற்சியளிக்கப் பட்டது. கிழக்கு மேற்கு வாயில்களைக் காக்க நியமிக்கப்பட்ட இரு உபதலைவர்களும் காவலை மிகவும் வலுப்படுத்தினர். மற்ற நான்கு உபதலைவர்கள் மக்களுக்குப் பயிற்சியளித்தனர். மேற்கு வாசலிலிருந்து கடற்கரையை ஒட்டிய வண்ணம் ஸ்ரீவிஜயத் தலைநகருக்கு ஓடிய பாதை மூலம் வண்டிகள் பக்க நகரங்களுக்கு அனுப்பப்பட்டு உணவுப் பொருள்கள் சேகரிக்கப்பட்டன. பகிட்பாரிஸான் மலைக்காட்டுப் பகுதியைக் கவனிக்க மதில்சுவர் தளத்திலிருந்த காவற் கூடத்தையே தனது அறையாக அமைத்துக் கொண்ட அமீர், இருபது வீரர்களை மட்டும் துணை கொண்டு இரவும் பகலும் அந்த மதில்மீது தானே சஞ்சரித்து வந்தான். எந்த நிமிஷத்திலும் காட்டுப்

பகுதியிலிருந்து பதக்குகள் அம்போ வேலோ எய்து அவனைக் கொன்றுவிடலாமெனக் கோட்டை வீரர் எச்சரித்தும் அமீர் பயங்கரச் சிரிப்புச் சிரித்துவிட்டுத் தன் இஷ்டப்படி மதில் சுவரில் உலாவினான். அவன் காட்டிய தைரியம் மற்ற இருபது வீரர்களுக்கு மட்டுமல்ல, அந்த நகரவாசிகளுக்கும் பெரும் துணிவை ஊட்டியதால் பூர்வகுடிகளைச் சமாளிக்கப் பெரும் மகிழ்ச்சிக் கூச்சலுடன் ஏற்பாடுகளை நகர மக்களும் செய்தனர்.

அடுத்த ஒரு வாரம் அந்த மக்களைப் புது மனிதர்களாக அடித்தது. சுயநம்பிக்கை இழந்து பூர்வகுடிகளிடம் நடுங்கிக் கொண்டிருந்தவர்களைச் சுயநம்பிக்கையும் தைரியமும் உள்ளவர்களாக அடித்தது. நகர மக்கள் எதையும் சமாளிக்கத் துணிவு கொண்டார்கள். கடற்கரைக் கொள்ளையரிடமும் பெரும் மாறுதல் ஏற்பட்டு வந்தது. கோட்டையிலுள்ள சூதாட்ட அரங்கங்களில் பணத்தைப் பறிகொடுத்து வந்த கொள்ளையர் நகர மக்களின் மாறுதலைக் கண்டு மகிழ்ந்தனர். கடற் பகுதியில் பூர்வ குடிகள் எதிர்த்தால் அவர்களைச் சமாளிக்க முனைந்து தங்கள் மரக்கலங்களையும் தயார் செய்துகொண்டனர். இளையபல்லவன் அக்ஷயமுனையில் நுழைந்த நாளிலிருந்து சுற்றிலும் நின்ற கொள்ளையர் போர்க் கப்பல்களில் போர்க்கலங்கள் பழுது பார்க்கப்பட்டன. தீ அம்புகளை வீசும் விற்களின் திறனும் சோதிக்கப்பட்டது. பாய்களின் கிழிசல்கள் தைக்கப்பட்டன. பாய்களை இழுக்கப் புதுக் கயிறுகளும் கட்டப்பட்டன. தவிர, கரையில் இழுக்கப் பட்ட இளையபல்லவன் மரக்கலத்தைப் பழுது பார்ப்பதில் தீவிரமாக முனைந்து கோட்டையிலிருந்து வந்த மரக்கல அமைப்பாளருக்குப் பேருதவி புரிந்தனர்.

இளையபல்லவன் மரக்கலத்தைப் பழுது பார்க்கப் பகிட்பாரிஸான் காட்டுப் பகுதியிலிருந்து பெரும் மரங்கள் வெட்டப்பட்டுக் கடற்கரைக்குக் கொண்டு வரப்பட்டன.

தச்சர்கள் அவற்றிலிருந்து பலகைகளும் புட்களும் தயாரித்தனர். கொல்லர்கள் இரும்புச் சலாகைகளை வடித்து அடித்தனர். நகரத்தின் உட்புறத்தைப் போலவே வெளிப்புறத்தில் இருந்த கடற்கரையிலும் பெரும் உலைகள் தீ நாக்குகளைக் காட்டின. சுத்தியல்களும் உளிகளும் சப்தித்தன.

இத்தனையையும் திருப்தியுடன் பார்த்துக்கொண்டிருந்த இளையபல்லவனின் மனத்தில் ஒரு பெரும் சந்தேகம் மட்டும் குடிகொண்டிருந்தது. ஒரு வாரத்துக்கு முன்பே எச்சரித்துப் போன வில்வலனோ அவனைச் சேர்ந்த பூர்வகுடிகளோ அந்த ஒரு வாரமும் நகர எல்லைக்குள் ஏன் தலைகாட்டவில்லையென்பது அவனுக்குப் புரியவில்லை. பகிட்பாரிஸான் காட்டுப்பகுதி பெரும் அமைதியாய் இருந்ததும் பெரும் புதிராயிருந்தது. சிறிது தவறு நேர்ந்தாலும் ஊரில் புகுந்து, கொள்ளையும் கொலையும் விளைவிக்கும் தன்மையுடைய பூர்வகுடிகள் கடற்கரைப் பகுதியில் கொலை விழுந்து ஒரு வாராமாகியும் ஏன் எந்த நடவடிக்கையிலும் இறங்கவில்லையென்பதும் தெரியாமல் தவித்தான் படைத்தலைவன். அவர்கள் சாந்தத்துக்குக் காரணம் தனது பாதுகாப்பு ஏற்பாடுகளாயிருக்க முடியாதென்பது அவனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. ‘அவர்கள் மௌனத்துக்கும் சாந்தத்துக்கும் என்ன காரணம்?’ என்று யோசித்துக்கொண்டேயிருக்கையில் திடீரென ஒரு யோசனை உதயமாகவே, ‘ஆம், ஆம்! அப்படியிருந்தால்?’ என்று நினைத்துச் சரேலெனத் தனது ஆசனத்திலிருந்து எழுந்தான். அப்பொழுது இரவு ஏறியிருந்தது. அறையை விட்டுத் தாழ்வரைக்கு வந்து ஆகாயத்தைப் பார்த்தான் இளையபல்லவன். பூச நக்ஷத்திரம் பெரும் கொத்தாக மேற்கே சாயத் தொடங்கியிருந்தது. நள்ளிரவு அது என்பதைப் புரிந்துகொண்டான். அதே சமயத்தில் ஆந்தைகள் இரண்டு பெரிதாக அலறின.

அத்தியாயம் 34

# அன்பின் வழி

அன்று பௌர்ணமி கழிந்து நாள்கள் ஏழு ஆகி விட்டதால் பதினான்கு நாழிகைகளுக்குப் பின்பே கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன் தலைகாட்ட முடியுமாகை யாலும், ஆந்தைகள் இரண்டு பலமாக அலறிய அந்தச் சமயம் சுத்த நள்ளிரவாய், பன்னிரண்டு நாழிகைகளையே அடைந்திருந்ததாலும் அக்ஷயமுனைப் பிராந்தியம் முழு வதும் பூர்ண இருளில் சிக்கியிருந்ததன் விளைவாக ஆந்தை களின் அலறல் மிகப் பயங்கரமாக இளையபல்லவன் காதுகளில் விழுந்தது. ஏழு நாள்களுக்கு முன்பு சித்ரா பௌர்ணமி அன்று பலவர்மனைப் பயங்கரமாக எச்சரித்து விட்டுப் போன வில்வலனோ, அவனைச் சேர்ந்த இதர பூர்வகுடி வீரர்களோ அக்ஷயமுனையில் தலைகாட்டா திருந்ததைப் பற்றி ஆழ்ந்த யோசனையிலிருந்த இளைய பல்லவன் திடீரெனப் புது யோசனை உதயமாகவே அதைப் பற்றிய சிந்தனையில் லயித்திருந்தானாகையால், முதல் முறை ஆந்தையின் அலறல் கேட்டதும் அதை அவ்வள வாகக் கவனிக்கவில்லையானாலும் இரண்டாம் முறை அதேவித அலறல் கேட்டதும் சற்றுக் காதுகளை நன்றாகத் தீட்டிக்கொண்டு அறையை விட்டு வெளியிலும் சென்றான். அறையை விட்டு வெளியே வந்து தாழ்வரைக் கைப்பிடிச் சுவரின் ஓரமாக நடந்து சுற்று முற்றும் பார்த்த இளைய பல்லவன் காவலர் எச்சரிக்கைக் கூச்சலைத் தவிர வேறெந்த சத்தமும் எந்த இடத்திலும் கேட்காமல் ஊர் அடங்கிக் கிடக்கவே, ஆந்தையின் அலறலைக் கேட்டுத்

தான் கலங்கியது வீண் பிரமையென்று நினைத்து மீண்டும் அறைக்குச் சென்று மஞ்சத்தில் படுத்துக் கொண்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் மாடிப்படிகளைக் காவல் செய்து கொண்டிருந்த இரு வீரர்களையும் விளித்து, "நீங்களும் உறங்கச் செல்லலாம். இனி காவல் தேவையில்லை" என்று பஞ்சணையில் படுத்தவண்ணமே இரைந்து கூறிவிட்டுப் போர்வையை நன்றாக இழுத்துத் தலைவரையில் போர்த்துக்கொண்டு நித்திரையில் ஆழ்ந்தான்.

ஆனால் அதே ஆந்தையின் அலறலைக் கேட்டதும் தலையை முக்காடிட்டும் உடலையும் போர்த்து மறைத்துக் கொண்டு மாளிகையின் பின்புறத் தோட்டத்துக்குச் சென்ற பலவர்மன், மரத்து நிழலில் மறைந்து நின்ற ஒரு மனிதனை அணுகியதன்றி அவனுக்கு நல்வரவும் கூறினான். அந்த நல்வரவை ஏற்காமலும் தலையைச் சிறிதும் வணங்காமலும் மிகவும் முரட்டுத்தனமாக நின்ற அந்த மனிதன் அக்ஷய முனைக் கோட்டைத் தலைவன் காதுக்கோ, எண்ணத்துக்கோ சிறிதும் இணங்காத சொற்களைப் பிரயோகிக்கத் துவங்கினான். "என்னை எதற்காக இங்கு வரவழைத்தாய் பலவர்மா?" என்ற அவனது ஆரம்பக் கேள்வியில் மரியாதை இல்லாதது மட்டுமல்ல, வெறுப்பும் குரோதமும் மண்டிக் கிடந்தது.

வந்தவன், கிட்டத்தட்ட பலவர்மனுடைய உயரத்தையும், பருமனையும், வயதையும் உடையவனாயிருந்தாலும் அவன் வஞ்சகமோ தந்திர புத்தியோ அற்ற வெறும் முரடனென்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது. அப்படி வஞ்சகனல்லாவிட்டாலும் நெஞ்சத் துணிவிலும் வாள் போரிலும் அவன் யாருக்கும் சளைத்தவனல்லவென்பதை இருட்டிலும் பளபளத்த அவனது கூரிய கண்களும், இடுப்பில் தொங்கிக்கொண்டிருந்த நீண்ட வாளும் பறைசாற்றின. அவன் உடை பூராவும் ஏதோ ஒருவகைத்

தோலால் செய்யப்பட்டிருந்தாலும் அந்தத் தோலில் தைக்கப்பட்டிருந்த விலை உயர்ந்த கற்களும், சரிகை வேலைப்பாடும் வந்தவனுக்குச் செல்வப் பஞ்சம் ஏதும் கிடையாதென்பதை வலியுறுத்தின. அவன் பெருமீசை பயங்கரமாயிருந்தது. குரல் அதைவிடப் பயங்கரமாக ஒலித்தது. முதல் கேள்விக்குப் பலவர்மன் பதில் சொல்லாது போகவே, "என்னை வரவழைத்ததற்குக் காரணம் என்ன பலவர்மா?" என்று மீண்டும் ஒருமுறை கேள்வியைத் திருப்பினான் வந்தவன் இரைந்து.

"இரைந்து பேசாதே இடும்பா! இந்தத் தோட்டத்தின் மரங்களுக்கும் காதுகள் உண்டு," என்று பலவர்மன் எச்சரிக்கை செய்தான்.

இதைக் கேட்டதும் அசுரனைப் போல் நிமிர்ந்து நின்ற இடும்பனின் இமைகள் வியப்பால் சற்றே முகத்தில் மேல் நோக்கி எழுந்தன. "பலவர்மனும் பயப்படும் காலம் வந்துவிட்டதா!" என்ற அவன் கேள்வியிலும் அந்த வியப்பு தொக்கி நின்றது.

பலவர்மன் நின்ற இடத்திலேயே சற்றுச் சங்கடத்துடன் அசைந்தான். "பலவர்மன் மட்டுமல்ல, பதக்குகளும், ஏன், சூளுக்களும் பயப்படும்படியான காலம் வந்திருக்கிறது," என்றான் பலவர்மன்.

"சொர்ணத் தீவின் பூர்வகுடிகள் அச்சமென்பதை அறியாதவர்கள்," என்று சீறினான் இடும்பன்.

"அறியாதவர்களாய் இருந்தார்கள்," என்று திருத்திய பலவர்மன் குரலில் ஏளனம் ஒலித்தது. கவலையும் அதில் கலந்திருந்தது.

"அப்படியானால் இப்பொழுது அச்சப்படுகிறார்கள் என்பது உன் எண்ணமா?" என்று வினவினான் இடும்பன்.

"சந்தேகமிருந்தால் வில்வலனை விசாரித்துப் பார்," என்றான் பலவர்மன் பதிலுக்கு.

இதைக் கேட்ட இடும்பன் சிறிதும் சலிக்கவில்லை. "கடற்கரை நடனத்தின்போது நடந்ததைக் குறிப்பிடு கிறாயா" என்று கேட்டான் இடும்பன்.

"ஆம்" என்று கூறி, தலையையும் அசைத்தான் பலவர்மன்.

"அந்தக் கொலையைக் கண்டு வில்வலன் பயப்பட வில்லை. இரண்டே நாள்களில் இந்த ஊரைச் சூறையாடி விட ஏற்பாடு செய்திருந்தான். அதையும் நீ தடை செய்தாய்," என்று குற்றம் சாட்டினான் இடும்பன்.

"ஆம், தடை செய்தேன்."

"ஏன் ?"

"இரண்டாவது நாள் இந்த ஊரில் புகுந்து கொலை யும் கொள்ளையும் நீங்கள் நடத்த முடியாத நிலை ஏற்பட்டதால்தான் ?"

"அப்படி என்ன நிலை ஏற்பட்டது ?"

"மக்களுக்குத் துணிவு ஏற்பட்டுவிட்டது. அவர் களுக்குத் தலைமை வகிக்கவும் ஊரைப் பாதுகாக்கவும் ஒரு பெரும் படைத்தலைவன் ஏற்பட்டுவிட்டான்."

"யாரோ அகூதாவின் உபதலைவனாமே, அவனோ ?"

"அகூதாவின் உபதலைவன் மட்டுமல்ல அவன்."

"வேறு யார் ! இந்திரனா ? சந்திரனா ?"

"இரண்டு பேரும் புராணப் பாத்திரங்கள். அவர் களின் சக்தி நமக்குத் தெரியாது. இவன் சக்தி தெரியும்."

"யாரிவன் ?"

"சோழநாட்டின் படைத் தலைவர்களில் முதன்மை யானவன். பெரும் போர்களைக் கண்டவன். இந்த

நகரத்தை உங்களிடமிருந்து பாதுகாப்பது அவனுக்குப் பிரமாதமல்ல."

இடும்பனுடைய பயங்கர விழிகள் பலவர்மனை நன்றாக ஏறெடுத்து நோக்கின. "இனிமேல் இராக் காலங்களில் இருட்டுத்தான். நாளையே வில்வலன் காட்டுப் பகுதியிலிருந்தும், நான் கடற்பகுதியிலிருந்தும், இந்தக் கோட்டையைத் தாக்குவதை யார் தடுக்க முடியும்?" என்று வினவினான் இடும்பன்.

"இரண்டையும் சோழர் படைத்தலைவன் தடுக்க முடியும்," என்று கூறிப் பெருமூச்செறிந்தான் பலவர்மன்.

இடும்பன் ஒருமுறை கடலிருந்த திக்கை நோக்கினான். "கடற்போரில் என்னை வெல்ல அவனால் முடியுமா?" என்று கேட்டான் சற்றுக் கோபத்துடன்.

"அவன் அகூதாவிடம் பயின்றவன்" என்று சுட்டிக் காட்டினான் பலவர்மன்.

"சீனத்துக் கொள்ளைக்காரர்களுக்கு சூளுக்கள் சளைத்தவர்களல்ல பலவர்மா! அதுதவிர, இந்தச் சோழர் படைத் தலைவன் மரக்கலமும் கரையில் இழுக்கப்பட்டுப் பழுது பார்க்கப்படுகிறது. இந்தச் சமயத்தில் நான் துறை முகத்தில் புகுந்தால் என்னை எதிர்க்க யாருமில்லை" என்று விளக்கினான் இடும்பன்.

பலவர்மன் மெல்ல நகைத்தான். அந்த நகைப்பினால் கோபம் உச்சநிலைக்குப் போகவே, "ஏன் நகைக்கிறாய்?" என்று கரகரப்பும் கடுமையும் நிறைந்த குரலில் கேட்டான் இடும்பன்.

"இடும்பா! நாளைக்கு எதற்கும் துறைமுகம் பக்கம் வந்து பார். அல்லது உன் ஒற்றர்களையாவது அனுப்பிக் கவனிக்கச் சொல். சோழர் படைத்தலைவன் தனது மரக்கலத்தைக் கரைக்கு இழுத்ததும், கடற்கரைக் கொள்

ளையர் மரக்கலங்களைத் துறைமுக மார்க்கத்தில் சக்கர வட்டமாக நிற்க வைத்து அவற்றில் பெரும் போர்க் கலங்களையும் அமைத்திருக்கிறான். அந்தச் சக்கர வட்டத் துக்குள் நுழைந்துதான் எந்த மரக்கலமும் அக்ஷயமுனைக் கரையை நாட முடியும். அப்படி நுழையும் மரக்கலம் எதுவாயிருந்தாலும் அதைச் சுற்றிலும் கொள்ளையர் மரக் கலங்கள் சக்கரத்தின் பற்களைப் போல நெருங்கும். நுழை யும் மரக்கலத்தின் கதி என்னவாகுமென்று நான் சொல்ல வேண்டுமா?" என்று கேள்வி கேட்பதுபோல், உள்ள அபாயத்தையும் இளையபல்லவனின் போர் முறையையும் விளக்கிய பலவர்மன் மேலும், சொன்னான்: "அது மட்டு மல்ல இடும்பா! வில்வலனும் காட்டுப் பகுதி வழியாக நகரத்துக்குள் நுழைய முடியாது. அந்தப் பகுதியில் அமீர் என்ற அரபு நாட்டான் காவலிருக்கிறான். அவன்தான் குறுவாளெறிந்து உன் சகோதரனைக் கொன்றவன். அந்தப் பகுதியில் காட்டைக் கவனி. மதில் ஓரமாக இருந்த காடு அரைக்கால் காதத்துக்கு அழிக்கப்பட்டிருக்கிறது. மரக் கலத்தைச் செப்பனிட நகரத்தை அடுத்துள்ள மரங்களாகப் பார்த்து அமீர் வெட்டியிருக்கிறான். இதனால் இரட்டை லாபம். ஒன்று மரக்கலத்துக்கு நமது நாட்டின் வயிரம் பாய்ந்த மரங்கள் கிடைத்தன. இன்னொன்று காட்டுக்கும் கோட்டை மக்களுக்கும் இடைவெளி நன்றாக ஏற்பட்ட தால் அமீரின் கண்ணில் படாமல் யாரும் கோட்டையை அணுக முடியாது. இடைவெளியில் ஓடிவரும் படையை அழிக்கப் பலமான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறான் அமீர்," என்று.

இந்த விவரங்களைக் கேட்ட இடும்பன் முகத்தில் அச்சத்துக்குப் பதில் கோபமே அதிகம் ஏற்பட்டது. "இத்தனையையும் ஏன் அனுமதித்தாய்?" என்று வினவி னான்.

"வேறு வழியில்லை," என்றான் பலவர்மன்.

"வழியைக் கண்டுபிடிப்பது உன் பொறுப்பல்லவா?"

"ஆம்."

"அப்படியானால் ஏன் கண்டுபிடிக்க முடியவில்லை?"

"இரண்டு முறைகளைக் கையாண்டேன், பலிக்கவில்லை."

"என்ன முறைகள்?"

"அவனை வசப்படுத்தும்படி என் மகளைத் தூண்டினேன். வேறு ஒருத்தியிடம் அவன் மனம் லயித்திருப்பதால் அவன் இணங்கமாட்டானென்று எதிர்பார்த்தேன். இணங்காவிட்டால் நமது வழக்கப்படி அவனை உங்களுக்கு இரையாக்கி விடலாம் என்று திட்டம் போட்டேன். அதற்காகச் சாட்சிகளையும் தயாரித்தேன். ஆனால் அந்தத் தந்திரம் பலிக்கவில்லை. மஞ்சளழகியை மணம் புரிந்து கொள்ள அவன் முன்வந்தான். சோழர்கள் விரோதியான ஸ்ரீவிஜயத்தின் படையில் சேரவேண்டிய அவசியத்தைக் குறிப்பிட்டேன். நாட்டுப் பற்றுடைய அவன் அதற்கு ஒப்பமாட்டான் என்று நினைத்தேன். அதற்கு ஒப்பி என் உபதளபதியாகி இந்த ஊரின் பாதுகாப்பைத் தன் சொந்த வேலையாக்கிக் கொண்டான். இரண்டு முறைகளிலும் தோல்வியுற்றேன். அவன் போக்கு, யோசனை எதுவுமே எனக்குப் புரியவில்லை. அவனை நான் நேர்ப் போரினால் வெற்றி கொள்ள முடியாது," என்ற பலவர்மன் இடும்பனை உற்று நோக்கினான்.

இடும்பனும் தீவிர யோசனையில் ஆழ்ந்தான். பிறகு கேட்டான், சற்றுக் கவலையுடன், "வேறு என்ன வழி?" என்று.

பலவர்மன் முகத்தில் கவலை அலை பாய்ந்தது. "ஒரு வழி இருக்கிறது?" என்று மெள்ளக் கூறினான் அவன் குரலிலும் கவலை பாய.

"சொல்!" இடும்பனின் குரலில் ஆவல் மிகுந்து நின்றது.

"அது அன்பின் வழி" என்றான் பலவர்மன் குரலை நன்றாகத் தாழ்த்தி.

"என் தொழிலில் அந்தச் சொல்லுக்கே இடமில்லை."

"இடம் ஏற்படுத்திக் கொள்."

"ஏற்படுத்திக் கொண்டால்?"

"எதிரியை ஒரு வழியாக ஒழித்துவிடலாம். அவனை மட்டுமல்ல, அவனுக்கு இப்பொழுது தாளம் போடும் இந்த நகர மக்களுக்கும், கடற்கரைக் கொள்ளையருக்கும் பெரும் படிப்பினையும் கற்பிக்கலாம்."

"வழியைச் சொல்."

"வழி என் மகள்?"

"யார் மஞ்சளழகியா?"

"ஆம்."

"அவளை என்ன செய்ய வேண்டும்?"

"கடத்திச் செல்ல வேண்டும்."

இதைக் கேட்ட இடும்பன் பல விநாடிகள் பிரமை பிடித்து நின்றான். பிறகு காதில் விழுந்ததை நம்பாமலே கேட்டான், "உண்மையாகத்தான் சொல்கிறாயா பலவர்மா?" என்று.

"உண்மையாகத்தான் சொல்கிறேன். சந்தேகம் வேண்டாம்." பலவர்மனின் குரல் திடமாக இருந்தது.

"இந்த அக்ஷயமுனையையும் கடற்பகுதியில் ஸ்ரீவிஜ யத்தையும் பலப்படுத்த நீ அவனைத் துணைத்தலைவனாக

நியமித்துக் கொண்டதாக மக்கள் பேசிக் கொள்கிறார்களே," என்று கேட்டான் இடும்பன்.

"அப்படியும் அதற்கு வியாக்கியானம் செய்யலாம். பலவர்மன் குணத்தையும் மனத்தையும் அறியாதவர்கள் கொள்ளும் பொருள் அது," என்று பலவர்மன் சொன்ன பதிலில் பெரிதும் குரூரமும் வஞ்சகமும் கலந்து ஒலித்தது.

இடும்பன் மீண்டும் சற்று யோசித்தான். "மஞ்சளழகி உன் பெண்ணல்லவா பலவர்மா?" என்று கேட்டான் அவன்.

"இல்லை, வளர்ப்புப் பெண்."

"வளர்த்த பாசம் உன்னை விடுமா?"

"விடாது."

"அப்படியானால் அவள் நாசத்தை ஏன் விரும்புகிறாய்?"

"நாசத்தை விரும்பவில்லை. இடைக்காலத்தில் சில நாள் பிரிவுதான்."

"இருப்பினும் அவள் மனம் உடையுமே!"

"உடையும்."

"அது உனக்குத் திருப்தியா?"

"இல்லை. ஆனால் அதைவிட முக்கியம் ஸ்ரீவிஜயத்தின் சக்தி, அக்ஷயமுனைக் கோட்டையில் என் ஆதிக்கம், ஆகிய இரண்டும்."

"ஆனால் அவள்..."

"அவள் வரலாற்றுச் சதுரங்கத்தில் ஒரு காய். ஸ்ரீ விஜய வரலாற்றின் பெருமைக்கு அவள் அன்பு இடையூறாக இருந்தால் அதையும் உடைக்க வேண்டும். பெரிய வல்லரசுகளின் மோதலில் பல உயிர்களின் நாசம், பலர் வாழ்வின் நாசம், நகரங்களின் நாசம் எல்லாம் ஏற்படுவது இயற்கை."

"அப்படியானால் மஞ்சளழகியை..." என்று இழுத்தான் இடும்பன்.

"இப்படி அருகில், வா" என்று இடும்பனை அழைத்த பலவர்மன் அவன் காதுக்கருகில் கிசுகிசுவென ஏதோ சொன்னான். அதைக் கேட்டதும் தணலை மிதித்து விட்டவன் போல் அதிர்ச்சியடைந்த இடும்பன், "இதை எப்போது துவங்க வேண்டும்!" என்று வினவினான் குரல் நடுங்க.

"இந்த அமாவாசை போக அடுத்த அமாவாசைக்கு ஒரு வாரம் முன்னதாக," என்று வந்தது பலவர்மன் பதில்.

"ஏன் அத்தனை நாள்கள்?"

"கோட்டையிலுள்ள மக்கள் சற்று அசந்து தூங்க அத்தனை நாளாகும்."

"இதுதான் அன்பின் வழியா!" என்று கூறி வெறுப்புச் சிரிப்புச் சிரித்தான் இடும்பன்.

"ஆம், ஒருவிதத்தில் அன்பின் வழிதான் இது. எந்த வழியாயிருந்தாலும் உன்னையும் என்னையும் காப்பாற்றிக் கொள்ளச் சிறந்த வழி இதுதான்." என்று குறிப்பிட்டான் பலவர்மன்.

இடும்பன் பலவர்மனை ஏறெடுத்து நோக்கினான். "பலவர்மா! சுயநலத்துக்காக எத்தனையோ பேரைக் கொன்றிருக்கிறாய். ஆனால் மகளின் மனத்தையும் வாழ்வையும் உடைக்க முனைவாய் என்று நான் இன்று வரை எண்ணவில்லை. அதற்கும் துணிந்துவிட்டாய். சரி உன் இஷ்டப்படி செய்கிறேன். ஆனால் உன் வளர்ப்புப் பெண்ணின் பெற்றோருக்கு நீ பதில் சொல்ல வேண்டாமா?" என்று கேட்டான்.

"தாய் இல்லை அவளுக்கு. தந்தைதான் இருக்கிறார். இவளை மகளென்று சொன்னாலே அவர் தலைக்குத் தீம்பு

வரும். ஆகவே அவர் இவளைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்."

"அத்தனை சிக்கலா அவள் பிறப்பு ரகசியம்?"

"ஆம்."

"அதைப்பற்றிய தகவல் ஏதாவது-?"

"யாருக்கும் தெரிய வராது. அந்தத் தகவல் என் சொந்தப் பெட்டியில் இருக்கிறது. பெட்டியின் சாவி இதோ இருக்கிறது," என்று தன் மார்பில் ஊஞ்சலாடிய சங்கிலியி லிருந்த ஒரு சாவியைக் காட்டினான் பலவர்மன்.

அதனால் திருப்தியடைந்த இடும்பன் உள்ளூர பலவர்மனின் கொடுமையை நினைத்து வெறுத்துக் கொண் டாலும் அவன் யோசனைப்படி நடப்பதாக வாக்குறுதி கொடுத்துப் பின்புற வாயில் வழியாக வெளியேறினான். அவன் வெளியேறியதைப் பார்த்துக்கொண்டு நின்ற பலவர்மன், 'அன்பின் வழி! ஆம், அதுதான் சிறந்த வழி. அன்புக்கு அழிக்கும் சக்தியும் உண்டு. சீக்கிரமே அதைப் புரிந்துகொள்வாய் இளையபல்லவா!' என்று தனக்குள் சொல்லிக் குரூரமாகச் சிரித்துக் கொண்டும் மிகுந்த மனத் திருப்தியுடனும் திரும்பவும் மாளிகைக்குள் சென்றான் அந்த வஞ்சகன்.

அத்தியாயம் 35

# குடிப் பழக்கம்

இடும்பனிடம் தன் வஞ்சகத் திட்டத்தைக் கூறிவிட்டு அதை நிறைவேற்றும் காலத்தையும் குறிப்பிட்டுவிட்டு மாளிகைக்குள் புகுந்த அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் அன்றிரவில் மிகுந்த நிம்மதியுடன் உறங்கினான். அந்த நிம்மதி மறுநாளும் அதைத் தொடர்ந்த மற்ற நாள்களிலும் மிக வெளிப்படையாகத் தெரிந்தது. ஏதோ பெரும் மனச்சுமை இறங்கியவன் போல் அதி நிம்மதி யுடனும் சந்துஷ்டியுடனும் மாளிகையில் மட்டுமல்லாமல் நகரத்திலும் கடற்கரையிலும்கூட தினப்படி உலாவ முற் பட்ட பலவர்மன், போர்ப் பயிற்சி பெற்ற மக்களை உற்சாகப்படுத்தியும், இளையபல்லவன் மரக்கலத்தைச் செப்பனிட்டு வந்த அக்ஷய முனைத் தொழிலாளர்களைப் பாராட்டியும் தன் சந்துஷ்டியை வெளிப்படையாகவும் காட்டிக் கொண்டான். அந்தச் சந்துஷ்டியும் மனத்திருப்தி யும் அவனுக்கு மட்டுமல்ல, இளையபல்லவனுக்கும் இருந்ததைச் சாதாரண மக்களும் மற்றோரும் கண்டார்கள். மறுநாள் முதல் முன்னைவிட அதிகச் சாந்தியுடனும் பரம திருப்தியுடனும் நகரத்தைப் பாதுகாக்கும் ஏற்பாடுகளிலும் தன் மரக்கலத்தைப் பழுது பார்க்கும் முயற்சியிலும் இறங்கினான் இளையபல்லவன். நகரத்துக்குப் பூர்வகுடி களிடமிருந்து ஏற்படவிருந்த ஆபத்தின் விளைவாகக் கோட்டை மக்களை எச்சரிக்கையுடன் இருக்கச் செய்வதற் காக, அங்கிருந்த சூதாட்ட அரங்கங்களையும் மதுக் கடைகளையும் ஆரம்பத்தில் அடியோடு அனுமதிக்காத இளையபல்லவன், சில நாள்களில் இரவு நேரங்களில்

மட்டும் சிற்சில கடைகள் திறக்கப்படுவதற்கு அனுமதி கொடுத்தான். அனுமதி கொடுத்ததன்றி, தானும் அமீருடன் அக்கடைகளுக்குச் சென்று மற்றவர்களுடன் லேசாக மது அருந்தியும், சொக்கட்டானாடியும் பெரிதாகச் சிரித்தும் மக்களைத் திருப்தி செய்து வந்தான். இளையபல்லவனின் இந்த லேசான மாறுதல் மக்களுக்கு மட்டுமல்ல, பலவர்ம னுக்கும் மிகுந்த திருப்தியை அளித்தது. பலவர்மன் அடிக்கடி இளையபல்லவனைத் தனது அறைக்கே அழைத்துத் தன்னிடமிருந்த சிறந்த மதுவகைகளை அவ னருந்தும்படி செய்தான். இளையபல்லவன் அவனிஷ்டப் படி அந்த மது வகைகளை லேசாக ருசி பார்த்தானா னாலும் அவ்வளவாக அவற்றில் ஆசை காட்டாததைக் கண்ட பலவர்மனுக்கு இளையபல்லவன் ரசிகனா என்பதில் பெரும் சந்தேகமுண்டாகவே அதை வெளிப் படையாகவே கேட்க முற்பட்டு, "படைத்தலைவரது நாட்டில் சிறந்த மது வகைகள் கிடையாதா?" என்று வினவினான்.

அந்தச் சமயத்தில்தான் மதுக்கிண்ணத்தை வாயில் வைத்து ஓர் உறிஞ்சு உறிஞ்சி முகத்தைப் பரம கசப்பாக அடித்துச் சுளித்துக்கொண்ட இளையபல்லவன், "சிறந்தது எது என்பது அவரவர் ருசியைப் பொறுத்தது கோட்டைத் தலைவரே" என்று கூறினான், கிண்ணத்தைச் சட்டென்று எதிரே இருந்த மஞ்சத்தில் வைத்து.

"என்னிடமுள்ள மது வகைகளைவிடச் சிறந்தவை உலகத்தில் வேறெந்த நாட்டிலும் கிடையாது இளைய பல்லவரே" என்றான் பலவர்மன் மிகப் பெருமையுடன்.

"தவறு பலவர்மரே! சுத்தத் தவறு," என்றான் இளைய பல்லவன் திட்டமாக.

"தவறா?" கோபத்துடனும் ஏளனத்துடனும் எழுந்தது பலவர்மன் கேள்வி.

"ஆம். தவறு. முக்காலும் தவறு."

"வேறு எந்த இடத்தில் இதைவிடச் சிறந்த மதுவை அருந்தியிருக்கிறீர்?" என்று எதிரேயிருந்த மதுக் கலயத்தைக் காட்டினான் பலவர்மன்.

"இந்த ஊரிலேயே அருந்தியிருக்கிறேன்."

"உனக்குச் சித்தப் பிரமைதான்."

"எனக்கல்ல சித்தப்பிரமை, உமக்குத்தான் வீண் மயக்கம். உமது நகரத்தை நீரே சரிவர அறியவில்லை."

"இந்த ஊரில் மது வகைகள் கடைகளுக்குச் செல்லு முன்பு என்னிடம் காட்டப்படுகின்றன. தெரியுமா உமக்கு?"

"இந்த ஊரில் கொள்ளையரும் இருக்கிறார்கள். உமது கண்ணில் மண்ணைத் தூவியும், உமது வீரர்களை வசப் படுத்தியும் புது மது வகைளை ஊர்க் கடைகளுக்குக் கொண்டு செல்லலாம்."

"எப்படித் தெரிந்துகொண்டீர்?"

"சாப்பிட்டேன், தெரிந்துகொண்டேன்."

இதைக் கேட்ட பலவர்மன் உண்மையிலேயே கோபத்தின் வசப்பட்டான். எந்தப் பெரிய மனிதனுக்கும் சில சில்லறைப் பெருமைகள் உண்டு. அந்தப் பலவீனம் மது சம்பந்தப்பட்ட வரையில் பலவர்மனுக்கு இருந்ததால், அவன் விடாப்பிடியாகத் தன் மாளிகை மதுவே சிறந்த தென்று அடம்பிடிக்க, அது இல்லையென இளைய பல்லவன் திட்டமாகக் கூற, இருவருக்கும் வார்த்தை வளர்ந்தது. வார்த்தை தடித்ததால் எந்த இடத்தில் சிறந்த மது இருக்கிறதென்பதைக் காட்டும்படி பலவர்மன் கேட்க அன்று முதல் ஊரில் மதுக்கடைகளுக்கு இரண்டு பேருமே விஜயம் செய்ய ஆரம்பித்தார்கள். இப்படிக் கடைகளுக்கு அழைத்துச் சென்று குடிக்கத் தூண்டிய இளையபல்லவன் வலையில் மட்டும் விழாமல், பலவர்மன் லேசாக மது வகைகளை ருசி பார்த்ததன்றி இளையபல்லவனை மாத்திரம் அதிகமாகக் குடிக்கப் பழக்கினான். இளைய பல்லவனும் மெள்ள மெள்ள அந்தப் பழக்கத்தில் விழுந்து

குடித்துத் தள்ளாடித் தள்ளாடித் தெருக்களில் நடப்பதை மக்கள் பார்த்தனர்; மாலுமிகள் பார்த்தனர்; கொள்ளையர் பார்த்தனர். பார்த்துக் கவலையும் கொண்டார்கள். எல்லோரையும்விட அதிகக் கவலை கொண்டாள் மஞ்சளழகி.

சுமார் பத்து நாள்களுக்கு முன்பு கடற்கரையில் தன்னைக் கைப்பிடித்து அழைத்து வந்து கொள்ளையரிடம் கொடுத்து, 'இவளை நான் மணம் செய்துகொள்வதாகப் பலவர்மனிடம் கூறுங்கள்' என்று கூறிவிட்டுச் சென்ற தினத்திலிருந்து மஞ்சளழகி இளையபல்லவன் கண்களில் அதிகமாகப் படவில்லையென்றாலும் அவன் நடவடிக்கைகளை மட்டும் ஊக்கத்துடன் கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். அவன் நகர மக்களுக்குத் தைரியமூட்டியது, கோட்டையைப் பாதுகாக்க ஏற்பாடுகளைச் செய்தது, அனைத்தையும் பார்த்துப் பார்த்து இத்தகைய சிறந்த வீரனை மணாளனாக அடையப்போகிறோமென்ற எண்ணத்தால் மனம் பூரிக்கவும் செய்தாள். இடையிடையே அவள் மனத்தில் ஒரு சந்தேகம் மட்டும் உதித்துக் கொண்டிருந்தது. இளையபல்லவன் தனக்குமுன் வேறொருத்தியிடம் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறானென்பது மட்டும் அவளுக்கு உறுதியாகத் தெரிந்தது. வெளிநாட்டு வர்த்தகரிடமிருந்து கிடைத்த வதந்தியிலிருந்து பாலூர்ப் பெருந்துறை விஷயங்களை ஓரளவு பலவர்மனைப் போலவே அவளும் உணர்ந்திருந்ததால், அந்தப் பெண் கடாரத்து இளவரசியான காஞ்சனா தேவியாகவும் இருக்கலாம் என்ற சந்தேகம் அடிக்கடி அவள் மனத்தே எழுந்துகொண்டிருந்தது. ஆனால் அவன் தன்னைத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்துவிட்டதால், மணம் மட்டும் முடிந்து விட்டால் தான் அவனைத் தன்மீது அன்பு கொள்ளச் செய்யலாமென்ற நம்பிக்கையும் அவளுக்கிருந்தது. அந்த நம்பிக்கை ஊறிக்கிடந்த அவள் இதயத்துக்கு இளைய பல்லவன் திடீரெனக் கற்றுக்கொண்ட குடிப்பழக்கம்

பெரும் வேதனையைத் தந்தது. அந்தக் குடிப்பழக்கத்தைத் தந்தையும் அதிகமாக ஆதரிப்பதைக் கண்டு பெரும் சந்தேகமும் சஞ்சலமும் கொண்டாள் மஞ்சளழகி. வேண்டுமென்றே தந்தை இளையபல்லவனுக்குப் பெரும் குழியைப் பறிக்கிறார் என்பதையும் புரிந்துகொண்டதால் எல்லையற்ற கவலையும் பயமும் அடைந்து, அவரை எப்படி மீட்கலாமென்ற யோசனையிலும் இறங்கி, என்ன செய்வதென்று தெரியாமல் திணறினாள் அந்தப் பசும் பொன்னிறப் பைங்கிளி.

அதற்காக இளையபல்லவனைத் திருட்டுத்தனமாகச் சந்திக்க முயன்ற ஓரிரண்டு சமயங்களிலும் அவள் நிலை மிகக் கேவலமாகத் திரும்பியது. ஒருநாள் இரவு குடித்து விட்டுத் தள்ளாடித் தள்ளாடி மாளிகைக்குள் நுழைந்த இளையபல்லவனை உப்பரிகையிலிருந்து கண்ட மஞ்சளழகி அவனது அறைக் காவலரை வெளியே செல்லும்படி உத்தரவிட்டுத் தான் மட்டும் அறைவாயிலில் தனித்து நின்றாள். மெள்ள மெள்ள மாடிப்படிகளில் தள்ளாடி ஏறிவந்த இளையபல்லவன் அறை வாயிலில் நின்ற மஞ்சளழகியைச் சில விநாடிகள் மயங்கிய பார்வையுடன் பார்த்தான். "நீ....நீ மனைவி...." என்று ஏதோ உளறி, தன் கையை நீட்டி விரலால் அவளைச் சுட்டியும் காட்டினான்.

மஞ்சளழகியின் வதனத்தில் வருத்தத்தின் சாயை பூரணமாகப் படர்ந்திருந்தது. அவள் கண்களில் நீர் திரண்டெழாவிட்டாலும் அது திரண்டெழுவதற்கான அறிகுறிகள் தெரிந்தன. செவ்விய அவள் அதரங்கள் மெல்லத் துடித்தன. "நீ...மனைவி...நான்..கணவன்....உம்" என்று உளறிக்கொண்டே அவளை நெருங்கிய இளையபல்லவன் அவளை முரட்டுப்பிடியாகத் தன் கைகளால் பிடித்தான். அவனது வலிய உடலும் அவள்மீது சாய்ந்தது. செவ்வரி படர்ந்த மஞ்சளழகியின் கண்கள் குடிவெறி மிகுந்து நின்ற அவன் கண்களை ஊன்றிப் பார்த்தன. அவள்

அழகிய கரங்கள் அவனை ஜாக்கிரதையாகப் பிடித்தன. அவள் பூவுடல் அவன் முரட்டு உடலுக்குச் சாந்தியளிப்பது போல், சாய்ந்த அவன் உடலை மெள்ள எதிர்த்து நகர்த்தியது. அப்படி அவன் உடலை எதிர்த்துத் தள்ளியும், கைகளால் அவனை இறுகப் பிடித்தும் அறைக்குள் அவனை அழைத்துச் சென்று மஞ்சளழகி மெள்ள அவனை மஞ்சத்தில் படுக்க வைத்தாள். அவள் எத்தனையோ லேசாகப் படுக்க வைத்தும் திடீரெனப் படுக்கையில் விழுந்த இளையபல்லவன் அவளை நோக்கி வெறிச் சிரிப்புச் சிரித்தான். "நீ... இங்கே... வா வா..." என்று அவள் கையைப் பிடித்து இழுத்து மஞ்சத்தில் தன் பக்கத்திலும் உட்கார வைத்துக் கொண்டான். அதற்குப் பிறகு கைகளை அவளை விட்டு விலக்கி மஞ்சத்தில் போட்டுக்கொண்டு பெருமூச்செறிந்தான்.

மஞ்சளழகி அவனைப் பார்த்து அவன் செயல் களைப் பார்த்து வியந்தாள். அத்தனை குடியிலும் அவன் தன்னை அணைக்கவோ, அணைத்துப் படுக்கைக்கு இழுக் கவோ முயலவில்லையென்பதைக் கண்டாள். அவன் கைகள்கூடத் தன்னைத் தொடாமலே மஞ்சத்தில் விழுந்து கிடந்ததைப் பார்த்து, 'மது மயக்கத்திலும் நடத்தை பிறழாத பெரும் பண்பு இவர் ரத்தத்தில் ஊறியிருக்கிறது. எத்தனை சிறந்த மனிதர்!' என்று அவனைச் சிலாகித்த மஞ்சளழகி, 'இத்தனை சிறந்த மனிதரைத் தந்தை அழித்துவிடப் பார்க்கிறாரே?' என்று தனக்குள் பெரும் துக்கத்தையும் பிறப்பித்துக் கொண்டாள்.

அவள் எண்ணங்களைப் புரிந்துகொள்ளும் நிலை யில் இளையபல்லவன் இல்லாததைப் புரிந்துகொண்ட மஞ்சளழகி, அவனுக்குச் சுரணை வரச் செய்தவற்காகச் சற்று எட்ட இருந்த தங்கப் பாத்திரத்தில் இருந்த நீரில் தன் சேலைத் தலைப்பை நனைத்து வந்து மஞ்சத்தில் உட்கார்ந்து இளையபல்லவன் முகத்தில் நீர்த்துளிகளைப்

பிழிந்தாள். அந்த நீர்த்துளிகளுக்கும் அசையும் நிலையில் படைத்தலைவன் இல்லாததால், அவன் அறிவைத் தொட்டுத் துலக்க உரையாடல் முறையைக் கையாண்டாள். அதை முன்னிட்டு, "இளையபல்லவரே! சோழர் படைத்தலைவரே," என்று அவன் காதுக்கருகில் குனிந்து மந்திரம் போல் சொற்களை உதிர்த்தாள்.

அதைக் கேட்டதும் இளையபல்லவன் முகத்தில் அசட்டுச் சிரிப்பின் ரேகை படர்ந்தது. "ஆம்! நான் இளைய பல்லவன்... ஏன் தெரியுமா? பல்லவ மன்னன்... என் அண்ணன்.. நான் அவனுக்கு இளையவன்... இதுதான் தெளிவு.. தெளிவு..." என்றான்.

"ஆம் ஆம். நீங்கள் இளையபல்லவர்தான். உங்களுக்குக் கடமை இருக்கிறது. அதுவும் கலிங்கத்தின் கடற்படைப் பலத்தை உடைக்கும் கடமை இருக்கிறது. விழித்துக் கொள்ளுங்கள் படைத் தலைவரே!" என்று தன் கண்களால் அவன் கண்களை உற்று நோக்கிக்கொண்டு சொற்களை உறுதியுடன், திடமாக, ஒவ்வொன்றாக அவன் புத்தியில் உறையும்படி உதிர்த்தாள்.

சொற்கள் அவன் புத்தியில் உறையவில்லை. அறிவு மங்கியே கிடந்தது. "ஆம் ஆம்! கலிங்கத்தின் கடற்படை கடலில் தவிடு பொடி... அதற்குப் போர்க்கப்பல்... ஆம் போர்க்கப்பல் வேண்டும்... .கூப்பிடு கண்டியத்தேவனை." என்று இரைந்தான் இளையபல்லவன்.

"இப்பொழுது இரவு."

"சதியாலோசனை.. இரவு அல்ல.. இது பகல், கூப்பிடு கண்டியத்தேவனை."

"சும்மா இருங்கள். இது இரவுதான்."

"இல்லை.. அதோ சூரியன்," என்று தூரத்திலிருந்த தூங்கா விளக்கைக் காட்டினான் இளையபல்லவன்.

"அது விளக்கு."

"சூரியனும் ஒரு விளக்கு... இரண்டும் ஒன்று... கண்டியத் தேவனைக் கூப்பிடு... உம், கூப்பிடு..."

"மாட்டேன்"

"நீ..என் மனைவி... கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை... தமிழ்.. தமிழ்ப் பழமொழி... சொற்படி செய். கூப்பிடு..."

"எதற்குக் கண்டியத்தேவர்?"

"போர்க்கப்பல்... போர்க்கப்பல்...?"

"இப்பொழுதிருப்பது?"

"அதுவும் போர்க்கப்பல்... அப்படி வேண்டாம்..."

"வேறு எப்படி வேண்டும்?"

"அக்ரமந்திரம்.. அக்ரமந்திரம்.. அக்ர... மந்திரம்," என்று இறைந்து கூவிய இளையபல்லவன் அவளை மஞ்சத்தின் முனையிலிருந்து அப்புறப்படுத்திவிட்டுத் தள்ளாடி எழுந்து வாயிற்படியை நோக்கிச் சென்று, "டேய்? யாரங்கே!" என்று காவலாளியை அழைத்தான். வந்த காவலாளியிடம், "போ... போ! கண்டியத்தேவனைக் கூப்பிடு..." என்று உத்தரவிட்டு அறைக்குள் தள்ளாடி வந்து, "மஞ்சளழகி... மனைவி.. எடு அந்த மதுவை..." என்று அறை மூலையிலிருந்த ஒரு குப்பியைக் காட்டினான். அவள் கொடுக்காது போகவே நீள வாயுடனிருந்த அந்த அரபு நாட்டுக் குப்பியை அவனே எடுத்து வாயில் வைத்து மதுவைச் சிறிது குடித்துக்கொண்டே மீண்டும் மஞ்சத்தில் வந்து உட்கார்ந்து மஞ்சளழகியையும் பக்கத்தில் உட்காரச் செய்தான். "மனைவி.. மது அறிவை இயக்கும்.. இயக்கும்" என்று உளறி, குப்பியை இன்னொரு கையால் தட்டிக் காட்டினான். மீண்டும் போதையில் உளற ஆரம்பித்து, "மனைவி, மரக்கலங்கள் பலவிதம்.. ஒன்று ஸர்ப்ப மந்திரம்... இன்னொன்று மத்திய மந்திரம்... இன்னொன்று அக்ர மந்திரம், பிறகு தீர்க்கம், உன்னாகம்... தவிர, தாரணி... லோலா, காமினி, தாரி, பேகினி, ஜங்கலா.. ஊர்த்வா,

அனூர்த்வா, ஸ்வர்ணமுகி, மந்தரா- உம் தெரிகிறதா?... நீ சொல்... சொல்," என்று மதுக் குப்பியில் விரலால் அடித் தடித்துச் சொன்னான்.

மஞ்சளழகி பதிலேதும் சொல்லவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். "சொல்ல மாட்டாய்.. உம்.ஏன்? தெரியும் தெரியும்... நான் படித்திருக்கிறேன்... நீ படிக்கவில்லை... போஜன் எழுதியிருக் கிறான். நூலின் பெயர் யுக்தி கல்பதரு.• மரக்கல சாத்திரம் முழுமையும் அதில் உண்டு.. உண்டு... மணம் செய்துகொள்... சொல்லித் தருகிறேன்... உம்" என்று மீண்டும் உளறிவிட்டுப் பஞ்சணையில் திடீரென விழுந்தான். மஞ்சளழகி நீண்ட நேரம் அவனைப் பார்த்துக்கொண்டே நின்றாள். அவன் பஞ்சணையில் மயங்கிக் கிடந்தான். அவள் குனிந்து தன் செவ்விய இதழ்களை அவன் நெற்றியில் புதைத்தாள். துக்கம் பீறிட்டதால் அவள் கண்களிலிருந்து நீர்த்துளிகள் பொல பொலவென சுடச்சுட அவன் முகத்தில் உதிர்ந்தன. அந்த நீர்த்துளிகளின் உஷ்ணங்கூட அவனை எழுப்ப வில்லை. மஞ்சளழகி மனவேதனையுடன் அந்த அறையை விட்டு அகன்றாள். குடிப்பழக்கம் இளையபல்லவனை அழித்து விட்டதென்றே தீர்மானித்தாள்.

அதில் ஏதாவது சந்தேகமிருந்தால் அதை அடுத்த நாள் கண்டியத்தேவன் தீர்த்துவிட்டான். மறுநாள் கடற் கரையில் உலாவிய மஞ்ளழகி, இளையபல்லவன் மரக்கலம் பழுது பார்க்கப்படும் இடத்திற்குச் சென்றவள் அங்கு நடந்து கொண்டிருந்த வேலையைப் பார்த்து திக்பிரமை பிடித்து நின்றாள். தன் பிரமையைவிடப் பெரும் பிரமை கண்டியத்தேவன் முகத்தில் இருந்ததையும் கவனித்தாள் மஞ்சளழகி. இளைய பல்லவனைத் தன் தந்தை தொலைத்து விட்டார் என்ற முடிவுக்கு வந்தாள்.

• Indian Shipping .... by Radha Kumud Mukerji P. 170–172.

அத்தியாயம் 36

# தளமிழந்த கப்பல்; மதியிழந்த தளபதி!

பழுது பார்ப்பதற்காகப் பெரும் கயிறுகளைக் கொண்டு கரையோரம் இழுக்கப்பட்டுக் கரையில் பாதியும் அலை மோதும் நீரில் பாதியுமாகப் பெரும் திமிங்கலம் போல் கிடந்த இளையபல்லவனின் போர்க்கலத்தில் நடந்துகொண்டிருந்த வேலையைக் கண்ட மஞ்சளழகி, 'இந்த விபரீதம் எதற்காக நடக்கிறது?' என்று எண்ணித் திக்பிரமை பிடித்தபடி சில விநாடிகள் அந்த மரக்கலத்தின் மீது வைத்த கண்ணை வாங்கமாலே நின்றாள். கோட்டை வாயிலைக் கடந்து வரும்போதே அவளைக் கண்டுவிட்ட கண்டியத்தேவனும் அவள் மரக்கலத்தின் அருகே வந்ததும் எதிர்கொண்டு "வாருங்கள்," என்ற ஒற்றைச் சொல்லால் அவளை வரவேற்கவும் செய்தான். அந்த ஒற்றைச் சொல்லை அவன் உபயோகித்தபோது அவன் குரலிலிருந்த வெறுப்பையும், துயரத்தையும் கவனித்த மஞ்சளழகி அந்த வெறுப்புக்கும் துயரத்துக்கும் எத்தனை சிறந்த காரண மிருக்கிறது என்பதை மரக்கலத்தை நோக்கிய மாத்திரத்தில் புரிந்துகொண்டாள்.

கரையில் பாதி இழுக்கப்பட்டுப் பக்கவாட்டில் லேசாகச் சாயக்கப்பட்டிருந்த அந்தப் பெரும் மரக் கலத்தின் ஒரு பக்கப் பலகையோ, கண்ணுக்குத் தெரிந் தாலும் அதில் ஒட்டி உறைந்து அரையடி கனத்துக்குமேல் பிடித்திருந்த கடற்பாசியையும், பெரும் கிளிஞ்சல்களையும், நானாவித பற்பலவித சிப்பிகளையும் கடல் நுரைக்

கட்டிகளையும் கண்ட மஞ்சளழகி அந்தக் கப்பலைப் பழுது பார்த்து ஒரு வருஷத்துக்குமேல் ஆகியிருக்குமென்பதை உணர்ந்து கொண்டாள். தவிர அந்தப் பலகையில் பிடித் திருந்த பாசிகளின் இடையே தெரிந்த பெரும் பிளவுகள் மரக்கல அடிப்பலகைகள் லேசாக இடைவெளியளித்த தையும் குறிப்பிட்டனவாகையால், மரக்கலத்தை அப் போது பழுது பார்க்காவிட்டால் அதைக் கடலில் செலுத்துவது பெரும் அபாயமென்பதையும் மஞ்சளழகி அறிந்துகொண்டாள். சதா கடலில் ஓடும் கொள்ளை யருடன் வருஷக்கணக்கில் பழகியதன் காரணமாக மரக் கலங்களின் நுட்பங்களை அறிந்திருந்த மஞ்சளழகி அந்த மரக்கலத்தின் அடிப்பகுதியை மட்டும் பழுது பார்ப்பது அவசியமாயிருப்பதை உணர்ந்து கொண்டாளானாலும், மரக்கலத்தைச் செப்பனிடும் தொழிலாளிகள் அதன் மேல் பகுதிகளை ஏன் உடைத்து வருகிறார்களென்பதை அறி யாமல் திணறினாள். அப்படி மேற்பகுதியை அவர்கள் மிக மும்முரமாகப் பெயர்த்துப் பலகைகளைத் தடால் தடா லென்று தள்ளிய ஓசை வேதனைப்பட்ட அவள் உள்ளத்தைத் திடீரெனத் தாக்கத் துவங்கவே அவள் அதிர்ச்சியுற்று நின்றாள். அந்த அதிர்ச்சியைக் கண்ட கண்டியத்தேவன் ஒருவகையில் ஆச்சரியமும் இன்னொரு வகையில் பிரமிப்பும் அடைந்தான். கோட்டை மாளிகை யில் செல்லமாக வளர்ந்த அந்தக் காரிகை மரக்கலத்தைப் பார்த்தவுடனேயே நிலைமையைப் புரிந்துகொண்டதை நினைத்து அவளுக்கு மரக்கல அமைப்பிலிருந்த அறிவை எண்ணி ஆச்சரியப்பட்டான். மரக்கலத்தின் நிலையை எண்ணி எண்ணித் திக்பிரமைக்கும் உள்ளானான். இந்த இருவகை உணர்ச்சிக்கு உள்ளான கண்டியத்தேவனை நோக்கிய மஞ்சளழகி, "தேவரே! மரக்கலத்தின் மேற் பகுதியைப் பிரிக்கிறீர்களே?" என்று வினவினாள் கவலை நிரம்பிய குரலில்.

"ஆம் மகாராணி," என்றான் கண்டியத்தேவனும் கவலை தோய்ந்த குரலில்.

அவன் பதில் அவளைத் தூக்கி வாரிப் போட்டது. கண்டியத்தேவன் தன்னை ஏளனம் செய்கிறானா என்று அவன் முகத்தை ஏறிட்டு நோக்கினாள். அவன் முகத்தில் ஏளனக் குறி சிறிதுமில்லாததால் மிகுந்த குழப்பமடைந்து, "என்ன அப்படி அழைக்கிறீர்கள் தேவரே?" என்று வினவினாள்.

கண்டியத்தேவன் அவளை மிகுந்த மரியாதையுடன் திரும்பி நோக்கி, "என்ன கேட்கிறீர்கள் மகாராணி?" என்றான் மீண்டும்.

மஞ்சளழகியின் முகத்தில் குழப்பம் முன்னைவிட அதிகமாகப் படர்ந்தது. "நான் மகாராணியா?" என்று வினவினாள் குழப்பத்துடன் சற்றுக் கோபம் துளிர்த்த குரலில்.

"அப்படித் தானிருக்க வேண்டும்?" என்றான் கண்டியத்தேவன்.

"அப்படித்தானிருக்க வேண்டும் என்றால்?" கோபம் சற்று அதிகம் தொனித்த குரலில் எழுந்தது மஞ்சளழகியின் கேள்வி.

"இல்லாவிட்டால் இளையபல்லவர் உங்களை அப்படி அழைக்க மாட்டார்."

"இளையபல்லவரா! சோழர் படைத்தலைவரா?"

"ஆம்."

"அவர் அப்படி என்னை இதுவரை அழைக்க வில்லையே."

"இனிமேல் அழைக்கலாம்."

"எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"உங்களை மகாராணி என்று அழைக்கும்படி அவர்தான் கட்டளையிட்டிருக்கிறார்."

"எப்பொழுது இட்டார் கட்டளை?"

"நேற்றிரவு."

மஞ்சளழகியின இதயம் வேதனை அலைகளில் பல முறை புரண்டது. அவள் மனம் சில விநாடிகள் சென்ற இரவின் விபரீதத்தை, இளையபல்லவன் குடித்து உளறிக் கொண்டிருந்த நிலையை, எண்ணி எண்ணிப் புழுங்கியது. 'நேற்றிரவு.. நேற்றிரவு..'' என்று இரண்டு மூன்று முறை காரணமில்லாமல் தனக்குள்ளேயே சொல்லிக் கொண் டாள், அக்ஷயமுனைக் கோட்டையின் செல்வி. அந்த இரவில் அவன் சொன்ன ஒவ்வொன்றும் அவளுக்கு நினைவிலிருந்தது. அந்தத் துன்ப நினைவில் சற்று இன்பமும் கலந்தது. அத்தனை உளறலிலும் இளையபல்லவன் தன்னை அடிக்கடி 'மனைவி மனைவி' என்று அழைத்ததை நினைத்துப் பார்த்தாள்! பலத்த அவன் உடல் தன் உடல் மீது குடி வெறியுடன் சாய்ந்ததையும் எண்ணிப் பார்த்தாள். அந்த எண்ணங்களிலும் எத்தனை இன்பமிருந்தது அவளுக்கு. அவன் அறிவிழந்திருந்த நிலையில் கிடைத்த இன்பம் அது? அறிவுடனிருந்து அதெல்லாம் நடந்திருந் தால்? இப்படி எண்ணிய அவள் இதயம் வேதனையும் இன்பமும் கலந்த உணர்ச்சிகளால் இழுபட்டாலும், தான் இளையபல்லவனை விட்டுச் செல்லும்போதே இரவு மிகவும் ஏறியிருக்க, கண்டியத்தேவனை அவன் எப் பொழுது சந்தித்திருக்க முடியும். இந்த மகாராணிப் பட்டத் தைத் தனக்கு எப்பொழுது அளித்திருக்க முடியும் என்று யோசித்து, "தேவரே! நேற்றிரவு நீங்கள் அவரை எப் பொழுது சந்தித்தீர்கள்?" என்று வினவினாள்.

"நள்ளிரவு எட்டும் வேளை," என்று பதில் கூறினான் கண்டியத்தேவன்.

"அப்பொழுதுதான் மகாராணிப் பட்டம் எனக் களிக்கப்பட்டதா?" என்று கேட்டாள் அவள்.

"ஆம் மகாராணி," என்றான் கண்டியத்தேவன்.

"தேவரே! மீண்டும் அப்படி அழைக்க வேண்டாம்," என்றாள் கண்டிப்பான குரலில்.

"இதை என்னிடம் சொல்லிப் பயன் இல்லை" என்றான் தேவன்.

"ஏன்?"

"இளையபல்லவர் உத்தரவை மீற எங்கள் யாருக்கும் துணிவில்லை."

"அவர் நேற்றிரவு இருந்த நிலையைப் பார்த்தீரல்லவா..." என்று துவங்கிய மஞ்சளழகி சட்டென்று தன் பேச்சை நிறுத்திக்கொண்டு சங்கடத்துடன் தேவனைப் பார்த்தாள். இரவில் தான் இளையபல்லவனின் அறையில் தனித்திருந்ததைக் கண்டியத்தேவன் புரிந்துகொண்டு விட்டால் என்ன செய்வதென்ற பீதி அவளைத் தடுமாறச் செய்தது.

கண்டியத்தேவன், "நீங்களும் நேற்றிரவு அவரைப் பார்த்தீர்களா?" என்றான் வியப்பு குரலில் விரிய.

மஞ்சளழகி தலையைக் குனிந்துகொண்டு, "ஆம் பார்த்தேன்," என்றாள்.

"அப்பொழுது அவர்_" என்று இழுத்தான் கண்டியத் தேவன்.

"சுயநிலையில் இல்லை..." என்று முடித்தாள் மஞ்சளழகி.

"ஆம், சுயநிலையில் அடியோடு இல்லை" என்று கண்டியத்தேவனும் ஒப்புக் கொண்டான்.

"அங்கு நீங்கள் எதற்காகப் போனீர்கள்?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"உத்தரவு வந்தது," என்றான் கண்டியத்தேவன்.

"யார் உத்தரவு?"

"படைத்தலைவர் உத்தரவு."

"காவலன் வந்து அழைத்தானா?"

"ஆம்."

"ஐயோ, அவர் மதியிழந்த சமயத்தில் இட்ட உத்தர வல்லவா அது?"

"எந்தச் சமயத்தில் அவர் உத்தரவிட்டாலும் பணிய வேண்டியது எங்கள் பொறுப்பு." இதைக் கண்டியத்தேவன் திட்டமாகச் சொன்னான்.

மஞ்சளழகி சிறிது யோசித்துவிட்டுக் கேட்டாள். "அப்பொழுதுதான் என்னை மகாராணியென்று அழைக்கக் கட்டளையிட்டாரா?" என்று.

"ஆம்."

"வேறு என்ன கட்டளையிட்டார்?"

கண்டியத்தேவன் பதிலுக்கு மரக்கலத்தைச் சுட்டிக் காட்டினான். மஞ்சளழகி திக்பிரமையுடன் அவனைப் பார்த்தாள். "மரக்கலத்தின் மேல்பகுதியைப் பிரிக்கச் சொல்லிக் கட்டளையிட்டாரா?" என்று கேட்டாள் அந்தப் பிரமை குரலிலும் அலைமோத.

"அப்படித் திட்டமாக உத்தரவிடவில்லை" என்றான் தேவன்.

"வேறு எப்படி உத்தரவிட்டார்?"

"இது சீனர் கப்பலல்லவா?"

"ஆம்."

"அதைப் பாரதத்துக் கப்பலாக மாற்றக் கட்டளை யிட்டார்."

"இரண்டுக்கும் வித்தியாசமுண்டா?"

"உண்டு. சீனர்கள் கப்பல் மரத்தின் எடை அதிகம். ஆகவே வேகம் குறைவு. பாரதத்தின் மரக்கலங்களில் மரத்தின் எடை குறைவு. ஆகவே வேகம் அதிகம். போரில் இரண்டுக்கும் இரண்டுவித உபயோகங்கள் உண்டு."

"சொல்லுங்கள் தேவரே!"

"சீனக் கப்பல்களின் எடை அதிகமாதலால் போரில் எதிரிக் கப்பல்களுடன் மோதும்போது அவை எதிரிக்

கப்பல்களுக்கு பெரும் சேதத்தை விளைவிக்கும். எதிரிக் கப்பல்களின் அடிப்பகுதியைச் துருவிச் சென்று துளை செய்துவிட நீண்ட இரும்பு ஆணியும் அவற்றின் அடியில் இருக்கும். பாரதத்தின் மரக்கலங்களில் மர எடை குறை வாதலால் மிகுந்த வேகத்துடன் பாய் விரித்துச் செல்லக் கூடியவை அவை."

"ஆகவே..."

"இதை அக்ரமந்திரமாக்க உத்தரவு."

அக்ரமந்திரம்! அந்தப் பெயர் சுரீலென மஞ்சளழகி யின் உள்ளத்தில் பாய்ந்தது. முந்திய இரவு அறிவிழந்த நிலையில் இளையபல்லவன் உளறிய சொற்களில் அதுவும் ஒன்று. அதைப் போர்க் கப்பலென்றும் இளையபல்லவன் கூறியது மஞ்சளழகியின் நினைவுக்கு வரவே அவள் வியப்பின் வசப்பட்டாள். "ஆம்! என்னிடமும் கப்பல் களைப் பற்றி ஏதேதோ பெயர்களைச் சொன்னார்," என்று வாய் விட்டுக் கண்டியத்தேவனிடம் கூறினாள்.

கண்டியத்தேவன் இமைகள் ஆச்சரியத்தால் உயர்ந்தன. "என்ன சொன்னார் தேவி" என்ற கண்டியத் தேவன் திடீரென ஏற்பட்ட ஆச்சரியத்தால் மகாராணிப் பட்டத்தை மறந்து பேசினான்.

"ஏதோ ஸர்ப்பமந்திரம், மத்திய மந்திரம், அக்ர மந்திரம் என்று சொன்னார்," என்றாள் மஞ்சளழகி.

"வேறு என்ன சொன்னார்," என்று கேட்டான் கண்டியத்தேவன் ஆவலோடு.

"தாரணி, லோலா, காமினி, தாரிணி, பேகினி... இன்னும் ஏதேதோ சொன்னார். எல்லாம் நினைவில் இல்லை," என்று கூறினாள் மஞ்சளழகி.

கண்டியத்தேவன் முகம் ஆச்சரியத்தின் எல்லையைத் தொட்டது. "என்ன விந்தை இது!" என்று சொற்களையும் வியப்புடன் கொட்டினான். "எனக்கு ஏதும் புரியவில்லை. தேவி!" என்றும் சொன்னான்.

"என்ன புரியவில்லை?"

"இளைய பல்லவர் குடிவெறியிலிருந்தார்."

"ஆம்."

"வெறியில் இத்தனை கோர்வையான பேச்சு எப்படி வரும்."

"என்ன கோர்வை அதில்?"

"ஸர்ப்ப மந்திரமென்பது தளத்தின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிவரை அறைகளை உடையது. அரசர்கள் பொக்கிஷம், புரவிகள், ஸ்திரீகள், இவர்களை ஏற்றிச் செல்ல உதவுவது. மத்திய மந்திரம் கப்பலின் நட்ட நடுவில் பெரும் அறையை உடையது; அரசர்களின் உல்லாசப் பயணத்துக்காக ஏற்பட்டது. அக்ரமந்திரம் கப்பலின் முனையில் அறையை உடையது; நீண்ட தூரப் பயணத்துக்கும், பெரும் கடற்போர்களுக்கும் உபயோகப் படுவது. இத்தனை மரக்கலங்களில் அவர் அக்ரமந்திரமாக இதை மாற்ற உத்தரவிட்டிருக்கிறார், தேவி. அவர் உளறலிலும் பொருள் இருக்கிறது."

மஞ்சளழகி கண்டியத்தேவனை ஏறெடுத்து நோக்கினாள். "என்ன பொருள் தேவரே?" என்றும் வினவினாள்.

"இந்த மரக்கலத்தை நீண்ட பயணங்களுக்கும், போர்களுக்கும், தேவையானபடி மாற்ற ஏற்பாடு செய்கிறார், இளைய பல்லவர்," என்றான் கண்டியத்தேவன்.

"அதனாலென்ன?"

"அதனாலென்னவா! அவர் பார்வை தொலைவில் இருக்கிறது. அக்ஷயமுனையில் அல்ல கண்ணோட்டம்."

"பின் எங்கே?"

"எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஓர் அபாயமிருக்கிறது தேவி."

"என்ன அபாயம்?"

"அதை நீங்களும் உணர்ந்துகொண்டீர்கள் மரக் கலத்தைப் பார்த்தவுடன்."

"ஆம் புரிந்துகொண்டேன். மரக்கலத் தளத்தைப் பிரித்தால் திரும்ப அமைக்க ஒரு மாத காலமாவது பிடிக்கும்."

"அந்த ஒரு மாத காலம் இளையபல்லவர் இங்கிருந்து நகர முடியாது."

"முடியாது."

"ஒரு மாத காலம் கடலிலும் கோட்டையிலும் நமக்கு நிம்மதி இருக்குமா?"

"இருக்காது."

"பூர்வகுடிகள்..."

"நிலத்திலும் தாக்குவார்கள், நீரிலும் தாக்குவார்கள்."

மஞ்சளழகியின் இந்தப் பதிலைக் கேட்டுத் திகைத்த கண்டியத்தேவன், "இந்த மரக்கலம் பெரும் பலமுடையது தேவி! நான்கு போர்க் கப்பல்களை இதைக் கொண்டு சமாளிக்கலாம். ஆனால் இதைப் பிரித்துவிட்டேன். இனி கடலில் நாங்கள் சிறகிழந்த பட்சிகள். கோட்டை நிலமை எனக்குத் தெரியாது," என்றான்.

அங்கு நிலைமை சரியல்லவென்பதைப் புரிந்து கொண்டாள் மஞ்சளழகி. 'குடிப்பழக்கமில்லாத இளைய பல்லவன் விழிப்புடனிருக்க முடியும். பூர்வகுடிகள் எதிர்ப்பைச் சமாளிக்க முடியும். ஆனால் குடித்து அறிவிழந்த தலைவர் என்ன செய்ய முடியும்! இதோ தளம் பிரிக்கப்படும் மரக்கலம் போலத்தான் அவரும். தளமிழந்த கப்பலும், மதியிழந்த தளபதியும் ஒன்றுதான்' என்று எண்ணமிட்ட மஞ்சளழகி பெருமூச்செறிந்தாள். இளைய பல்லவனின் மதியிழந்த நிலையைத் தந்தை கண்டிப்பாய் உபயோகித்துக் கொள்வார் என்று நினைத்துப் பெரும் வேதனைக்கும் உள்ளானாள். அப்படி வேதனைப்பட்டு நின்ற நிலையில் பின்னாலிருந்து, "மகாராணி!" என்று வந்த

குரலைக் கேட்டுச் சரேலெனத் திரும்பிய அக்ஷயமுனைக் கோட்டை அழகி தன் பின்னால் சிரிப்புடன் இளைய பல்லவன் நிற்பதைக் கண்டு ஒருகணம் ஸ்தம்பித்தாள். அடுத்த விநாடி மிகுந்த சீற்றத்துடன் கேட்டாள், "நான் மகா ராணியா?" என்று.

"ஆம்," என்றான் இளையபல்லவன்.

"யார் சொன்னது?"

"நான் சொல்கிறேன்."

"எந்த ராஜ்யத்துக்கு நான் ராணி?"

"என் மன ராஜ்யத்துக்கு."

"வீண் மனோராஜ்யம்?"

"மனோராஜ்யங்கள் பலிப்பது உண்டு. என் இதய ராணி, வா இப்படி!"

அவள் வரவில்லை. அவனைக் கடந்து விடுவிடு வென்று கோட்டையை நோக்கி நடந்தாள். அவள் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றான் இளைய பல்லவன். அந்தச் சமயத்தில் படைத் தலைவனின் முகத்தில் புரியாத ஏதோ ஓர் ஒளி, அளவிட முடியாத ஏதோ ஓர் ஆழமான பார்வை படர்ந்து கிடப்பதைக் கண்டியத்தேவன் கண்டான். அவன் ஊகத்துக்குத் துணை செய்வதுபோல் உதிர்ந்தன படைத்தலைவன் வாயிலிருந்து சொற்களும். "நீ மகாராணி ஆகலாம் மஞ்சளழகி! ஆனால் உனக்கு அதிர்ஷ்டமில்லை," என்று கூறிய இளைய பல்லவன் பெருமூச்செறிந்தான். பிறகு வெகு வேகத்துடன் கண்டியத்தேவனை நோக்கி, "வாரும் தேவரே?" என் றழைத்துக் கொண்டு மரக்கலத்தை நோக்கி விரைந்தான்.

மரக்கலத்துக்கு அருகே வந்த பிறகும் இளைய பல்லவன் முகத்தில் ஆழமான பார்வையே விரிந்து கிடந்ததைக் கண்ட கண்டியத்தேவன், படைத்தலைவன் இதயத்தில் ஏதோ பெரும் ரகசியமொன்று புகுந்து

கொண்டிருப்பதைப் புரிந்து கொண்டானானாலும் அந்த ரகசியம் என்னவாயிருக்க முடியும் என்பதை உணர முடியாததால் படைத்தலைவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான். சிறிது நேரம் கழித்து அவனை நோக்கித் திரும்பிய படைத்தலைவனின் முகத்தில் புன்முறுவ லில்லை. மதுவெறியுமில்லை. மிதமிஞ்சிய கவலையே மண்டிக் கிடந்தது. "மரக்கலத்தை மாற்றியமைக்க எத்தனை நாளாகும் தேவரே?" என்ற இளைய பல்லவன் கேள்வி யிலும் அந்தக் கவலை பிரதிபலித்தது.

"ஒரு மாத காலம் ஆகும். அதற்குக் குறைவில்லை." என்றான் தேவன்.

இளையபல்லவன் சில விநாடிகள் ஏதோ யோசித் தான். "ஆகலாம் ஆகட்டும். ஒரு மாத காலம்தான் உமக்குக் கொடுக்க முடியும்," என்றான்.

"அதற்குப் பின்?"

சட்டென்று வந்தது இளையபல்லவனின் பதில். ஆனால் பதிலின் வேகம் சொல்ல முடியாததாயிருந்தது. அதைக் கேட்டுப் பெரும் அதிர்ச்சியடைந்தான் கண்டியத் தேவன். அந்தப் பதிலைத் தொடர்ந்து இளையபல்லவன் கூறிய வார்த்தைகள் அந்த அதிர்ச்சியை ஆயிரம் மடங்கு அதிகப்படுத்தின. ஏதோ பெரும் விபரீதத்துக்கு அக்ஷய முனையில் அஸ்திவாரம் போடப்படுகின்றது என்பதை மட்டும் தேவன் புரிந்துகொண்டான். அளவிட முடியாத ஆபத்தும், திகிலை விளைவிக்கும் முடிவுகளும் அந்தத் துறைமுகத்தில் ஏற்படும் காலம் அதிகத் தூரத்திலில்லை என்பது கண்டியத்தேவனுக்கு நன்றாகத் தெரிந்தது.




## 37. எட்டாக் கனியும் கிட்டாக் கனியும்

அத்தியாயம் 37

# எட்டாக் கனியும் கிட்டாக் கனியும்

கடற்கரையில் அந்தக் காலை நேரத்தில் கப்பலருகே நின்ற கருணாகர பல்லவன் தனது கேள்விக்கு விடுத்த கருத்தை உலுக்கும் பதிலைக் கேட்டதும் பெரும் அதிர்ச்சிக்கு உள்ளான கண்டியத்தேவன் கவலையும் பிரமையும் நிரம்பிய கண்களைப் படைத்தலைவன் மீது நாட்டினான். மேன்மேலும் ஏதேதோ கேள்விகளை உதிர்க்கக் கண்டியத் தேவன் நா துடித்ததானாலும் படைத்தலைவன் முகத்திலிருந்த ஆழ்ந்த யோசனையின் விளைவாக அந்தக் கேள்விகள் நாவிலேயே உறைந்து விட்டன. முதல் நாளிரவு, தான் கோட்டையில் பலவர்மன் மாளிகையில் பார்த்த இளைய பல்லவனுக்கும், அன்று காலையில் கடற்கரைக்கு வந்துள்ள படைத்தலைவனுக்கும் பெருத்த வித்தியாசமிருக்கவே கண்டியத்தேவன் கவனித்தான். முதல்நாள் இரவு மது வெறியிலிருந்த இளையபல்லவனுக்கும் அன்று காலை மிகத் தெளிவான புத்தியுடன் வந்திருக்கும் படைத் தலைவனுக்கும் பார்வையிலும் பேச்சியிலும் வித்தியாசமிருக்கவே செய்ததானாலும், அந்த வித்தியாசமெதுவும் முதல் நாளிரவு குடி வெறியில் இட்ட உத்தரவை மாற்றும் நிலையில் இல்லாததைக் கவனித்த கண்டியத்தேவன் மேலும் மேலும் பிரமிப்புக்கே உள்ளானான். மரக்கலத்தை மாற்றியமைக்க மாதம் ஒன்று பிடிக்கும் எனத் தான் கூறியதும், "ஆகலாம். ஆகட்டும். ஒரு மாதம் அவகாசம்தான் உமக்குக் கொடுக்க முடியும்," என்று படைத்தலைவன் பதிலிறுத்ததிலிருந்து மரக்கலத்தை மாற்றியமைக்கும்

திட்டத்தை அவன் மாற்றப் போவதில்லை, என்பதைப் புரிந்துகொண்ட கண்டியத்தேவன், "அதற்குப் பின்?" என்று ஒரு கேள்வியையும் போட்டு வைத்தான்.

எந்தத் தாமதமுமில்லாமல் சட்டென்று வந்தது படைத்தலைவன் பதில். "அதற்குப் பின் நாம் இங்கு இருக்க மாட்டோம்," என்றான் இளையபல்லவன் திடீரென்று. அந்தப் பதில் வீசின குரலில் மிகுந்த வேகமிருந்ததையும் பெரும் பொருளும் புதைந்து கிடந்ததையும் கண்டியத் தேவன் கவனித்தான். இருப்பினும் திடீரென்று கிடைத்த அந்தப் பதிலே அவனைப் பெரும் திகைப்புக்குள்ளாக் கியது. அந்தத் திகைப்புடன், "அப்படியானால் அப்படி யானால்..." என்று தட்டுத் தடுமாறி இழுத்தான் கண்டியத் தேவன்.

"இங்கிருந்து போய்விடுவோம். தொலைதூரம் போய் விடுவோம்," என்ற இளையபல்லவன் பதில் முன்னைப் போலவே துரிதமாக வெளிவந்தது.

"எங்கு போகப்போகிறோம் படைத்தலைவரே?" கண்டியத்தேவன் கேள்வி கலக்கத்துடன் ஒலித்தது.

"அதைப் பிறகு சொல்கிறேன். ஆனால் ஒரு மாதத் திற்குமேல் இந்தத் துறைமுகத்தில் நமக்கு வேலையில்லை," என்றான் இளையபல்லவன்.

"இந்தத் துறைமுகத்தில் தங்கப் போவதாகச் சொன் னீர்களே?"

"ஆம், சொன்னேன்."

"கலிங்கத்தின் படைபலத்தை உடைக்க..."

"இதை ஒரு தளமாக உபயோகிக்கத் திட்டமிட்டேன்."

"அந்தத் திட்டம்?"

"இப்பொழுது மாறிவிட்டது."

இளையபல்லவன் பதில் பெரும் விந்தையாயிருந்தது தேவனுக்கு. "ஏன் மாறிவிட்டது?" என்று அவன் கேட்ட கேள்வியிலும் வியப்பு மண்டிக் கிடந்தது.

இளையபல்லவன் கண்டியத்தேவனைச் சில விநாடிகள் கூர்ந்து நோக்கினான். "நிலைமைக்குத் தக்கபடி திட்டங்களை மாற்றுவது விவேகம் தேவரே," என்ற இளைய பல்லவன் முகத்தில் தீவிரமான உறுதியுடன் கவலையும் மண்டிக் கிடந்ததைக் கண்டியத்தேவன் கவனித்தான்.

ஆகவே கேட்டான் தேவன், "அப்படியென்ன நிலைமை இங்கு ஏற்பட்டிருக்கிறது?" என்று.

"மிகவும் அபாயமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது தேவரே! இன்னும் ஒரு மாத காலத்தில் நாம் மட்டும் முன் யோசனையுடன் நடந்து கொள்ளாவிட்டால் நீரும் நானும் நமது மாலுமிகளும்அழிக்கப்படுவோம். இந்த அக்ஷய முனையில் பெரும் உயிர்ச்சேதமும் வேறுவித நாசமும் ஏற்படும். நாம் இப்பொழுது எரிமலையின் உச்சியில் உட்கார்ந்திருக்கிறோம். அது உள்ளூரப் புகையத் துவங்கி யிருக்கிறது. வெடிக்க ஒரு மாத காலமிருக்கிறது. அது வெடிக்கும்போது." என்று பேசிக்கொண்டு போன இளைய பல்லவன் சற்றுப் பேச்சை நிறுத்திக் கண்டியத் தேவனைத் தன் கூரிய கண்களால் நோக்கினான்.

"அது வெடிக்கும்போது?" கண்டியத்தேவன் குரலில் கலக்கமிருந்தது, குழப்பமும் இருந்தது.

"அக்கினிப் பிழம்பு நம்மை அழிக்காதிருக்க ஏற்பாடு செய்ய வேண்டும்," என்றான் இளையபல்லவன்.

"எப்படி ஏற்பாடு செய்வது?" என்று கேட்டான் கண்டியத்தேவன்.

"அந்தப் பொறுப்பை எனக்கு விட்டுவிடுங்கள்; அக்கினிப்பிழம்பு நம்மை அழிக்காதது மட்டுமல்ல. நமது எதிரிகளை அழிக்கவும் அதைத் திருப்பிவிட வேண்டும்," என்றான் இளையபல்லவன்.

இந்த விளக்கத்தைக் கேட்கக் கேட்கக் கண்டியத் தேவன் முகத்தில் பெரும் சந்தேகச் சாயை படர்ந்தது. அந்தச் சாயையின் உட்கருத்தைப் புரிந்துகொண்ட இளைய பல்லவன் முகத்தில் புன்முறுவல் விரிந்தது. “மனத்தி லுள்ளதை விட்டுக் கேளுங்கள் தேவரே,” என்றான் இளைய பல்லவன், அந்தப் புன்முறுவலைத் தொடர்ந்து.

“மனத்தில் அப்படியெதுவும் இல்லை.” கண்டியத் தேவன் குரலில் தயக்கமிருந்தது.

“பயப்படாமல் சொல்லும்,” என்று ஊக்கினான் படைத்தலைவன்.

“மன்னிக்க வேண்டும். தங்கள் போக்கு சில நாட்க ளாகவே...” என்று மென்று விழுங்கினான் தேவன்.

“கண்ணியமானவர்கள் ஒப்புக்கொள்ளத் தக்கதா யில்லை” என்று முடித்தான் இளையபல்லவன்.

கண்டியத்தேவன் சில விநாடிகள் குழம்பினாலும் இறுதியில் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, “ஆம், படைத்தலைவரே! கண்ணியமானவர்கள் ஒப்புக் கொள்ளத் தக்கதாயில்லை. அது மட்டுமல்ல, நாமிருக்கும் நிலைமைக்கும் சாதகமல்ல அது. நீங்கள் மிதமிஞ்சிக் குடிக்கிறீர்கள்,” என்றான்.

இளையபல்லவன் முகத்தில் புன்முறுவல் மேலும் விரிந்தது. “யார் சொன்னது அப்படி?” என்று வினவினான் படைத்தலைவன், மெல்ல நகைத்து.

“யாரும் சொல்ல வேண்டியதில்லை,” என்றான் கண்டியத்தேவன்.

“நீங்களே கண்டிருக்கிறீர்கள்...” என்று கூறிய இளைய பல்லவன் பதிலில் ஏளனமிருந்தது.

அந்த ஏளனத்தைக் கண்டியத்தேவன் கவனித்தானா னாலும் அதை லட்சியம் செய்யாமலே சொன்னான். “ஆம்

நானே கவனித்தேன். நான் மட்டுமல்ல எல்லோரும் கண்டிருக்கிறார்கள்," என்று.

"கண்ணால் காண்பதும் பொய்; காதால் கேட்பதும் பொய்; தீர விசாரிப்பதே மெய்," என்று பழமொழி யொன்றைச் சொன்னான் இளையபல்லவன் சிரித்துக் கொண்டே.

"இதில் தீர விசாரிக்க வேண்டிய அவசியமில்லை," என்றான் கண்டியத்தேவன் சினத்துடன்.

"ஆராய்ச்சிக்கு அவசியமிருக்கலாம்," என்றான் இளையபல்லவன்.

"எந்த ஆராய்ச்சிக்கு?"

"நாம் காண்பது சரிதானா என்ற ஆராய்ச்சிக்கு."

"அந்த ஆராய்ச்சியும் அவசியமில்லை. நீங்கள் குடியில் மயங்கியிருந்ததை நேற்றிரவு நானே கண்டேன்," என்றான் கண்டியத்தேவன் உறுதியுடன்.

இளையபல்லவனின் இதழ்களில் இளநகை பூத்தது. "அதிகமாகக் குடித்திருந்தேனா?" என்று கேட்டான் அவன்.

"ஆம்."

"உளறினேனோ?"

"ஆம்."

"என்ன உளறினேன்?"

"நமது சீன மரக்கலத்தைப் பாரதத்தின் மரக்கல மாக்கச் சொன்னீர்கள்..."

"வேறு என்ன சொன்னேன்?"

"அதிலும் ஸர்ப்பமந்திரம் வேண்டாம் – மத்திய மந்திரம் வேண்டாம் – அக்ரமந்திரமாக்கிவிடு என்றீர்கள்."

"வேறு என்ன சொன்னேன்?"

“அக்ரமந்திரந்தான் வேகமாகப் போகும். அக்ர மந்திரந்தான் நன்றாகப் போரிடும். அப்படி மாற்றிவிடு என்றீர்கள்.”

“இப்படியா உளறினேன்?” என்று ஆச்சரியத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

“ஆம்,” என்று பதில் கூறினான் தேவன்.

“அப்படியானால் தேவரே, இந்த அக்ஷயமுனையின் மதுவை நான் பாராட்டுகிறேன்.” என்றான் இளைய பல்லவன்.

“இதில் பாராட்ட என்ன இருக்கிறது?” எரிச்சலுடன் எழுந்தது கண்டியத்தேவன் கேள்வி.

இளையபல்லவன் நகைத்துவிட்டுச் சொன்னான்: “என்ன அப்படிக் கேட்கிறீர்கள் தேவரே! என் உளறலில் எத்தனை கோர்வையிருக்கிறது பார்த்தீர்களா? மரக் கலத்தை அக்ரமந்திரமாக்கக் காரணத்துடன் கூறியிருக் கிறேன். இந்த மதுவை அருந்த முற்பட்டது முதல் என் மூளை எத்தனை துரிதமாக வேலை செய்கிறது! மது அருந்தியபின் கோட்டைப் பாதுகாப்பு எத்தனை பலப் படுத்தப்பட்டிருக்கிறது! மதுவை அருந்த முற்பட்டபின் தெரியாத .எத்தனை விஷயங்கள் அறிவில் பளிச்சிடு கின்றன! ஆகா! எத்தனை சிறந்த மது இது! இதை ஏன் நாம் அருந்தக்கூடாது? சித்தத்தைத் துலக்கும் மது இது. மர்மங்களை உடைக்கும் மது இது. நமக்கு விழிப்பூட்டுவதும் இந்த மதுதான். வாழ்க அக்ஷயமுனை. வாழ்க அதன் மது. அதை நீங்களும் அருந்துங்கள் தேவரே. உமது மூளையும் துலக்கப்படும். விஷயங்கள் பளிச்சென்று புரியும் உமக்கு...”

இப்படிப் பேசிக்கொண்டே போன படைத்தலை வனை, “போதும், போதும். நிறுத்துங்கள் மது புராணத்தை,” என்றான் தேவன், குரலில் கசப்பு மண்டிக் கிடக்க.

இளையபல்லவன், கண்டியத்தேவனின் கண்டனத்தை லட்சிம் செய்யாமலே மேலே தொடர்ந்தான்: “தேவரே! அக்ஷயமுனையின் மதுவை மட்டும் நான் அருந்தாதிருந்தால் பல விஷயங்கள் என் மூளைக்கு எட்டியிருக்காது. பல மர்மங்கள் துலங்கியிருக்காது. மர்மத்தின் அஸ்திவாரங்களையும் நான் அறிந்திருக்க முடியாது. அதை அருந்தத் துவங்கினேன், அதனால் உண்டான பலன் சொல்ல முடியாது. போகப் போக உமக்கே தெரியும் பலன் என்ன என்பது. உதாரணமாக, நமது மஞ்சளழகி மகாராணியென்பதை உமக்கு யார் சொன்னது? நான்தானே? நான் சொல்லாவிட்டால் உமக்கு அது தெரிந்திருக்குமா? தவிர... இந்த இடத்தில் பேச்சைச் சற்று நிறுத்தினான் இளையபல்லவன்.

கண்டியத்தேவன் இதயத்தில் பெரும் சந்தேகம் எழுந்தது. ஒருவேளை இப்பொழுதும் குடித்துவிட்டே இளையபல்லவன் வந்திருக்கிறானோ என்ற நினைப்பு ஏற்படவே அவனை நன்றாக உற்று நோக்கினான் தேவன். ஆனால் இளையபல்லவனிடம் மதுவாடை ஏதும் அடிக்காதிருந்ததைப் பார்த்துச் சிறிது தேற்றிக் கொண்டானென்றாலும் முதல்நாள் அருந்திய மதுவின் சேஷ்டை காலையிலும் தொடர்கிறதோ என்ற சந்தேகம் ஏற்படவே, “இளையபல்லவரே, இப்பொழுது உமது பேச்சில் தொடர்ச்சி இல்லை,” என்றான்.

“நேற்றிரவு?”

“தொடர்ச்சி இருந்தது.”

“இப்பொழுது புரிகிறதா? மது அருந்தியபோது தொடர்ச்சி இருந்தது. மது அருந்தாத போது தொடர்ச்சி இல்லை...”

“ஒரு வேளை அந்த மதுவின் சேஷ்டை...”

"காலையில் இருக்குமென்று நினைக்கிறீரா?"

"நினைத்தால் தவறா?"

"தவறுதான்."

"ஏன்?"

"மதுவின் சேஷ்டையிருந்தால் பேச்சில் தொடர்ச்சி இருக்க வேண்டுமே?"

"இதற்கு என்ன பதில் சொல்வதென்று கண்டியத் தேவனுக்குப் புரியாததால், "மஞ்சளழகி மகாராணியென்று உங்களுக்கு யார் சொன்னது?" என்று குறுக்குக் கேள்வியை வீசினான்.

"ஒருவர் சொல்ல வேண்டுமா? அவளைப் பார்த் தாலே தெரியவில்லையா?"

"இது பார்த்துத் தெரிகிற விஷயமல்லவே."

"வேறு எப்படித் தெரிய வேண்டும்?"

"முடிசூட வேண்டும், நாடு வேண்டும்."

இதைக் கேட்டதும் ஏதோ சொல்லத் துவங்கிய இளையபல்லவன் சட்டென்று சொற்களை அடக்கிக் கொண்டு பேச்சை வேறு திக்கில் திருப்பினான். "இந்த வீண் தர்க்கம் எதற்கு தேவரே? அவள் மகாராணியாயிருந்தா லென்ன இல்லாவிட்டால் என்ன? என் இதயராணி அவள். அவைளப் போன்ற ஒரு பெண் இந்த மண்டலத்தில் இது வரை பிறந்ததில்லை. இனி பிறக்கப் போவதுமில்லை. அபூர்வப் பெண் அவள். அபூர்வமான வாழ்க்கையைப் படைத்தவள். இந்த உலகமே அவளை மறக்கலாம். ஆனால் என் உயிர் உள்ள மட்டும் அவளை நான் மறக்க மாட்டேன். எத்தனை எட்டாக் கனி அவள்..." என்று சொல்லிய இளையபல்லவன் பெருமூச்செறிந்தான்.

"எட்டாக்கனியா!" வியப்புடன் வினவினான் தேவன்.

“ஆம் தேவரே!”

“உமது கைக்குக் கிட்டித்தானே இருக்கிறது.”

“கையின் அருகிலிருக்கும் பல பொருள்களை நாம் தொட முடிகிறதா?”

“ஏன் முடியாமலென்ன? உங்களுக்கு மஞ்சளழகியை மணமுடிக்கத் தயாராய் இருக்கிறாரே பலவர்மர்?”

இளையபல்லவன் முகத்தில் வேதனைப் புன்முறுவல் படர்ந்தது. “அவளை எனக்கு மணமுடிக்கப் பலவர்மனாலும் முடியாது. இந்த நாட்டுச் சக்கரவர்த்தியாலும் முடியாது. பாவம் மஞ்சளழகி! எத்தனை சிக்கலான பிறவி! எத்தனை சிக்கலான வாழ்க்கை! துன்பப்படவே பெண்ணாகப் பிறந்தாள் அவள். ஆனால் துன்பத்தை ஓரளவு நான் துடைக்க முடியும். அதற்காகவே துடிக்கிறேன். அதற்காகவே இந்த மரக்கலத்தை மாற்றுகிறேன். ஆகவே சீக்கிரம் மாற்றியமையுங்கள் தேவரே!” என்றான் இளையபல்லவன், வேதனை குரலிலும் ஒலிக்க.

இளையபல்லவன் பேச்சு பெரு மர்மமாயிருந்தது கண்டியத்தேவனுக்கு. மஞ்சளழகியின் வாழ்வுக்கும் மரக்கலத்தை மாற்றியமைப்பதற்கும் என்ன சம்பந்தம் என்பது அவனுக்குச் சற்றும் புரியவில்லை. இளையபல்லவன் மேலும் பேசிய பேச்சு அவன் புத்தியில் உதித்த மர்மத்தை அதிகப்படுத்தியதேயொழிய குறைவுபடுத்தவில்லை.

“தேவரே! இந்த மரக்கலத்தை அக்ரமந்திரமாக்கும் பொழுது முகப்பை எப்படியமைப்பீர்? பக்கப்பகுதிகளை எப்படி அமைப்பீர்?” என்று வினவினான் படைத்தலைவன்.

“சிங்க முகம், பாம்பு முகம், யானை முகம், புலி முகம், எருமை முகம், பறவை முகம், இப்படி ஏதாவதொன்று

அமைக்கத்தான் கப்பல் சாத்திரம் இடம் தருகிறது" என்றான் கண்டியத்தேவன்.

"எந்த முகத்தை நமது மரக்கல முகப்பாக அமைக்க உத்தேசிக்கிறீர்?"

"புலி முகத்தை."

"ஏன்?"

"நமது சோழநாட்டுக் கொடி புலிக் கொடியல்லவா?"

"ஆம். இருப்பினும் நாம் சோழ நாட்டில் இப்பொழு தில்லை. புலி முகம் வேண்டாம். பறவை முகத்தை அமையுங்கள்."

கண்டியத்தேவன் பெரிதும் ஆச்சரியப்பட்டான். நாட்டுப் பற்றும், நாட்டுக் கொடிப் பற்றும் மிக அதிகமாக உடைய இளையபல்லவன், தன் நாட்டுக் கொடியின் அடையாளம் தேவையில்லையெனச் சொன்னது பெரும் வியப்பாயிருந்தபடியால் அவன் கேட்டான். "எந்தப் பறவையின் முகத்தை அமைக்கட்டும்" என்று.

"புறாவின் முகம்," தடையின்றி வந்தது இளைய பல்லவன் பதில்.

"புறா முகமா?"

"ஆம். புறாவின் முகம் முகப்பாக இருக்கட்டும். பக்கப் பகுதியை புறாவின் சிறகுகளைப் போல் அமையுங்கள். இந்த மரக்கலம் இனி கடலில் பறந்து செல்லும் பெரும் புறா. இந்தக் கடல்புறா சோழநாட்டு வரலாற்றைக் கடற் பகுதியில் விரிவுபடுத்தும். இதன் புகழைத் தமிழகக் கவிகள் பாடுவார்கள். கடல்புறா இன்றியமையாத கடற் போர்க் கலமாக கடற் காவியமாக மாறும்," என்று கூறிய இளைய பல்லவன், "இப்படி வாரும் தேவரே," என்றழைத்து, தேவன் காதுக்கருகில் சில வார்த்தைகளை மிக ரகசியமாகச் சொன்னான்.

ரகசியத்தைக் கேட்ட கண்டியத்தேவன் மலைத்து நின்றான். அந்த மலைப்புடன் மலைப்பாக அவன் ஏதோ சொல்லவும் துவங்கினான். 'உம், பேச வேண்டாம்,' என்பதற்கறிகுறியாக வாயில் விரலை வைத்து எச்சரித்த இளையபல்லவன், "மஞ்சளழகி எட்டாக் கனி! கடல்புறா கிட்டாக் கனி! புரிகிறதா!" என்று கூறிப் பெரிதாக நகைத்தான். பிறகு விடுவிடுவென கோட்டையை நோக்கி நடக்கத் துவங்கினான்.

கண்டியத் தேவன் மலைத்துப் போய் படைத்தலைன் போவதைப் பார்த்துக்கொண்டு நின்ற இடத்திலேயே நின்றான். அவன் மலைப்பே பெரிது. அதைவிடப் பெரிய மலைப்பு மாளிகையில் காத்திருந்தது கூலவாணிகன் சேந்தனுக்கு. இளையபல்லவன் இட்ட ஒரே உத்தரவைக் கேட்டதும் அடியோடு நிலைகுலைந்து தடுமாறிப் போனான் கூலவாணிகன். "ஐயையோ! என்னால் முடியாது. பெரும் ஆபத்து. என் தலை போய் விடும்" என்று உளறினான் பெரும் கிலி குரலில் ஒலிக்க.



அத்தியாயம் 38

# முள்ளை முள்ளால் எடுக்கலாம்

கடற்போரில் மரக்கலத்தோடு மரக்கலம் மோதும் போது, எதிரி மரக்கலத்தின் பலகைகளைப் பிளந்து சுக்கு நூறாக அடிக்கவல்ல பெரிய இரும்பு ஆணிகளை அடித் தளத்தில் உடைய அகூதாவின் சீனத்துக் கப்பலைப் பாரதத்தின் கப்பலாக மாற்றவும், அதன் எடையைக் குறைத்து அதற்குப் புறா முக முகப்பும், பறவைச் சிறகுகளும் அமைத்துக் கடல் புறாவாக அதை நீர்ப்பரப்பில் பறந்து செல்லும்படி ஏற்பாடு செய்யவும் உத்தரவிட்டு, "இந்தக் கடல்புறா தமிழகத்தின் கடற் காவியத்துக்குப் பெரும் பொன்னேடு சேர்க்கும்" எனவும் கூறிவிட்டுச் சென்றதை எண்ணிப் பார்த்துப் பெரும் வியப்பைக் கண்டியத்தேவன் கடற்கரையில் அடைந்தானென்றால், இளையபல்லவன் இட்ட உத்தரவைக் கேட்டதும் விவரிக்க இயலாத பெரும் மலைப்பையும் திகிலையும் கூலவாணிகன் சேந்தன் கோட்டை மாளிகையில் அடைந்தான், அன்றைய காலையில். கடல்புறாவின் சிருஷ்டிக்கு உத்தரவை இட்டு விட்டு விடுவிடு என்று நடந்து கோட்டை மாளிகைக்கு நேராக வந்து சேர்ந்த சோழர் படைத்தலைவன், மேல் தளத்திலிருந்த தன் இரு வாசல் அறைக்குச் சென்றதும் சில நிமிஷங்கள் தீவிர யோசனையில் இறங்கி அறையில் அங்குமிங்கும் உலாவினான். ஒரு முறை கடற்கரையை நோக்கியிருந்த வாயில் பக்கம் சென்று கடற்புறத்தை நோக்கிவிட்டு மீண்டும் அதன் எதிர்ப்புற வாயிலின் படியில் நின்று பகிட்பாரிஸான் மலைப்பகுதியையும் தன் கண்

களால் ஆராய்ந்தான். பிறகு வடபுறச் சாளரத்தின் வழியாக நகரத்தின் பெரும் கட்டடங்களையும், வீதிகளில் உலாவிக் கொண்டு பணிபுரிந்து கொண்டுமிருந்த மக்களையும் பார்த்துத் திருப்தியுடன் தலையை இருமுறை அசைத்தும் கொண்டான். அடுத்தபடி அந்தத் திருப்தி முகத்தில் பூர்ணமாகப் பிரதிபலிக்க அறை நடுவிலிருந்த பஞ்சணை யில் அமர்ந்து எதிர்ப்பக்கத்தில் இருந்த மதுக்குப்பியையும் வெள்ளிக் கிண்ணமொன்றையும் கையில் எடுத்துக் கொண்டு காவலனொருவனை அழைத்துக் கூலவாணிகன் சேந்தனை உடனடியாகக் கூப்பிட்டு வருமாறு உத்தர விட்டான். அந்த உத்தரவின் விளைவாக அறைக்கு வந்த கூலவாணிகன் அங்கு தனக்குக் கிடைத்த பணியைக் கேட்டதும் பெரும் கிலிக்கு உள்ளாகி, "ஐயையோ! என்னால் முடியாது. பெரும் ஆபத்து. என் தலை போய் விடும்," என்று கதறினானென்றால் அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது.

காவலன் அழைப்புக்குப் பணிந்து மாடியறையில் நுழைந்தபோது இளையபல்லவன் இரு கைகளிலுமிருந்த மதுக் குப்பியையும் வெள்ளிக் கிண்ணத்தையும் முகத்தில் பிரதிபலித்த லேசான வெறிக் குறியையும் கண்டதுமே தனது முகத்தைக் கசப்பாக்கிக் கொண்ட கூலவாணிகன், படைத்தலைவன் பேச ஆரம்பித்ததும் பெரும் பிரமிப்பின் வசப்பட்டான். கூலவாணிகன் உள்ளே வந்ததுமே, "சேந்தா! அதோ அந்தக் கிண்ணத்தை எடுத்துக்கொள். உனக்கும் சிறிது மது தருகிறேன்," என்று படைத்தலைவன் செய்த குடி மரியாதையை வேண்டாமென்று கை யாட்டத்தினாலேயே உணர்த்திய கூலவாணிகன் சேந்தன், "எதற்கு அழைத்தீர்கள் படைத்தலைவரே!" என்று ஆரம்பத்திலேயே நேரிடையாகக் கேள்வி வீசினான்.

"என்ன அவசரம் சேந்தா? உட்கார்," என்று எதிரேயிருந்த மஞ்சத்தைக் காட்டிய இளையபல்லவன், அப்படித் தான் சொன்னபிறகும் சேந்தன் நின்றுகொண்டேயிருந்ததைக் கவனித்ததும் மதுக்குப்பி, கிண்ணம் இரண்டும் இரு கைகளிலும் துலங்க எழுந்திருந்து, இரண்டு கைகளாலும் சேந்தனைத் தள்ளிக்கொண்டு போய், தோளைப் பிடித்து அழுத்தி எதிரேயிருந்த மஞ்சத்தில் உட்கார வைத்தான். அந்த உபசரணையால் பெரும் அவஸ்தை அடைந்த சேந்தன், இளையபல்லவன் தனது தோளைப் பிடித்து அழுத்தியபோது மதுக்குப்பியிலிருந்து உடைமேல் அருவியாக ஓடிய சிவந்த மதுவை மிகுந்த வெறுப்புடன் ஒரு கையால் துடைத்துக்கொண்டான்.

"துடைக்காதே சேந்தா! மது சிவந்தது. ரத்தம் போன்றது!" என்று நகைத்தான் இளையபல்லவன்.

"ஏன் துடைக்கக் கூடாது?" என்று சற்று வெறுப்புடன் சீறவும் செய்தான் சேந்தன்.

"இப்போது மது ஓடுகிறது, துடைக்கிறாய். இதே சிவப்புடன் ரத்தம் ஓடினால் என்ன செய்வாய்?" என்று மறுபடியும் நகைத்தான் இளையபல்லவன்.

"ஏன் ரத்தம் ஓட வேண்டும்?" சேந்தன் குரலில் திகைப்பிருந்தது.

"கத்தியால் உன்னைக் குத்தினால் ரத்தம் வராதா?"

"வரும். ஆனால் யார் குத்தப் போகிறார்கள்?"

"யாரும் குத்தலாம். பூர்வகுடிகள் குத்தலாம் பலவர்மன் குத்தலாம்."

"பலவர்மன் எதற்குக் குத்துவான்?"

"அவனுக்கு இஷ்டமில்லாத பணியைச் செய்வதற்காக!"

"பொக்கிஷத்தைக் கையாள்கிறேனே அதற்காகவா?"

"அதற்கு மட்டுமல்ல. அவன் பொக்கிஷத்தையும் நமது பொக்கிஷத்தையும் ஒன்று சேர்த்துவிட்டாய்."

"ஐயோ! அப்படிச் செய்ய நீங்கள்தானே உத்தர விட்டீர்கள்?"

"தவிர இரண்டையும் உண்மையாக நீ கலக்கவில்லை: கலப்பது போல் பாசாங்கு செய்தாய்..."

"அது உங்கள் உத்தரவுதானே?"

"செலவுக்கு நமது பொக்கிஷப் பணத்தை எடுக்காமல் அவன் பொருளாகப் பார்த்து விரயம் செய்கிறாய்..."

"என்ன அநியாயம்! இதுவும் நீங்கள் இட்ட உத்தரவு தானே!"

"இப்படியே போனால் பலவர்மன் ஓட்டாண்டியாகி விடுவான்..."

"ஐயையோ! ஆக்கச் சொன்னது நீங்கள்தானே? எல்லாப் பழியையும் என்மேல் போடுகிறீர்களே!"

இந்தச் சம்பாஷணை ஒரு பக்கம் உக்கிரமாகவும் குற்றச்சாட்டாகவும் இன்னொரு பக்கம் கெஞ்சலாகவும் பயத்துடனும் நடந்தது. இடையிடையே இளையபல்லவன் குடித்தான். நகைத்தான். குற்றம் சாட்டினான். கூலவாணி கனோ கெஞ்சினான். அஞ்சினான். அந்தக் கெஞ்சலையும், அவன் அச்சத்தையும் சிறிதும் லட்சியம் செய்யாத இளைய பல்லவன் குற்றச்சாட்டுகளை அடுக்கிவிட்டு, கூலவாணி கனின் பரிதாப நிலையைப் பார்த்தும் மனமிளகாதவனாய், "சேந்தா! அறையின் கதவுகளைத் தாழிடு," என்று கடைசி யாக உத்தரவொன்றையும் பிறப்பித்தான். உத்தரவு பிறப்பிக்கப்பட்ட தோரணை மறுப்புக்கு இடங்கொடாத தாயிருக்கவே வேறு வழியின்றிக் தவுகளைத் தாழிட்ட சேந்தன், அடுத்துக் கிடைத்த உத்தரவைக் கேட்டுச் சிறிது கலங்கவும் செய்தான்.

எதிரேயிருந்த மஞ்சத்தில் உட்காரப் போனவனைக் கையைக் காட்டித் தடுத்த படைத் தலைவன், "இப்படி வா! உட்கார் என் பக்கத்தில், மஞ்சத்தை விடப் பஞ்சணை சிறந்தது," என்றான்.

குடிபோதை படைத்தலைவனுக்கு நன்றாக ஏறி விட்டதைப் புரிந்துகொண்ட சேந்தன் சிறிது தயங்கினான். தயக்கத்தைக் கண்ட இளையபல்லவன், "வா இப்படி! மஞ்சளழகிகூட இல்லை; அவளுக்குப் பதில் நீ உட்கார்," என்று இரைந்து கூறி, கட்டடம் அதிரும்படியாக நகைக்கத் துவங்கினான். அந்த நகைப்பைக் கேட்டுக் கதிகலங்கிய கூலவாணிகன் சேந்தன் வேறு வழியின்றிப் பஞ்சணையின் முகப்பில் மெள்ள உட்கார்ந்து அச்சம் மிகுந்த பார்வை யொன்றை இளையபல்லவன் மீது வீசினான்.

அப்படி அவன் உட்கார்ந்தபிறகு இளையபல்லவ னின் அட்டகாசம் சிறிது அடங்கியது. நீண்ட நேரம் பேசாமல் உட்கார்ந்திருந்த இளையபல்லவன் அனாவசிய மாக மீண்டும் ஒருமுறை நகைத்தான். பிறகு ரகசியமாகத் தானே ஏதோ வார்த்தைகளைப் பேசிக் கொண்டான். பிறகு அறைக் கதவைத் திறந்துகொண்டு சென்று அங்கிருந்த காவலரை விரட்டி அவர்களில் ஒருவனை மாடிப்படியில் உருட்டியும் விட்டான். பிறகு மீண்டும் அறைக்குள் வந்து கதவைத் தாழிட்டுவிட்டுப் பஞ்சணையில் அமர்ந்தான்.

இளையபல்லவன் சேஷ்டைகள் எதுவுமே புதிதா யில்லை கூலவாணிகன் சேந்தனுக்கு. இத்தகைய ஆர்ப்பாட் டமும் கூத்தும் மாளிகை மாடியில் தினசரி நிகழ்ச்சிகளாகி விட்டதை அவன் உணர்ந்தேயிருந்தான். ஆகவே அது எதுவுமே சேந்தனுக்கு வியப்புமில்லையென்றாலும், கதவு தாழிட்டதும் தொடர்ந்த இளையபல்லவன் பேச்சு பெரும் பிரமிப்பை அளிக்கவே செய்தது அவனுக்கு. தலையைக் குனிந்துகொண்டு பஞ்சணையில் உட்கார்ந்திருந்த

சேந்தனை, "சேந்தா!" என்ற இன்சொல் திடீரெனத் தலை நிமிர வைத்தது. அந்தச் சொல்லை விடுத்த இளைய பல்லவன் குரலில் தொனித்த ஒலியும் பெருவியப்பை விளைவித்தது சேந்தனுக்கு. சற்று முன் இருந்த வெறி ஒலி இல்லை அந்தக் குரலில். அன்பு ஒலிதானிருந்தது. ஓரளவு நிதானங்கூட இருந்தது. அதனால் நிமிர்ந்து இளைய பல்லவனை நோக்கிய கூலவாணிகனின் கண்களில் வியப்பும் பிரமிப்பும் கலந்து படர்ந்தன.

இளையபல்லவன் கண்கள் குடியால் சிவந்து கிடந் தாலும் முகத்தில் சாந்தம் நிலவிக் கிடந்தது. பேச்சிலும் அந்த சாந்தம் பரவியிருந்தது. "சேந்தா!" என்று மறுபடியும் அழைத்தான் இளையபல்லவன்.

"ஏன் படைத்தலைவரே?" என்று கேட்டான் சேந்தன்.

"உன்னை மிகவும் சோதனை செய்துவிட்டேன்," என்றான் இளையபல்லவன் நிதானத்துடன்.

"ஆம், ஆம்." ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காகச் சொன்னான் சேந்தன்.

"என் உத்தரவுகளை..." என்று இழுத்தான் இளைய பல்லவன்.

"சொன்னபடி நிறைவேற்றி விட்டேன்," என்றான் கூலவாணிகன்.

"இல்லை நிறைவேற்றவில்லை," என்ற இளைய பல்லவன் குரலில் நிதானமிருந்தாலும், குற்றச்சாட்டும் இருந்தது.

"எதை நிறைவேற்றவில்லை?" என்று கோபத்துடன் கேட்டான் சேந்தன்.

"பலவர்மன் பொக்கிஷப் பெட்டிகளையெல்லாம் திறந்துவிட்டாயா?"

"ஆகா! திறந்துவிட்டேன்."

"இல்லை! இன்னும் பாக்கியிருக்கிறது."

"கிடையாது. பொக்கிஷ அறையில் பலவர்மன் பெட்டிகள் பத்து இருந்தன. அவை அனைத்தையும் திறந்து விட்டேன். அவற்றில் ஆறு பெட்டிகளையும் இந்த மாத முடிவுக்குள் தீர்த்துக் கட்டிவிடுவேன். அப்புறம் பலவர்மன் பிச்சை எடுக்க வேண்டியதுதான்."

இளையபல்லவன் கூலவாணிகன் பேச்சைத் திருப்தியுடன் கேட்டாலும் முடிவில் மெல்லச் சொன்னான். "இல்லை சேந்தா! பலவர்மன் உன்னை ஏமாற்றிவிட்டான்" என்று.

கூலவாணிகன் முகத்தில் ஆச்சரியம் மூண்டது. "இல்லை! ஏமாற்றவில்லை. பெட்டிகள் அனைத்தும் என்னிடமிருக்கின்றன," என்றான் அவன்.

"இல்லை, உன்னிடமில்லை," திட்டமாக வந்தது படைத்தலைவன் பதில்.

"பத்துப் பெட்டிகளின் சாவிகளும் இதோ இருக்கின்றன," என்று மடியிலிருந்த சாவிக் கொத்தைத் தட்டிக் காட்டினான் சேந்தன்.

"பெட்டிகள் பதினொன்று," என்று கூறி இளைய பல்லவன் கூர்ந்து நோக்கினான் கூலவாணிகனை.

"பதினொன்றா!"

"ஆம்."

"பதினொறாவது பெட்டி எங்கிருக்கிறது?"

"பலவர்மனின் அந்தரங்க அறையில் இருக்கிறது."

"அந்த அறையில் எங்கே?"

"தரையில் புதைக்கப்பட்டிருக்கிறது அந்த இரும்புப் பேழை. இந்தப் பத்து பெட்டிகளில் இருக்கும் செல்வத்தை விட அதில் அதிகச் செல்வமிருக்கிறது."

"அதன் சாவி?"

"பலவர்மன் கழுத்திலுள்ள தங்கச் சங்கிலியில் இருக்கிறது."

"அத்தனை பத்திரமாக வைத்திருக்கிறானா?"

"ஆமாம்."

"அதை..." என்று கூறிய கூலவாணிகன், இளைய பல்லவனை அச்சத்துடன் நோக்கினான்.

'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் இளையபல்லவன். அந்தத் தலையசைப்பைக் கண்ட சேந்தன் முகத்தில் ஈயாடவில்லை. "அதை...அதை...எடுக்க என்னால் முடியாது...படைத்தலைவரே!" என்று பயத்தால் குரல் நடுங்கக் கூறினான் சேந்தன்.

"எடுக்க வேண்டாம் சேந்தா! வேறு வழியிருக்கிறது." என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"என்ன வழி?" என்று வினவினான் சேந்தன், அச்சம் சிறிதும் அகலாமலே.

"உன்னிடம் மெழுகு இருக்கிறதல்லவா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"எந்த மெழுகு?"

"நம் நாட்டில் பிரதிமைகள் செய்ய அமைப்பு எடுக்கும் மெழுகு."

"இருக்கிறது."

"அதை எதற்கு உபயோகப்படுத்துகிறாய்?"

"பூட்டின் வாயமைப்பு எடுத்து..." என்று ஏதோ சொல்லப்போன கூலவாணிகன் முகத்தில் பெரும் கிலி படர்ந்தது. திடீரெனத் திகைத்த அவன், "பலவர்மன் கழுத்துச் சாவியில் மெழுகை அமர்த்தி..." என்று ஆரம்பித்து மேலே சொல்ல முடியாமல் திகைத்தான்.

"கழுத்துச் சாவியில் மெழுகை ஒட்டி அமைப்பு எடுத்துக்கொள். அதை வார்ப்படக்காரனிடம் கொடுத்து, சாவி ஒன்று செய்," என்றான் படைத்தலைவன்.

"இத்தனைக்கும் கழுத்தைக் காட்டிக் கொண்டிருப் பானா பலவர்மன்?" என்று வினவினான் சேந்தன்.

"உம் காட்டிக் கொண்டிருப்பான். இன்றிரவே அந்தப் பணியைச் செய்!"

கூலவாணிகன் முகத்தில் பெரும் திகில் படர்ந்தது. "முடியாது. என்னால் முடியாது. பெரும் ஆபத்து. என் தலை போய்விடும்" என்று கதறினான்.

இளையபல்லவன் மிகுந்த நிதானத்துடன் கூல வாணிகனைச் சில விநாடிகள் நோக்கினான். பிறகு அவன் காதுக்கருகில் குனிந்து, "சேந்தா! இன்றிரவு பலவர்மன் அந்தரங்க அறைக்குள் செல். உனக்கு எந்தவித எதிர்ப்பும் இருக்காது. மெழுகைச் சாவியில் ஒத்தி எடுத்துக்கொள். அவசரப்படாதே; நிதானமாகச் செய். மெழுகின் அமைப்பு சிறிது தப்பினாலும் அந்தப் பெட்டியைத் திறக்க முடியாது. அந்தப் பெட்டியில் பெரும் செல்வம் இருக்கிறது. அந்தச் செல்வம் எனக்கு வேண்டும்," என்றான்.

கூலவாணிகன் கைகால்கள் நடுங்கின. "பலவர்மன் கொடியவன், வஞ்சகன்," என்று கலக்கத்துடனும் நடுக்கத் துடனும் சொற்களை உதிர்த்தான், சேந்தன்.

"வஞ்சகத்தை வஞ்சகத்தால் வெல்ல வேண்டும். முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும்," என்ற இளைய பல்லவன் குரல் திடமாக இருந்தது. "இன்று இரவு நள்ளிரவில் அந்த அறையில் நுழைந்துவிடு, புரிகிறதா," என்ற படைத்தலைவன் உத்தரவும் கெடுபிடியுடனிருந்தது.

அந்த உத்தரவைப் பெற்ற சேந்தன் பெரும் கலக்கத் துடனும், வேதனையுடனும் தன் இருப்பிடம் சென்றான்.

அன்றைய பொழுது வழக்கத்துக்கு விரோதமாக வேகு வேகத்துடன் ஓடியது. நள்ளிரவில் மெள்ள மெள்ள நடந்தான் கூலவாணிகன் பலவர்மன் அறையை நோக்கி.

வழியிலோ அறைவாயிலிலோ காவலர் இல்லை. ஏன் இல்லையென்பதற்கு மாடியில் கேட்ட இளையபல்லவன் குடி வெறிக் கூச்சலும் காவலர் கொம்மாளமும் விளக்கம் காட்டின. காவலர் இல்லை என்ற தைரியத்தால் மெள்ள உள்ளே நுழைந்த சேந்தன் அறையில் இருந்த கோரக் காட்சியைக் கண்டு அடியோடு நிலைகுலைந்து போனான். பலவர்மன் ஒரு மஞ்சத்தின் மீது குப்புற விழுந்து கிடந்தான். அவன் முதுகு பூராவும் செங்குருதி ஓடியிருந்தது. அந்தக் குருதி அறையின் மங்கலான விளக்கொளியில் மிகப் பயங்கரமாகத் தெரிந்தது. சுவரிலிருந்த படங்கள் வேறு அந்த பயங்கரத்தை அதிகப்படுத்தின. அந்தக் காட்சியின் பயங்கரத்தால் கை, கால் வெலவெலக்க, மார்பு துடி துடிக்க, உடல் வியர்க்க, திரும்பி ஓடிவிட எத்தனித்தான் கூலவாணிகன். அறை மூலையிலிருந்து கிளம்பிய "நில்" என்ற சொல் கூலவாணிகன் கிலியை உச்சநிலைக்குக் கொண்டு சென்றது. கால்கள் நடுங்க, உணர்ச்சிகள் சிதறியோட, சொல்லவொண்ணாப் பயம்பிடித்து வாட்ட, நின்ற இடத்திலேயே நின்ற கூலவாணிகன் அந்தச் சொல் வந்த திசையில் கண்களை ஓடவிட்டான். அறையின் இருண்ட மூலையிருந்து அவனை நோக்கி ஓர் உருவம் அசைந்து அசைந்து மெள்ள மெள்ள நடந்து வந்தது.

அத்தியாயம் 39

# இரகசியத்தின் திறவுகோல்

குணதிசைச் சாளரத்தின் மூலம் சுள்ளென்று கன்னத்திலடித்த கதிரவன் கிரணங்களால் எழுதப்பட்டுக் கண் விழித்துக்கொண்ட கூலவாணிகன் சேந்தன் தனது பஞ்சணையில் இருமுறை புரண்டு படுத்துத் தன் கண்களையும் நன்றாகக் கலக்கிவிட்டுக் கொண்டான். பிறகு கூரையிலிருந்த சித்திரங்களை ஆராய்ந்து சில விநாடிகள் மிரண்டு விழித்தான். மறுபடியும் கண்களைப் பலமாகத் தேய்த்துக் கலக்கி விட்டுக்கொண்டு எதிரே சற்றுத் தூரத்திலிருந்த மரத்தின் மீது கிடந்த பெரும் மெழுகு உருண்டையையும் பார்த்துத் திடீரெனப் பஞ்சணையில் துள்ளி உட்கார்ந்தான். மெழுகு உருண்டை இருந்த மஞ்சத்தில் மெழுகுக்கு அருகே ஒரு மதுக்குப்பியும் கிண்ணமும் இருப்பதையும் கவனித்துப் பெரிதும் குழம்பினான். "இரவு நான் படுக்க முயலும் போது இளைய பல்லவர் இந்த மதுக்குப்பியையும், கிண்ணத்தையும் அனுப்பியது உண்மைதான். இருந்தாலும் நான் குடிக்க வில்லை. எப்படி குடிக்க முடியும்! எனக்கும்தான் பயங்கரப் பணியை இட்டிருந்தாரே படைத்தலைவர்!" என்று பஞ்சணையில் உட்கார்ந்தபடி தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அந்த மதுக்குப்பியும், கிண்ணமும் வந்தது அவனுக்கு நன்றாக நினைவிருந்தது. பேழையிலிருந்த மெழுகை எடுத்து மதுக்குப்பியிருந்த மஞ்சத்தில் வைத்ததும் ஞாபகத்தில் இருந்தது. அத்துடன் மதுக்குப்பியை எடுக்காமல் தான் மெழுகை மட்டும் எடுத்துக் கொண்டு பலவர்மன் அறைக்குச் சென்றதும் திட்டமாக நினைப்பி விருந்தது கூலவாணிகனுக்கு. அதுமட்டுமல்ல, சென்ற

இரவில் நடந்தது அனைத்துமே அவன் புத்தியில் தெளிவாகத் தென்பட்டன.

நள்ளிரவில் தான் ஓசைப்படாமல் நடந்து பலவர்மன் அறையை நாடியது, கதவைத் தொட்டதும் கதவு திறந்து கொண்டது, பலவர்மன் ரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தது, தான் வெளியே ஓட முயன்றது, பிறகு 'நில்' என்ற சொல் தன்னைத் தடுத்தது ஆகிய ஒவ்வொரு நிகழ்ச்சியும் சந்தேகமறத் தெரிந்தது கூலவாணிகன் சேந்தனுக்கு. அந்தக் காலை நேரத்தில் கூட முதல் நாளிரவு அறையின் பயங்கரச் சூழ்நிலை அவன் கண் முன்பு எழுந்து அவனை நடுங்க வைத்தது. முதுகில் குருதி பாயக் கிடந்த பலவர்மனும் அவனால் கொலை செய்யப்பட்டவர்களின் சித்திரங்கள் பக்கச் சுவர்களிலிருந்து கோரவிழி விழித்த பயங்கரமும் கண்முன்பு எழுந்ததால், காலை நேரத்திலும் நடுங்கினான் சேந்தன். 'நில்' என்ற சொல்லைத் தொடர்ந்து வந்த பூரண கவசமணிந்த அமீர் தன்னை அறையை விட்டு ஓட விடாமல் தடுத்து, குப்புற விழுந்து கிடந்த பலவர்மனைப் புரட்டிவிட்டுக் கழுத்திலிருந்த சாவிக்கு மெழுகு ஒற்றி எடுக்கக் கட்டளையிட்டதும் மெழுகு ஒற்றப்பட்டவுடன் சென்றுவிட்டதும் நன்றாகப் புத்தியில் நடமாடவே, அடுத்தபடி என்ன நடக்கிறதென்பதை அறியாமல் சேந்தன் திணறினான். 'மெழுகு ஒற்றியபிறகு என்ன நடந்தது? நான் எப்படி இங்கே வந்தேன்,' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்ட சேந்தன், 'அடடா? மெழுகில் சாவியின் அமைப்பு இருக்குமே! அதை யாராவது பார்த்துவிடப் போகிறார்கள்!' என்று கிலி பிடித்துச் சரேலெனப் பஞ்சணையை விட்டிறங்கி மஞ்சத்துக்காகப் பாய்ந்து அங்கிருந்த மெழுகு உருண்டையைக் கையிலெடுத்தான். மெழுகில் சாவியின் அமைப்பு ஏதுமில்லை. அது ஒற்றியெடுத்த மெழுகாகவே தெரியவில்லை சேந்தனுக்கு. அதனால் பெரும் குழப்பத்துக்குள்ளான சேந்தன், மதுக் கிண்ணத்தை எடுத்துப் பார்த்தான். அதன் அடியில் சிறிது மது தங்கிக் கிடந்தது. அதன் வாடையும் விபரீதமாயிருந்தது.

கூலவாணிகன் பைத்தியம் பிடிக்கும் நிலைக்கு வந்து தனது மண்டையை இருமுறை பட்டென்று கைகளால் தட்டிக் கொண்டான். 'நான் உண்மையில் பலவர்மன் அறைக்குச் சென்றேனா அல்லது அத்தனையும் கனவா? நான் கட்டளையை நிறைவேற்றினேனா? அல்லது மதுவைக் குடித்து மயங்கிப் பஞ்சணையில் உறங்கி விட்டேனா? தவிர மதுவில் மயக்க மருந்தின் வாடை அடிக்கிறதே? யார் போட்டிருப்பார்கள்? பலவர்மனுக்குத் தான் ஒற்றர்கள் அதிகமாயிற்றே! ஒருவேளை அவன்...?" என்று நினைத்துப் பார்த்து,'சே, சே! இருக்காது! இருக்காது என்ன? திட்டமாய் இல்லை. நான் குடிக்கவில்லை. குடித்தாலல்லவா மயக்க மருந்து என்னை வீழ்த்தி யிருக்கும்!' என்று பலபடி நினைத்துத் திண்டாடிய கூல வாணிகன் இது அத்தனைக்கும் விளக்கத்தை அமீரிட மாவது, படைத்தலைவனிடமாவதுதான் கேட்க வேண்டும் என்று தீர்மானித்துக் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு படைத் தலைவனிருக்குமிடத்தை நோக்கி நடந்தான். சேந்தன் மாடியின் இரு வாசல் அறைக்குள் கையும் மெழுகுமாக நுழைந்தபோது அமீரும் படைத் தலைவனும் மிக ரகசியமாக, எதையோ பேசிக்கொண் டிருந்தார்கள். அவர்களிருவரையும் மாறி மாறிப் பார்த் தான் சேந்தன் பல விநாடிகள். அவனது மருண்ட பார்வையைக் கண்ட படைத்தலைவன், "என்ன பார்க் கிறாய் சேந்தா? வா உள்ளே! மெழுகில் அமைப்பு எடுத்து விட்டால் அதை இங்கு கொண்டு வருவானேன்? நீயே வார்ப்படக்காரனிடம் கொடுத்திருக்கலாமே?" என்றான்.

சேந்தனுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. "மெழுகில் அமைப்பு இல்லை," என்றான் குழப்பத்துடன்.

இளையபல்லவன் இமைகள் மேல் எழுந்து கோபமும் கேள்வியும் கலந்த சாயையை முகத்தில் படரவிட்டன.

"வெறும் மெழுகை என் கண்கள் பார்த்ததில்லை என்ற நினைப்பா உனக்கு!" கோபம் குரலிலும் ஒலிக்கக் கேட்டான் படைத்தலைவன்.

"இல்லை படைத்தலைவரே" என்றான் சேந்தனும் சற்றுக் கோபத்துடன்.

"பின் எதற்கு இந்த மெழுகைக் கொண்டு வந்தாய்?" படைத்தலைவன் கேள்வி முன்னைவிட உக்கிரமாக எழுந்தது.

"உங்களுக்குக் காட்டக் கொண்டு வந்தேன். அது மட்டுமல்ல..." என்று கோபம் தணியாமலே சொன்னான் சேந்தன்.

"வேறென்ன?"

"விளக்கமும் கேட்க வந்தேன்."

"என்னிடமா?"

"முதலில் உங்களிடந்தான் விளக்கம் கேட்க எண்ணி னேன். இப்பொழுது கருத்தை மாற்றிக்கொண்டு விட் டேன்."

"எப்படி மாற்றிக் கொண்டாய்?"

"அமீர்தான் பதில் சொல்ல வேண்டும் எனக்கு" என்று உக்கிரத்துடன் கூறிய கூலவாணிகன், அறைக்குள் வந்து கதவையும் சாத்திவிட்டு, "அமீர்! இப்பொழுது நாம் பேசலாம் தெளிவாக," என்றும் அமீரை நோக்கிச் சொன்னான்.

அமீரின் பெருவிழிகள் வியப்பினால் இருமுறை உருண்டன. "என்ன பேச வேண்டும் நாம்?" என்று வினவி னான் அமீர் வியப்புக் குரலில் பலமாக ஒலிக்க.

"நான் சாவியில் ஒற்றி எடுத்த மெழுகு எங்கே?" என்று கேட்டான் கூலவாணிகன்.

"என்ன உளறுகிறாய் சேந்தா? ஏது சாவி? என்ன மெழுகு?" என்று மிதமிஞ்சிய ஆச்சரியத்துடன் மறுபடியும் வினவினான் அமீர்.

கூலவாணிகன் பொறுமை இழந்தான். "அமீர்! என்னிடம் விளையாடாதே, நேற்றிரவு சந்தித்தபோது என்ன செய்தாய் என்னை?" என்று மிகுந்த சீற்றத்துடன் கேட்டான்.

அமீரின் கண்களிலிருந்த ஆச்சரியச் சாயை முக மெங்கும் படர்ந்தது. "நேற்றிரவு உன்னைச் சந்தித்தேனா!" என்று கேட்டான் அமீர் கூலவாணிகனை உற்று நோக்கி.

"ஆம்." கூலவாணிகன் குரல் உறுதியாயிருந்தது.

"எங்கு சந்தித்தேன்?"

"பலவர்மனின் அந்தரங்க அறையில்?"

"அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் அறை யிலா!"

"ஆம்."

"அங்கு எதற்காகச் சென்றாய் நீ?"

"படைத்தலைவர் கட்டளையை நிறைவேற்ற."

"அங்கு என்னைச் சந்தித்தாயா?"

"ஏன் உனக்கு நினைப்பில்லையா?"

இதைக் கேட்ட அமீர் ஏளனம் தொனிக்க நகைத் தான். "நினைப்பா! இருக்கிறது இருக்கிறது! உனக்கும் எனக்கும் பலவர்மன் அவன் அறையில் விருந்து வைத் தானா?" என்று அமீரின் கேள்வியிலும் ஏளனம் மண்டிக் கிடந்தது.

கூலவாணிகன் புத்தி மேலும் மேலும் குழம்பத் தொடங்கியது. தன் நிலையைப் பற்றியே பெரும் சந்தேகம் அடைந்தான் அவன். இருப்பினும் சமாளித்துக்கொண்டு, "பலவர்மன் விருந்து வைக்கும் நிலையில் இல்லை, உனக்கே தெரியும் அது?" என்று கூறினான் சேந்தன்.

"வேறு எப்படி இருந்தான் சேந்தா ?"

"மஞ்சத்தில் குப்புற விழுந்து கிடந்தான்."

"கொலை செய்யப்பட்டா ?"

"இருக்கலாம்."

"ஏன் இருக்கலாம் ?"

"அவன் முதுகில் குருதி மண்டிக் கிடந்தது."

"கொலை செய்யப்பட்டிருந்தால் ஒருவேளை அந்தக் கொலையை நான் செய்தேன் என்றுகூடச் சொல்லுவாய் போலிருக்கிறது ?"

இப்படித் திரும்பத் திரும்பத் தன்னைக் கேலி செய்து ஏளனத்துடன் பேசிய அமீர்மீது எரிந்து விழுந்தான் சேந்தன். "வேறு யாரும் அங்கில்லை, பலவர்மன் குருதி பாயக் குப்புறக் கிடக்கிறான். இரண்டும் இரண்டும் நான்கு அல்லவா ?" என்றான்.

இதைக் கேட்டதும் இடி இடியென நகைத்த அமீர், "ஏன் சேந்தா ? அந்தக் கொலையை நீ செய்திருக்கக் கூடாதா ? நீயும்தானே அறையிலிருந்ததாகச் சொல் கிறாய் ?" என்று சிரிப்புக்கிடையே கேட்கவும் செய்தான்.

"நான் பிறகுதான் வந்தேன்" என்றான் சேந்தன் சீற்றத்துடன்.

"அப்படிச் சொல்வது நீ. இந்த நாட்டு நீதிபதிகள் ஒப்புக்கொள்ள வேண்டுமே ?" என்றான் அமீர்.

"அமீர் ! விளையாடாதே, கொலை செய்தது நானல்ல. உனக்கே தெரியும் அது. எனக்கு முன்பு நீதானிருந்தாய் அந்த அறையில்" என்று குழறினான் சேந்தன்.

"அதைச் சொல்ல வேண்டியது நீ அல்ல," என்றான் அமீர்.

"வேறு யார் ?" என்றான் சேந்தன்.

"படைத்தலைவர்." பளிச்சென்று வந்தது அமீரின் பதில். மேலும் சொன்னான் அமீர், "கொலை செய்ததைப்

பற்றி அஞ்சாதே சேந்தா! உன்னை நானும் படைத் தலைவரும் கைவிட மாட்டோம். போயும் போயும் யாரைக் கொலை செய்துவிட்டாய்? எதிரியைத்தானே?"

பரிதாபத்தை நாடும் பார்வையொன்றைக் கூல வாணிகன் படைத்தலைவனை நோக்கி வீசினான். இதுவரை அவ்விருவர் பேச்சிலும் குறுக்கிடாமல் கேட்டு வந்த இளையபல்லவன் பஞ்சணையிலிருந்து மெல்ல எழுந்து கூலவாணிகன் அருகில் வந்து, "சேந்தா! என்ன இன்று காலையில் ஏதேதோ உளறுகிறாய்? யார் யாரைக் கொலை செய்தது? நேற்றிரவு முழுவதும் அமீர் இந்த மாளிகைப் பக்கமே வரவில்லையே? காட்டுப் பகுதியில் பூர்வகுடிகளின் நடமாட்டம் அதிகமாயிருக்கிறது. இரவு பூராவும் அங்கல்லவா காவலில் இருந்திருக்கிறான் அமீர். ஏதாவது கனவு கண்டாயா?" என்று கேட்டு, கூலவாணிகன் தோளிலும் கையை வைத்து, "என்ன ஆயிற்று நான் சொன்ன வேலை?" என்றும் விசாரித்தான்.

கூலவாணிகன் என்ன சொல்வதென்று அறியாமல் விழித்தான். மீண்டும் பழைய விஷயங்களைச் சொல்ல ஆரம்பித்து, "நான் சொல்வதெல்லாம் உண்மை. நம்புங்கள் படைத்தலைவரே, உங்கள் கட்டளைப்படி நான் பலவர்மன் அறைக்குள் நுழைந்ததும் உண்மை. அங்கு..." என்று தொடர்ந்ததை இடைமறித்த இளையபல்லவன், "பலவர்மன் கொல்லப்பட்டுக் குருதியுடன் குப்புறக் கிடந்தான். பிறகு அமீர் உன்னைச் சந்தித்தான். சரி சரி," என்று கூறி, "நீ பலவர்மன் அறைக்குப் போகவே இல்லை. ஒன்று நீ குடித்திருக்க வேண்டும். அல்லது உறங்கி கனவு கண்டிருக்க வேண்டும்."

படைத்தலைவன் இப்படிச் சேந்தனிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே வெளியில் தாரைகள் சப்தித்தன. குதிரைகள் வந்து நிற்கும் குளம்பு ஒலிகளும் கேட்டன. தாரைகள் ஊதப்பட்டதாலும், குதிரைகள் வந்து நின்ற

தாலும், இளையபல்லவனும் அமீரும் அறைக்கதவைத் திறந்துகொண்டு மாடியின் வெளிப்புறம் செல்லவே, சேந்தனும் அவர்களைப் பின்தொடர்ந்து கைப்பிடியில் சாய்ந்து அவர்களுடன் தானும் மாளிகையின் வாசலில் நடப்பதைக் கவனித்தான். தாரைகள் ஊதியதைத் தொடர்ந்து, பலவர்மன், திடகாத்திரத்துடன் வெளி வந்ததும், புரவியில் அமர்ந்து மாளிகைத் தளத்தை நோக்கியதும், பிறகு மகிழ்ச்சியுடன் இளையபல்லவனை நோக்கி நகைத்துவிட்டுச் சென்றதும் கூலவாணிகனின் குழப்பத்தை உச்ச நிலைக்குக் கொண்டு போயின வென்றால், அந்தச் சம்பவங்களைத் தொடர்ந்து எழுந்த அமீரின் பேச்சு அவன் கோபத்தையும் குழப்பத்தையும் கிளறிவிட்டன.

"மாண்ட பலவர்மன் பிழைத்துவிட்டான் சேந்தா! இனி நீ என்மீது கொலைக்குற்றம் சாட்ட முடியாது" என்றான் அமீர் விஷமத்துடன்.

"எனக்கு ஏதும் புரியவில்லை. பலவர்மன் குப்புறக் கிடந்ததை எனது இரண்டு கண்களாலும் பார்த்தேன்" என்றான் கூலவாணிகன்.

"அப்படியானால் புரவியில் போவது பிணமா?" என்று அமீர் எள்ளி நகையாடினான்.

"விளையாடாதே என்னிடம் அமீர். இந்த மர்மத்தைச் சீக்கிரம் நான் உடைக்கிறேன்" என்று சீறினான் சேந்தன்.

இருவருக்கும் மேலும் வார்த்தை முற்றுமுன்பாக இளையபல்லவன் நடுவே புகுந்து, "போதும் சச்சரவு சேந்தா! நீ உன் பணியில் தோல்வியுற்றதால் பாதகமில்லை. அந்தப் பெட்டியைத் திறக்க நான் வேறு ஏற்பாடு செய்கிறேன். நீ போய் நீராடி உண்டு சற்று இளைப்பாறு. நிதானத்துக்கு வரலாம்," என்று சொல்லி அவன் முதுகில் இருமுறை தட்டியும் கொடுத்தான். அதற்குப் பின் அங்கு நிற்கவும் இஷ்டப்படாத கூலவாணிகன் அமீரை ஒரு தரம்

முறைத்து நோக்கிவிட்டு அறையை விட்டு விடுவிடுவென வெளியே நடந்தான்.

அவன் சென்றதும் ஏதும் நடவாதது போலத் தங்கள் பேச்சைத் தொடர்ந்த அமீரும் இளையபல்லவனும், கோட்டைப் பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பற்றி விவாதித் தார்கள். "அமீர்! இன்னும் இரண்டு நாள்களில் அமா வாசை வருகிறது. இதற்கு அடுத்த அமாவாசை அக்ஷயமுனையின் கதியை நிர்ணயிக்கும். அக்ஷய முனையின் கதியை மட்டுமல்ல — சோழ நாடு, கலிங்க நாடு, ஸ்ரீவிஜய நாடு ஆகிய மூன்று பேரரசுகளின் கதியையும் நிர்ணயிக்கும். அமாவாசைக்கு முன்தினம் பகிட்பாரி ஸான் பகுதியிலிருந்து பதக்குகளின் தாக்குதலையும், கடற்பகுதியிலிருந்து சூளுக்களின் தாக்குதலையும், எதிர் பார்க்கிறேன். மேற்கு மலைத்தொடர் பகுதியை நீ கவனித்துக்கொண்டால் கடற்கரைப் பகுதியைக் கண்டியத் தேவன் கவனித்துக்கொள்வான். கோட்டையின் உள் புறத்தை நான் பார்த்துக் கொள்கிறேன். அன்று பயங்கர விளைவுகள் நேரிடும் அமீர்! அவற்றைச் சமாளிக்க உன் வரையில் நீ தயாரா?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"நான் இன்றே தயார்," என்றான் அமீர் இடையி லுள்ள குறுவாள்களைத் தடவிக் கொண்டே.

"கண்டியத்தேவன் தயாராக ஒரு மாதம் பிடிக்கும்." என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

புரிந்துகொண்டதற்கு அடையாளமாகத் தலையை அசைத்த அமீர் "ஆம், ஆகும்" என்றான்.

"அதற்குள் கோட்டையையும் நான் வலுப்படுத்தி விடுவேன். மக்கள் விழிப்பு பெற்றிருக்கிறார்கள். அது நமக்குப் பெரும் பாதுகாப்பு" என்றான் இளையபல்லவன்.

"ஆம்," என்று தலையை ஆட்டினான் அமீர்.

இளையபல்லவன் சிறிது நேரம் தீவிர யோசனையில் ஆழ்ந்துவிட்டுக் கவலையுடன் கேட்டான். "அந்த எழுத்து என்னவென்று புரிந்ததா அமீர்?" என்று.

"புரியவில்லை."

"நகல் சரியாக எடுத்தாயா?"

"அப்படியே எடுத்தேன்."

"கையெழுத்து?"

"யார் கையெழுத்தையும் இம்மி பிசகாமல் நான் போடவல்லவனென்பதைத் தென் கலிங்க அதிகாரிகளே உணர்ந்திருக்கிறார்கள்."

"அப்படியானால் அந்த வாசகத்தின் மொழி பெயர்ப்பு எப்பொழுது கிடைக்கும்?"

"இன்றிரவு."

இளையபல்லவன் முகத்தில் கவலை பெரிதாகப் படர்ந்தது. "எச்சரிக்கையுடன் நடந்துகொள் அமீர்! முதலில் நாம் காணப்போகும் விஷயத்தைப் பொறுத் திருக்கிறது அடுத்த நடவடிக்கை! நகலைப் படிப்பவன்..." என்று ஏதோ சொல்லப்போன இளையபல்லவனை இடைமறித்த அமீர், "பேசமாட்டான், கவலை வேண் டாம்," என்றான்.

"அத்தனை நம்பிக்கையானவனா!" என்று கேட் டான் இளையபல்லவன்.

"நம்பிக்கையானவன்தான், எதற்கும் அவன் படித்து விஷயத்தைச் சொன்னதும் நாவைத் துண்டித்துவிடு கிறேன்."

"சே! சே! வேண்டாம் அமீர்."

"அரபு நாட்டில் அப்படித்தான் பழக்கம்."

"அந்தப் பழக்கம் நமக்கு வேண்டாம். அவனைச் சில நாள்கள் காவலில் வைத்துவிடு."

"சரி, உங்களிஷ்டம்" என்று அலுப்புடன் பதில் சொன்ன அமீர் இளையபல்லவனிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே சென்றான். அப்பொழுது சென்றவன் இரவில் தான் திரும்பி வந்தான். திரும்பி வந்தவன் முகத்தில் ஈயாடவில்லை. "படைத்தலைவரே!" என்றழைத்த அமீரின் நாவும் மேலே பேச முடியாமல் திணறியது. அப்போதுதான் பஞ்சணையில் யோசனையுடன் படுத்த இளையபல்லவன் அமீரின் முகத்தில் திகைப்பைக் கண்டதும், "என்ன அமீர்?" என்று துள்ளி எழுந்தான். பதிலெதுவும் சொல்லாத அமீர் கதவைத் தாழிட்டுவிட்டுப் பூனை போல் மெல்ல நடந்து விளக்கிருந்த இடம் நோக்கி நடந்தான்.

இளையபல்லவனும் அந்த விளக்கருகில் வந்ததும், இடைக் கச்சையிலிருந்து எடுத்த ஓர் ஓலையை அமீர் நீட்டினான் படைத்தலைவனிடம். அதை விளக்கொளியில் படித்த படைத்தலைவன் முகத்தில் பெரும் ஆச்சரிய ரேகை படர்ந்தது. அமீரின் பெருவிழிகள் முன்னைவிடப் பெரிதாகி முகத்திலிருந்து பிதுங்கிவிடுவன போல் காட்சியளித்தன.

இருவர் கண்களும் சந்தித்தன. அந்தச் சந்திப்பில் வியப்பு, அதிர்ச்சி முதலிய பல உணர்ச்சிகள் பளிச்சிட்டன. "இப்பொழுது புரிகிறது! புரிகிறது!" என்று இருமுறை சொல்லிக்கொண்ட படைத்தலைவன் ஓலையைத் தட்டிக் காட்டி, "இரகசியத்தின் திறவுகோல் இது! அப்பப்பா, எத்தனை பயங்கரமான திறவுகோல்! எத்தனை மர்மங்களை விளக்குகிறது!" என்று குரலில் பல உணர்ச்சிகள் அலைபாயக் கூறினான்.




40. ஊதல், ஊதல், ஊதல்;
ஊதினால்
சாதல், சாதல், சாதல்!

அத்தியாயம் 40

# ஊதல், ஊதல், ஊதல்; ஊதினால் சாதல், சாதல், சாதல்!

நல்ல இருளில் திடீரென வீசிவிட்ட விளக்கொளி போல, அக்ஷயமுனைக் கோட்டையின் பெரு ரகசிய மொன்றைப் பளீரென விளக்கிவிட்ட அந்த ஓலையை மீண்டும் மீண்டும் படித்த இளையபல்லவன் முகத்தில் பலப்பல உணர்ச்சிகள் பாய்ந்து சென்றன. "என்ன பயங்கர இரகசியம் இது, எத்தனை மர்மங்களை விளக்குகிறது?" என்று அவன் உதடுகள் மீண்டும் மீண்டும் முணு முணுத்தன. பல விநாடிகள் அத்தகைய முணுமுணுப் புடனும் தீவிர சிந்தனையுடனும் திரும்பத் திரும்ப அந்த அறையில் அங்குமிங்குமாக நடந்த இளையபல்லவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் அறையின் நடுவே நின்று இருமுறை தன் தலையை அசைத்துக்கொண்டதன்றி உறுதி நிரம்பிய கண்களை அமீரின் முகத்தின் மீதும் புரட்டி, "அமீர்! இப்பொழுது புரிகிறதல்லவா இந்தக் கோட்டை யின் நிலவரம் உனக்கு?" என்று வினவினான்.

அதுவரை அமீரின் முகத்திலிருந்த திகைப்பும் வியப்பும் மறைந்து அவை இருந்த இடத்தைக் குழப்பம் ஆக்கிரமித்துக் கொள்ளவே, "இந்தக் கோட்டையின் நிலவரத்தைப் பற்றி இதில் ஏதுமில்லையே!" என்றான் குழப்பம் குரலிலும் தொனிக்க.

“நேர்முகமாக இல்லை அமீர். ஆனால் இதில் கண்ட இரகசியத்தைப் பலவர்மன் செய்கைகளுடன் இணைத்துப் பார், இந்நாட்டு மன்னனின் போக்குடன் இணைத்துப் பார்,” என்று கூறிய இளையபல்லவன் அமீரை மீண்டும் கூர்ந்து நோக்கி, “அமீர், ஸ்ரீவிஜயத்தின் உபதளபதியின் படமொன்றை நீ பலவர்மன் அறையில் பார்த்தாயல்லவா!” என்றும் வினவினான்.

“ஆமாம், பார்த்தேன்,” என்றான் அமீர் மேலும் குழப்பம் அதிகரிக்க.

“அந்த உபதளபதி பலவர்மனால் இந்த அக்ஷய முனையில் கொல்லப்பட்டிருக்கிறான்,” என்று சுட்டிக் காட்டி அர்த்தபுஷ்டியுடன் அமீரைப் பார்த்தான் இளைய பல்லவன்.

“ஆமாம். படத்தின் கீழுள்ள குறிப்பு அதை மறைமுகமாக உணர்த்துகிறது,” என்றான் அமீர்.

இளையபல்லவன் விழிகள் பெரிதும் பளிச்சிட்டன. “ஒரு பெரும் சாம்ராஜ்யத்தின் உபதளபதி கொல்லப் படுகிறான். அதைப்பற்றிச் சாம்ராஜ்யாதிபதி கவலைப் படாதிருக்கிறான். கொன்றவன் ஒரு கோட்டையின் தலைவன். இஷ்டப்படி சுதந்திரமாக உலாவுகிறான். இது விசித்திரமாயில்லையா உனக்கு?” என்று கேட்டான் இளையபல்லவன்.

“ஆம், ஆம். விசித்திரமாயிருக்கிறது?” என்றான் அமீர்.

“அதுமட்டுமல்ல, கொள்ளையரையும் கடற்கரையில் வைத்து ஆதரிக்கிறான் ஒரு நாகரிக சாம்ராஜ்யத்தின் துறைமுகத் தலைவன் ஒருவன். அதைப்பற்றியும் கேள்வி கேட்பதில்லை சாம்ராஜ்யாதிபதி” என்று குறிப்பிட்டான் இளையபல்லவன்.

“கேட்பதாகத் தெரியவில்லை,” என்றான் அமீர்.

"ஏன்? ஏன் கேட்கவில்லை?" என்று திடீரெனக் கேள்வியை வீசினான் இளையபல்லவன். அவன் குரல் மிக உஷ்ணத்துடன் ஒலித்தது.

"அதுதான் புரியவில்லை," என்றான் அமீர்.

"எனக்குப் புரிகிறது. நன்றாகப் புரிகிறது. சாம்ராஜ்யாதிபதியான ஜெயவர்மன் பலவர்மனை எதுவும் கேட்க முடியாது. கேட்கும் நிலையில் இல்லை. அதை இந்த ஓலை தெளிவாக்குகிறது," என்று இருமுறை ஓலையைத் தன் கையால் தட்டியும் வலியுறுத்திச் சொன்னான் இளைய பல்லவன்.

அமீரின் கூரிய புத்தியையும் ஏமாற்றிய அந்த ஓலை அப்பொழுதுதான் அமீரின் புத்தியிலும் உண்மையை மெள்ள மெள்ள வீசத் தொடங்கவே அமீரின் முகத்தில் பெரும் பிரமிப்பு விரிந்தது. "சரி, சரி, அதுதான் பலவர்மன் இங்கு தனியரசு செலுத்துகிறானா!" என்றும் கேட்டான் அமீர் பிரமிப்பு பூர்ணமாகத் தொனித்த குரலில்.

"ஆம் அமீர். சுயநலத்தையும் சுயபலத்தையும் தவிர வேறெதையும் வாழ்க்கையில் அறியாத வஞ்சகனான பலவர்மன், ஸ்ரீவிஜய சக்கரவர்த்தியின் பெரும் ரகசியமொன்றைக் கையில் வைத்துக்கொண்டு அவனை அதைக் கொண்டே மிரட்டி அக்ஷயமுனைப் பக்கம் கால் வைக்காமல் அடித்திருக்கிறான். இந்த ஓலை என்றும் அவனுக்கு விஜயவர்மனிடமிருந்து பாதுகாப்பை அளிக்கும்," என்றான் இளையபல்லவன்.

"அதுமட்டுமல்ல இளையபல்லவரே, வேறொருவரிடமிருந்தும், பாதுகாப்பளிக்கும், அந்த..." என்று ஏதோ சொல்லப்போன அமீரைத் தடைசெய்த இளைய பல்லவன், "அமீர்! அந்தப் பெயரைச் சொல்லாதே. இங்கு சுவர்களுக்கும் ரகசியத்தைக் கேட்கும் சக்தி உண்டு. பலவர்மன் ஒற்றர்கள் சதா நம்மீது கண் வைத்திருக் கிறார்கள். சொல்லி வந்த அந்த மனிதர் இதில் சம்பந்தப்

பட்டிருப்பது நம்மிருவருக்கு மட்டும் தெரிந்திருக்கட்டும். வேறு யாருக்கும் தெரிய வேண்டாம்," என்று எச்சரிக்கையும் செய்தான்.

சரியென்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டிய அமீரின் முகத்தில் தீவிர சிந்தனை படர்ந்தது. இருவரும் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டதால் நீண்ட நேரம் அந்த அறையில் மௌனமே நிலவியது. அந்த அறையிலிருந்த விளக்குச் சுவர்கூட அந்த ரகசியத்தின் விளைவுகளைப் புரிந்து கொண்டது போல் கடற்காற்றில் அலைந்து இரண்டு மூன்று முறை நடுங்கியது. காற்றும் பயந்து கொண்டு கிழக்கு வாயிற்படிக்கு மேலேயிருந்த துவாரங்களின் வழியாக மெள்ளவே அறையில் நுழைந்தது. அத்தகைய சூழ்நிலையில் தன் பஞ்சணையை நோக்கி நடந்து அதில் உட்கார்ந்துகொண்ட இளையபல்லவன் தலையை முழந்தாள்களை நோக்கித் தொங்கப் போட்டுக் கொண்டு பல நிமிஷங்கள் யோசனையில் ஆழ்ந்தான். கடைசியாக ஒரு முடிவுக்கு வந்து அமீரைக் கிட்டே அழைத்து, "தலையைக் குனி" என்றான்.

அமீர் தலையைக் குனிய அவன் காதுக்கருகில் ஏதோ மடமடவென்று கூறினான் இளையபல்லவன். அந்தச் சொற்களைக் கேட்கக் கேட்க அமீரின் முகத்தில் இருந்த வியப்பு திகைப்பு எல்லாம் மறைந்து உற்சாகமும் குதூகலமும் குடிகொள்ளத் தொடங்கின. இளையபல்லவன் பேசி முடித்ததும் நன்றாக நிமிர்ந்து நின்றுகொண்ட அமீர் ராட்சதச் சிரிப்பு சிரித்தான். "மிகவும் சரி, மிகவும் சரி" என்று கூறி இளையபல்லவனின் கருத்தை ஆமோதிக்கும் முறையில் தலையைப் பலமாகவும் ஆட்டினான். அத்துடன் இளையபல்லவனிடம் விடை பெற்றுக்கொண்ட அமீர் தன் மனத்திலிருந்து பெரும் சுமையொன்று இறங்கிவிட்டதற்கு அடையாளமாகப் பெரும் மகிழ்ச்சியுடன் மாடிப்படிகளில் இறங்கிச் சென்றான்.

நாள்கள் நான்கு ஓடின. அந்த நான்கு நாள்களில் நடந்த பல விஷயங்களின் காரணம் அக்ஷயமுனையிலிருந்த பல பேருக்குப் புரியவில்லை. புரியாததால் அதைப்பற்றி நானாவிதமாக நகர மக்கள் பேசவும் முற்பட்டார்கள். அந்தப் பேச்சுகள் மஞ்சளழகியின் காதிலும் விழுந்ததால் அவள் பெரிதும் நிலைகுலைந்தாள். அடுத்த சில தினங்களில் இளையபல்லவன் வெறி பிடித்தவனைப் போல் நடந்துகொண்டதையும் கண்டபடி முன்னுக்குப் பின் முரணான உத்தரவுகளைப் பிறப்பித்ததையும் கண்ட நகர மக்கள் ஒருவேளை சோழர் படைத்தலைவன் மூளை குழம்பிவிட்டதோ என்றுகூட நினைத்தார்கள். மறுநாளிலிருந்து தனக்குக் காவலர் யாரும் தேவையில்லையென்று மாடியறைக் காவலரைக் கூடக் கடற்கரைக் குடிசைகளுக்கு அனுப்பிவிட்ட இளையபல்லவன், தினசரி இரவிலும் பகலிலும் குடியில் இறங்கி பலவர்மன் மாளிகையில் பெரும் கொட்டம் அடித்துக் கொண்டிருந்தான். ஊருக்குள்ளும் தாறுமாறாகத் திரிந்துகொண்டு கண்ட சண்டைகளை விலைக்கு வாங்கிக்கொண்டான். குடிக்காமலிருந்த வேளைகளிலும் அவன் போக்கும் உத்தரவுகளும் விபரீதமாயிருந்தன. இரண்டு நாள்களுக்கெல்லாம் தலை நீட்டிய அமாவாசை இரவில் வெகு வேகமாகக் கடற்கரையை அடைந்த இளையபல்லவன் கொள்ளையரில் சிலரைக் கூட்டி அவர்கள் மரக்கலங்களில் இரண்டை உடனடியாகப் பாய்விரித்துக் கடலில் செல்லும்படி உத்தரவிட்டான். அந்த மரக்கலமொன்றில் தனது மாலுமியொருவனையும் அனுப்பி விவரம் புரியாத பல உத்தரவுகளையும் பிறப் பித்தான். "இரண்டு மரக்கலங்களும் கடாரத்துக்கும் சொர்ணத் தீவுக்கும் இடையேயுள்ள கடலில் இன்றிலிருந்து ஒரு மாதம் சஞ்சரிக்கட்டும்" என்று அந்த மரக்கலத்தின் தலைவர்களுக்குக் கூறினான்.

"எதற்காகச் சஞ்சரிக்க வேண்டும்?" என்று வினவினான் அந்தக் கொள்ளைக் கப்பல்களின் தலைவர்களில் ஒருவன்.

“காரணம் உனக்குத் தேவையில்லை. சொல்கிறபடி செய். என் மாலுமி உங்களுக்கு வழி காட்டுவான்,” என்றான் இளையபல்லவன்.

“ஒரு மாதம் சஞ்சரித்த பிறகு?” என்று வினவினான் இன்னொரு மரக்கலத் தலைவன்.

“இங்கு வந்துவிடலாம்” என்று இளையபல்லவன் கூறினான்.

“இடையே மரக்கலங்கள் ஏதாவது தென்பட்டால்?” மீண்டும் எழுந்தது கொள்ளைக்காரன் கேள்வி.

“முடிந்தால் தாக்கலாம்.”

“ஏன் முடியாது?”

“உங்கள் மரக்கலங்களைவிடப் பலமான மரக் கலங்கள் அங்கு உலாவும்.”

“எப்படித் தெரியும் உங்களுக்கு?”

“சோதிடம் தெரியும் எனக்கு” என்று சொல்லி நகைத்த இளையபல்லவன் தனது மாலுமியை அருகில் அழைத்து அவன் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டு சற்று தூரம் அவனை இழுத்துச் சென்றான். சோழர் படைத் தலைவனும், அகூதாவின் உபதலைவருமான இளைய பல்லவன் தன் தோள்மீது சரிசமமாகக் கையைப் போட்டுக் கொண்டதால் சங்கடமடைந்த மாலுமியை, “சங்கடப் படாதே, சாதாரணமாக நடந்துவா” என்ற கடுமையான உத்தரவு அவனைப் பயத்துடன் நடக்க வைத்தது. அப்படி நடந்து வந்த மாலுமியிடம், “இரு மரக்கலங்களும் நான் கூறிய கடற்பகுதியில் சஞ்சரிக்கட்டும். அங்கு இன்னும் இருபது நாள்களுக்குள் சிவந்த கொடியுடன் ஒரு பெரும் மரக்கலம் வரும்...” என்று சொல்லிக்கொண்டு போன இளையபல்லவனைப் பிரமிப்புடன் நோக்கிய மாலுமி, “அப்படியா?” என்று இடை மறித்துக் கேட்டான்.

“ஆம்” என்று கூறிய இளையபல்லவன், “அவன் மரக் கலத்துக்கு நீ மட்டும் சென்று இந்த ஓலையைக் கொடுத்து

விடு" என்று தன் மடியில் இருந்த ஓலையொன்றை எடுத்து மாலுமியின் கச்சையில் ரகசியமாகச் செருகினான். அத்துடன் அவனைத் திரும்பவும் நீர்க்கரைக்கு அழைத்து வரும் இரு மரக்கலத் தலைவர்களையும் நோக்கி, "நீங்கள் சிறந்த மாலுமிகள் என்பது எனக்குத் தெரியும். இருப் பினும் என் மாலுமியையும் உங்களுடன் அனுப்புகிறேன். உயிருக்கோ மரக்கலத்துக்கோ எந்தவித ஆபத்தும் நேரிடா மல் பாதுகாத்து இவன் திரும்ப அழைத்து வருவான்" என்று உத்தரவிட்டுக் கோட்டையை நோக்கிச் சென்றுவிட்டான்.

மறுநாள் திடீரென இரு மரக்கலங்கள் பாய் விரித்துச் சென்றுவிட்டதை மக்கள் பார்த்தனர். மஞ்சளழகி பார்த்தாள்; பலவர்மனும் பார்த்தான். அப்படி அந்த மரக்கலங்கள் சென்றது, இளையபல்லவன் உத்தரவால் என்பதைக் கேட்ட மக்கள் மலைத்தனர். மஞ்சளழகி பிரமித்தாள். பலவர்மன் மகிழ்ந்தான். சூளுக்களின் தாக்கு தலைக் கடற்பகுதியில் சமாளிக்கவே இளையபல்லவன் கொள்ளையர் கப்பல்களைப் பெரும் போர்க்கலங்களுடன் சக்கர வட்டமாக நிறுத்தியிருக்கிறான் எஎன்பதை எண்ணி யிருந்த மக்கள் அவன் வேண்டுமென்றே மரக்கலங்களைப் போகச் சொல்லி, துறைமுகத்தைப் பலவீனமாக்கிவிட்ட தைக் கண்டு மலைத்தனர். சூளுக்கள் அந்த நிலையில் தாக்கினால் ஏற்படக்கூடிய விளைவை எண்ணிப் பயமும் அடைந்தனர். மரக்கலங்கள் போனதும் பலவர்மன் பெரும் மகிழ்ச்சி அடைந்தான். மரக்கலங்கள் போய்விட்டதை ஆட்சேபித்துக் குடிமக்கள் தலைவர் இருவர் ஆட்சேபித்த தற்கும், "இளையபல்லவர் உத்தரவை நான் தடுக்க முடியாது. இந்தக் கோட்டையின் பாதுகாப்பு அவர் கையில் அல்லவா இருக்கிறது!" என்று சமாதானம் கூறிவிட்டான். அடுத்த நான்கு நாள்களில் மற்றும் இரண்டு கொள்ளையர் மரக்கலங்கள் துறைமுகத்திலிருந்து மறைந்தன. பலவர்மன் மகிழ்ச்சி கட்டுக்கடங்காததாயிற்று. அத்தனைக்கு

அத்தனை மஞ்சளழகியின் வேதனை அதிகப்பட்டது. இளையபல்லவன் ஏற்றுக்கொண்ட வீண் சண்டைகளையும் துறைமுகத்தைப் பலவீனப்படுத்த அவன் பிறப்பித்த உத்தரவுகளையும் பொறுக்கமாட்டாத அவள், அவனைச் சந்திக்கத் தீர்மானித்தாளானாலும் சந்திப்பது அத்தனை எளிதாயில்லை. கடைசியில் எதிர்பாராத விதமாகச் சந்தித்தபோது ஏற்பட்ட விளைவும் அவள் வேதனையைத் துடைக்கவில்லை.

அமாவாசை சென்று எட்டு நாள் கழித்து இளைய பல்லவனே அவளை நாடி வந்தான். அவள் அப்பொழுது மாளிகைத் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். வசந்தகாலத்தின் மலர்கள் நந்தவனத்தில் பூத்துக் கிடந்ததால் எங்கும் நறுமணம் மண்டிக் கிடந்தது. சற்று முன்னே உதயமான வெண்மதியும் தன் கதிர்களை மரக்கிளைகளின் வழியாகத் தோட்டத்தில் பாய்ச்சியிருந்தான். அந்த மரங்களின் நிழலில் மெல்ல நடந்து சென்ற மஞ்சளழகி ஒரு மரத்தில் சாய்ந்து நின்று ஏக்கப் பெருமூச்சு விட்டாள். சிந்தனை வெள்ளம் அவள் சித்தத்தில் பெருவேகத்துடன் பிரவாகித்துக் கொண்டிருந்தது. அந்த வேகத்தைத் தடை செய்த குரல் ஒன்று அவளைத் திடுக்கிட வைத்தது. "நிற்பது யார்? என் மனைவியா?" என்று கேள்வி வந்த திக்கை அவள் நோக்கினாள். இளையபல்லவன் அவளை நோக்கி நடந்து வந்தான். இம்முறை அவன் நடையில் தள்ளாட்டமில்லை. மதி ஒளி பாய்ந்த முகமும் வெறி முகமாயில்லை. பழைய வீரமுகமாகவே காட்சியளித்தது. சுய நினைவுடன் வரும் அவனிடம் சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ளவும், அவனை முடியுமானால் நன்னெறிக்குத் திருப்பவும் மஞ்சளழகி, "இன்னும் மனைவியாகவில்லை" என்றாள் உஷ்ணத்துடன்.

அந்தச் சுடுசொற்கள் கூட அவள் வாயிலிருந்து இன்பமாகத்தான் உதிர்ந்தன. மரத்தில் சாய்ந்த உடலைச்

சிறிது வளைத்துக் கொண்டாள் அவள். அதனால் நடன பாணி போலவே நின்ற மஞ்சளழகியைத் திடமாக நெருங்கிய படைத்தலைவன், "மனைவியாகாவிட்டா லென்ன, மனைவியாக வேண்டியவள்தானே?" என்று கூறி அவள் இடையில் தனது ஒரு கையையும் வைத்தான்.

அவள் அசையவில்லை. அவன் கையையும் அப்புறப் படுத்தவில்லை. "மனைவியாகுமுன் ஒரு பெண்ணைத் தொடுவது முறையல்ல," என்றாள் அவள்.

அவன் மெல்ல நகைத்தான். "ஏற்கெனவே தொட்ட பெண்களைத் தொடுவதில் தவறில்லை. தவிர எங்கள் நாட்டில் காந்தர்வ மணம் என்பது ஒன்று உண்டு," என்று கூறி அவளுக்குப் பக்கத்தில் அவனும் ஒருக்களித்துச் சாய்ந்தான்.

"அந்த மணத்துக்கு இருவரும் சம்மதப்பட வேண்டும்" என்று கூறினாள் மஞ்சளழகி. தன் உடலின் இடப்பக்கத்தில் மெல்லச் சாய்ந்த அவன் உடலைக் கையால்கூட நகர்த்தாமல்.

"ஏன் உனக்குச் சம்மதமில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"உங்கள் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை."

"என்ன என் போக்கு?"

"அதிகமாகக் குடிக்கிறீர்கள்."

"சரி. கொஞ்சம் குறைத்துக் கொள்கிறேன்."

"கூடாது. அடியோடு மது அருந்தக்கூடாது."

"சரி, விட்டுவிடுகிறேன்."

"எப்பொழுது?"

"ஒரு மாதம் கழித்து."

"ஒரு மாதம் எதற்கு?"

"நல்ல பழக்கங்களைச் சீக்கிரம் விட்டுவிடலாம். கெட்ட பழக்கங்களை ஒழிக்கக் காலம் தேவை!"

"நாளை முதல் சிறிது சிறிதாகக் குறைக்கிறீர்களா?"

"குறைக்கிறேன். ஆனால் இதை ஊதிப் பார்," என்று கூறி கச்சையில் இருந்த சிறு கடற் சிப்பியொன்றை எடுத்து மஞ்சளழகியிடம் நீட்டினான் இளையபல்லவன்.

மஞ்சளழகி இளையபல்லவனை உற்றுநோக்கி, "இதை ஏன் ஊத வேண்டும்?" என்று கேட்டாள்.

"இந்தக் கடற்சிப்பி ஓர் ஊதுகுழல். இதிலிருக்கும் துவாரங்களைப் பார். இது எழுப்பும் ஒலி புது முறையில் இருக்கிறது. இப்படி வாயில் வைத்துப் பலமாக ஊத வேண்டும்," என்று கூறி அவள் வாயில் அந்தச் சிப்பியின் ஒரு பாகத்தை வைத்து அழுத்தவும் செய்தான்.

மஞ்சளழகி அதை வெடுக்கென்று அவன் கையி லிருந்து பிடுங்கிக் கொண்டாள். "எதற்காக இதை நான் ஊத வேண்டும்? சொல்லுங்கள்" என்றாள்.

"பல மர்மங்களை இது விளக்கும்."

"இந்தச் சிப்பியா?"

"ஆம்."

"இப்பொழுது குடித்திருக்கிறீர்களா?"

"இல்லை."

"பின் ஏன் உளறுகிறீர்கள்?"

"உளறலா அல்லவா என்பதை ஊதியபின்பு அறிந்து கொள்வாய்."

சரியென்று அவள் ஊதப்போனாள். "சற்று இரு" என்று அவளைத் தடை செய்த இளையபல்லவன், "மஞ்சளழகி! இங்கு யாருமில்லை. சொல்வதைக் கவன மாய்க் கேள். என் செய்கை ஒன்றும் இன்னும் சில நாள் களுக்கு விளங்காது. ஆனால் செய்யப்படும் எதுவும் உன் நன்மைக்காகச் செய்யப்படுகிறதென்பதை நினைவில்

வைத்துக்கொள். வருகிற அமாவாசையன்று பெரு நிகழ்ச்சிகள் இந்த அக்ஷயமுனையில் ஏற்படும். ஆனால் அவற்றைப் பார்க்க நீ இருக்கமாட்டாய். நீ வரும்போது சிறப்புடன் வருவாய். அமாவாசை இரவில் உனக்குக் கொடுக்கப்படும் மதுவைப் பூராவாக அருந்திவிடு" என்றான்.

அவள் ஏதோ சொல்ல முயன்றாள்.

"எதுவும் விளங்காது உனக்கு. ஆனால் சொல்கிறபடி செய். இப்போது ஊது. இந்த ஊதலைக் கேட்டு வருபவரிடம் சிப்பி இந்த மரத்தடியில் கிடந்ததாகக் கூறிவிடு. சரி ஊது, நான் வருகிறேன்," என்று கூறிவிட்டுச் சென்றான் இளையபல்லவன்.

அவன் போன சில விநாடிகளுக்கெல்லாம் அந்தச் சிப்பியை வாயில் வைத்து இரு முறை ஊதினாள் அவள். இரு முறை கோட்டான்கள் பலமாக அலறும் சத்தம் அந்த நந்தவனத்தை ஊடுருவிச் சென்றது. அந்த ஒலியைத் தொடர்ந்து திடீரென மாளிகையின் கதவொன்று பலமாகத் திறந்தது. யாரோ வேகத்துடன் ஓடிவரும் ஓசையும் மஞ்சளழகியின் செவிகளில் விழுந்தது. கடற் சிப்பியின் ரகசியம் மெள்ள மெள்ள உதயமாயிற்று அவள் சிந்தையில். "இந்த ஊதல் ஊதல்—இதை ஊதினால் சாதல், சாதல் சாதல்! உண்மை தெரிந்துவிட்டது எனக்கு" என்று சொல்லிக்கொண்டே மஞ்சளழகி, "வருகிறது ஆபத்து! ஆனால் அதுதான் தெரிகிறதே அவருக்கு," என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். அவள் எதிர்பார்த்த ஆபத்து அந்தச் சமயத்தில் மாளிகைத் தோட்டத்தின் கதவை ஓசைப்படாமல் திறந்துகொண்டு அடிமேலடி வைத்து அவளிருந்த திக்கை நோக்கி வந்தது. திகிலால் அவள் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள்.

அத்தியாயம் 41

# மரக்கலமல்ல... மனக்கலம்

கடற்சிப்பியைக் கச்சையிலிருந்து எடுத்துக் காட்டி அது ஓர் ஊதுகுழல் என்பதைப் புலப்படுத்தி, அதை ஊதி விடும்படியும் உத்தரவிட்டு இளையபல்லவன் சென்ற இரவுக்குப் பிறகு மஞ்சளழகியின் நிலை பெரிதும் மாறு பட்டுவிடவே அவள் பழைய மஞ்சளழகியாயில்லாமல் புது மஞ்சளழகியாகி ஏதோ உணர்ச்சியற்ற ஒரு பதுமை உலாவுவது போல் உலவி வந்தாள். அவள் மாற்றத்தை அக்ஷயமுனை நகர மக்களும் கடற்கரைக் கொள்ளையரும், இளையபல்லவனைச் சேர்ந்த மாலுமிகளும் கண்டாலும் அதன் உண்மைக் காரணத்தை அறியாமல், இல்லாத காரணங்களையும் தாங்களாகவே கற்பித்துக்கொண்டு அவற்றைப் பகிரங்கமாகப் பேசவும் தலைப்பட்டார்கள். இளையபல்லவனிடம் அவளுக்கிருந்த காதலே அந்த மாற்றத்துக்குக் காரணமெனச் சிலர் நினைத்தார்கள். அந்தக் காதலும், இளையபல்லவன் குடி வெறியாலும் பண்பற்ற நடத்தையாலும் வெறுப்பாக மாறியிருக்க வேண்டுமென்று இன்னும் சிலர் நினைத்தார்கள். பூர்வ குடிகளின் விரோதத்தால் தன் தந்தைக்கும் இளைய பல்லவனுக்கும் என்ன தீங்கு நேரிடுமோ என்ற திகில்தான் காரணமென்றும் மற்றும் சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். காரணம் எதுவாயினும் பழைய மஞ்சளழகி மாறிவிட்டாள் என்பது மட்டும் தெளிவாகத் தெரியவே அவளை அறிந்த, அவள் நடனத்தை வருஷா வருஷம் ரசித்த, அத்தனை மக்களும் அவள் நிலை பற்றி வருந்தவே செய்தார்கள்.

கொள்ளையரின் துணைவிகள் அவளைக் கடற் கரையிற் பார்த்தபோதெல்லாம் அவளது வெறித்த பார்வையையும், கேட்டதற்குத் தாமதித்து வந்த அவள் பதிலையும், சிலசமயங்களில் திடீர் எனத் தூக்கி வாரிப் போட்டது போல மிரண்ட அவள் விழிகளையும் கண்டு பெரிதும் பரிதாபப்பட்டார்கள். அதே கடற்கரையில் அலட்சிய நடை நடந்து கொள்ளையரைத் தட்டிக் கொடுத்தும், கொள்ளையர் மாதரைக் கேலி செய்தும், சுதந்திரப் பறவையாக விஷமக்களஞ்சியமாக விளங்கிய அந்தக் கட்டழகி மறைந்துவிட்டாள். யாரிடமும் அணுகாத, அணுகினாலும் உடனடியாகப் பேசாத, பேசினாலும் சட்டென்று கத்தரித்துக் கொண்டு கடற்கரை நீர் முனைக்குச் சென்றுவிடும் புத்தம்புது பதுமையைக் கண்ட கொள்ளையர் பெரிதும் வருந்தினார்கள். கொள்ளையர் மட்டுமென்ன, இளையபல்லவனது மரக் கலத்தை வெகு துரிதமாக மாற்றியமைத்துக் கொண்டிருந்த தொழில் வல்லுநரும் கண்டியத்தேவனும் இதர மாலுமிகளுங்கூட அவள் நிலை கண்டு வருத்தப்பட்டார்கள்.

கோட்டைக்குள்ளும் கடற்கரையிலும் பலப்பல கண்கள் பலப்பல உள்ளங்கள் தன்னைக் குறித்துப் பரிதாபப்படுவதைக் கூடக் கவனியாமல் மஞ்சளழகி நகரத்துக்குள்ளும் வெளியிலும் உலாவினாள். அவள் சித்தம் சதா புரியாத பல விஷயங்களாலும் கேள்வி களாலும் தினம் தினம் பீடிக்கப்பட்டதால் அவள் அவற்றை அலசி அவற்றுக்கு விடை கண்டுபிடிக்கவே முயன்று கொண்டிருந்தாளாகையால் சுற்றுலகத்தை அவள் அடியோடு மறந்தாள். கடற்சிப்பியைத் தன் வாயில் பொருத்தி இப்படி ஊத வேண்டும் என்று இளைய பல்லவன் காட்டியதையும், தான் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் அவன் உத்தர விட்டதையும் எண்ணி எண்ணிக் குழம்பினாள் அவள். அந்தக் கடற்சிப்பியை ஊதியபிறகு அதன் மர்மம் பெரிதும்

உடைந்துவிட்டதானாலும், அது உடைந்த விதத்தை மட்டும் அவளால் மறக்க முடியவே இல்லை. கடற் சிப்பியை ஊதினதும் திடீரென்று மாளிகைக்குள் கத வொன்று பெரும் சத்தத்துடன் திறந்ததும், சில விநாடி களுக்கெல்லாம் யாரோ ஓடிவரும் காலடியோசை கேட்டதும் ஏதோ சொப்பனத்தில் நடப்பது போல சதா அவள் சித்தத்தில் வலம் வந்துகொண்டிருந்தன. அந்தக் காலடியோசை தனது தந்தையின் காலடியோசைதா னென்பது அவர் தோட்டத்துக்குள் வந்தபின்பு அறிந்ததும் தன் வியப்பு பன்மடங்காகி விட்டதன்றி அவர் காட்டிய கலவரமும் கேள்விகளைக் கேட்டுத் தன்னைத் திணறடித்து விட்டதையும் எண்ணிப் பார்த்த அவள் அவற்றுக் கெல்லாம் காரணம் தெரியாமல் தவித்தாள். கடற்சிப்பி ஊதப்பட்டதும், ஆந்தைகள் அலறும் சத்தம் எழுந்ததே விசித்திரமாயிருந்தது அவளுக்கு. அந்தச் சத்தத்தைக் கேட்டுத் தந்தை ஓடி வந்தது அதை விட விசித்திரமா யிருந்தது மஞ்சளழகிக்கு. அப்படி ஓடி வந்த தந்தை கேட்ட கேள்விகள் அப்போது அவள் சித்தத்தில் எழுந்தன. மாளிகையிலிருந்து பலவர்மன் வேகமாகத் தோட்டத் துக்குள் வந்தவன், நேராக அந்த மரத்தை நாடி வந்தது அவள் மனக்கண்முன் நன்றாக எழுந்தது. அப்பப்பா அவர் முகத்தில்தான் எத்தனை கலவரம்? எத்தனைக் குழப்பம்! அப்படி பலவர்மன் நிலை குலைந்ததை அவள் கண்டதே இல்லை. முகத்தில் குழப்பம், திகில், சந்தேகம் ஆகிய பல உணர்ச்சிகள் கலந்து பாய நேராக மரத்தடியை நோக்கி வந்த பலவர்மன் அங்கிருந்தது தன் மகளென்பதை அறிந்தவுடன், "யார்? நீயா? நீ இங்கே எதற்காக வந்தாய்?" என்று கோபம் கொழுந்துவிட்டெரிய சொற்களைக் கொட்டினான்.

"ஏன்? நான் இங்கு வரக்கூடாதா?" என்று கேட்டாள் அவள்.

"வரலாம், வரலாம். இரவில் ஏன் வர வேண்டும்?" என்று குழறினான் பலவர்மன்.

"இரவில் நான் இங்கு வருவது வழக்கந்தானே, புதிதல்லவே?"

"புதிதல்ல, புதிதல்ல, இருப்பினும் இந்த மரத்தடி, இந்த மரம்..."

'இந்த மரத்துக்கென்ன? நீண்ட நாளாக இருக்கிறது!"

"இருக்கிறது இருக்கிறது! இருந்தாலும் அதில் ஏன் சாய்ந்து கொண்டிருக்கிறாய்?"

"ஏன், சாயக்கூடாது?"

"சாயலாம். சரி சரி, இங்கு யார் வந்தார்கள்?"

"யாரும் வரவில்லையே!"

பலவர்மன் கோபம் கட்டுக் கடங்காததாயிற்று. "பொய்! பொய்! சுத்தப் பொய். ஆந்தை அலறிய சத்தம் என் காதில் விழுந்தது." என்றான் பலவர்மன் சொற்களில் உஷ்ணம் ஊடுருவி நிற்க.

"பட்சியைச் சொல்கிறீர்களா? பட்சி வந்திருக்கலாம்," என்றாள் அலட்சியத்துடன் மஞ்சளழகி.

"பட்சியல்ல, வந்தது மனிதன். ஆந்தைக் குரல் கேட்டது எனக்கு," என்று சீறினான் பலவர்மன்.

"மனிதன் ஆந்தையா!" உள்ளத்திலே சஞ்சலமிருந் தாலும் வறட்டுச் சிரிப்பை உதடுகளில் வலுக்கட்டாயமாக வரவழைத்துக் கொண்டு கேட்டாள் மஞ்சளழகி.

"விளையாடாதே! மனிதன் ஆந்தையல்ல."

"அப்படியானால் ஏன் பதறுகிறீர்கள்?"

"இங்கு ஒருவன் வந்திருக்கிறான், அவன்..."

"அவன் ஆந்தை போல் கூவுவானாக்கும்..."

"ஆம். கூவுவான்."

"அவனை எனக்குத் தெரியும்."

"தெரியுமா? எங்கு போய்விட்டான்?"

"எங்கும் போகவில்லை. இங்குதான் இருக்கிறான்."

"எங்கே? எங்கே?" இப்படிக் கேட்டுக்கொண்டு சுற்று முற்றும் நோக்கினான் பலவர்மன்.

"இங்கே! இங்கே," என்று அதுவரை மறைத்து வைத்திருந்த கடற்சிப்பியைக் காட்டினாள் மஞ்சளழகி.

அதை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்ட பலவர்மன் மிகுந்த சந்தேகத்துடன் மகளை நோக்கினான். "இதை நீதான் ஊதினாயா?" என்றும் கேட்டான்.

"ஆம்." என்றாள் மஞ்சளழகி.

"இது ஏது உனக்கு?" கடுமையுடன் எழுந்தது பலவர்மன் கேள்வி.

"இங்கு மரத்தடியில் கிடந்தது" என்றாள் அவள்.

பலவர்மன் பெரும் சுமையை இறக்கியவன் போல் பெரு மூச்சு விட்டான். அத்துடன், "மடையன்! மடையன்! எத்தனை அஜாக்கிரதை! நல்லவேளை, இது இவள் கையில் கிடைத்ததே," என்று சற்று இரைந்தே சொன்னான்.

"யார் போட்டுவிட்டது இதை?" என்று கேட்டாள் அவள்.

"இடும்பன்..." என்று வாய் தவறி அசப்பில் சொல்லி விட்ட பலவர்மன் சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டு, "யாராயிருந்தால் உனக்கென்ன? வா உள்ளே!" என்று அவளைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு மாளிகை நோக்கி நடந்தான். மனத்தில் பல யோசனைகள் அலைபாய அவனுடன் சென்றாள் அன்று மஞ்சளழகி. அந்த இரவின் நிகழ்ச்சிகள் அவள் மனத்தை விட்டு அகலவேயில்லை. நான்கு நாள்களுக்குப் பிறகு கடற் கரையில் உலாவிய போது கூட ஏதோ நாடகம் நடப்பது போல் அவள் மனக்கண்ணில் அந்தச் சம்பவம் எழுந்து உலாவிக் கொண்டிருந்தது! இடும்பன் பெயரை உச்சரித்ததி லிருந்து பல விஷயங்கள் அவளுக்கு வெட்ட வெளிச்ச மாயின. மெள்ள மெள்ளக் கொள்ளைகாரர்களை விசாரித்ததில் சூளூ இனத்தார் கடலோடுபவர்களால்தான்

கடலாழத்தில் இருந்து ஏதோ புதுவிதக் கடற்சிப்பியை எடுத்து வருவது வழக்கமென்றும் அதில் ஊதல் செய்து ஊதி, தங்கள் சகாக்களை அழைப்பது வழக்கமென்றும் அறிந்தாள் மஞ்சளழகி. என்ன காரணத்தாலோ சூளுக் களின் தலைவனான இடும்பன் தனது தந்தையை நந்த வனத்துக்கு அழைத்திருக்கிறானென்றும், போகும்போது தவறிக் கடற்சிப்பியைப் போட்டுவிட்டுப் போயிருக்க வேண்டுமென்றும் அனுமானித்தாள் அவள். ஆனால் அந்தச் சிப்பி இளையபல்லவனிடம் எப்படி அகப்பட்டது? அதை ஊதும் முறை அவனுக்கு எப்படித் தெரிந்தது என்ற விஷயங்களை மட்டும் அவளால் ஊகிக்க முடியவில்லை. இடும்பன் தானாகவே வந்து தந்தையைக் காண முயன் றானா அல்லது தந்தைதான் அவனை வரவழைத்தாரா? வரவழைத்தால் இளைய பல்லவன் நகரத்தைச் சுற்றி ஏற்படுத்தியிருக்கும் கடுங்காவலை மீறி அவன் எப்படி வர முடிந்தது? இப்படிப் பல கேள்விகளைக் கேட்டும் அவளுக்கு ஏதும் பதில் கிடைக்கவில்லை. ஒன்று மட்டும் அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அனைவரையும் மீறிய பெரும் மர்மம் அக்ஷயமுனையை வளைத்துக் கொண்டிருக் கிறது. அதற்குப் பலவர்மன், இளையபல்லவன் ஆகிய இருவரில் ஒருவரோ இருவருமோ காரணம், என்பதுதான் அது.

அத்தகைய எண்ணங்களுடனும், எண்ணங்களால் ஏற்பட்ட கவலையுடனும் அடுத்த சில நாள்கள் அவள் மாளிகையில் அதிக நேரம் இருக்காமல் கோட்டைக் குள்ளும் கடற்கரையிலும் நடமாடி வந்தாள். கடற்கரையில் அவள் கவலையைத் தீர்க்க எழுந்த தெய்வப் பறவைபோல் எழுந்து கொண்டிருந்தது, இளையபல்லவன் கடல்புறா. கண்டியத்தேவன் மேற்பார்வையில் பிரதிதினம் தொழில் வல்லுநர் மிக மும்முரத்துடன், கப்பலை மாற்றியமைத்து வந்ததையும் அந்த மரக்கலத்தின் அமைப்பே புதுவிதமாக இருந்ததையும் கவனித்த மஞ்சளழகி தான் மனக்

கவலையை மாற்றிக் கொள்ளத் தினந்தோறும் நீண்ட நேரம் நீர்க்கரையின் முகப்பிலேயே கழித்து வந்தாள். வேலை நடந்துகொண்டிருந்த இடத்திற்குச் சற்றுத் தள்ளி நீர்க் கரையில் அமர்ந்த அக்ஷயமுனையின் அழகி அந்தக் கப்பலின் அழகைக் கண்டு வியந்தாள்.

கண்டியத்தேவன் கடற்புறாவுக்கு வெகு துரிதமாக உருக்கொடுத்துக் கொண்டிருந்தான். கரையில் நன்றாக இழுக்கப்பட்டு, பாதி நீரிலும் பாதி தரையிலுமாகச் சற்றே சாய்ந்திருந்த அந்தப் பெரும் மரக்கலத்தில் தளங்களின் பழைய பாய்மரங்கள் நீக்கப்பட்டு, பகிட்பாரிஸான் காட்டுப் பகுதியின் வயிரம் பாய்ந்த மரங்கள் பாய் கட்டப் பொருத்தப்பட்டபடியால் சில நாள்களுக்குள்ளாகவே இணையற்ற கம்பீரத்தை அடைந்தது அந்த மரக்கலம். சீனத்து மரக்கலத்தின் நான்கு பாய்மரங்களுக்குப் பதில் ஆறு பாய்மரங்கள் அந்த மரக்கலத்தில் பொருத்தப்பட்டன. அவற்றில் மூன்று சிறியதாகவும் மூன்று பெரியதாகவும் இருந்ததையும் கண்ட மஞ்சளழகி அப்படியேன் பலபடி பாய்மரங்களை அமைக்கிறார்கள் என்பதை அறியாமல் குழம்பினாள். அதுமட்டுமல்ல, நடுவிலிருக்க வேண்டிய கப்பல் தலைவன் அறையைக் கப்பலின் முகப்பில் அமைத்துக் கொண்டிருப்பது அத்தனை உசிதமா என்ற சந்தேகமும் அவளுக்கு எழுந்தது. அந்தச் சந்தேகத்தைக் கண்டியத்தேவனையே கேட்டாள் அவள்.

"முகப்பில் தலைவர் அறை இருப்பது உசிதமா தேவரே!" என்ற அவள் கேள்விக்கு, "அக்ரமந்திரத்தை அமைப்பது இப்படித்தான்" என்று கண்டியத்தேவன் பதில் சொன்னான்.

"அப்படியானால் மரக்கலத் தலைவனும் முகப்பில் தானே இருக்கமுடியும்?" என்று வினவினாள் மஞ்சளழகி.

"ஆம்," என்றான் தேவன்.

"போர் ஏற்படும்போது முகப்பில் இருப்பவருக்கு ஆபத்து ஏற்படுமே," என்று அவள் கவலையுடன் கேட்டாள்.

"அக்ரமந்திரத்தில் முகப்பில் ஆபத்தில்லை," என்றான் தேவன்.

"ஏன்?" என்று வினவினாள் அவள்.

"அறையின் அமைப்பு அப்படி. மரக்கலத்தின் அமைப்பும் அப்படி. எதிரிகள் அம்புகளையோ வேல் களையோ வீசும்போது முகப்பைத் தாழ்த்த இந்த போர்க் கப்பலில் வசதி உண்டு. அதற்காகவே இதன் முன்புறத்தைச் சற்றுத் தாழ்த்தியும் பின்புறத்தைச் சற்றுத் தூக்கியும் அமைக்கிறோம். அமைப்பே இப்படி. தவிர துடுப்புகள் துழாவும் போது பின்புறத் துடுப்புகளை ஆழத்தில் துழாவி, சுக்கானையும் அழுத்திப் பிடித்தால் மரக்கலம் முகப்பைச் சற்றுத் தாழ்த்திக்கொண்டு மீனைப் பிடிக்கச் செல்லும் மீன்கொத்தி போல் விர்ரென்று நீரைப் பிளந்து செல்லும். தூர இருந்து பார்ப்பவர்களுக்குக் கப்பல் மூழ்கிப் போய் விடுவது போலத் தோன்றும். ஆனால் அந்தச் சமயத்தில் தான் இந்த மரக்கலம் அபாயமானது. இதன் மீது வீசப்படும் அம்புகளும் வேல்களும் முகப்பு தாழ்ந்திருப்பதால் அக்ர மந்திரத்தைத் தொடாமல் பின்பக்கம் சென்றுவிடும். இங்கு இருந்து எய்யப்படும் அம்புகள், நேராக எதிரிக் கப்பலைத் தாக்கும்." என்று விளக்கினான் தேவன்.

இப்படிச் சில நாள்கள் பல விஷயங்களைப் பற்றி விவாதித்த மஞ்சளழகி பாரத நாட்டு மரக்கலக் கலையைப் பற்றியும் கடற்போர் முறைகளைப் பற்றியும் பல விஷயங் களை அறிந்துகொண்டாள். அவள் மரக்கலக் கலையில் காட்டிய சிரத்தையைப் பற்றிக் கண்டியத்தேவன் பெரிதும் ஆச்சரியப்பட்டான். மரக்கலத்தைப் பற்றிய பல விஷயங்

களை அவள் ஏற்கெனவே அறிந்திருந்ததும் அவனுக்கு வியப்பாயிருந்தது. மரக்கலத்தைக் கட்டும் பெரும் பொறுப்புச் சுமை மஞ்சளழகியின் சம்பாஷணையாலும் சிரத்தையாலும் பெரிதும் மட்டுப்பட்டது கண்டியத் தேவனுக்கு. அடிக்கடி அவளைத் தளத்துக்கு அழைத்துச் சென்று மரக்கலத்தைத் தான் அமைக்கும் முறைகளைக் காட்டினான். மரக்கலத்தின் பாய்மரங்களையும் மரக் கலத்தின் வளைந்த ஓரங்களில் படுத்துக்கிடந்த பெரும் விற்களையும், வேல் வீசும் யந்திரங்களையும், எரியம்பு வீசும் சாதனங்களையும், அவற்றை இயக்கும் முறைகளையும் விளக்கினான். கண்டியத்தேவன் திறமையைப் பெரிதும் பாராட்டினாள் மஞ்சளழகி. ஆனால் அந்தப் பாராட்டு தலை ஒப்பாத கண்டியத்தேவன், "என்னைப் பாராட்டிப் பயன் இல்லை மகாராணி! நீங்கள் பாராட்ட வேண்டி யவர் இளையபல்லவர்," என்றான் ஒருநாள்.

"இளையபல்லவரா இந்த மரக்கலத்தை அமைக் கிறார்" என்று கேட்டாள் அவள்.

"ஆம்."

"அவருக்கு என்ன தெரியும் இதில்?"

"அப்படித்தான் நானும் முதலில் நினைத்தேன். தரைப்படையை நடத்தும் தலைவருக்கு மரக்கலத்தின் மர்மங்கள் எப்படித் தெரியும் என்று. ஆனால் அவருக்குச் சகலமும் தெரிந்திருக்கிறது. அவர் ஆலோசனைப்படியே இந்த மரக்கலத்தின் ஒவ்வோர் அணுவும் மாற்றி அமைக்கப் பட்டிருக்கிறது."

மஞ்சளழகி பிரமித்தாள். அத்துடன் கேட்டாள், "இதை ஏன் புறாவைப்போல் அமைக்கிறீர்கள்?" என்று.

"இளையபல்லவர் உத்தரவு."

"சுயபுத்தியோடு உத்தரவு போடுகிறாரா அவர்?"

"முதலில் குடிவெறியில் ஏதோ சொல்கிறாரென்று நினைத்தேன். பிறகு யோசித்துப் பார்த்ததில் மிகுந்த நினைப்புடன் அவர் முடிவுகளைச் செய்வது புரிகிறது."

"இதற்கு என்ன பெயரிடப் போகிறீர்கள்?"

"'கடல் புறா' என்று."

"அதையும் இளையபல்லவர்தான் சொன்னாரா?"

"ஆம்."

"ஏன் அப்படிப் பெயரிட வேண்டும்?"

"நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஊகம்தான்..." என்று இழுத்தான் கண்டியத்தேவன்.

"ஊகத்தைத்தான் சொல்லுங்களேன்," என்று கேட்டாள் மஞ்சளழகி.

"அவரும் காஞ்சனாதேவியும் முதலில் பாலூர்ப் பெருந்துறையில் சந்தித்தார்கள்..." மென்று விழுங்கினான் தேவன்.

"ஆம் ஆம். அதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்." மஞ்சளழகியின் குரலில் மகிழ்ச்சியற்றிருந்தது.

"அவர்கள் வெளிநாட்டுப் பிரமுகர் வீதி மாளிகையிலிருந்தபோது தூதுப் புறா ஒன்றை அநபாயர் அனுப்பினார்."

"அநபாயரா?"

"ஆம். சோழமண்டலத்தின் இளவரசர்."

"உம்."

"அந்தத் தூதுப் புறா மர்மத்தை விளக்கியவர் இளையபல்லவர்."

"அப்படியா?"

"ஆம். அந்தப் புறா மிக அழகாயிருக்கும்."

"ஊஹூம்?"

"அதைப்பற்றி, சென்ற ஒரு வருடத்தில் பலமுறை இளையபல்லவர் பேசியிருக்கிறார்?"

"என்ன பேசியிருக்கிறார்?"

"அந்தத் தூதுப் புறாவே அவர்கள் இருவரையும் இணைத்ததாக..."

"சரி சொல்லும்..."

"அந்த நினைப்பின் அடையாளமாக, கடாரத்துக் கட்டழகியின் நினைவாக, இந்தக் கடல் புறா சிருஷ்டிக்கப் படுகிறது என்பது என் ஊகம்."

மஞ்சளழகி கண்டியத்தேவனை எரித்துவிடுவது போல் பார்த்தாள். "போதும் உங்கள் ஊகம், நிறுத்துங்கள்" என்று இரைந்து கூவிவிட்டு வெகு வேகமாகத் தளத்தின் பலகைகளில் ஓடிப் பக்கவாட்டு நூலேணியில் வெகு அவசரமாக இறங்கி, துடியிடை துவள, உடலும் உணர்ச்சி களும் குலுங்கக் கோட்டையை நோக்கிப் பறந்தாள் அந்தப் பைங்கிளி.

மூச்சுத் தெறிக்க ஓடிய அவள், கோட்டை வாயிலில் யார்மீதோ திடீரென மோதிக்கொண்டாள். தலை நிமிர்ந்து நோக்கினாள். இளையபல்லவன் அவளை இறுக்கிப் பிடித் திருந்தான்.

"விடுங்கள் என்னை" என்று திமிறினாள் அவள்.

அந்த இரும்புக் கரங்கள் அவளை அசையவிட வில்லை. "எங்கு ஓடுகிறாய் மஞ்சளழகி?"

"உங்கள் காதலியைக் கேளுங்கள்!"

"பதறாதே மஞ்சளழகி. யார் என் காதலி!" என்று கேட்டான் அவன்.

"அதோ இருக்கிறாள்" என்று கடல் புறாவைச் சுட்டிக் காட்டினாள் அவள்.

"மரக்கலமா?"

"மரக்கலமல்ல. உங்கள் மனக்கலம் அது. அதில் வீற்றிருக்கிறாள் உங்கள் காதலி. அதுவே உங்கள் மனப்

பெண். அதோ தெரிகிறதே கடல்புறா, கடல் கன்னி" என்று ஒரு கையைத் திமிறி அவன் மார்பில் அடித்தாள் மஞ்சளழகி.

அவளைப் பிடித்த பிடியை விடாமல் கடற் புறாவை நோக்கினான் இளையபல்லவன். கடற் புறாவின் முகப்பு மூக்கை அப்பொழுதுதான் பொருத்தத் துவங்கினான் கண்டியத்தேவன். அதன் அழகிய மூக்கு மஞ்சளழகியை நோக்கியது. மூக்குப் பலகைகளில் ஆணிகளை வைத்து தச்சர் இறுக்கினர். ஆணிகள் இறங்கிய சத்தம் மஞ்சளழகி யின் காதில் பெரிதாக ஒலித்தது. அந்த ஆணிகள் தன் இதயத்தில் இறங்குவதாகவே அவள் நினைத்தாள். உணர்ச்சி மிகுதியால் மூர்ச்சை போட்டு இளையபல்லவன் மார்பில் சாய்ந்துவிட்டாள். அவளைத் தூக்கித் தோளில் போட்டுக்கொண்டு மாளிகையை நோக்கி நடந்தான் இளையபல்லவன். அவனை வரவேற்க வாயிலில் காத்திருந் தான் பலவர்மன் முகத்தில் வெற்றிக் குறியுடன். அந்தக் குறிக்குக் காரணம் முதலில் விளங்கவில்லை இளைய பல்லவனுக்கு. அன்று மாலை சேந்தன் சில விவரங்களை உளறிக் கொட்டியபோதுதான் இளையபல்லவன் கார ணத்தைப் புரிந்துகொண்டான். புரிந்து கொண்டதும் அமீரை வரவழைத்து, "அமீர்! நமது நடவடிக்கைக்குச் சமயம் நெருங்கிவிட்டது" என்று அறிவித்தான். அதை அறிவித்த இளையபல்லவன் குரல் வறண்டு கிடந்தது. வறட்சிக்குக் காரணம் புரிந்தது அமீருக்கு. அடுத்த நடவடிக்கை அக்ஷயமுனைக் கோட்டையின் கதியை நிர்ணயிக்கும் என்பதை உணர்ந்துகொண்ட அமீர், "உத்தர விடுங்கள் படைத்தலைவரே" என்றான். உத்தரவுகள் மிகத் துரிதமாகவும் திட்டமாகவும் விளக்கமாகவும் வெளி வந்தன. "பயங்கரமான உத்தரவுகள்தான். ஆனால் வேறு வழியில்லை" என்று அமீர் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அத்தியாயம் 42

# பலப் பரீட்சை

மயக்கமுற்ற மஞ்சளழகியைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வந்த இளையபல்லவனை மாளிகை வாயிலில் சந்தித்த பலவர்மன், "ஏன் தூக்கி வருகிறீர்கள் என் மகளை? இவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று கவலையுடன் வினவிய சமயத்திலும் அவன் குரலில் மித மிஞ்சிய கவலைக்குப் பதில் ஓரளவு குதூகலமே ஊடுருவி நின்றதைக் கவனித்த இளையபல்லவன் அதைக் கவனித்தும் கவனிக்காதவன்போல், "கோட்டையின் உஷ்ணம், அதனால் மூர்ச்சையடைந்து விட்டாள்" என்று பதில் கூறினான்.

பலவர்மன் முகத்தில் கவலைக் குறியையே அதிக மாகக் காட்டி, "உங்கள் நாட்டைவிட இந்த நாட்டில் உஷ்ணம் அதிகம்" என்றான்.

"ஆம். ஆம். அப்படித்தான் தெரிகிறது" என்று பதில் சொன்ன இளையபல்லவன் மாளிகைக்குள் நுழைய முயன்றான்.

அவனுக்கு வழி விடாமலே நின்ற பலவர்மன், "இந்த அபரிமித உஷ்ணத்துக்குக் காரணம் தெரியுமா?" என்றும் வினவினான்.

"தெரியும். பூமத்தியரேகை இந்தத் தீவின் குறுக்கே ஓடுகிறது" என்றான் இளையபல்லவன்.

"அது அத்தனை பெரிய காரணமல்ல."

"வேறு எது?"

# 42. பலப் பரீட்சை



"பகிட்பாரிஸான்."

"எரிமலையா?"

"ஆம். அது உள்ளூர எப்பொழுதும் குமுறிக் கொண்டிருக்கிறது. அது எப்பொழுது வெடிக்கும் என்பது யாருக்கும் தெரியாது."

"எரிமலைகளின் தன்மையே அப்படித்தான்."

"அல்ல அல்ல. சில எரிமலைகள் வெடிப்பதற்குப் பூர்வாங்கமாகப் பெரும் ஜ்வாலைகளை இரண்டு நாள்கள் வீசும். பகிட்பாரிஸான் அத்தனை அவகாசம் கூடக் கொடுக்காது. திடீரெனச் சீறும். சீறினால் அதைச் சமாளிப்பது கஷ்டம். அக்ஷயமுனையும் அப்படித்தான்."

"இந்தத் துறைமுகமா?"

"ஆம் இளையபல்லவரே! இதன் அரசியலும் எரிமலையைப் போன்றது. திடீரென மாறவல்லது. திடீரென இங்கு சம்பவங்கள் ஏற்படும். எதிர்பாராத மாற்றங்கள் கண்ணிமைக்கும் நேரத்தில் இங்கு ஏற்பட்டிருக்கின்றன. இதுவும் ஓர் எரிமலை! இதன் உஷ்ணத்தையும் இதன் விவரம் அறியாதவர்கள் சகிக்க முடியாது."

"பலவர்மன் மேலுக்குக் கவலையுடனும் உள்ளே உற்சாகத்துடனும் பேசிய பேச்சின் பொருள் இளைய பல்லவனுக்குப் புரிந்தாலும், காரணம் மட்டும் புரியாததால், "உங்கள் துறைமுக உஷ்ணத்தின் முதல் பலியாக மகள் மூர்ச்சையாகி விட்டாள். உங்களையும் பாதிக்கப் போகிறது. எச்சரிக்கையாயிருங்கள்" என்று சொல்லிவிட்டு பலவர்மனை இடித்துத் தள்ளி வழி ஏற்படுத்திக்கொண்டு மாளிகைக்குள் சென்று மஞ்சளழகியின் அறைப் பஞ்சணையில் அவளைக் கிடத்தினான். பிறகு அவள் தோழிகளை அழைத்து அவளை ஜாக்கிரதையாகக் கவனிக்கும்

படி உத்தரவிட்டு மீண்டும் கடற்கரையை நோக்கிச் சென்றான். கடற்கரையில் கடற்புறா நிர்மாணிக்கப்பட்டு வந்த இடத்துக்கு வந்ததும் அதை நீண்ட நேரம் ஏறிட்டு நோக்கிய இளையபல்லவன் புறாவின் அழகிய மூக்கையும் பெரும் இறக்கைகளையும் கண்களிருக்க வேண்டிய இடத்திலிருந்த பெரும் துவாரங்களையும் பார்த்துப் பூர்ண திருப்திக்கு அடையாளமாகத் தலையை ஆட்டிக் கொண்டான். அதன் பக்கப்பகுதியில் தொங்கிக் கொண் டிருந்த நூலேணியின் வழியாக அந்தப் பெரும் மரக் கலத்தின் தளத்துக்கும் ஏறிச் சென்று அங்கு நடந்து கொண்டிருந்த வேலை முறையையும் கவனித்தான். அந்த மரக்கலத்தின் தளத்தில் பக்கப் பலகைகளுக்கு அருகில் மறைந்து கிடந்த போர்க்கலங்களையும் அவற்றைத் தூக்கி நிறுத்தவும், படுக்க வைக்கவும் பல கோணங்களில் சாய்க்கவும் அமைக்கப்பட்டிருந்த மர உருளைகள், இரும்புச் சலாகைகள், இவற்றையும் ஊன்றிப் பார்த்த இளையபல்லவன் இதழ்களில் திருப்தியின் புன்னகை யொன்று படர்ந்தது. அதையொட்டி முகத்திலும் பெருமிதச் சாயை விரிந்தது.

இளையபல்லவன் தளத்திலேறியதும், அவனை எதிர் கொண்ட கண்டியத்தேவனும், அவனைப் பின்பற்றித் தளத்தில் உலாவி, அவன் முகத்தில் விரிந்த பெருமிதச் சாயையைக் கண்டு உள்ளத்தில் உவகை கொண்டான். அத்துடன், “நன்றி இளையபல்லவரே!” என்றும் கூறினான்.

இளையபல்லவன் தன் கூரிய விழிகளை அவன் பக்கம் திருப்பி, “எதற்கு நன்றி தேவரே?” என்று வினவி னான்.

“உங்கள் முகத்தில் திருப்தியின் குறி தெரிகிறது?” தயக்கமின்றி வந்தது கண்டியத்தேவன் பதில்.

"உள்ளத்தில் திருப்தி ஏற்பட்டால் முகத்தில் தெரியாதா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"தெரிந்தது. அதற்குத் தான் நன்றி கூறினேன்."

"நன்றி எதற்கு?"

"தொழில் செய்பவனுக்கு, தன் தொழில் பிறருக்குத் திருப்தியளிக்கிறது என்பதைவிடப் பெரும் ஊதியமோ பரிசோ கிடையாது."

"உண்மை."

"அதிலிருக்கும் மகிழ்ச்சி வேறெதிலும் இல்லை."

"ஆமாம்."

"என் வேலையைப் பற்றி நீங்கள் திருப்தியடைந்திருக்கிறீர்கள். பெருமையும் அடைந்திருக்கிறீர்கள். அது எனக்குப் பெரும் சன்மானமல்லவா?"

"ஆம்."

"அதற்காகத்தான் நன்றி தெரிவித்தேன். ஆனால் இதில் முழு பெருமை என்னுடையதல்ல. உங்கள் கருத்துப்படி மாற்றியமைக்கிறேன். அவ்வளவுதான்."

"கருத்துக்கு உருக்கொடுப்பது அத்தனை எளிதல்ல தேவரே. உமது முயற்சியில்லையேல் இத்தனைத் துரிதமாக இந்த மரக்கலம் தயாராகாது. அதுவும் இத்தனை அழகாகத் தயாராகாது..." என்று சிலாகித்த இளையபல்லவனை இடைமறித்த கண்டியத்தேவன் சொன்னான்: "இதற்குள் சிலாகித்துவிடாதீர்கள் படைத்தலைவரே, இன்னும் ஐந்து நாள்கள் கழித்துப் பாருங்கள்."

இளையபல்லவன் சரேலென இமைகளை வியப்புடன் தூக்கினான். "என்ன? இன்னும் ஐந்து நாள்கள் கழித்தா?" என்றும் வினவினான் குரலில் வியப்பின் ஒலி மண்டிக்கிடக்க.

"ஆம். ஐந்தே நாள்கள்!" என்றான் கண்டியத்தேவன்.

"அதற்குள்_?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"மரக்கலம் தயாராகிவிடும்," என்றான் தேவன்.

இளையபல்லவன் பதில் திட்டமாகவும் மிக வேக மாகவும் வெளிவந்தது. "கூடாது, கூடாது. இன்னும் பத்து நாள்களுக்கு இது முடியக்கூடாது."

"ஏன் கூடாது?" கண்டியத்தேவன் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"மரக்கலத்தை மாற்றியமைக்க ஒரு மாதம் கேட்டீரே?"

"ஆம். கேட்டேன்."

"இன்னும் ஒரு மாதம் ஆகவில்லையே."

"பத்து நாள்களில் ஆகிவிடும்."

"சரி, பத்து நாள்கள் எடுத்துக் கொள்ளும்."

"அத்தனை நாள்களுக்கு வேலை இல்லையே?"

"வேலையில்லாவிட்டால் கப்பலை அழகுபடுத்தும். ஏதாவது செய்யும். வேலை மட்டும் பத்து நாள்களுக்கு முன்பு, முடியக்கூடாது."

"ஏன்?"

"அமாவாசைக்கு எத்தனை நாள் இருக்கிறது?"

"இன்றுதான் பௌர்ணமி, இன்னும் பதினைந்து நாள்கள் இருக்கின்றன."

"அதுவரையில் காலம் கடத்தலாம்."

இளையபல்லவனின் இந்தக் கண்டிப்பான உத்தரவு களுக்குக் காரணம் தெரியாத கண்டியத்தேவன் வியப்பின் எல்லையைத் தொட்டான். 'தாமதத்துக்குத்தான் தார்க் கோல் போடுவார்கள். துரிதத்துக்குத் தடைபோடும் படைத் தலைவனை இதுவரையில் நான் கண்டதில்லை.' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான் கண்டியத்

தேவன். அப்படித் திட்டமாக உத்தரவிட்ட இளைய பல்லவன் மரக்கல வேலை முழுதும் முடிந்தபிறகு தனக்குச் சொல்ல வேண்டுமென்றும், தனக்குச் சொல்லாமல் நீருக்குள் இழுத்து மிதக்கவிட வேண்டாமென்றும் ஆணை யிட்டு மீண்டும் கோட்டைக்குச் சென்றான். கோட்டைக் குள் சென்றவன் நேராக மாளிகைக்குச் செல்லாமல், அங்கிருந்த மதுக்கடையொன்றில் குடித்து விட்டு நகரத்தைச் சுற்றுவதிலும், பகிட்பாரிஸான் மலையும் காடும் அணைத்திருந்த கோட்டைச் சுவர்ப் பகுதியிலும் காலம் கழித்தான். ஏதோ அர்த்தமில்லாத பல பேச்சுக்களை அமீருடன் பேசிக் கொண்டிருந்தான். காவல் வேளையில் தன்னைத் தொந்தரவு செய்ய வேண்டாமென்று அமீர் பலபேர் எதிரில் கடிந்துகொண்டு பிடித்துத் தள்ளிய பின்புதான் இளையபல்லவன் மாளிகைக்கு வந்து மாடி யறையிலுள்ள தன் பஞ்சணையில் பொத்தென்று விழுந்தான். விழுந்தவன் அலுப்பால் கண்களையும் மூடி உறங்கினான். அப்படி உறங்கியவன், யாரோ பிடித்து உலுக்கவே கண் விழித்ததும் பஞ்சணையின் பக்கத்தில் நின்றிருந்த கூலவாணிகனைப் பார்த்ததும், பேராச்சரிய மடைந்தான். கூலவாணிகன் முகத்தில் கோபத்தின் குறி கொந்தளித்துக் கொண்டிருந்தது.

"ஏன் சேந்தா? ஏன் என்னை எழுப்புகிறாய்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"தீபம் வைத்து இப்பொழுது இரண்டு நாழிகைகள் ஆகிவிட்டன," என்றான் சேந்தன் கோபத்துடன்.

"ஆகட்டும்," என்றான் இளையபல்லவன்.

"உறக்கத்துக்கு இது சமயமல்ல." என்றான் சேந்தன்

"ஏன்?"

"மற்றவர்கள் விழித்திருக்கிறார்கள்."

"யார் அந்த மற்றவர்?"

"எதிரிகள்."

"பூர்வகுடிகளா?"

"அவர்களை விடக் கொடியவன்."

"யார், பலவர்மனா?"

"ஆம்."

"அவனால் நமக்கென்ன ஆபத்து."

"நம்மைப்போல் உறங்காததுதான் ஆபத்து."

"உறங்காமல் என்ன செய்கிறான்?"

"நம்மைக் கண்காணித்து வருகிறான்," என்ற சேந்தன் குரல் கவலையுடன் ஒலித்தது.

"எப்படித் தெரியும் உனக்கு?" இளையபல்லவன் கேள்வி வியப்புடன் எழுந்தது.

சேந்தன் சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு மெல்லச் சென்று அறைக் கதவைத் தாளிட்டு வந்தான். "நீங்கள் அவன் கழுத்துச்சாவியில் மெழுகை ஒற்றி எடுக்கக் கட்டளையிட்டீர்கள் அல்லவா?" என்று மெல்லிய குரலில் கேட்டான்.

"ஆம்," என்றான் படைத்தலைவன்.

"அது பலவர்மனுக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது," என்று கூறிய சேந்தன் இளையபல்லவனை உற்றுநோக்கினான். அவன் எதிர்பார்த்த ஆச்சரியமோ திகைப்போ இளையப்பல்லவன் முகத்தில் உதயமாகாதிருக்கவே, "ஏன் இது உங்களுக்கு முன்பே தெரியுமா?" என்று வினவினான்.

"எது?" புதிதாகக் கேட்பவன் போல் கேள்வியை வீசினான் இளையபல்லவன்.

"பலவர்மனுக்குத் தெரியுமென்பது."

"எனக்கெப்படித் தெரியும்?"

"பின் ஏன் பதற்றப்படாதிருக்கிறீர்கள்?"

"ஏன் பதற்றப்பட வேண்டும்?"

"நம் திட்டம் எதிரிக்குத் தெரிந்துவிட்டதே?"

"அந்தத் திட்டம் நிறைவேறவில்லையே?"

"நிறைவேறியிருந்தால் நன்றாயிருக்கும்."

"ஏன்?"

"அப்பொழுது நாலுபேர் பரிகாசத்துக்கு நான் இலக்காகியிருக்க மாட்டேன்."

"யார் பரிகசித்தார்கள் உன்னை?"

"நீங்களும் அமீரும் முதலில். இப்பொழுது இந்தப் பலவர்மன்."

இதைக் கேட்டதும் இளையபல்லவன் விழிகள் திடீரெனப் பளிச்சிட்டன. "உன்னைப் பலவர்மன் பரிகசித்தானா!" என்றும் வினவினான் படைத்தலைவன் சந்தேகம் தொனித்த குரலில்.

படைத்தலைவனையும் உணர்ச்சி பெறச் செய்து விட்டதால் உள்ளூர மகிழ்ச்சியடைந்த சேந்தன், "ஆம் படைத்தலைவரே! பரிகசித்தான். முதலில் அல்ல கடைசியில்," என்றான்.

"முதலில் என்ன கேட்டான்?" இதற்குள் இளைய பல்லவன் சாதாரண நிலையை அடைந்துவிட்டதால் கேள்வியும் சர்வ சகஜமாகவே எழுந்தது.

"நேற்றிரவு பலவர்மன் என் அறைக்குள் சர்வசகஜ மாக வந்தான். பொக்கிஷத்தை நான் பாதுகாக்கும் முறையைப் பற்றிப் பெரிதும் பாராட்டினான். பிறகு..." இங்கு சற்றுத் தயங்கினான் சேந்தன்.

"பிறகு?" இளையபல்லவன் பஞ்சணையில் மீண்டும் சாய்ந்துகொண்டு கேட்டான். "திடீரெனத் தன் கழுத்துச்

சங்கிலியிருந்த சாவியைக் காட்டினான்" என்று சேந்தன் பயத்துடன் சொன்னான்.

இளையபல்லவன் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை நிலவியது.

"உம்." என்ற சத்தம் மேற்கொண்டு விஷயங்களைச் சொல்லச் சேந்தனைத் தூண்டியது.

சேந்தன் சொன்னான்: "சாவியைக் காட்டி அது எப்படி இருக்கிறது என்று கேட்டான். நன்றாயிருக்கிறது என்று சொன்னேன். 'ஏற்கெனவே இதைப் பார்த்திருக் கிறாயா' என்று கேட்டான். சற்றுத் தயங்கினேன். பிறகு பார்த்திருப்பதாகச் சொன்னேன். எப்பொழுது என்று கேட்டான். அவனை யாரோ குத்திக் கொலை செய்ய முயன்றபோது பார்த்ததாகச் சொன்னேன். அவன் பெரிதாக நகைத்தான். என் கோபம் எல்லை மீறியது. அவன் ரத்த வெள்ளத்தில் கிடந்ததை நான் கண்டதாகக் கூறினேன். அவன் முதுகைத் திறந்து காட்டினான். அதில் கத்திக் குத்தின் அடையாளம் ஏதுமில்லை. அப்படியானால் ரத்தம் எங்கிருந்து வந்தது என்று கேட்டேன். உன் களிமண் மண்டையிலிருந்துதான் வந்திருக்க வேண்டும் என்று கூறி என் மண்டையிலும் இரண்டு தட்டுத் தட்டிவிட்டுச் சென்றான்..."

"அப்புறம்?" இளையபல்லவன் கேட்டான், குரலில் சிறிது சாந்தியுடன்.

"அவன் வெளியில் நகைப்பது என் காதுக்கு விழுந்தது. யாரிடமோ எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று சொல்லிச் சென்றான். எனக்கு அவமானம் தாங்க முடியவில்லை," என்றான்.

"சரி, தொலையட்டும்," என்றான் இளையபல்லவன்.

"எது தொலையட்டும்? என்னை அந்த அயோக்கியன் நகையாடியதா?"

"அவன் வேறு என்ன செய்ய முடியும்?"

"என்ன செய்ய முடியுமா?"

"ஆமாம் சேந்தா. உயிருடனிருப்பவனைச் செத்து விட்டதாகச் சொன்னால் அவன் வேறு எப்படி நினைக்க முடியும்?"

"அப்படியானால் நான் கண்ணால் பார்த்தது பொய்யா?"

இளையபல்லவன் சேந்தனை உற்றுப் பார்த்து நகைத்தான். "சேந்தா! பலவர்மன் சொன்னது ஒருவேளை..." என்று இழுத்தான் நகைப்புக்கிடையே.

"உண்மையாயிருக்கும் போல் தோன்றுகிறதா? இளையபல்லவரே, நான் பைத்தியமல்ல..."

"எந்தப் பைத்தியம் தன்னைப் பைத்தியமென்று ஒப்புக்கொண்டது?"

இதைக் கேட்ட சேந்தன் இளையபல்லவனை எரித்து விடுபவன் போல் பார்த்துவிட்டு அறைக்கதவைத் திறந்து கொண்டு வெளியே வெகு வேகமாகச் சென்றுவிட்டான். அதுவரை இளையபல்லவன் இதழிலிருந்த ஏளனச் சிரிப்பு மறைந்தது. அதன் இடத்தைத் தீவிர யோசனை ஆக்கிர மித்துக் கொண்டது. அறையின் மூலை மஞ்சத்திலிருந்த மதுக்குப்பியைக் கையிலெடுத்துக் கொண்ட இளைய பல்லவன் காவலரில் ஒருவனை அழைத்து அமீரை உடனே கூப்பிடும்படி உத்தரவிட்டான்.

இரவின் முதல் ஜாமம் முடியும் நேரத்தில் வந்த அமீரை நோக்கிய இளையபல்லவன், "அமீர்! பலவர்மன் நம்மைச் சந்தேகிக்கிறான்," என்றான்.

"எதைப்பற்றி?" என்று அமீர் கேட்டான்.

"ஓலைபற்றிச் சேந்தனை ஏதோ விசாரித்திருக் கிறான்."

"உண்மை தெரிந்துவிட்டதா?"

"இல்லை, இன்னும் இல்லை. ஆனால் பலவர்மனைப் போன்ற ஒரு வஞ்சகனுக்கு உண்மையை ஊகிப்பது கஷ்டம் அல்ல."

"ஆகவே..."

"இன்றிலிருந்து பதினான்காவது நாள் இரவு நடவடிக்கை தொடங்க வேண்டும்."

"அன்றுடன் ஒன்றரை மாத காலம் ஓடிவிடுகிறது."

"சரியாயிருக்கும்."

இருவர் கண்களும் சந்தித்தன. "அதற்குள்..." என்று கவலை மிகுந்த குரலில் கேட்டான் அமீர்.

"எல்லாம் தயாராகிவிடும்."

"அன்றிரவு?"

"பலப்பரீட்சை நடக்கும். நமது பலம் அதிகமா பலவர்மன் பலம் அதிகமா என்பது புலப்பட்டுவிடும்."

"புலப்பட்டுவிடும். ஆனால் அதனால் எத்தனை பேர் உயிர்..." என்று வருந்தினான் அமீர்.

"பெரும் சாதனைகளின் அஸ்திவாரமே தியாகம்" என்று ஆழ்ந்த மந்திரம் போல் ஒலித்த குரலில் கூறினான் இளையபல்லவன்.

இருவரும் நினைத்து நினைத்து ஓரளவு அச்சமும் பட்ட அந்த இரவு மெள்ள மெள்ள வந்தது.

அத்தியாயம் 43

# இனிப்பும் கசப்பும்

அக்ஷயமுனையில் இறுதியாக நடவடிக்கை தொடங்க வேண்டுமென்று இளையபல்லவன் அமீருடன் திட்டமிட்ட இரவுக்கும் அந்தத் திட்டப்படி நடவடிக்கை தொடங்கப்பட்ட இரவுக்கும் இடையே விரவிக்கிடந்த பதின்மூன்று நாள்களைப் படைத்தலைவன் பலவிதமாகக் கழித்தான். அவன் போக்கும் செய்கையும் உத்தரவுகளும் நாளுக்கு நாள் வித்தியாசப்பட்டு வந்தாலும் சில சமயங்களில் ஒன்றுக்கொன்று அடியோடு முரண்பட்டிருந் தாலும் எந்த யோசனையுடன் எதை உத்தேசித்து அவன் நடந்துகொள்கிறான் என்பது, அக்ஷயமுனைவாசிகளுக்கு மட்டுமல்ல, பலவர்மனுக்கும் மஞ்சளழகிக்குங்கூடப் புரியாத புதிராயிருந்தது. சில சமயங்களில் அவன் உத்தரவு களைப் பிறப்பித்த போது பூரணமாக மது அருந்தியிருந்த தாலும் ஏதாவது யோசனையோ உத்தேசமோ அவனுக்கு இருக்கிறதா என்று சந்தேகங்கூடப் பலருக்கும் ஏற்படவே இத்தகைய குடிகாரனை நம்பியிருப்பது உசிதமா என்ற சந்தேகங்கூட அக்ஷயமுனை மக்கள் மனத்திலும் கடற் கரைக் கொள்ளைக்காரர் இதயத்திலும் எழுந்திருக்கவே செய்தது. அவன் இட்டது போன்ற உத்தரவுகளை வேறு யார் இட்டிருந்தாலும் அக்ஷயமுனை மக்களும் கொள் ளைக்காரரும் புறக்கணித்திருப்பார்கள். ஆனால் என்ன காரணத்தாலோ இளையபல்லவன் இட்ட உத்தரவுகளை அத்தனை அவநம்பிக்கையிலும் நிறைவேற்றுவதிலேயே முனைந்தார்கள். ஒவ்வொரு முறையும் அவன் உத்தர

விட்டபோதும் அதை ஒப்புக்கொள்ளும்படி ஏதோ ஓர் இனம் புரியாத அபூர்வ சக்தி ஒன்று அவர்களை உந்தவே செய்தது. குடிவெறியில் உளறலுடன் உத்தரவுகள் வெளி வந்தபோது இடையிடையே திடீரெனக் கண்களில் தெரிந்த ஈட்டிப் பார்வைகள் உத்தரவை மீறுவது பெரும் அபாயம் என்பதை எச்சரிக்கை செய்தன. தடுமாறிய சமயங்களிலும் இடைஇடையே சுறீல் சுறீலென உதிர்ந்த சொற்கள் மேலுக்கு அர்த்தமற்றவைபோல் தெரிந்தாலும் உண்மை யில் பொருள் உள்ளவை என்பது புலனாயிற்று. ஆகவே, படைத்தலைவன் இடும் எந்த உத்தரவையும் தீவிரமாக எதிர்க்காமல் அக்ஷய முனைவாசிகள் நிறைவேற்றியே வந்தார்கள்.

படைத்தலைவன் அன்றாடம் பிறப்பித்து வந்த உத்தரவுகளையும் அவற்றை நகர மக்களும் மற்றோரும் முழு மூச்சுடன் நிறைவேற்றி வந்ததையும் ஒற்றர்கள் மூலமும் நேரிலும் அறிந்த பலவர்மன், 'இந்தப் பைத்தியக்கார உத்தரவுகளை எதற்காக நிறைவேற்றுகிறார்கள்?' என்று பலமுறை தன்னைத்தானே கேட்டுக்கொண்டு விடை காணாமல் தவித்தான். அமாவாசை தோன்றுவதற்கு ஐந்து நாள்களுக்கு முன்பே இளையபல்லவன் மரக்கலம் பூரணமாகப் பழுது பார்க்கப்பட்டுப் புது உருப்பெற்று அக்ஷயமுனையை விழுங்க வந்திருக்கும் அசுரப்பறவை போல் நின்றதைக் கண்டு பெரிதும் கலங்கிய பலவர்மன், அதை நீரில் மிதக்கவிட வேண்டாமென்று கரையில் இழுத்தது இழுத்தபடியே கிடக்கட்டுமென்று படைத் தலைவன் பிறப்பித்த உத்தரவைக் கேட்டு, பெரும் நிம்மதி யடைந்தானென்றாலும், அந்த உத்தரவை இளைய பல்லவன் சுயபுத்தியோடு பிறப்பித்தது மட்டும் பெரிய வியப்பையே கொடுத்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு. அந்த உத்தரவைத் தன் முன்னிலையிலே

பிறப்பிக்கப்பட்டது. விந்தையிலும் விந்தையாயிருந்தது அந்த வஞ்சகனுக்கு. இளையபல்லவனும் அமீரும் நடவடிக்கைக்குத் திட்டமிட்ட இரவிலிருந்து ஒன்பதாவது நாள் மாலையில் நடந்த நிகழ்ச்சி அது. அந்த நிகழ்ச்சி உண்மையில் பெரும் மகிழ்ச்சியையே பலவர்மனுக்கு அளித்தது.

அமாவாசை இருள் கவிய அடுத்து ஐந்து நாள்கள் இருந்த அந்த மாலை நேரத்தில் அக்ஷயமுனைக் கோட்டையை நோக்கி ஒரு கண்ணையும், கடலின் பெரும் நீர்ப்பரப்பை நோக்கி மற்றொரு கண்ணையும், காட்டிக் கொண்டு பெரும் இறக்கைகளுடனும், சற்றே மழுங்கிய பின்பகுதியின் காரணமாகப் பயங்கரத்துடன் அழகையும் இணைத்துக் கொண்டு நின்ற அந்தப் பெரும் மரக்கலத்தை நோக்கி இளையபல்லவன் நடந்து செல்வதை உப்பரிகையிலிருந்து கவனித்த பலவர்மனும் அந்த மரக்கலத்தால் கவரப்பட்டவனாகி உப்பரிகையிலிருந்து இறங்கிக் காவலரையும் அழைத்துக் கொள்ளாமல் தனது புரவியிலேறிக் கடற்கரையை நோக்கிச் சென்றான். கடற்கரையை நோக்கியிருந்த கோட்டை வாசலுக்கு வந்ததும் கொம்புகளை ஊத எடுத்த காவலரையும் வேண்டாம் என்று சைகை செய்து, புரவியிலிருந்து இறங்கி எந்த ஆடம்பர அறிவிப்புமின்றிக் கடற்கரை மணலில் நடந்து மரக்கலம் இருந்த இடத்தை நோக்கிச் சென்றான். அவன் செல்வதை, கடற்கரைக் கொள்ளையரும் நோக்கியதால் அவர்களில் சிலரும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள். பலவர்மன் முன் செல்ல, பின்னால் கொள்ளையர் தொடரச் சென்ற கூட்டம் மரக்கலமிருந்த இடத்துக்கு வந்ததும் மரக்கலத்தை நோக்கிக் கொண்டிருந்த இளையபல்லவன் நீண்ட நேரம் மட்டும் அவர்கள் யாரையும் கவனிக்காமல் மரக்கலத்தையே நோக்கிக் கொண்டு நின்றான். அவன் அப்படி

மரக்கலத்தைப் பார்த்து மயங்கி நின்றதற்குக் காரணம் இருக்கிறதென்பதைப் புரிந்துகொண்ட பலவர்மனும், "ஆம் ஆம்! மிகப் பலமான மரக்கலம், என்ன அழகு! எத்தனை கவர்ச்சி!" என்று வாய்விட்டுச் சிலாகித்தான்.

பலவர்மன் சிலாகித்த சொற்கள் காதில் விழுந்த பின்னும் சில நிமிஷங்கள் பேசாமலே நின்று கொண்டிருந்த இளையபல்லவன் கடைசியில் பலவர்மனை நோக்கித் திரும்பி, "ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் பிரதான கோட்டைத் தலைவருக்கு என் மரக்கலம் பிடித்திருப்பது பற்றி நான் பெரு மகிழ்ச்சியடைகிறேன்," என்றான்.

"ஸ்ரீவிஜயத்தின், பிரதான கோட்டை இதுவல்ல," என்று புன்முறுவலுடன் பதிலுரைத்தான் பலவர்மன்.

"யார் சொன்னது?" என்று வினவினான் இளைய பல்லவனும் குறுநகை கொண்டு.

"நான்தான் சொல்கிறேன். ஸ்ரீவிஜய நகரத்தின் துறைமுகத்தை நீங்கள் பார்த்ததில்லை. பார்த்திருந்தால் இதைப் பாராட்டமாட்டீர்கள்" என்றான் பலவர்மன்.

"அத்தனை பெரிதா தலைநகரக் கோட்டை?" என்று வினவினான் இளையபல்லவன்.

"ஆம். அதைவிடப் பலமான கோட்டையோ சிறந்த துறைமுகமோ ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தில் வேறெங்கும் கிடையாது" என்ற பலவர்மன் சொற்களில் பெருமை யிருந்தது.

"ஆனால் அதன் பலமும் அழகும் பயனற்றதா யிருக்கிறதே!" என்று பெருமூச்சு விட்டான் இளைய பல்லவன்.

"ஏன்?" வியப்புடன் எழுந்தது பலவர்மன் கேள்வி.

"நீங்களே சொல்லியிருக்கிறீர்கள் சூளு இனத்தார் தான் ஸ்ரீவிஜயத்தின் கடல் பலம் என்று."

"ஆம் சொன்னேன். அதுதான் உண்மையுங்கூட."

"அந்தச் சூளுக்கள் இந்தத் தீவின் மேற்குப் பகுதியில் வசிக்கிறார்கள். அங்குள்ள துறைமுகங்களிலிருந்து அவர்கள் மரக்கலங்கள் ஓடுகின்றன. அவற்றுக்கு ஆதரவாகவும், அவற்றைப் பழுது பார்க்கவும் எதிரிக் கப்பல்கள் அதிகமாக வந்து மறைந்து நிற்கவும் இருப்பது இந்த அக்ஷய முனை தான்."

"ஆம், ஆம்"

"ஆகையால் ஸ்ரீவிஜயத்தின் சார்பாக நடத்தப்படும் கடற்போரோ கடற்கொள்ளையோ இந்தத் துறைமுகத்திலிருந்துதானே நடக்கிறது."

"கடற்கொள்ளையென்று அதற்குப் பெயரல்ல, தற்காப்புக்காக நடத்தப்படும் போர்."

"பெயரில் என்ன இருக்கிறது? நடப்பது எதுவாயிருந்தாலும் இங்கிருந்துதானே நடக்கிறது?"

"ஆம்."

"அத்தனை பாதுகாப்பை நீரில் அளிக்கும் இந்தத் துறைமுகத்தைவிட ஸ்ரீவிஜய நகரத் துறைமுகம் எப்படிச் சிறந்ததாகும்?"

இந்தக் கேள்வி ஓரளவு திருப்தியைத் தந்தாலும் பலவர்மன் அதை வெளிக்குக் காட்டாமல், "இருப்பினும் தலைநகரத் துறைமுகத்தின் முக்கியத்துவம் இதற்கு வருமா?" என்று கேட்டான்.

"முக்கியத்துவமென்பதும் அல்லாததும் உபயோகத்தைப் பொறுத்திருக்கிறது. இது அத்தனை முக்கியமென்று நினைக்காவிட்டால் நான் இங்கு வருவேனா?" என்று கூறிப் பெரிதாக நகைத்தான் இளையபல்லவன். அவன் சிரிப்புக்குக் காரணம் தெரியாததால் பிரமிப்புடன் அவனைப் பார்த்த பலவர்மனை மீண்டும் நோக்கிச்

சொன்னான் இளையபல்லவன். "பலவர்மரே! இந்தக் கோட்டை அத்தனை முக்கியமல்ல என்று நினைத்திருந் தால் நான் இங்கு வந்திருக்கவும் மாட்டேன். இத்தனை பெரிய இணையற்ற கப்பலை இந்த இடத்தில் நிர்மாணம் செய்திருக்கவும் மாட்டேன்," என்று.

பலவர்மன் எதிரேயிருந்த மரக்கலத்தின் மீது சில விநாடிகள் கண்களை ஓட்டினான். "மரக்கலம் மிகவும் அழகாயிருக்கிறது இளையபல்லவரே! ஆனால் இணை யற்றது என்று சொல்லும்படி இதில் என்ன இருக்கிறது?" என்று வினவவும் செய்தான்.

இளையபல்லவன் கண்கள் பலவர்மன் முகத்தை விட்டு எதிரே நின்ற மரக்கலத்தின் மீது சஞ்சரித்தன. அதைப் பார்க்கப் பார்க்க அவன் கண்களில் பெருமை பெரிதாக விரிந்து அந்தப் பெருமையின் சாயை முகத்தை யும் பூராவாக ஆக்ரமித்துக் கொண்டது. ஏதோ கனவில் பேசுவது போல் பேசினான் இளையபல்லவன். "பல வர்மரே! கப்பல்களைப் பற்றியோ கடற்போரைப் பற்றியோ நீண்ட நாள் வரை நான் ஏதும் அறியாதவன். சோழ நாட்டுத் தரைப்படைகளைப் பல சமயங்களில் நடத்தியிருக்கிறேன். பெரும் போர்களில் பங்கு கொண் டிருக்கிறேன். ஆனால் தென் கலிங்க மன்னன் பீமன் உதவியால் கடலோடும் வசதி பெற்றேன். அவன் தமிழர் களைத் துன்புறுத்தி, என்னையும் என் துணைவர்களையும் தொலைக்கத் திட்டமிட்டிருக்காவிட்டால் மரக்கலமேறும் பாக்கியமோ கடற் போர் பயிற்சி பெறும் வசதியோ எனக்குக் கிடைத்திருக்காது. கடலோடிய பின் அகூதாவிட மிருந்து பலவிதப் போர் முறைகளைக் கற்றேன். நான் இஷ்டப்பட்டால் இந்தத் துறைமுகத்தை ஒரே இரவில் அழித்துவிடும் வல்லமை எனக்குண்டு. நான் அதைச் செய்யாததற்குப் பலத்த காரணங்கள் உண்டு. இந்தத்

துறைமுகம் எனக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கிறது. என் மரக்கலத்தைப் புதிதாக அமைக்க இடம் கொடுத்திருக் கிறது. அப்படி இடம் கொடுத்ததால் நான் பெரும் பலம் பெற்றிருக்கிறேன்.” இந்த இடத்தில் பேச்சைச் சிறிது நிறுத்தினான் இளைய பல்லவன்.

பலவர்மன் ஏதும் விளங்காமல் இளையபல்லவனை நோக்கினான். பிறகு கேட்டான்; “என்ன பெரும் பலம் அது?” என்று.

இளையபல்லவன் முகத்தில் கனவும் பெருமையும் கலந்து தாண்டவமாடின. “இதோ காட்டுகிறேன் பாருங்கள் பலவர்மரே!” என்று கனவில் பேசுபவன் போல் கூறிய இளையபல்லவன் பக்கத்திலிருந்த கண்டியத் தேவனை நோக்கி, “கோட்டைத் தலைவர் கேட்டது காதில் விழுந்ததா தேவரே?” என்று வினவினான்.

“விழுந்தது.” சங்கடத்துடன் வெளிவந்தது கண்டியத் தேவன் பதில்.

“சரி, நமது பலத்தைப் புலப்படுத்துங்கள்,” என்று உத்தரவிட்டான் இளையபல்லவன்.

அந்த உத்தரவை நிறைவேற்றத். தயங்கினான்” கண்டியத்தேவன் “இப்போது என்ன அவசரம் அதற்கு?” என்றும் வினவினான்.

“கோட்டைத் தலைவர் விரும்புகிறார்” என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

“அவர் விரும்பினால்?”

“அவர் கோட்டையின் உபதளபதி என்ற முறையில் அவர் விருப்பத்தை நிறைவேற்றுவது எனது கடமை அல்லவா?”

“இருப்பினும் மரக்கலத்தின் சக்தி, அதன் மர்மம்...”

"பலவர்மருக்குத் தெரிந்தாலென்ன? அவர் மகளையே எனக்கு மணம் செய்விக்கப் போகிறார், அவரிடமிருந்து ரகசியமெதற்கு நமக்கு?"

இளையபல்லவனைத் தீய்த்து விடுபவன்போல் பார்த்தான் கண்டியத்தேவன். வஞ்சகனான பலவர்ம னுக்கு மரக்கலத்தின் ரகசியத்தைக் காட்டுவது எத்தனை அபாயம் என்பது அவனுக்குப் புரிந்திருந்தது. அதுவும் அத்தனை கொள்ளைக்காரர் முன்னிலையிலும் ரகசி யத்தை விளக்கினால் அது ரகசியமாகுமா என்ற நினைப்பும் ஏற்படவே தேவன் கண்கள் நெருப்பைக் கக்கின. அவன் சீற்றத்தைக் கண்ட இளையபல்லவன் மெல்ல நகைத்து விட்டுச் சொன்னான்: "தேவரே! மனிதன் மனிதனை நம்ப வேண்டும். நம்பாவிட்டால் உலகம் வாழ்வது கஷ்டம்."

"நம்பத்தகாத மனிதர்களும் உண்டு. வெளியிடக் கூடாத ரகசியங்களும் உண்டு," என்றான் தேவன்.

"என் மாமன் நம்பத் தகுந்தவர். இதோ இருக்கும் எனது நண்பர்களும் நம்பத் தகுந்தவர்கள்," என்றான் இளையபல்லவன்.

இதைக் கேட்ட பலவர்மனுக்கும் சரி, கொள்ளை யருக்கும் சரி, அவன் தங்களைப் பாராட்டுகிறானா அல்லது ஏளனம் செய்கிறானா என்பது புலப்படாததால் சற்று நேரம் ஏதும் பேசாமல் நின்றனர். இளையபல்லவன் அடுத்து இட்ட உத்தரவு அவர்களிடை நம்பிக்கையை விளைவித்தது. "ஆகட்டும் தேவரே! இந்த மரக்கலம் என்ன செய்ய முடியும் என்பதை அவர்களுக்குக் காட்டும்" என்றான். அவன் குரலிலிருந்த கடுமையைக் கண்ட கண்டியத்தேவன் அதற்குமேல் ஏதும் பேசாமல், மரக்கலத் தின் மீதிருந்த மாலுமிகளை நோக்கி, "எல்லோரும் அவரவர் இருப்பிடம் செல்லுங்கள். யந்திரங்கள் சுழலட்டும்," என்று இரைந்து கூவினான்.

பலவர்மனையும் கொள்ளையரையும் பிரமிக்க வைக்கும் சம்பவங்கள் அடுத்த விநாடிகளில் நிகழ்ந்தன. மாலுமிகள் சிலர் திடுதிடுவென அந்தக் கடற்புறாவின் தளத்தில் ஓடுவது அனைவர் காதிலும் விழுந்தது. "உம்! தள்ளுங்கள்! தள்ளுங்கள்!" என்று எச்சரித்துக்கொண்டே கண்டியத்தேவன் மரக்கலத்திலிருந்து பல அடிகள் பின்னுக்கு நகர்ந்தான். அவன் சைகையைத் தொடர்ந்து இளைய பல்லவனும் மற்றோரும் பின்னடைந்தனர். அடுத்த விநாடி கப்பல் தளத்திலிருந்து பெரும் மர உருளைகள் திருப்பப்பட்டதால் விபரீதமான பல சப்தங்கள் காதில் விழுந்தன. அந்தச் சப்தங்கள் காதில் விழுந்துகொண்டேயிருக்கையில் கடல் புறா தனது பெரும் இறகுகளை மெள்ளத் தூக்கியது. கடல் நீர்ப்பரப்பை நோக்கியிருந்த இறகு கரையில் நின்றவர் கண்களுக்குப் புலனாகாவிட்டாலும் கரைப்பக்கமிருந்த இறகு புலனானதால் அதைக் கண்டவர் பிரமித்தனர். பக்கப் பகுதியிலிருந்து பெரிதாக எழுந்த அந்த இறகு அங்கிருந்த அனைவருக்கும் பந்தலிடுவது போல் அவர்களின் தலைகளின் மீது பரந்து நின்றது. திரும்பி அந்த இறகு மட்டும் திடீரெனக் கீழே இறக்கினால் தாங்கள் அனைவரும் அதன் இறகுக்கும் இறகு தாங்கியிருந்த பக்கப் பெரும் பலகைக்கும் இடையே அரைக்கப்படலாமென்பதைக் கொள்ளையரும் பலவர்மனும் புரிந்துகொண்டதன்றி, இறகு விரிந்து எழுந்ததால் மேற்பகுதியில் தளமும் விரிந்துவிட்டதென்பதையும், அந்த இறகில் மட்டும் நூறு வீரர்களுக்கு மேல் நின்று சண்டையிடலாமென்றும் அறிந்து கொண்டார்கள்.

அந்த இறகின் எழுச்சியைத் தொடர்ந்து மற்றும் சில உருளைகள் சுழன்ற சத்தம் மீண்டும் கேட்டது. அடுத்த விநாடி பக்கப் பலகையில் சில பகுதிகள் சின்னஞ்சிறு கதவுகளாகத் திறந்ததன்றி அவை ஒவ்வொன்றிலிருந்தும்

பெரும் ஈட்டியொன்றும் வெளிவந்தது. மறுபடியும் ஈட்டிகள் திடீரென உள்ளடங்கின. அனைவரையும் மேலும் பின்னடையச் செய்து கண்டியத்தேவன் இறகுகளைப் பழையபடி இறக்க உத்தரவிட்டான். இறகுகள் இறங்க, பயங்கர ஈட்டிகள் மறைய, பழையபடி அழகு பெற்ற அந்தக் கடல் புறாவைப் பெரும் மலைப்புடன் பார்த்தான் பலவர்மன். எந்த உணர்ச்சியையும் காட்டாத அவன் வஞ்சக முகத்திலும் உணர்ச்சிகள் தாண்டவமாடின. "பயங்கரம்! பயங்கரம்!" என்ற சொற்களும் பயத்துடன் அவன் இதழ்களிலிருந்து உதிர்ந்தன.

இளையபல்லவன் இதழ்களில் இளநகை விரிந்தது. "பலவர்மரே! இந்தப் பறவையும் இந்தக் கோட்டையைப் போலத்தான். அழகும் பயங்கரமும் நிறைந்தது. இந்த மரக்கலத்தைப் போரில் வெல்வது எளிதல்ல. இதன் சூட்சுமத்தில் ஒரு பகுதியைத்தான் உமக்குக் காட்டியிருக் கிறேன்; இது முழுதும் தயாராகட்டும். மீதியைக் காட்டு கிறேன்," என்றான் படைத்தலைவன் குரலில் மகிழ்ச்சி ததும்ப.

"முழுதும் தயாராகிவிட்டது படைத்தலைவரே" திடீரெனக் குறுக்கே புகுந்தது கண்டியத்தேவனின் குரல்.

இளையபல்லவன் அவனை ஒரே விநாடி நோக்கி னான். "நல்லது நல்லது தேவரே! இத்தனை சீக்கிரம் மரக்கலத்தை அமைத்துவிடுவீர் என்று நான் எதிர்பார்க்க வில்லை" என்றும் சொன்னான், ஏதோ விளங்காத ஒலி படைத்த குரலில்.

"முடிந்துவிட்டது படைத்தலைவரே, இன்றே கடலோடவும் போர் புரியவும் இந்த மரக்கலத்தால் முடியும். உங்கள் உத்தரவுக்குத்தான் காத்திருக்கிறேன்," என்றான் கண்டியத்தேவன்.

"எதற்கு உத்தரவு?" என்று வினவினான் படைத் தலைவன்.

"நீரில் மரக்கலத்தை மிதக்கவிட," என்றான் தேவன்.

இதைக் கேட்ட பலவர்மன் முகத்தில் திடீரெனப் பயத்தின் சாயை படர்ந்தது. அதைக் கணநேரத்தில் கவனித்த இளையபல்லவன் திருப்திக்கு அடையாளமாகப் பெருமூச்சு விட்டான். பிறகு கூறினான்; "சில நாள்கள் போகட்டும் தேவரே," என்று.

"மிதக்கவிடவா!" தேவன் குரலில் வியப்பு ஒலித்தது.

"ஆம்."

"தண்ணீரிலிருந்தால்தான் மரக்கலத்துக்குச் சக்தி உண்டு."

"தெரியும்."

"கரையில் கிடக்கும் மரக்கலம் கரையிலிருக்கும் முதலையைப் போன்றது. சக்தியற்றது."

"அதுவும் தெரியும்."

"தெரிந்துமா...!" மேற்கொண்டு பேசவில்லை தேவன். அவன் முகத்தில் வெறுப்பு அதிகமாக மண்டிக் கிடந்தது.

"ஆம், தெரிந்துதான் சொல்கிறேன். இன்னும் சில தினங்கள் இது கரையில் இருக்கட்டும். நீரில் இருந்தால் இது துறைமுகத்தைத் தடுத்து நிற்கும். மற்ற மரக்கலங்கள் துறைமுகத்தில் நுழைய முடியாது," என்றான் இளைய பல்லவன்.

அவன் உத்தரவு மேலும் மேலும் பிரமிப்பையே அளித்தது கண்டியத்தேவனுக்கு. 'மற்ற மரக்கலங்களைத் தடை செய்வதுதானே போர்க்கலத்தின் தொழில்! அதை ஏன் தடுக்கிறார் இவர்? அதுவும் அபாயம் எதிர்நோக்கி யிருக்கும் இந்த நிலையில்?" என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான் கண்டியத்தேவன். கண்டியத் தேவனுக்குக் கசப்பாயிருந்த அந்த உத்தரவு, இனிப்பா யிருந்தது பலவர்மனுக்கு. அவனுக்கு மேலும் கரும்பா

யிருக்கும் வார்த்தைகளைச் சொன்னான் இளைய பல்லவன். "தேவரே! வேறு எந்த மரக்கலம் துறைமுகத்தில் நுழைந்தாலும் நீங்கள் தடை செய்ய வேண்டாம். தடை செய்ய நமக்கு என்ன உரிமையிருக்கிறது? தடை செய்ய வேண்டியவர் இவர்!" என்று பலவர்மனைக் காட்டி விட்டுக் கோட்டையை நோக்கி நடக்கத் துவங்கினான் இளைய பல்லவன்.

அவன் போகும் திக்கைச் சில விநாடிகள் பார்த்து விட்டுக் கடல்புறாவையும் நோக்கிவிட்டு மனத்திலிருந்து இறங்கிய சுமையுடன் மாளிகை அறைக்குத் திரும்பி ஆசனத்தில் பொத்தென்று விழுந்தான் பலவர்மன். அப்பொழுது இரவு மூண்டு தீபங்கள் எரிந்துகொண் டிருந்தன. 'தப்பினேன் இன்று, நல்லவேளை, இளைய பல்லவன் முட்டாள்தனமாக உத்தரவை இட்டான். இல்லையேல் நாளை இரவு வரவேண்டிய இடும்பன் எப்படி வருவான்? அந்த அசுரப் பறவையை யார் தாண்டி வர முடியும்? அப்பப்பா! சோழ நாட்டு மரக்கல வித்தையில்தான் எத்தனை மர்மங்கள்! இப்பொழுது புரிகிறது. ஏன் சோழர்களுக்குக் கடாரம் பணிந்ததென்று' என்று தனக்குள்ளேயே பலமுறை சொல்லிக்கொண்டான். அப்படிச் சொல்லிக்கொண்டே, அந்த நினைப்பிலேயே கண்களை மூடினான். மூடியவன் தூக்கத்திலும் பேசினான். "உத்தரவு நல்லது. கண்டியத்தேவனுக்குக் கசப்பு எனக்கு இனிப்பு," என்று முணுமணுத்தான். அப்படி முணுமுணுத் தவன் யாரோ தன்னை உலுக்குவதை உணர்ந்து கண் விழித்தான். அவன் கண்களுக்கெதிரே மஞ்சளழகி நின்றிருந் தாள். அவள் நிலையைக் கண்டு பலவர்மன் அதிர்ச்சி யடைந்தான்.

அத்தியாயம் 44

# அக்ரமந்திரம் மூடுமந்திரம்

**உ**றங்கிக் கிடந்த தன்னைத் தொட்டு உலுக்கி எழுப்பிய மஞ்சளழகியின் நிலை கண்டு பலவர்மன் பேரதிர்ச்சியடைந்தானென்றால் அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. முகத்தில் குறுவேர்வை துளிர்த்துக் கிடக்க, அடர்ந்த கருங்கூந்தல் சற்றே பிரிந்து அலைந்து கிடக்க, ஆடையும் சீர்கெட்டுக் கிடக்கப் பெருமூச்சு வாங்க நின்ற தன் வளர்ப்பு மகளைக் கண்ட பலவர்மன், "என்னம்மா? என்ன நேர்ந்துவிட்டது உனக்கு? ஏனிந்த அலங்கோலம்?" என்று வினவினான்.

"படைத்தலைவரைக் கேளுங்கள்; முதலில் அவரை ஓர் அறையில் அடைத்து வையுங்கள்," என்று பெருமூச்சு வாங்க, பேச்சில் சீற்றம் மிதமிஞ்சித் தொனிக்கச் சொன்னாள் மஞ்சளழகி.

"யார், இளையபல்லவனையா?" என்று கேட்டுக் கொண்டே உறக்கத்தின் மிச்சத்தை உதறிவிட்டு எழுந்து மகளை அணுகிக் கேட்டான் பலவர்மன்.

"ஆம்." என்றாள் மஞ்சளழகி பெருமூச்சுக்கிடையே.

"ஏன்? என்ன செய்தான் அவன்?" என்று கவலையுடன் கேட்டான் பலவர்மன்.

"சற்று முன்பு என் அறைக்கு வந்தார்..." என்று தயங்கினாள் மஞ்சளழகி.

"சொல்லம்மா..." பலவர்மன் குரலில் ஆதரவும் அன்பும் ஒலித்தன.

“வந்தவர் குடித்திருந்தார்...”

“அதுதான் தெரிந்த விஷயமாயிற்றே.”

“இன்றைய குடி மிகவும் அதிகமாயிருந்தது.”

“எப்பொழுதும் அத்துமீறித்தான் குடிக்கிறான்.”

“அத்துமீறிய குடியிலும் ஓரளவு நிதானமிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். இன்று அடியோடு மோசம்.”

“சரி, குடித்துவிட்டு வந்தான். அப்புறம்...”

“ஏதேதோ உளறினார்.”

“என்ன உளறினான்?”

“உங்களை என் விரோதி என்று சொன்னார்.”

பலவர்மன் மார்பு திக்கு திக்கென்று அடித்துக் கொண்டது. “சொல் மேலே என்ன சொன்னான்?” என்று வினவினான் கலவரத்துடன்.

“தான்தான் என்னைக் காப்பாற்ற முடியும் என்று சொன்னார்.”

“அதற்கு என்ன செய்வதாக உத்தேசமாம்?”

“இன்று முதல் நானிருக்கும் அறை அபாயமாம்...”

மஞ்சளழகி பெரும் சங்கடத்துக்குள்ளானாள். மேலே சொல்ல முடியாமல் தலை குனிந்தாள்.

பலவர்மன் முகத்தில் ஈயாடவில்லை. “அப்புறம் என்ன சொன்னான்?” என்று கேட்டான் அச்சத்துடன்.

“நாளைக்கு எனது அறை அதிக அபாயமென்றும், ஆகவே ஆகவே” என்று ஏதோ சொல்ல முயன்று முடியாமல் தவித்தாள் மஞ்சளழகி.

“பாதகமில்லை, சொல்! எதுவாயிருந்தாலும் சொல்!” பயம் உச்சஸ்தாயிக்குச் செல்லக் கேட்டான் பதற்றத்துடன் பலவர்மன்.

மஞ்சளழகி நிலத்தை நோக்கிக்கொண்டு, "ஆகவே தனது அறைக்கு அழைத்தார்..." என்றாள். இதைச் சொன்னதும் கண்களைத் தூக்கிப் பலவர்மனைப் பார்க்கவும் செய்தாள்.

நியாயமாக இதைக் கேட்டதும் கொதித்தெழ வேண்டிய பலவர்மன் முகத்தில் ஏதோ பெரும் ஆயாசம் தீர்ந்ததற்கு அறிகுறியாக சாந்தி படர்ந்தது. ஆனால் குரலில் மட்டும் அவன் கொதிப்பைக் காட்டி, "அப்படியா சொன்னான் அயோக்கியன்! அவனை ஒழித்துக் கட்டி விடுகிறேன். கொஞ்சம் பொறு" என்றான்.

மஞ்சளழகி விழிகளில் சீற்றம் நிரம்பி நின்றது. "பொறுக்கிற விஷயமா இது?" என்று வினவினாள்.

"இல்லையம்மா, கொஞ்சம் அவகாசம் கொடு" என்றான் பலவர்மன்.

"நல்ல லட்சணம், இன்னோர் ஆடவன் தனது அறைக்கு என்னை அழைக்கிறான். குடிவெறியில் என் தலைமயிரையும் ஆடையையும் அலங்கோலப்படுத்துகிறான். தந்தை பொறுக்கச் சொல்கிறார்! நல்ல விந்தை இது! நீர் ஒரு தந்தையா?" என்று சுடும் சொற்களைக் கொட்டினாள் அந்தக் கட்டழகி.

அவள் பதற்றம்கூட அவனை அசையச் செய்யவில்லை. "அம்மா! இளையபல்லவன் மிகவும் வஞ்சகன், அவனைத் திடீர் என்று எதிர்த்துக்கொள்வது அபாயம். மெள்ளத்தான் அவனைச் சமாளிக்க வேண்டும்" என்றான் பலவர்மன் சற்று நிதானப்பட்டு.

"அவரிடம் பயப்படுகிறீர்களா?" என்று கேட்டாள் மஞ்சளழகி குரலில் வெறுப்புடன்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான், பலவர்மன். "ஆம், பயப்படுகிறேன் அந்தப் படைத்

தலைவனிடம், விவரமறிந்தால் நீயும் பயப்படுவாய்! பெரும் தந்திரக்காரனிடம் நாம் சிக்கிக்கொண்டிருக்கிறோம்! நாமென்ன, இந்த அக்ஷயமுனையும் சிக்கிக் கொண் டிருக்கிறது! மிகுந்த எச்சரிக்கையுடன் நாம் நடந்து கொள்ளாவிட்டால்... இந்த அக்ஷயமுனையைப் பிடித்த நல்ல காலம் இவனுக்குக் குடிப்பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. இவனை உறவாடித்தான் கெடுக்க வேண்டும். நீயும் அவனுடன் உறவாடு. அதாவது உறவாடுவது போல் பாசாங்கு செய். அவன் குடிவெறியில் வாயைக் கிளறு. சில உண்மைகளும் கிடைக்கும்," என்றான்.

மஞ்சளழகி தன் கறுத்த புருவங்களைச் சற்றே உயர்த்தினாள். கோபத்தாலும், வியப்பாலும், "என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்கவும் செய்தாள்.

"அவனுடன் நட்பாயிருப்பது போல் பாசாங்கு செய்," என்றான் பலவர்மன்.

"பாசாங்கு செய்வது அவசியமல்ல தந்தையே. அவரிடம் என் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறேன்." என்றாள் மஞ்சளழகி.

"அதுதான் தெரியுமே எனக்கு."

"ஆம் ஆம். நீங்கள்தானே அவரை எனக்கு மணாள னாக்கவும் இந்த அக்ஷயமுனைக்கு உபதளபதியாக்கவும் தீர்மானித்தீர்கள்."

"அதையெல்லாம் நீ நம்புகிறாயா?"

மஞ்சளழகி மேலும் வியப்பைக் காட்டினாள். "அப்படியானால் நீங்கள் திட்டமிட்டது..." என்று இழுத் தாள் வியப்புடன்.

"திட்டமிட்டதெல்லாம் இளைய பல்லவனை ஒழிக்க! ஆனால் ஒவ்வொரு திட்டத்தையும் அவன் உடைத்து விட்டான். உன்னை மணம் செய்ய ஒப்பமாட்டான் என்று நினைத்தேன்; ஒப்பினான். ஸ்ரீவிஜயத்தின் உபதளபதியாக

மாட்டானென்று நம்பினேன்; அந்த நம்பிக்கையில் மண்ணைப் போட்டு அக்ஷயமுனையைத் தன் வசப் படுத்திக் கொண்டான். அக்ஷயமுனை மக்கள், கொள்ளைக் காரர் அனைவருக்கும் எனது பொக்கிஷத்தைத் திறந்து விட்டு மயக்கியிருக்கிறான். அவன் என்ன குடித்தாலும், என்ன அக்ரமங்களைச் செய்தாலும் பூர்வகுடிகளிடமிருந்து அவன்தான் தங்களைக் காப்பாற்ற முடியுமென்று மக்கள் நினைக்கிறார்கள். அந்த நம்பிக்கையை உடைக்க வேண்டும்..." என்று சொல்லிய பலவர்மன், பேச்சை நிறுத்தி மகளைப் பார்த்தான்.

"எப்படி உடைப்பது?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"உன் உதவி வேண்டும் அதற்கு?"

"நான் என்ன செய்ய முடியும்?"

"மெள்ள அவன் மனத்தை மாற்றி பகிட்பாரிஸான் காட்டுப் பகுதியிலிருக்கும் அமீரின் காவலை அகற்றிவிடு."

"நான் சொன்னால் அவர் செய்வாரா?"

"செய்வதும் செய்யாததும் உன் கையிலிருக்கிறது!"

"என் கையிலா?"

"ஆம்?"

"என்னிடம் என்ன சாதனங்கள் இருக்கின்றன?"

"பல இருக்கின்றன. உன் விழிகள், புருவங்கள்..." என்று மேலும் அடுக்கப் போனவனை, "நில்லுங்கள், வெட்க மில்லை உங்களுக்கு?" என்று சீறித் தடுத்த மஞ்சளழகி அவனைச் சுட்டுவிடுவது போல் பார்த்தாள்.

பலவர்மனின் வஞ்சக விழிகள் அவளை அன்புட னும் அனுதாபத்துடனும் பார்த்தன. "மகளே! உன் அழகு இணையற்றது. அதற்குப் படியாத ஆண் மகன் இருக்க முடியாது. அவனுடன் சகஜமாகப் பேசிக் காட்டுப் பகுதியில் உள்ள காவலைச் சிறிது தளர்த்திவிடு. அப்புறம்

நடப்பதைப் பார்! இளையபல்லவனுக்குப் பலவர்மன் இளைத்தவனல்லவென்பது தெரியவரும். உனக்கு அவனால் எந்தத் தீங்கும் நேரிடாது மகளே! என் ஒற்றர்கள் சதா அவனைக் கண்காணித்து வருகிறார்கள். அவன் அறை வாயிலில் காவல் புரியும் அவனைச் சேர்ந்த கள்வரில் ஒருவனை நம் வசம் இழுத்திருக்கிறேன். சிறிதும் அஞ்சாதே! பலவர்மன் கரம் நீளமானது. எங்கும் எட்டக் கூடியது. உன்மேல் அத்துமீறிக் கையை வைத்தால் இளைய பல்லவன் அதே விநாடி பிணமாகிவிடுவான். பயப்படாதே! சொன்னபடி செய். இன்னும் ஐந்தே நாள்களில் இந்த அக்ஷயமுனை பழைய நிலையை அடையும். நீயும் பழையபடி இதன் மகாராணி போல் சஞ்சரிப்பாய்" என்று சொன்னான் பலவர்மன்.

அவன் சொற்களைக் கேட்ட மஞ்சளழகியின் முகத்தில் புதிய ஒளி ஒன்று பிறந்தது. "சரி தந்தையே" என்று கூறிவிட்டுத் தலையைக் கோதிக்கொண்டு ஆடையைச் சீர்ப்படுத்திக் கொண்டு தன் அறையை நாடினாள் மஞ்சளழகி.

அறைக் கதவைத் திறந்து மிக வேகமாக அதை மூடித் தாழிட்டாள். அவள் தாழிட்டுத் திரும்பியதும் அந்த அறையின் மூலையிருந்த திரைச்சீலையை விலக்கிக் கொண்டு இளையபல்லவன் வெளிவந்தான். அடுத்த கணம் அவன் அணைப்பிலிருந்தாள் மஞ்சளழகி. சலனப்படாத அறை விளக்கு பிணைந்து நின்ற அந்த இருவர் மீதும் தனது பொன்னொளியை வீசியது. அந்தப் பொன்னொளியில் மஞ்சளழகியின் பொன்னிறக் கன்னங்கள் பத்தரை மாற்றுத் தங்கத்தையும் பழிக்கும்படியாகப் பிரகாசித்தன. அந்தக் கன்னங்களைத் தடவிக் கொடுத்த இளையபல்லவன் அவள் தலை மயிரையும் கோதிவிட்டான். அவள் தனது தலையை நிமிர்த்தி, கண்களை உயர்த்தி இளைய

பல்லவனை நோக்கினாள். அந்தக் கண்களில் காதலும் இருந்தது. அச்சமும் இருந்தது. காதலைவிட அச்சமும் வியப்பும் அதிகமாயிருந்தன என்று சொன்னாலும் மிகை யாகாது. அத்தகைய உணர்ச்சிகளுடன் சொன்னாள் அவள், "நீங்கள் சொன்னது சரிதான்," என்று.

"என்ன சொன்னார் தந்தை!" என்று புன்முறுவ லுடன் வினவினான் இளையபல்லவன்.

"உங்களை மயக்கச் சொன்னார்?" என்று அவளும் இன்பப் புன்முறுவலை இதழ்களில் தவழவிட்டாள்.

"பைத்தியக்காரர்" என்றான் இளையபல்லவன்.

"ஏனப்படிச் சொல்கிறீர்கள்?"

"என்னை மயக்கும்படி சொன்னாரே போயும் போயும்."

"சொன்னாலென்ன?"

"ஏற்கெனவே மயங்கிக் கிடப்பவனை மயக்க வேண்டிய தேவை என்ன இருக்கிறது?"

"உம்! மயங்கிக் கிடக்கிறீர்களாக்கும் நீங்கள்?"

"ஆம்."

"இந்தப் பொய் என்னிடம் வேண்டாம்."

"பொய்யென்று உனக்கெப்படித் தெரியும்?"

"உங்கள் கடல் புறாவைப் பார்த்தேன்."

"அதில் எழுதியிருக்கிறதா உன்னிடம் நான் மயங்க வில்லையென்று?"

"திட்டமாக எழுதவில்லை."

"மறைமுகமாக எழுதியிருக்கிறதாக்கும்?"

"ஆம்."

"என்ன எழுதியிருக்கிறது?"

“அதன் பக்கப் பலகையில் கடல் புறா என்ற பெயர் தெரியப் பெரும் கிளிஞ்சல்களும் சிப்பிகளும் புதைக்கப் பட்டிருக்கின்றன.”

“அதனாலென்ன!”

“கடல் புறாவா அது? காஞ்சனைப் புறாவா?” இதைக் கேட்ட மஞ்சளழகி பெருமூச்செறிந்தாள். பொறாமைப் புயல் மெள்ள அவள் இதயத்தில் வீசுவதை அவன் உணர்ந்தான். உணர்ந்ததால் அவளை வலியத் தழுவினான். “மஞ்சளழகி! உன்னை ஏமாற்ற நான் விரும்பவில்லை. என் மனம் பாலூர்ப் பெருந்துறையிலிருக்கையில் காஞ்சனா தேவியிடம் லயித்தது உண்மை. இங்கு வந்தபின் உன்னிடமும் சிக்கிக்கொண்டது. மனம் ஒன்றுதான். எனக்கு அது சிக்கி இருக்கும் சிறைகள் இரண்டு. அது எப்பக்கம் இழுபடுமோ தெரியாது. எந்தப் பக்கம் இழு பட்டாலும், எந்தப் பக்கத்தில் அதன் ஆசை நிறைவேறி னாலும், அதில் பூர்த்தியிருக்காதென்பது மட்டும் உண்மை. ஆனால் மஞ்சளழகி, இப்போது என் மனம் காதலில் சிக்கவில்லை. இந்த அக்ஷயமுனையின் நலத்தில், உன் க்ஷேமத்தில் சிக்கியிருக்கிறது. ஆகவே சொல், உன் தந்தை என்ன சொன்னார் என்று?” என அந்தத் தழுவலிலேயே வினவவும் செய்தான்.

அவன் மார்பில் தலையைப் புதைத்த வண்ணம் மஞ்சளழகி தனக்கும் தன் தந்தைக்கும் நடந்த சம்பா ஷணையை விவரித்தாள். இளையபல்லவன், “மஞ்சளழகி! நீ என்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கை இணையற்றது. அந்த நம்பிக்கைக்கும் உன் காதலுக்கும் நானும் பாத்திர மாக வேண்டும். ஆகவே, உன்னை நம்பிச் சொல்கிறேன். உன் தந்தை யாரென்பது எனக்குத் தெரியும்” என்று மெதுவாகக் கூறினான்.

அதைக் கேட்டதும் துடித்து மஞ்சத்திலிருந்து எழுந்த மஞ்சளழகி, "யார்? யார் என் தந்தை?" என்று குரல் நடுங்க வினவினாள். அந்த எழில் உடலின் இடையைப் பிடித்துக் கைகளால் இழுத்து மீண்டும் அருகே அமர்த்திக்கொண்ட இளையபல்லவன், "அவசரப்படாதே மஞ்சளழகி, இன்னும் ஐந்து நாள் அவகாசம் கொடு, சொல்கிறேன்," என்றான்.

"ஐந்து நாளா?"

"ஆம். அமாவாசை இரவுவரை அவகாசம் வேண்டும்."

"அன்று என்ன நடக்கும்?"

"அக்ஷயமுனையின் கதி நிர்ணயிக்கப்படும்."

"ஏன்? இன்றே சொன்னாலென்ன?"

"சில அசௌகரியங்கள் இருக்கின்றன."

"என்ன அசௌகரியம்?"

"பிறகு தெரியும் உனக்கு."

"இதுதான் நீங்கள் என்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கையா?"

"நம்பிக்கைக் குறைவாலல்ல நான் எச்சரிக்கையா யிருப்பது. உன் நலனை முன்னிட்டுத்தானிருக்கிறேன்."

"விளங்கச் சொல்லுங்களேன்?" மஞ்சளழகி கெஞ்சி னாள்.

இளையபல்லவன் சிறிது யோசித்தான். "நாளைக் காலையில் கடல் புறாவைப் பார்க்க வா மஞ்சளழகி. அங்கு பேசுவோம். நடக்கப்போவதை ஓரளவு சொல்கிறேன்" என்றான் படைத் தலைவன்.

"கடல்புறாவைப் பார்க்க நான் வரவில்லை. அதன் அழகை நீங்களே பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியடையுங்கள்."

"அழகைப் பார்க்க வரச்சொல்லவில்லை மஞ்சளழகி, அதன் தளத்தில்தான் நாம் ரகசியமாகப் பேச முடியும். அந்த விசித்திரக் கப்பலை நீயும் பார்க்கலாம்.

மஞ்சளழகி துக்கத்துடன் தலையை ஆட்டினாள். "நாளை மாலை மரக்கலத்துக்கு வா, மஞ்சளழகி. உன் தந்தையின் இஷ்டப்படி நாளைக் காலையில் பகிட்பாரிஸான் மலையிலுள்ள காவலைக் குறைத்துவிடுகிறேன்" என்று கூறிவிட்டு இளையபல்லவன் வெளியேறினான்.

மஞ்சளழகி அன்றிரவு உறங்கவில்லை. புரியாத எத்தனையோ விஷயங்கள் அவள் மனத்தையும் வாட்டி வதைத்தன. மறுநாள் மாலை இளையபல்லவன் சொற்படி மஞ்சளழகி கடல்புறா இருக்குமிடம் சென்று கண்டியத் தேவன் உதவியுடன் அதன் தளத்தில் ஏறி அக்ரமந்திரத்தில் நுழைந்தாள். அன்றைய மாலைக்குப் பிறகு மஞ்சளழகி காணப்படவேயில்லை. அவள் எங்கு மறைந்து போனாள் என்பது யாருக்கும் தெரியவில்லை. அக்ரமந்திரத்தில் நுழைந்த அவள் எப்படி மறைந்தாள் என்பது பெரும் மூடுமந்திரமாய் இருந்தது.

அத்தியாயம் 45

# பேய்த் திட்டம்

அக்ஷயமுனைக் கோட்டைக்குள்ளும் கோட்டைக்குப் புறம்பேயிருந்த கடற்கரைப் பகுதியிலும் சுதந்திரப் பறவையாக உலவிச் சிரித்து விளையாடி வந்த மஞ்சளழகி திடீரென இரண்டு மூன்று நாள்கள் எந்த இடத்திலும் தென்படாதிருக்கவே நகர மக்கள் முதலில் அவளுக்கு ஏதேனும் உடல்நலக் குறைவோ என்று அச்சமுற்றார்கள். ஆனால் பலவர்மன் மாளிகைக் காவலரில் சிலர் அப்படியேதுமில்லையென்றும் மாளிகையிலேயே மஞ்சளழகி காணப்படவில்லையென்றும் அரசல் புரசலாக விஷயத்தை வெளியிட்டுவிடவே, அவள் ஏன் மறைந்தாள்? எப்படி மறைந்தாள்? எங்கு போனாள்? என்ன ஆனாள் என்பதைப் பற்றி இல்லாத பொல்லாத வதந்திகள் பலவும் நகரத்துக்குள்ளும் புறம்பேயும் உலாவலாயின. இரண்டு நாள்களுக்கு முன்பு கடல் புறாவை நோக்கிச் சென்று அதன் தளத்திலேறியதைப் பார்த்த கொள்ளையர் துணைவிகள் அவளை இளையபல்லவன்தான் எங்கோ மறைத்து விட்டானென்று பேசிக்கொண்டார்கள். இளையபல்லவனையும் மஞ்சளழகியையும் நெருங்கிய நிலையில் கடற்கரையில் ஏற்கெனவே பார்த்துள்ள கொள்ளையர் துணை மாதர், அவன் அறையில் கள்ளக் காதலின் முடிவையே எண்ணினாலும் அவளை இளையபல்லவன் எங்குதான் மறைத்திருக்க முடியும் என்று பரஸ்பரம் கேட்டுக் கொண்டனர்.

இந்த வதந்தி ஊருக்குள் பரவியும் அதை நகர மக்கள் மட்டும் நம்பவில்லை. மஞ்சளழகியைத் திருமணம் செய்து கொடுக்கவே பலவர்மன் சர்வசித்தமாயிருக்க, மஞ்ச ளழகியைச் சோழர் படைத்தலைவன் கள்ளத்தனமாக மறைக்க வேண்டிய அவசியமில்லையென்று நகரமக்கள் வாதாடினர். தவிர, கடல் புறாவைச் சேர்ந்த மாலுமிகள் ஓரிருவரை விசாரித்ததில், மஞ்சளழகி மாலையில் கடல் புறாவின் தளத்துக்கு வந்ததும் மரக்கலத் தலைவனுக்கான முகப்பு அறையில் (அக்ரமந்திரத்தில்) நுழைந்ததும் உண்மையே என்றாலும் இரவு சற்று ஏறியதுமே அவளை இளையபல்லவன் கோட்டைக்கு அழைத்துச் சென்று விட்டதாகவும் செய்தி கிடைக்கவே, "மஞ்சளழகி மறைந் திருந்தால் மாளிகைக்கு வந்த பின்புதான் மறைந்திருக்க வேண்டும்," என்று நகர காவலர் முடிவுக்கு வந்தனர். இப்படியாக வதந்திகள் பல கிளம்பினாலும் அந்த வதந்திகள் சுட்டிக் காட்டியது இருவரைத்தான். ஒருவன் இளையபல்லவன், மற்றவன் பலவர்மன். ஒருவன் உயிர்க் காதலன், இன்னொருவன் உயிரைவிட அவளை அதிகமாக நேசித்த தந்தை. அந்த இருவரும் அவளுக்கு எந்தவிதத் தீங்கையும் விளைவிக்க மாட்டார்களென்றும், அப்படி யானால் என்ன செய்திருக்கிறார்களென்றும் பலப்பல விதமாகப் பேச்சுகளும் கேள்விகளும் அக்ஷயமுனையில் எழுந்தன. இத்தனை பேச்சுகளிலும் மற்றது எது தெரிந் தாலும் தெரியாவிட்டாலும் ஒன்று நிச்சயமாகத் தெரிந்தது. மக்கள் அவளைப் பற்றிப் பெருங் கவலை கொண்டிருந் தார்கள் என்பதுதான் அது.

மக்களும் கொள்ளை மாதரும் மாலுமிகளும் நகரக் காவலரும் கவலை கொண்டு தவித்தாலும் அவளைப் பற்றிப் பலவர்மனோ இளையபல்லவனோ, கவலை ஏதும் காட்டவில்லை. இளையபல்லவன் கவலை காட்டாததன் காரணம் மக்களுக்குப் புரிந்திருந்தது. அடுத்த இரண்டு மூன்று நாள்களில் இளையபல்லவன் மிதமிஞ்சிக்

குடித்தான். நகரத்துக்கு மிக அபாயம் விளைவிக்கவல்ல உத்தரவுகளைப் பிறப்பித்தான். ஆகவே, அவன் நிலை குலைந்தவன்; கவலைப்படக் காரணமில்லையென்பதை மக்கள் புரிந்துகொண்டனர்!

பலவர்மன் அப்படியில்லை. அடுத்த நாள்களில் மிகுந்த நிதானத்தையும் ஆழ்ந்த சிந்தனையையும் காட்டினான். அப்பேர்ப்பட்டவன் ஏன் கவலைப்படவில்லை? இந்தக் கேள்வியைத் தான் பலரும் கேட்டார்கள். சிலர் ஊர் நிலையைப் பற்றி விசாரிப்பது போல் மஞ்சளழகியைப் பற்றியும் விசாரித்தார்கள். அந்த விசாரணையைச் சேந்தனே துவங்கினான் பலவர்மனிடம். பொக்கிஷத்தைப் பார்வையிட வந்த சமயத்தில் பெட்டிகளைத் திறக்கப் பலவர்மன் உத்தரவிட்டும் அதை நிறைவேற்றாமலே கேட்டான் சேந்தன், "கோட்டைத் தலைவரே! ஊரில் நடக்கும் விஷயம் உமக்குத் தெரியுமா?" என்று.

"என்ன விஷயம் வணிகரே?" என்று வினவினான் பலவர்மன் முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் காட்டாமல்.

"காட்டுப் பகுதியில் படைத்தலைவர் காவலைக் குறைத்துவிட்டார்..." என்று மென்று விழுங்கினான் சேந்தன்.

"அது அவர் இஷ்டம்," என்றான் பலவர்மன்.

"உங்களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லையா?" என்று வியப்புடன் வினவினான் வணிகன்.

"இல்லை," சாதாரணமாக வந்தது பலவர்மன் பதில்.

"நீங்கள் கோட்டையின் தலைவரல்லவா?"

"ஆமாம்."

"பாதுகாப்பு உமது பொறுப்பல்லவா?"

"அந்தப் பொறுப்பைப் படைத்தலைவரிடம் ஒப்படைத்து விட்டேன். அவர்..."

"உமது தளபதியாக்கும்."

"ஆம்."

"ஆகையால் அவர் எந்த உத்தரவை இட்டாலும் தலையிடமாட்டீர்?"

"ஏன் தலையிட வேண்டும்?"

"உங்கள் தலை இப்பொழுதிருக்குமிடத்தில் இருக்க." சேந்தன் எரிச்சலைக் காட்டினான்.

"வேறு எங்கு போய்விடும்?" என்று வினவினான் பலவர்மன்.

"போகுமிடம் தெரியாது; போய்விடும் என்பது மட்டும் தெரியும்," என்றான் சேந்தன்.

"ஏனோ?"

"காட்டுப் பகுதியில் காவல், சாஸ்திரத்துக்குத்தான் இருக்கிறது. அமீர் ஏழெட்டுப் பேர்களுடன் நிற்கிறான். பூர்வகுடிகள் 'பூ' என்று ஊதினால் அந்த ஏழெட்டுப் பேரும் பறந்துவிடுவார்கள். பூர்வகுடிகள் உள்ளே நுழைந்தால் இங்கு பல தலைகள் நிலத்தில் உருளும். உமது தலை மட்டுமென்ன, இரும்பா? கத்தியால் வெட்டினால் உருளாதா?"

"உருளும்."

"அதைத் தடுக்க முயலக்கூடாதா?"

"என்ன செய்ய வேண்டும் அதற்கு?"

"மஞ்சளழகியைச் சிறிது வெளியே காட்டுங்கள்."

"எதற்கு?"

"இளையபல்லவர் சுயநிலை அடைய. மஞ்சளழகி மறைந்து விட்டதால்தான் படைத்தலைவர் மதி குலைந்து

விட்டதாக மக்கள் நினைக்கிறார்கள். மஞ்சளழகியைக் கண்டால் இளையபல்லவரின் குடி சற்றுத் தேக்கப்படும். மதியும் சரிப்படும். மதி சரிப்பட்டால் இப்படிக் கண்டபடி உத்தரவுகளைப் பிறப்பித்துக் காவலைக் கலைக்க மாட்டார்."

"பலவர்மன் சற்று யோசித்தான். பிறகு சொன்னான்: "வணிகரே! உமது யோசனையில் அர்த்தமிருக்கிறது" என்று.

"மகிழ்ச்சி," என்றான் சேந்தன்.

"உமக்கு மூளையும் இருக்கிறது," என்றான் பலவர்மன்.

"அது இப்பொழுதுதான் புரிந்ததாக்கும்!" என்று கேட்டான் சேந்தன் விஷமமாக.

பலவர்மன் அந்த விஷமத்துக்குப் பதிலாக விஷத்தைக் கக்கினான். "வணிகரே, மூளையை அதிகமாக உபயோகப்படுத்த வேண்டாம். உபயோகப்படுத்தி உமக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் தலையிடாதிரும். அப்பொழுதுதான் உமது மூளையும் அதை உள்ளடக்கியிருக்கும் தலையும் மிஞ்சும். இல்லையேல்..." என்று வாசகத்தை முடிக்காமலே சென்றுவிட்டான் அக்ஷய முனைக் கோட்டையின் தலைவன்.

அவன் பேச்சை எண்ணி எண்ணிக் குமுறினான் சேந்தன். 'எத்தனை திமிர் இந்தக் கோட்டைத் தலைவனுக்கு?' என்று உள்ளுக்குள்ளேயே கருவிக் கொண்டு, அவனைப் பழி வாங்கும் நோக்கத்துடன் இளையபல்லவன் கூறுவதை விடத் துரிதமாகவே பலவர்மன் பொக்கிஷத்தை மக்களுக்கு அள்ளி வாரிவிடத் தொடங்கினான். ஆனால் அந்தப் பணத்தையும் லட்சியம் செய்யும் நிலையில் மக்கள் இல்லை. மூன்று நாள் கழித்து மஞ்சளழகியின் மறைவைக் கூட மறந்துவிடும் நிலை அந்த நகரத்தில் ஏற்பட்டது.

மூன்றாம் நாள் இரவிலிருந்தே பகிட்பாரிஸான் காட்டுப் பகுதியில் தொலைதூரத்திலிருந்து பூர்வகுடிகளின் பெரும் டமார ஓசைகள் கேட்கத் துவங்கின. காட்டுப் புறத்தில் எங்கோ தூரத்தில் தீப வெளிச்சமும், அடிக்கடி தெரியத் தொடங்கியது. சிலசமயம் நள்ளிரவையொட்டி ஓரிரு தீபங்கள் கோட்டை மதிலிலிருந்து சற்றுத் தள்ளி இருந்த காட்டு ஓரங்களிலும் தெரியத் தொடங்கின.

இதையெல்லாம் கவனித்த நகர மக்கள் பெரும் கிலியடைந்தனர். காட்டுப் பகுதியில் தூரத்தே கேட்ட டமார ஒலிகளும், அடிக்கடி சுடர்விட்ட தீப ஒளிகளும் பதக்குகளின் தாக்குதலுக்குப் பூர்வாங்கமென்பதை நகர மக்கள் அறிந்தேயிருந்தனர். அடுத்த இரண்டு நாள்களில் அமாவாசையும் நெருங்க இருந்ததால், பூர்வகுடிகள் கண்டிப்பாய் நகரத்தைத் தாக்கப் போகிறார்கள் என்ற உணர்வு ஏற்படவே, நகர மக்கள் பீதியும் கொதிப்பும் அடைந்தனர். முன்பெல்லாம் இல்லாத தைரியம் தங்களுக்கு இளையபல்லவனால் ஏற்பட்டும், இளைய பல்லவன் முயற்சியால் ஆயுதப் பயிற்சி நன்றாகத் தங்களுக்கு அளிக்கப்பட்டும் ஏன் தங்களைப் பாது காப்புக்கு படைத்தலைவனோ, அமீரோ அணிவகுத்து நிறுத்தவில்லையென்பது அவர்களுக்குப் புரியாததால் பெரும் கொதிப்படைந்தனர். கொதிப்படைந்த மக்களின் தலைவர் இருவர் அதுபற்றி அமீரை விசாரித்தனர். அமீரிடமிருந்து சரியான பதில் ஏதும் வரவில்லை. "உங்களை உபயோகப்படுத்தும் சமயம் படைத்தலைவ ருக்குத் தெரியும்" என்று திட்டமாகச் சொல்லி மேலே ஏதும் பேச மறுத்துவிட்டான் அமீர்.

அவனிடம் எதையும் அறியமுடியாத நகர மக்கள் விளக்கம் பெற இளையபல்லவனை அணுகினார்கள். இரு தலைவர்களும் சென்றபோது கையில் மதுக்குப்பியுடன்

காட்சியளித்தான் இளையபல்லவன். அவர்களைப் பார்த்ததும் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து, "தெரியும் நீங்கள் வந்திருக்கும் காரியம். இதைப் பிடுங்கிக்கொண்டு போகப் போகிறீர்கள்," என்று மதுக் குப்பியைக் காட்டினான்.

அவனிருந்த நிலை அவர்களுக்கு வெறுப்பைத் தந்தது. இத்தகைய குடிகாரனை நம்பி, பூர்வகுடிகளையும் விரோதித்துக்கொண்டு விட்டோமே என்று தங்களையே அவர்கள் நொந்துகொண்டார்கள். இருப்பினும் தலைவரில் ஒருவன் "படைத் தலைவரே!" என்று துவங்கினான்.

"படை, ஏது? தலைவர் ஏது?" வெறிச்சிரிப்பு அறையை ஊடுருவியது.

"அக்ஷயமுனை ஆபத்திலிருக்கிறது..." என்று இன்னொருவன் ஆரம்பித்தான்.

"இருக்கட்டும்," என்று இளையபல்லவன் குப்பியின் வாயுடன் தன் வாயைப் பொருத்தி எடுத்தான்.

"பூர்வகுடிகள்..." என்று இழுத்தான் முதலாமவன்.

"பூர்வகுடிகள், ஆம். அவர்கள்தான் பூர்வகுடிகள். நீங்கள் பின்னால் வந்தவர்கள். அவர்கள் ஊரை அவர்களிடம் விட்டுவிடுங்கள். ஓடிப் போய்விடுங்கள்." என்று தட்டுத் தடுமாறி உளறினான் இளையபல்லவன்.

இரு தலைவரும் மிகுந்த வெறுப்புடன் அவனை நோக்கிவிட்டு அறையிலிருந்து அகன்றனர். மறுநாள் நிலை இன்னும் மோசமாயிற்று. கொள்ளைக்காரர் போர்க்கலங்கள் எல்லாம் இளையபல்லவன் உத்தரவுப்படி எங்கெங்கோ போய்விடவே துறைமுகத்திலும் காவல் இல்லை. காவல் செய்யக் கூடிய கடல் புறாவோ கரையில் இழுபட்டுக் கிடந்தது. எந்தத் திக்கிலும் சரியான காவல் இல்லாததால் சரியான ஆடையில்லாத பிச்சைக்காரியைப் போல் மிகப் பரிதாபமாகக் காணப்பட்டது அக்ஷயமுனை.

---

காவலை இழந்த துறைமுகத்தில் இரவில் சூளூ இனத்தாரின் படகுகள் நடமாடத் தொடங்கின. அவற்றை ஏதும் செய்ய வேண்டாமென இளையபல்லவன் உத்தர விட்டிருந்ததால் அவற்றினருகே கடல்புறாவின் மாலுமி களோ படகுகளோ செல்லவில்லை. இதைக் கண்டும் மக்கள் அஞ்சினர். அக்ஷயமுனைக் கோட்டையை எந்தவிதக் கஷ்டமுமின்றி ஆள் சேதமின்றி, கைப்பற்ற அதைவிடச் சிறந்த சமயம் ஏதும் கிடையாதென்பதை அறிந்த மக்கள் கலங்கினர். அதைக்கண்டு ஓரளவு பலவர்மனும் கலங்கினான். அவன் கலக்கத்துக்குக் காரணம் வேறு. அந்தக் காரணத்தைத் தன் மாளிகைத் தோட்டத்தில் அமாவாசைக்கு முதல் நாளிரவு வில் வலனைச் சந்தித்த அதே மரத்தடியில் கூறினான் பலவர்மன்.

அன்றும் ஆந்தையின் அலறல் கேட்டு, தோட்டத் துக்குச் சென்ற பலவர்மன் வில்வலனைக் கண்டதும் காட்ட வேண்டிய மகிழ்ச்சிக்குப் பதில் அச்சத்தையே காட்டினான். "பலவர்மா! நாம் அந்தப் படைத் தலைவனைப் பழிவாங்கும் சமயம் நெருங்கிவிட்டது." என்று குதூகலத்துடன் துவங்கிய வில்வலனைக் கவலையுடனும் அச்சத்துடனும் நோக்கிய பலவர்மன், "வில்வலா! இளையபல்லவன் போக்கு எனக்கு எதுவும் பிடிபடவில்லை," என்றான்.

"என்ன அவன் போக்கு?" என்று வினவினான் வில்வலன்.

"அவனே இந்த நகரத்தின் காவலைப் பலப்படுத்தி னான்."

"ஆம்."

"அவனே இப்பொழுது அதைப் பலவீனப்படுத்தி யிருக்கிறான்."

"நமக்கு நல்லதுதானே?"

"நல்லதுதான் – உண்மையாயிருந்தால்..."

"உண்மையாயிருக்காதென்று சந்தேகமா?"

"ஆம்."

"அவன் குடிப்பதாகச் சொல்கிறார்களே?"

"அதிகமாகக் குடிக்கிறான்."

"குடிகாரன் உத்தரவுகள் எப்படி இருக்கும்?"

"எப்படியிருக்க வேண்டுமோ அப்படித்தான் இருக்கின்றன. ஆனால் அத்தகைய குடிகாரன் உத்தரவை மற்றவர்கள் ஏன் நிறைவேற்றுகிறார்கள்?"

வில்வலன் சற்று யோசித்தான். "ஆம், அதை நாம் யோசிக்கத்தான் வேண்டும். இதில் ஏதாவது சூதிருக்குமோ?" என்று வில்வலனும் கவலையுடன் கேட்டான்.

"இருக்கலாம். இருந்தால் நாம் அதற்கு இடம் கொடுக்கக்கூடாது," என்று பலவர்மன் கூறினான் வில்வலனை உற்று நோக்கி.

"அதற்கு என்ன செய்ய வேண்டும்?"

"இளையபல்லவன் கோட்டையின் காவற் படையையோ மக்கள் படையையோ நடத்தாதிருக்கச் செய்ய வேண்டும்."

"எப்படிச் செய்வது?"

"அதை நான் பார்த்துக் கொள்கிறேன். நாளை இரவு நீ தாக்குதலைத் துவங்கிவிடு!"

"இளையபல்லவன்?"

"என் அறையிலிருப்பான் — பிணமாக," என்று கூறிய பலவர்மன் அந்தக் காரிருளில் மெள்ள நகைத்தான்.

அந்தப் பயங்கரச் சிரிப்பு மெல்ல இருந்தாலும் பேய்ச் சிரிப்பாக இருந்தது. அந்த விநாடியில் பேயும் வகுக்க அஞ்சும் கொடிய திட்டத்தை வகுத்துவிட்டான் பலவர்மன்.

அத்தியாயம் 46

# புது வாழ்வு

மாளிகைத் தோட்டத்தின் மரத்து நிழலில் வில் வலனைச் சந்தித்து, மறுநாளிரவு நகரத்தின்மீது தாக்கு தலைத் துவங்கிவிடும்படி உத்தரவிட்டு, இளையபல்லவன் உயிரையும், அதே அமாவாசை இரவில் ஒழித்துக் கட்டத் திட்டமிட்டு, மீண்டும் தன் அறையை நாடிய பின்பும் பலவர்மன் சிந்தையில் ஏதோ விவரிக்க இயலாத சந்தேக மும் பயமும் ஊடுருவி நின்றன. காட்டுப் பகுதியில் கோட்டைக் காவலைப் பலவீனப்படுத்தியும் கடற் பகுதியில் காவலே இல்லாமலே அடித்தும் இளைய பல்லவன் தன் திட்டங்களுக்கு அனுகூலமாகவே சகலவிதத் திலும் காரியங்களைச் செய்திருந்தும், அந்தக் காரியங் களைக் கண்டு தன் மனம் மகிழ்ச்சியடைவதற்குப் பதிலாக ஏன் பயத்தின் வசப்படுகிறது என்று தன்னைத்தானே பலமுறை கேட்டுக்கொண்டான் பலவர்மன். தன் மஞ்சத்தில் உட்கார்ந்த வண்ணமே நகரக் காவலையும் பாதுகாப்பையும் குலைத்து இளையபல்லவன் இட்ட விபரீதமான உத்தரவுகள் குடி வெறியில் இடப்பட்ட உத்தரவுகளாகையால் அவை விபரீதமாயிருந்ததில் வியப்பு ஏதுமில்லையென்றாலும், அந்த உத்தரவுகளையும் போரில் வல்ல அமீரும், கண்டியத்தேவனும் எதற்காகச் சிரமேல் ஏற்று நிறைவேற்றுகிறார்கள் என்பது மட்டும் பலவர்ம னுக்குச் சிறிதும் புரியவேயில்லை. போர்களின் சரித் திரத்தைப் பார்க்கும்போது படைத்தலைவர்கள் தவறான உத்தரவுகளைப் பிறப்பித்த சமயங்களில் எல்லாம்

உபதலைவர்களும், வீரர்களும் புரட்சி செய்திருப்பதே வழக்கமாயிருந்திருக்க, இளையபல்லவன் விஷயத்தில் மட்டும் அந்தச் சரித்திரம் மாறுபடக் காரணமென்ன வென்று பலமுறை யோசித்த பலவர்மன், விடையேதும் காணாமல் தவித்தான். இளையபல்லவன் எந்த முட்டாள் தனமான உத்தரவைப் பிறப்பித்தாலும் அதை மற்றவர்கள் நிறைவேற்றுவது அவனிடத்திலுள்ள பயத்தினாலா, பக்தி யினாலா என்பதை அலசிப் பார்த்தும் ஏதும் புலப்படாமற் போகவே மீண்டும் மீண்டும் சஞ்சலத்துக்கு உள்ளாகி அன்றிரவைத் தூங்காமலே கழித்தான் பலவர்மன். அப்படிப் பல கேள்விகளுக்கும் சந்தேகங்களுக்கும், சஞ்சலத்துக்கும் இலக்கானதால் மறுநாள் விடிந்த அமாவாசைப் பொழுது பலவர்மனுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதற்குப் பதில் பெரும் மலைப்பையே கொடுத்தது.

பெரும் விளைவுகளை ஏற்படுத்தவல்ல இரவுக்குப் பூர்வாங்கமாக முளைத்த அந்த அமாவாசை தினத்தின் காலைப் பொழுதில் மாளிகையின் மாடிக்குச் சென்று அக்ஷயமுனைக் கோட்டையையும் காட்டுப் பகுதியையும் கடற் பகுதியையும் கண்களால் அளவெடுத்த பலவர்மன் நகரத்துக்குள்ளே இருந்த அமைதியைக் கண்டு அசந்து போனான். அந்தக் காலை நேரத்தில் காட்டுப் பகுதிக்குள் ஆகாயத்தை நோக்கி எழுந்து சென்ற புகைமண்டலம் வில்வலனின் வீரர்கள் நகரத்துக்கு அதிக தூரத்தில் இல்லை என்பதைப் புலப்படுத்தியது. கடற்பகுதியில் தரையில் பாதி இழுபட்டுக் கிடந்த கடற்புறாவைத் தவிர மருந்துக்குக் கூட மரக்கலமொன்று இல்லாததும், எந்த விநாடியிலும் சூளுக்கள் துறைமுகத்துக்குள் நுழைந்து விடலாமென்பதை நிரூபித்தது. இந்த நிலையில் நகர மக்கள் ஏதும் நடக்காதது போல் தங்கள் தினசரி அலுவல்களைக் கவனித்து நடமாடிக் கொண்டிருந்தனர். நகரத்துக்குள்ளிருந்த நிலை,

யாரும் எந்த நிகழ்ச்சியையும் சமீபத்தில் எதிர்பார்க்க வில்லையென்பதைக் கண்டு ஓரளவு மகிழ்ச்சி அடைந்தாலும், அந்த மகிழ்ச்சி மீண்டும் மீண்டும் மனத்திலிருந்து அறுபட்டுப் போவதற்குக் காரணம் அறியாமல் தவித்தான். அத்தனைத் தவிப்பிலும் இருந்தது அவனுக்கு - தன்னை விட இளையபல்லவனைப் பெரிதாக மதித்து அவனிடம் தங்களை ஒப்படைத்துக்கொண்ட அக்ஷயமுனைக் கோட்டை மக்களுக்கு அன்றிரவு தான் சரியான பாடம் கற்பிக்கப் போவதையும், மறுநாள் முதல் தன்னிடம் அக்ஷய முனை மீண்டும் அடிமைப்பட்டுக் கிடக்கப் போவதையும் நினைத்த பலவர்மன் உள்ளே எழுந்த திருப்திக்கு அறிகுறியாகச் சிறிது புன்முறுவலையும் தனது இதழ்களில் தவழவிட்டுக் கொண்டான். அப்படிப் புன்முறுவல் கொண்ட சமயத்தில், "கோட்டைத் தலைவர் காலையில் மகிழ்ச்சியுடனிருப்பது எனக்கும் மகிழ்ச்சி அளிக்கிறது" என்று தனக்குப் பின்னாலிருந்து எழுந்த சொற்களைக் கேட்டுத் திகைத்துத் திரும்பிய பலவர்மன் தன்னை மிகவும் நெருங்கிய வண்ணம் இளையபல்லவன் நிற்பதைக் கண்டதும் திகைப்பை மின்னல் வேகத்தில் மறைத்துக் கொண்டு ஆச்சரியச் சாயையை முகத்தில் படரவிட்டுக் கொண்டான். "நீங்களும் காலையில் எழுந்துவிட்டீர்களா?" என்று ஏதோ கேட்க வேண்டும் என்பதற்காகக் கேட்கவும் செய்தான் பலவர்மன்.

"ஆம், எழுந்துவிட்டேன். நேற்று பூராவும் சரியான உறக்கமில்லை," என்று கூறிய இளையபல்லவன் பலவர்மன் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

உணர்ச்சிகளை லேசில் வெளிக்குக் காட்டாத பலவர்மன் முகத்தில் திகைப்பின் குறி வெளிப்படையாகத் தெரிந்தது. "என்ன நேற்றிரவு உறக்கமில்லையா?" என்ற கேள்வி கவலையைக் காட்டும் முறையில் கேட்கப்

பட்டாலும் உண்மையில் முகத்தில் தெரிந்த கிலி குரலிலும் பிரதிபலித்தது.

"ஆம். அடியோடு உறக்கமில்லை," என்றான் இளைய பல்லவன்.

"காரணம்?" கவலையுடனேயே எழுந்தது இந்தக் கேள்வியும்.

"வர வர ஊரில் அமைதி குறைந்து வருகிறது" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"அமைதி குறைந்து வருகிறதா?"

"ஆம்."

"எப்படி?"

"மக்கள் சதா இரவிலும் போர்ப்பயிற்சி செய்கிறார்கள்."

"இந்தப் பெரும் பொய்யைக் கேட்டு மலைத்த பலவர்மன், "அப்படியேதுமில்லையே. போர்ப்பயிற்சி, அணிவகுப்பு இவற்றைத்தான் நீங்களே நிறுத்திவிட்டீர்களே?" என்று கூறினான்.

"நான் நிறுத்தினால் யார் கேட்கிறார்கள்?"

"எல்லோரும்தான் கேட்கிறார்கள்."

"அப்படியானால் நேற்றிரவு பூராவும் டமார சத்தம் அடிக்கடி கேட்டதே?"

"காட்டுப் பகுதியிலிருந்து கேட்டிருக்கும்."

"காட்டுப் பகுதியில் டமாரமடிக்க யாரிருக்கிறார்கள்?"

இந்தக் கேள்வியைக் கேட்டதும் மேலும் அசந்து போனான் பலவர்மன். தினம் மிதமீறிக் குடிப்பதால் உண்மையாகவே இளையபல்லவன் ஏதுமறியாமல் இருக்கிறானா, அல்லது முழுப் பூசணிக்காயைச் சோற்றில்

மறைக்கப் பார்க்கிறானா என்பதை அறியாத பலவர்மன், "காட்டுப்பகுதியில் பூர்வகுடிகள் நடமாட்டம் அதிக மிருப்பது தெரியாதா உங்களுக்கு?" என்று வினவினான்.

"எனக்கெப்படித் தெரியும்?" சர்வ சாதாரணமாகக் கேட்டான் இளையபல்லவன்.

"நகரப் பாதுகாப்பின் பொறுப்பை ஏற்றுள்ள படைத் தலைவர் நீர். உமக்குத் தெரியாமல் வேறு யாருக்குத் தெரியும்?"

"காட்டுப் பகுதியானால் அமீருக்குத்தான் தெரியும். கடற்பகுதியானால் கண்டியத்தேவரைக் கேட்க வேண்டும்."

"இரண்டிலும் உமக்குச் சம்பந்தமில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"என் உபதலைவர்களை நான் நம்புகிறேன்."

"மேற்பார்வை உமது பொறுப்பல்லவா?"

"என் உபதலைவர்களுக்கு மேற்பார்வை அவசிய மில்லை."

"அப்படியானால் அடிக்கடி கண்ட உத்தரவுகளை ஏன் பிறப்பிக்கிறீர்கள்?"

"அவசியமென்று தோன்றினால் பிறப்பிப்பேன்."

"காவலைக் காட்டுப் பகுதியில் குறைப்பது அவசியம்!"

"குறைத்தது யார்?"

"நீங்கள்தான்."

"வேண்டுமானால் மீண்டும் பலப்படுத்திவிடு கிறேன்." என்ற இளையபல்லவன் திடீரெனப் பலவர்மன்

போக்கில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு உள்ளூர மகிழ்ச்சி யடைந்தான்.

"வேண்டாம், வேண்டாம். காவலைப் பலப்படுத்த வேண்டாம்."

"உங்கள் கருத்தை அறிந்துதான் காவலைக் குறைத் தேன். அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவரின் இதய மறிந்து நடக்கும் அத்தனை புத்திகூட அவருடைய உபதளபதிக்கு இருக்காதென்று நினைத்தீர்களா?" என்று கேட்ட இளையபல்லவன், அந்த உபதளபதி தான்தான் என்பதைச் சுட்டிக்காட்டத் தன் மார்பில் கையால் தட்டிக் கொள்ளவும் செய்தான்.

பலவர்மனின் பிரமிப்பு உச்சிக்குப் போய்க் கொண் டிருந்தது. தன் இதயமறிந்து உத்தரவுகளைப் பிறப்பிப்ப தாகச் சொன்ன இளையபல்லவன் மதியிழந்து உளறு கிறானா அல்லது தன்னைப்பார்த்து நகைக்கிறானா என்பது விளங்கவில்லை அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு. அந்தச் சமயத்தில் இளையபல்லவன் புத்தி பெரும் நிதானத்திலிருந்ததைப் புரிந்துகொண்ட பல வர்மன், அன்று பகல் பூராவும் இளையபல்லவனை அதே தெளிந்த புத்தியுடன் உலாவவிடுவது அபாயமென்ற முடிவுக்கு வந்து "நேற்றிரவு பூராவும் உறக்கமில்லையென்றீர் களே, ஏன்?" என்று பேச்சை மாற்றினான்.

"நேற்றிரவு சரியான மது கிடைக்கவில்லை", என்று காரணம் கூறினான் இளையபல்லவன்.

"அப்படியா?"

"ஆம்."

"எனக்குச் சொல்லியனுப்பியிருந்தால் நான் அனுப்பி யிருப்பேனே?"

"இப்பொழுதுதான் அனுப்புங்களேன். பகலிலாவது சிறிது உறங்குகிறேன். கண்ணெரிச்சலும் தலைவலியும் அதிகமாயிருக்கிறது" என்றான் இளையபல்லவன்.

அவசியம் அனுப்புவதாகச் சொல்லிப்போன பல வர்மன் சிறந்த மது வகையறாக்களை அடுத்த சில நிமிஷங்களுக்குள் அனுப்பி வைத்தான். அந்த மதுவில் பெரும்பாகத்தை அருந்திவிட்டுப் பஞ்சணையில் படுத்த இளையபல்லவன் உச்சிவேளை கிட்டிய பொழுதுகூட எழுந்திருக்கவேயில்லை. இளையபல்லவனையும் இளைய பல்லவன் அறைக்கு வந்து போவோர்களையும் கண் காணிக்கப் பலவர்மன் நியமித்திருந்த ஒற்றர்கள் மிகவும் மகிழ்ச்சி தரும் செய்திகளையே அவனுக்குக் கொண்டு சென்றனர். உச்சி வேளை வரையில் உறங்கிய இளைய பல்லவனை எழுப்ப முயன்ற அமீரும் கண்டியத்தேவனும் எப்படி நடத்தப்பட்டார்களென்பதைக் கேள்விப்பட்ட பலவர்மன் பெரும் பூரிப்படைந்தான். அந்தச் செய்தியைக் கொண்டு வந்த ஒற்றனை ஒரு முறைக்கு இருமுறையாக அதைப் பற்றி விசாரிக்கவும் செய்தான்.

"உண்மையாக அப்படியா நடத்தினான் இளைய பல்லவன் அமீரையும் கண்டியத்தேவனையும்?" என்று விசாரித்தான் பலவர்மன்.

வணங்கி நின்ற ஒற்றன் சொன்னான், "ஆம் பிரபு! அப்படித்தான் நடத்தினார் படைத்தலைவர்" என்று.

"அமீரைக்கூடவா?" என்று வியப்புக் குரலிலும் மண்ட விசாரித்தான் பலவர்மன்.

"அமீர்தான் முதலில் வந்தார். அவர்தான் மிகவும் கேவலப்படுத்தப்பட்டார்", என்றான் ஒற்றன்.

"எப்பொழுது வந்தான் அமீர்?"

"உச்சி வேளைக்குச் சற்று முன்பு."

"வந்து என்ன கேட்டான்?"

"அது தெரியாது. உள்ளே சென்றார். ஒரு விநாடிக்கெல்லாம் 'போ வெளியே' என்ற இளையபல்லவன் வெறிக் கூச்சல் கேட்டது. அமீரைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு அறைக்கு வெளியே வந்தார் இளையபல்லவர்."

"பிறகு?"

"காட்டுப் பகுதியில் பூர்வகுடிகள் நெருங்குகிறார்கள் என்று ஆத்திரத்துடன் கூவினார் அமீர்."

"உம்."

"நெருங்கினால் நெருங்கட்டும், போய்விடு. நெருங்கினால் இந்த ஊர் போகும். இந்த ஊர் உன் பாட்டன் வீட்டுச் சொத்தா என்று இளையபல்லவர் கூவிவிட்டு உள்ளே சென்று பஞ்சணையில் விழுந்தார்.

"பிறகு?"

"அமீர் இளையபல்லவரைச் சபித்துக்கொண்டே சென்றார்."

"என்ன சபித்தார்?"

"எப்படியாவது ஒழியட்டும். நான் போகிறேன் - நாளையே இந்த நகரத்தைவிட்டு என்று இரைந்துவிட்டுச் சென்றார்."

பலவர்மன் ஆனந்தத்தின் வசப்பட்டான். "கண்டியத் தேவன் அடுத்தபடி வந்தானா?" என்று விசாரித்தான் அந்த ஆனந்தம் குரலிலும் பரிமளிக்க.

"ஆம் வந்தார். அவருக்கும் கிட்டத்தட்ட அதே கதிதான்" என்றான் ஒற்றன்.

"கிட்டத்தட்ட என்றால்?'

"இவரைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளவில்லை. அவராகவே ஓடிவிட்டார்.

ஒற்றனின் இந்தப் பதிலால் ஏற்பட்ட ஆனந்தத்தின் ஊடே ஆழ்ந்த சிந்தனையிலும் இறங்கினான் பலவர்மன். தனக்கு அனுகூலமாகவே சகல காரியங்களும் நடந்து வருவது அவனுக்குப் பெரும் ஆனந்தத்தை அளித்தாலும் எதற்கும் தான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான். அன்று பகல் பூராவும் இளையபல்லவனை மட்டுமின்றி அமீரையும் கண்டியத் தேவனையும்கூடக் கண்காணிக்க வேண்டிய அவசியத்தை யும் உணர்ந்தான் பலவர்மன். அவர்கள்மீதும் தனது ஒற்றர்களை ஏவினான். அன்று பகல் பூராவும் ஒற்றர்கள் கொண்டு வந்த செய்தி அவன் ஆறுதலை அதிகரிக்கவே செய்தது. காட்டுப் பகுதியில் அன்று மாலை வரையில் அமீர் காவலை அதிகப்படுத்தவில்லையென்பதை அறிந் தான் பலவர்மன். அத்துடன் கடற்புறாவின் நிலையிலும் எந்த மாறுதலும் இல்லையென்பதையும் ஒற்றர் மூலமும் தானே நேரில் சென்றும் கண்டறிந்ததால் ஓரளவு நிம்மதி யையும் அடைந்தான்.

இளையபல்லவனும் அன்றையப் பொழுதை மன நிம்மதியுடன் கழித்தான். உச்சிவேளை தாண்டி நீண்ட நேரம் கழித்து எழுந்திருந்த இளையபல்லவன் கீழே நீராடுமிடம் சென்று ஊழியர்களைக் கொண்டு நன்றாக மங்களஸ்நானம் செய்து புத்தாடை உடுத்தான். தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு, மீண்டும் தன் அறை சென்று நிதானமாய் அறுசுவை உண்டியருந்தினான். பிறகு மறுபடியும் லேசாக மதுவருந்திவிட்டுப் படுத்து உறங்கி னான். இதையெல்லாம் ஒற்றர் மூலம் அறிந்த பலவர்மன், 'நல்ல சுகவாசி இவன். இப்பேர்ப்பட்டவன் எப்படிப் படைத்தலைவனானான்? அதுவும் சோழ நாட்டுப் படைத்தலைவர்களில் சிறந்தவன் என்று எப்படிப் பெயர் வாங்கினான்? சுகசாலிக்கும் உழைப்புக்கும் சம்பந்தம் சிறிதும் இருக்க முடியாதே' என்று தனக்குத்தானே

சொல்லிக்கொண்டு, 'எப்படியிருந்தாலென்ன? இன்று பகல் மட்டும்தானே இவனுக்கு ஆயுள் இருக்கிறது', என்று நினைத்துச் சந்துஷ்டியடைந்தான். அன்று மாலை வரையில் இளையபல்லவன் அறையைவிட்டு அகல வில்லையென்பதையும் அவனை உச்சிவேளைக்குப் பிறகு யாரும் சந்திக்கவில்லையென்பதையும் உணர்ந்த பல வர்மன் அன்றிரவு தான் தீட்டியிருந்த பயங்கரத் திட்டத்தை நிறைவேற்றும் வேலையில் முனைந்தான். தன்னிடம் புது மது வகையறாக்கள் வந்திருப்பதாகவும், தனது அறையி லேயே உணவருந்த வேண்டுமென்றும் இளைய பல்லவ னுக்கு அன்று மாலையில் அழைப்பு விடுத்தான் பல வர்மன். அந்த அழைப்பைத் தங்கு தடையில்லாமல் இளையபல்லவன் ஏற்றுவிட்டான் என்பதை வந்து சொன்ன ஒற்றனுக்கு வெகுமதியாக ஒரு பணமுடிப்பும் அளித்தான்.

அமாவாசை இரவு மெள்ள மெள்ள நுழையத் தொடங்கியது. மாலைப் பொழுதையும் இரவு நெருங்கு வதையும் போஜ மன்னன் சபையில் வர்ணித்த காளிதாசன், '*சனை சனை: அனங்க!*'— (இரவு மெள்ள மெள்ள அணுகியது. பருவப்பெண்களை மன்மதனும் மெள்ள மெள்ள அணுகி னான்) என்று வர்ணித்தான். அக்ஷயமுனைக் கோட்டை யின் அந்த அமாவாசை இரவில் நகருக்குள் புகுந்தது சிங்கார ரசமல்ல, அணுகியவன் அனங்கனான மன்மதனு மல்ல. கொடிய போர்ப் பிசாசு புகுந்தது அந்த நகருக் குள்ளே. அது புகப்போவதற்குப் பூர்வாங்க முரசொலிகள் காட்டுக்குள் வெகு அருகில் சப்தித்தன. அந்தச் சத்தத்தைப் பற்றி அறவே கவலைப்படாமல் பலவர்மனின் அந்தரங்க அறையை நாடிச் சென்றான் இளையபல்லவன்.

பலவர்மன் அறையில் ஒரு பெரும் அரசனுக்கு வேண்டிய விருந்து இளையபல்லவன் கண்ணெதிரே

காட்சியளித்தது. அந்த அறுசுவை உண்டிக்கு அருகே காணப்பட்ட விதவிதமான மதுக்குப்பிகளும் கலயங்களும் பொற்கிண்ணங்களும் அங்கிருந்த மங்கலான விளக் கொளியில் பலப்பல வர்ண ஜாலங்களைக் கிளப்பிக் கொண் டிருந்தன. அறை மூலையிலும் உணவு மஞ்சத்துக்கு இரு புறங்களிலுமிருந்த தீபங்களின் சுடர்கள் வேண்டு மென்றே இழுத்து விடப்பட்டன போல மிகவும் எழிலுடன் எரிந்து அந்த அறைக்குப் பெரும் சோபையைக் கொடுத்தன. அறையில் நுழைந்த இளையபல்லவன் அந்த ஏற்பாடு களைக் கண்டு சிறிது வியப்பைக் காட்டினான். அவனை முக மலர்ச்சியுடன் வரவேற்ற பலவர்மன், "வரவேண்டும் வரவேண்டும். நாம் இருவரும் சேர்ந்து உணவருந்தி நாளாகிறது," என்றான்.

"நான் வந்தது உணவருந்த அல்ல," என்ற இளைய பல்லவன் பதில் சட்டென்று அதிர்ச்சியைத் தந்தது பல வர்மனுக்கு. அந்தக் குரலிலிருந்த விபரீத ஒலி அவனுக்குத் திகிலை அளித்தது.

"வேறெதற்கு வந்தீர்கள்?" என்று கேட்டான் அவன்.

"மது அருந்த!" வெறியுடன் கூறினான் இளைய பல்லவன்.

பலவர்மன் முகத்தில் சாந்தியின் சாயை படர்ந்தது. "மது இல்லாமல் உங்களை அழைப்பேனா? சிறிது உணவு அருந்திவிட்டுப் பிறகு மது அருந்தலாம்," என்று உபசரித்த வண்ணம் இளையபல்லவனைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஆசனத்தில் அமர்த்தித் தானும் அமர்ந்தான். அங்கு உணவு பரிமாற வந்த ஊழியனை வெளியே போகச் சொன்ன பலவர்மன் தன் கைகளா லேயே இளையபல்லவனுக்கு உணவும் மதுவையும் கொடுத் தான். உணவைச் சிறிதே உண்ட இளையபல்லவன் மதுவை

மெள்ள மெள்ள உறிஞ்சத் தொடங்கியதன்றி உறிஞ்ச உறிஞ்ச அதிலேயே அதிக ஆவலையும் காட்டினான். "இத்தனை சிறந்த மது இருப்பதை ஏன் முன்னமே சொல்லி அனுப்பவில்லை? நான் என் அறையில் குடிக்காமல் வந்திருப்பேன். கொஞ்சம் அருந்தியதும் மயக்கம் வரு கிறதே" என்று கூறி அடுத்து இரண்டு கிண்ணங்களைக் காலி செய்ததும் தலை துவண்டு மஞ்சத்தில் சாய்ந்தான்.

அடுத்த விநாடி பலவர்மன் சரசரவென்று எழுந்து இளையபல்லவனை இரண்டு மூன்று முறை அசைத்துப் பார்த்தான். இளையபல்லவன் அசையவுமில்லை, கண் களைத் திறக்கவுமில்லை. பலவர்மன் மெள்ள தன் அங்கியிலிருந்து சிறு சிமிழ் ஒன்றை எடுத்து அதிலிருந்த மஞ்சள் நிறப் பொடியை எதிரே இருந்த கிண்ணத்தின் மதுவில் கலக்கினான். பிறகு மெள்ள இளையபல்லவன் கண்களைச் சிறிது நீர் கொண்டு துடைத்தான். "இளைய பல்லவரே! இதையும் அருந்துங்கள் இந்தாருங்கள்" என்று அந்தக் கோப்பையை இளையபல்லவன் கையில் கொடுத் தான். இளையபல்லவன் மெள்ளக் கண்ணைத் திறந்து மிரள மிரள விழித்தான். பிறகு மதுக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்து அறைக்கதவை நோக்கி நடந்தான். அறைக் கதவை நோக்கி, பலவர்மனுக்கு முதுகைக் காட்டிய வண்ணம் விஷம் நிரம்பிய அந்த மதுக்கிண்ணத்தை வாயருகே கொண்டு சென்றான். அறையைத் தாழிட முயன்றான். அடுத்த விநாடி மதுவற்ற மதுக்கிண்ணம் மேலே பறந்தது. கூரையில் 'கிளாங்' என்று தட்டி ஒலியெழுப்பி அறை மூலையில் விழுந்தது. இளையபல்லவன் உடல் அந்தத் தாழிட்ட கதவின் மீது சாய்ந்தது, துவண்டது, தொப்பென்று கீழே சுருண்டு விழுந்தது. பலவர்மன் அறை மூலைக்கு ஓடிக் கிண்ணத்தை எடுத்துப் பார்த்தான். அதிலிருந்த மதுவில் ஒரு துளிகூட மீதியில்லை. அந்த மூலையிலிருந்த அறைக் கதவை

நோக்கினான். அதன் கீழே கிடந்தது இளைய பல்லவன் சடலம் - ஆடாமல் அசையாமல். முகத்தில் வெற்றிக்குறி உலாவக் கதவிடம் சென்று இளையபல்லவன் உடலை இருமுறை காலால் உதைத்துப் பார்த்தான் பலவர்மன். அங்கங்கள் உயிரின்றிச் செயலிழந்து கிடந்தன. அங்கிருந்து அறை நடுவே வந்த பலவர்மன் மதுக்கிண்ணமொன்றைக் கையிலெடுத்துக் கொண்டு,"ஒழிந்தான் என் விரோதி! இந்த இரவு முதல் அக்ஷயமுனைக்குப் புதுவாழ்வு துவங்குகிறது, என்று இரைந்து கூவி வாயில் கிண்ணத்தை வைத்து மதுவை உறிஞ்சினான். அதேசமயத்தில் வெளியே காட்டுப் பகுதியில் பூர்வகுடிகளின் பலத்த கூச்சல் எழுந்தது. சில விநாடிகள் மதுக்கிண்ணத்துடன் ஆசனத்தில் அமர்ந்த பலவர்மன் வெளியே கேட்ட கூச்சலைக் கேட்டு மிகுந்த திருப்தியுடன், "பூர்வகுடிகள் நெருங்கி விட்டார்கள். சண்டையை, இல்லை இல்லை, இந்த நகர மக்களின் அழிவை நான் மாடிக்குச் சென்று பார்க்கிறேன்" என்று இரைந்து கூறிக்கொண்டு ஆசனத்தை விட்டு எழுந்திருக்க முயன்ற பலவர்மன் அடுத்த விநாடி பேரதிர்ச்சியுற்றான். "ஆசனத்தை விட்டு அகலாதே" என்ற இளையபல்லவன் குரல் அந்த அறையைப் பயங்கரமாக ஊடுருவிச் சென்றது. கதவிருந்த இடத்தை நடுக்கத்துடன் நோக்கினான் பலவர்மன். நீண்ட கத்தியை உருவிப் பிடித்த வண்ணம் கதவில் சாய்ந்துகொண்டு அலட்சியப் புன்முறுவலுடன் நின்றான் இளையபல்லவன். "உண்மையையே கூறினாய் பலவர்மா! இன்றுமுதல் அக்ஷயமுனைக்குப் புதுவாழ்வு தான்" என்ற சொற்களும் இளையபல்லவன் வாயிலிருந்து இகழ்ச்சியுடன் உதிர்ந்தன.

அத்தியாயம் 47

# சுயநலச் சதுரங்கம்

இமை நொடிக்கு முன்பாக இடது கையால் அறைக் கதவைத் தாழிட்டு, வலது கையால் வாளை உருவிப் பிடித்த வண்ணம் கதவின்மீது வெகு அலட்சியமாகச் சாய்ந்து நின்று இளநகை கோட்டிய இளையபல்லவனைக் கண்டதும் இடிந்துபோய் ஏதும் பேசமாட்டாமல் பல விநாடிகள் உட்கார்ந்துவிட்ட பலவர்மன், உணர்ச்சிகளின் பெருக்கால் தன் நிதானத்தையெல்லாம் அடியோடு காற்றில் பறக்க விட்டு, "அயோக்கியன்! அயோக்கியன்! நீ பரம அயோக்கியன்!" என்று அந்த அறையே அதிரும் படியாக இரைந்து கூவினான்.

எந்த நிலையிலும் நிதானத்தைக் கைவிடாத பலவர்மன் நிலைகுலைந்து அப்படி இரைந்து கூவியதைக் கண்டு இளநகையை உதடுகளில் விரிவடையச் செய்து கொண்ட இளையபல்லவன், "கோட்டைத் தலைவர் கோபத்துக்குக் காரணமிருக்கிறது. இருப்பினும் மன்னிக்க வேண்டும்" என்று அந்த இளநகையைத் தொடர்ந்து சொற்களையும் உதிர விட்டான்.

அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் மட்டும் சுய நிலையில் இருந்திருந்தால் படைத்தலைவனின் பதிலில் ஊடுருவிச் சென்ற ஏளன ஒலியைக் கவனித்திருப்பான். ஆனால் அந்தச் சமயத்தில் அவன் இருந்த அவல நிலையில் எதையும் கவனிக்கும் சக்தியை இழந்துவிட்டதால், "மன்னிப்பதாவது! உன்னைக் கொலை செய்ய வேண்டும்," என்று மீண்டும் கூவினான் பலவர்மன்.

"தங்கள் நினைப்பு சிறந்ததுதான். ஆனால் அதை நிறைவேற்ற அடியவனால் முடியவில்லை. இன்னும் கொஞ்சநாள் உயிரை வைத்திருக்க உத்தேசிக்கிறேன்" என்ற இளையபல்லவன் சற்று இரைந்தே நகைத்தான்.

அந்தச் சிரிப்பு பலவர்மனுக்கு ஓரளவு நிதானத்தை அளித்தது. கொந்தளித்தெழுந்த உணர்ச்சிகளை வெகு சீக்கிரம் அடக்கிக்கொண்ட பலவர்மனும் மௌனப் புன்முறுவலொன்றை உதடுகளில் தவழவிட்டுக்கொண்டே சொன்னான், "சோழ நாட்டுப் படைத்தலைவரே, நமது உத்தேசப்படி காரியம் நடப்பதில்லை. உயிரை வைத்திருக்க நீர் உத்தேசிக்கிறீர். ஆனால் வாழ்வில் உத்தேசம் வேறு, விளைவது வேறு," என்று.

"உண்மை," என்று சர்வ சாதாரணமாக ஒப்புக் கொண்டான் இளையபல்லவன்.

"எது உண்மை?" என்று சற்றே சந்தேகத்துடன் கேள்வியை வீசினான் பலவர்மன்.

"உத்தேசம் வேறு, விளைவது வேறு என்பது."

"அதை உணர்ந்து கொள்வதுதான் விவேகம்."

"அந்த விவேகம் தங்களுக்கும் இத்தனை நேரம் உண்டாயிருக்க வேண்டும்." இந்தப் பதிலைச் சொல்லி இளையபல்லவன் பலவர்மனை ஏளனத்துடன் நோக்கி னான்.

"எனக்கா! விவேகமா?" என்று கேட்டான் பலவர்மன் ஆச்சரியம் குரலில் பூரணமாகத் தொனிக்க. அந்த ஆச்சரியத்தின் ஊடே சற்றுப் பயமும் ஊடுருவி நின்றது.

"நீங்கள் ஆச்சரியப்படுவதில் காரணமிருக்கிறது. உங்களுக்கும் விவேகத்துக்கும் அதிக சம்பந்தமிருப்பதாகத் தெரியவில்லை," என்று சர்வசாதாரணமாகக் கூறினான் இளையபல்லவன்.

இதைக் கேட்டும் பலவர்மன் கோபத்தையோ, வேறு எந்தவித உணர்ச்சிகளையோ காட்டாமலே கேட்டான். "எனக்கு விவேகமில்லையென்பதை எப்பொழுது கண்டு பிடித்தீர் படைத்தலைவரே?"

"கண்டுபிடித்துப் பல நாள்களாயின." என்றான் இளையபல்லவன்.

பலவர்மனின் உதடுகளில் இகழ்ச்சிப் புன்முறுவல் படர்ந்தது. "பல நாள்களாக எதையும் கண்டுபிடிக்கும் நிலையில் படைத்தலைவர் இல்லையே," என்று விஷமத் துடன் கூறவும் செய்தான் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன்.

இளையபல்லவன் மெல்லச் சிரித்துவிட்டுச் சொன் னான், "இங்கு விவேகக் குறைவு இருக்கிறது," என்று.

இந்தப் பதில் பலவர்மன் நிதானத்தை உடைக்கவே அவன் அதுவரை கடைப்பிடித்த நிதானத்தைக் கைவிட்டு இளையபல்லவனைச் சொந்தப் பெயர் கொண்டு அழைத்து "கருணாகரா! குடிகாரன் விவேகத்தைப் பற்றி விளக்கம் கூறுவது விசித்திரமாக இல்லை உனக்கு?" என்றான்.

இளையபல்லவன் இதழ்களில் இருந்த இளநகை சரேலென மறைந்து அவன் முகத்தில் சாந்தமும் உறுதியும் நிலவின. அவன் பேசியபோது குரல் நிதானத்துடனும் கடுமையுடனும் ஒலித்தது. "பலவர்மா! எவன் குடிகாரன் எவன் குடிகாரனில்லை என்பதை உணரும் விவேகம் மட்டும் உனக்கிருந்திருந்தால் நீ தற்சமயம் இருக்கும் நிலையில் இருந்திருக்கமாட்டாய்," என்று இளைய பல்லவன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களைக் கேட்டதும், மெள்ள உண்மை உதயமாகவே ஆசனத்திலிருந்து எழுந் திருக்க முயன்றான் பலவர்மன். "அப்படியே உட்கார்! இருக்குமிடத்தைவிட்டு அசைந்தால் இந்தக் கணத்தில் நீ பிணமாகிவிடுவாய். உன்னை இந்த அறையில் சந்தித்த

முதல்நாள் குறுவாள் வீசி உன் கழுத்து அங்கியை உன் ஆசனத்துடன் வைத்துவிட்டேனே நினைப்பிருக்கிறதா பலவர்மா? அதே குறுவாள் இதோ இன்றும் என் இடைக் கச்சையிலிருக்கிறது. இன்று அதை வீசினால் குறி உன் கழுத்து அங்கியின் பக்கப் பகுதிக்கு இருக்காது. உன் கழுத்துக்கே இருக்கும்," என்று எச்சரித்து இடைக் கச்சையைத் தட்டிக் காட்டிய இளையபல்லவன் மேலும் சொன்னான்: "பலவர்மா, நீ அறிவாளி என்பதில் சந்தேக மில்லை. ஆனால் அறிவு மட்டும் விவேகத்தை அளிப்ப தில்லை. தர்மம் இணையும்போதுதான் அறிவு சரியான துறையில் வளர்ச்சியடைகிறது. அறிவின் தெளிந்த ஒளி தான் விவேகம். அதர்மம், அநீதி இந்தச் செயல்களை உடையவன் அந்த ஒளியைப் பெறுவதில்லை. பெரும் வஞ்சகச் செயல்களை விவேகத்தின் விளைவு என்று சிலர் எடை போடுவார்கள். அந்தச் சிலரில் நீ ஒருவன். இந்த அறையில் உன்னை முதல் நாள் சந்தித்தபோதே நீ பெரிய வஞ்சகன் என்பதைப் புரிந்துகொண்டேன். ஆகவே உன்னை வஞ்சகத்தாலேயே வெற்றி கொள்ளத் தீர்மானித் தேன்..."

இந்தச் சமயத்தில் இளையபல்லவனை இடைமறித்து "கருணாகரா..." என்று ஏதோ சொல்ல முயன்ற பலவர் மனைக் கையால் சைகையாலே தடுத்த இளையபல்லவன், "பலவர்மா! சொல்வதை முழுவதும் கேட்டுக்கொள். பிறகு சந்தேகமிருந்தால் விளக்கம் தருகிறேன். இங்கு வருமுன்பே உன் பிரக்கியாதியை அறிந்துதான் வந்தேன். இங்கிருந்த கொள்ளையர் கூட்டத்தையும் பூர்வகுடிகளையும் பாதி அச்சுறுத்தியும், பாதி உறவாடியும் அவர்களை நிலத்திலும் நீரிலும் கொள்ளையடிக்கச் செய்து அதில் நீ பங்கு பெற்று வந்ததையும், உன் பெயரைக் கேட்டாலே இந்தப் பக்கம் பூராவும் நடுங்கி வந்ததையும் அறிந்தேன். நாட்டுப்பற்றின் பெயரால் நீ கலிங்கத்துடன் சேர்ந்துகொண்டு பிற நாட்டுக் கப்பல்களைக் கொள்ளையடித்ததையும் அறிந்தேன். வங்கக்

கடலின் நடுவே, சோழ நாட்டுக்கும் கடாரத்துக்கும் இடையே மூக்கை நீட்டிக் கொண்டிருக்கும் சொர்ணத் தீவின் வடமுனையான இந்த அக்ஷயமுனைத் தளம் உடைக்கப் படாவிட்டால், சோழநாட்டுக் கப்பல்கள் பயமின்றிக் கடாரம் செல்ல முடியாதென்பதைத் தீர்மானித்தேன்—" என்று பேச்சை சற்றே நிறுத்தினான்.

"சொல் பதரே! கொள்ளைக்காரா!" என்று உணர்ச்சிகளின் மிகுதியால் இரைந்து கத்தினான் பலவர்மன்.

இளையபல்லவன் அந்தக் கத்தலைச் சட்டை செய்யாமலே மேலும் சொன்னான்: "பலவர்மா! அந்தத் தீர்மானத்தின் விளைவாகவே இங்கு வந்தேன். இந்த அக்ஷயமுனைத் தளத்தின் பலத்தை உடைக்கவும் இதை எனக்கு அனுகூலமான தளமாக்கிக் கொள்ளவும் முடிவு செய்தே இந்த இடத்துக்கு வந்து சேர்ந்தேன். வந்து உன்னை இந்த அறையில் முதல்நாள் சந்தித்ததும் முக்கியமான ஒரு விஷயத்தைப் புரிந்துகொண்டேன். உனக்கு நாட்டுப் பற்றோ, மக்கள் பற்றோ எதுவும் கிடையாது. நீ பெரும் வஞ்சகன். முதல் தரமான சுயநலக்காரன்! பணப்பேய் பிடித்தவன் என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டேன். நீ கொலை செய்த கொள்ளைத் தலைவர் படங்களையும் பட்டயங்களையும் பார்த்தேன். நீ எத்தனை கொடியவன் என்பதையும் புரிந்துகொண்டேன். அது மட்டுமல்ல! ஸ்ரீவிஜயத்தின் உபதளபதியை மாள அடித்து அவர் சித்திரத்தையும் பட்டயத்தையும் நீ இங்கு பகிரங்கமாக மாட்டியிருப்பதிலிருந்து மற்றொரு உண்மையும் புரிந்தது எனக்கு. அந்த உண்மை என்ன தெரியுமா பலவர்மா?"

"என்ன என்ன?" பலவர்மன் கிலியுடன் கேட்டான்.

"ஸ்ரீவிஜய மன்னனான ஜெயவர்மன் எதற்கோ உன்னிடம் அச்சப்படுகிறான் என்ற உண்மையைத்தான் குறிப்பிடுகிறேன்."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"உபதளபதியை நீ கொன்றும் உன்னை இந்தக் கோட்டைத் தலைவனாக வைத்திருப்பதிலிருந்தே தெரிந்து கொண்டேன். உபதளபதியைக் கொன்றவனை, அதுவும் கொன்றதைப் பறைசாற்றிக் கொண்டிருப்பவனை, கொலை காரனென்று பிரசித்தியடைந்திருப்பவனை, சொர்ண பூமியின் இந்த முக்கியமான துறைமுகத்தின் அதிபதியாக இந்தச் சாம்ராஜ்யாதிபதி ஏன் வைத்திருக்க வேண்டும்? ஏன் அத்தகைய மனிதனை விசாரணைக்குக் கொண்டு வரவில்லை? உறவினன் என்பதால் விசாரணைக்குக் கொண்டு வராவிட்டாலும் சாம்ராஜ்ய நன்மையை முன்னிட்டுப் பதவியிலிருந்தாவது ஏன் அகற்றவில்லை? இதையெல்லாம் பரிசீலித்துப் பார்த்தேன். முதலில் விடை கிடைக்கவில்லை. பிறகு கிடைத்தது..."

"எப்படிக் கிடைத்தது?"

"நீ அளித்தாய் விடையை."

"நானா?" ஆச்சரியமும் பயமும் கலந்து ஒலித்தது பலவர்மன் குரலில்.

"ஆம்! நீதான் பலவர்மா?" என்று திட்டமாகச் சொன்ன இளையபல்லவன் தன் விளக்கத்தை மேலும் தொடர்ந்து, . "மஞ்சளழகியை என்னை மயக்கும்படி தூண்டியதிலிருந்து விடை கிடைத்தது எனக்கு. சொந்தப் பெண் அல்லாவிட்டாலும் வளர்ப்புப் பெண்ணைக்கூட மனித இதயமுள்ள, பண்புள்ள, மானமுள்ள எவனும் பிறனுடன் உறவாட விடமாட்டான். ஆனால் நீ உறவாட விட்டாய். அதிலிருந்து உன்மீதிருந்த சந்தேகம் அதிகமா யிற்று எனக்கு. ஆகவே உன்னை அருகிலிருந்து கவனிக்கத் திட்டமிட்டேன். அருகிலிருந்து கவனிக்க வேண்டுமானால் உன்னிடமுள்ள சந்தேகத்தை நீக்க வேண்டும். நீ என்னை அதிகமாகச் சட்டை செய்யாத அளவுக்கு நான் மாற வேண்டும். அப்படி மாறினேன். அதற்காக் குடிகாரனா னேன். குடித்தது உண்மை பலவர்மா! ஆனால் என்றும்

மிதமிஞ்சிக் குடிக்கவில்லை. எனது நாட்டில் புலாலுக்குப் பிறகு நான் அருந்தும் அளவே மது அருந்தி வந்தேன். அதிகப்படி அருந்திவிட்டதாக நடித்தேன். மெள்ள மெள்ள என் வலையில் நீ விழுந்தாய். முதலில் மக்களுக்குப் போர்ப் பயிற்சி அளித்தேன். நீ பயந்தாய். பிறகு காவலைக் குறைத்தேன். நீ மகிழ்ந்தாய். ஆனால் நீ பூரணமாக என்னை உணர முடியவில்லை. நான் எடுத்த ஒவ்வொரு நடவடிக்கையும், உனக்கு என் குடியில் பூரண நம்பிக்கையும் நிதானமிழந்த என் தன்மையால் பூரண அவிவேகமும் உண்டாக்குவதற்காகவே எடுக்கப்பட்டன. நீ அந்த நம்பிக்கையில் ஆழ்ந்தாய். நம்பிக்கையல்ல, படுகுழியில் ஆழ்ந்தாய் பலவர்மா! குடியில் நான் மதியிழந்து கிடந்ததாக நீ நினைத்து, பூர்வகுடிகளுடன் தொடர்பு கொண்டு என்னை ஒழிக்கவும் அக்ஷயமுனையை ஒடுக்கிப் பழைய ஸ்திதிக்குக் கொண்டு வரவும் திட்டமிட்டதெல்லாம் ஒவ்வோர் அணுவும் எனக்குத் தெரியும்" என்றான்.

"என்ன திட்டம்! என்ன தெரியும் உனக்கு?" என்று சீறினான் பலவர்மன். அவன் குரலில் சீற்றமிருந்தது. முகம் பேயறைந்து கிடந்தது.

இளையபல்லவனின் சொற்கள் தீப்பொறிகளென உதிர்ந்தன. "ஆந்தையின் அலறல் தெரியும்..." என்று மெள்ள இழுத்தான் படைத்தலைவன்.

பலவர்மன் மூச்சுப் பெரிதாக வந்தது. முகத்தில் பயத்தின் வியர்வைத் துளிகள் உண்டாயின. "ஆந்தையின்—அலறலா?... அதற்கென்ன?..." என்று குளறினான் பலவர்மன்.

அந்தக் குரலைக் கண்டதும் வெறுப்புமிகுந்த பார்வை யொன்றைப் பலவர்மன் மீது வீசினான் இளையபல்லவன். "வஞ்சகனாயிருப்பவன் கோழையாகத்தான் இருப்பா னென மனோதத்துவ சாத்திரம் சொல்வது எத்தனை உண்மை உன் விஷயத்தில்?" என்று வெறுத்து அலுத்துக்

கொண்ட படைத்தலைவன், "இடும்பன் உன்னை வர வழைக்க ஊதிய கடற்சிப்பியை மாளிகைத் தோட்டத்தின் மரத்து நிழலிலேயே தவறவிட்டுச் சென்றான். அதை நான் எடுத்து மஞ்சளழகியிடம் கொடுத்தேன்" என்றான்.

பலவர்மன் புத்தியில் உண்மை மெள்ள மெள்ள உதயமாகத் தொடங்கியது. தன் மாளிகையிலிருந்து கொண்டே தன் ஒவ்வொரு நடவடிக்கையையும் இளைய பல்லவன் கவனித்திருப்பதை உணர்ந்த பலவர்மன், "அன்றிரவு நீ குடித்து மயங்கி உறங்கிவிட்டதாகவும் காவலரையும் உறங்கச் சொல்லிவிட்டதாகவும் கேள்விப் பட்டேனே," என்றான் குரல் தழுதழுக்க.

"காவலரை உறங்கச் சொன்னேன், நானும் கண் மூடினேன் - உனது ஒற்றன் வந்து என்னை அசக்கிப் பார்த்துச் செல்லும் வரை. பிறகு நான் என்ன செய்திருப் பேன்" என்று கேட்ட இளையபல்லவன் நகைத்தான்.

இளையபல்லவன் என்ன செய்திருப்பானென்பதைப் புரிந்துகொண்ட பலவர்மன் நடுங்கினான். இடும்பனும் நானும் பேசியதையெல்லாம் கேட்டிருக்கிறான் இளைய பல்லவன் என்பது தெளிவாகத் தெரிந்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு. அப்படியிருந்தும் இடும்பன் மஞ்சளழகியைத் தூக்கிச் செல்வதற்கு எப்படி அனுமதித் தான் இளையபல்லவன் என்பது புரியாததால் பிரமித்து விழித்தான் பலவர்மன். அவன் பிரமிப்பிலிருந்தே உள்ளத்தி லோடும் எண்ணங்களைப் புரிந்துகொண்ட இளைய பல்லவன் சொன்னான். "மஞ்சளழகியை அபகரித்துச் செல்ல நீ இடும்பனுக்கு உத்தரவிட்டதற்கு ஆதரவளித்தது நான்தான். அவன் தூக்கிச் சென்றால் செல்லும்படி மஞ்சளழகிக்குக் கூறியதும் நான்தான்!"

பலவர்மனின் பிரமிப்பு உச்சஸ்தாயியை அடைந்தது. "மஞ்சளழகிக்கு இது தெரியுமா முன்பே?" என்று வினவினான்.

"தெரியும். முதலில் அவள் நம்பவில்லை. பிறகு உன்னிடம் அவளை அனுப்பினேன்."

"எதற்கு?"

"உன் உண்மைச் சொரூபத்தை விளக்க."

"என்ன சொரூபத்தை விளக்கினாய்?"

"உனக்கு அவளிடம் எந்த அக்கறையுமில்லை யென்பதை விளக்கினேன். இந்த நாட்டின் அரசியல் சதுரங்கத்தில் நானும் அவளும் காய்கள் என்பதை அவள் ஒருநாள் கடற்கரையில் என்னிடம் சொன்னாள். அரசியல் சதுரங்கம் ஏதும் அக்ஷயமுனையில் இல்லை. ஓர் அயோக்கியனின் சுயநலச் சதுரங்கம் தானிருக்கிறது என்று விளக்கினேன். அதை நேரில் உணர அவளையே அனுப்பினேன். நான் அவளிடம் முறை தவறி நடப்பதாகவும், என் அறைக்கு அவளை அழைப்பதாகவும் கூறச் செய்தேன். அவள் உன்னிடம் வந்தாள். நான் சொல்லச் சொன்னதைச் சொன்னாள். உன்னைப்பற்றி நான் கூறியதையெல்லாம் சரியென்று உணர்ந்து மீண்டும் என்னிடம் வந்தாள். அடுத்துச் செய்ய வேண்டியதையும் கூறினேன். அவள் இணங்கினாள்.

பலவர்மன் தலை சுழன்றது. இருப்பினும் ஒரு நம்பிக்கை மட்டும் இருந்தது அவனுக்கு. அந்தச் சமயத்திலும் காட்டுப்பகுதியில் கேட்டுக் கொண்டிருந்த பூர்வ குடிகளின் இரைச்சலும் டமார ஒலிகளும் அவனுக்குப் பெரும் நம்பிக்கையை ஊட்டின. எப்படியும் அக்ஷயமுனை பொழுது விடிவதற்குள் தன் வசமாகிவிடு மாகையால், இளையபல்லவனை ஒழித்துக் கட்டிவிடலாமென நினைத்தான். அடுத்த விநாடி இளையபல்லவன் பெரிதாக நகைத்தான்.

"எதற்காக நகைக்கிறாய்?" என்று இரைந்தான் பல்வர்மன்.

"உன் மனக்கோட்டையை நினைத்து நகைக்கிறேன்" என்றான் இளையபல்லவன்.

"என்ன மனக்கோட்டையைச் சொல்கிறாய்?" என்று மீண்டும் சீறினான் பலவர்மன்.

"விடிவதற்குள் இந்தக் கோட்டை உன் வசமாகி விடுமென்ற மனக்கோட்டையைச் சொல்லுகிறேன் பலவர்மா!" என்றான் இளையபல்லவன்.

பலவர்மன் முகத்தில் ஈயாடவில்லை. இளைய பல்லவன் அவனருகில் சென்று, "நம்மிருவர் பேச்சில் நேரம் ஓடிவிட்டது பலவர்மா! மாடிக்கு வா! உண்மையைப் புரிந்துகொள்" என்று கூறி அவன் கையைப் பிடித்துச் சரசரவென்று இழுத்துக்கொண்டு கதவைத் திறந்து மாடிக்கு அவனை அழைத்துச் சென்றான். அவர்களிரு வரும் மாடியை அடைந்த சமயத்தில் காட்டுப் பகுதியை அடுத்திருந்த மதில் சுவரிலிருந்து பெரும் கொம்பு ஒன்று பலமாக அலறியது.

அதைக் கேட்டதும் தனது அறைக்குச் சென்று மின்னல் வேகத்தில் மற்றொரு கொம்புடன் ஓடிவந்த இளையபல்லவன் அந்தக் கொம்பை வாயில் வைத்துப் பலமாக ஊதினான். மதில் சுவரிலிருந்து வந்த கொம்புச் சத்தமும் மாளிகை மாடியிலிருந்து கிளம்பிய கொம் பொலியும் மாறி மாறி மூன்று முறை அக்ஷயமுனை நகரத்தை ஊடுருவிச் சென்றதும் பிரமிக்கத்தக்க நிகழ்ச் சிகள் தொடர்ந்தது.

"நன்றாகப் பார் பலவர்மா! உன் சுயநலச் சதுரங் கத்தின் காய்கள் சிதறுவதைப் பார். மக்கள் பலத்தைப் பார். உன் கதியைப் பார்" என்ற இளையபல்லவன் குரல் தொலை தூரத்திலிருந்து ஒலிப்பதுபோல் கேட்டது பலவர்மனுக்கு. அதிர்ச்சியால் பலவர்மனின் தலையும் சுழன்றது.

அத்தியாயம் 48

# தர்மம் நிரந்தரம்

மாளிகையின் மாடித்தளத்திலிருந்து சோழர் படைத் தலைவன் காட்டிய காட்சியைக் கண்டதால் பேரதிர்ச்சி யுற்று, தலைசுழன்று மயக்கமுற்ற பலவர்மன் மீண்டும் கண்விழித்தபோது தனது அந்தரங்க அறையின் மஞ்சத்தி லேயே தான் சாய்ந்து கிடப்பதை உணர்ந்து நாற்புறமும் பார்த்துப் பார்த்துச் சில விநாடிகள் மிரள மிரள விழித்தான். அந்தச் சமயத்திலும் இளையபல்லவன் வாளை உருவிப் பிடித்த வண்ணம் தாழிட்ட கதவுக்கருகில் நின்றி ருப்பதைக் கண்டதும் தான் கண்டது ஒருவேளை கனவோ அல்லது சித்தப் பிரமைதான் அத்தகைய காட்சிகளைத் தன் கண்களின் முன்பாக உலாவ விட்டதோ என்று எண்ணி ஏதும் விளங்காததால் விளக்கத்துக்கு இளைய பல்லவனையே எதிர்நோக்கினான். கதவுக்கருகில் நின்று கொண்டிருந்த இளையபல்லவனின் அங்கியின் மேல் பாகம் சொட்டச் சொட்ட நனைந்து குருதிபோல் சிவந்து கிடப்பதைக் கண்டதும் ஓரளவு சுரணை வரப்பெற்று இளைய பல்லவன் கையாண்ட தந்திரத்தையும் புரிந்து கொண்ட பலவர்மன் தான் எத்தனையோ எச்சரிக்கை யுடன் நடந்துகொண்ட போதிலும் தன்னை அந்தச் சோழநாட்டவன் ஏமாற்றிவிட்டதை எண்ணிப் பார்த்துப் பெரும் கோபத்தையும் அடைந்தான்.

பலவர்மன் கண்கள் பதிந்த இடத்தையும் அவன் முகத்தில் உண்டான குழப்பம், கோபம் முதலான

குறிகளையும் கண்ட படைத்தலைவன் தனது முகத்தில் உணர்ச்சி எதையும் காட்டாமலே சொன்னான்: "பலவர்மா! உனக்கு விவேகம் அதிகமில்லையென்று சொன்னேனே. அது உண்மையென்பதை இப்பொழு தேனும் புரிந்துகொண்டாயா?"

உணர்ச்சியற்ற வறண்ட குரலில் உதிர்த்த அந்தச் சொற்களைக் கேட்ட பலவர்மன் கோபத்தின் வசப்பட்டு, "புரிந்துகொள்வதற்கு என்ன இருக்கிறது!" என்று சீறி விழுந்தான். மூளை பெரிதும் குழம்பி நின்ற அந்த நிலையிலும்.

"விவேகமிருந்தால் விவேகத்தின் கண்கள் உனக்குப் பல விஷயங்களைப் புரிய வைத்திருக்கும் பலவர்மா! உதாரணமாக நான் உன்னுடன் உணவருந்தும்போது உணவருந்த மட்டும் நான் வரவில்லையென்பதைப் புரிந்து கொண்டிருப்பாய்" என்றான் இளையபல்லவன்.

"எப்படி?" சீற்றத்துடன் எழுந்தது இந்த ஒற்றைச் சொல்லும் பலவர்மன் வாயிலிருந்து.

"உன்னுடன் உணவருந்த வந்தபோது இடைக் கச்சையில் வாளைக் கட்டியிருந்தேன். குறுவாளையும் செருகியிருந்தேன். உணவருந்த வருபவன் ஆயுதபாணியாக ஏன் வரவேண்டும் என்பதை நீ யோசித்திருக்க வேண்டும். அப்படித்தான் வந்தாலும் உணவருந்தும் சமயத்தில் வாளைக் கழற்றி அப்புறம் வைப்பது வீரர்கள் வழக்க மில்லையா? அப்படிக் கழற்றாததையாவது நீ கவனித்திருக் கலாம்! அதைத்தான் கவனிக்கவில்லை; நான் இருமுறை மது அருந்தியபின் பூர்ணமாக நிதானமிழந்து விட்டேனா என்பதை நிதானித்துச் சோதித்தும் பார்த்திருக்கலாம். அதைப் பார்க்காவிட்டாலும், விஷத்தை நீ கிண்ணத்தில் கலந்த போதாவது என் முகத்தை விட்டு ஏன் கண்களை

எடுத்திருக்கக் கூடாது. கொஞ்சம் இதையெல்லாம் புரிந்து கொண்டு ஒரு விநாடிக்கு முன் மது மயக்கத்திலிருப்பவன் விஷக்கிண்ணத்தைத் தூக்கிக்கொண்டு நடப்பதைப் பார்த்த பின்பு ஏதோ எதிர்பாராத விபரீதம் நடந்துவிட்டது என்பதையாவது உணர்ந்து கொண்டிருக்கலாம். எதையும் நீ உணரவில்லை. இந்த இரவு அக்ஷயமுனை, எப்படியும் உன் கைவசமாகிவிடும்; உன் திட்டங்கள் தடையின்றி நிறைவேறிவிடும் என்ற மனக்கோட்டையில், மனக்கோட்டை விளைவித்த மனப்பிராந்தியில் மனிதர்கள் நடவடிக்கையில் கவனிக்க வேண்டிய பல சிறு விஷயங்களை நீ கவனிக்கவில்லை. அதன் விளைவுதான் உன்னுடைய இந்த நிலை" என்றான் இளையபல்லவன்.

"மாடியில் நான் கண்டது... கண்டது..." என்று குழறினான் பலவர்மன் நடுங்கும் குரலில்.

"நீ கண்டது, உன் திட்டங்களின் குலைவு. நீ கண்டது சூழ்ச்சின் வீழ்ச்சி. அறத்தின் எழுச்சி. இடும்பனையும், வில்வலனையும் கொண்டு மக்களையும், என்னையும் பழிவாங்கி விடலாமென மிகுந்த ரகசியத்துடன் திட்டமிட்டாய் பலவர்மா! அந்த இரகசியத்தை உடைக்க நானொருவன் இருக்கிறேன் என்பதை மட்டும் நீ எண்ணிப் பார்க்கவில்லை. இடும்பனையும் சூளுக்களையும் கடற்புறத்திலும், வில்வலனையும் பதக்குகளையும் காட்டுப்புறத்திலும் இன்றைய இரவில் இந்த அமாவாசை இரவில் தாக்க ஏற்பாடு செய்தாய். அந்தத் திட்டம் எனக்குத் தெரியாதென்று நினைத்தாய். அந்த அறிவீனத்திலேயே உன்னை இருத்த நான் தீர்மானித்தேன். ஆகவே கடற்புறாவின் அமைப்பை மாற்ற நான் ஏற்கெனவே செய்த திட்டத்தை எல்லோர் எதிரிலும் பறைசாற்றினேன். மாற்றியமைக்க ஒரு மாதம் ஆகட்டும் என்று கண்டியத்தேவனிடமும் சொன்னேன். அத்தனை விஷயங்களும் உன்

காதுக்கு எட்டும் என்பது எனக்குத் தெரியும். அது மட்டுமா? நகரத்திலும் காவலைக் குறைத்தேன். அஜாக்கிரதையை மேலுக்குக் காட்டும்படி அமீருக்குக் கட்டளையிட்டேன். நாங்கள் எச்சரிக்கை இழந்துவிட்டதாக நீ நினைத்தாய். ஏற்பாடுகளை மந்தப்படுத்திவிட்டதாக நீ மகிழ்ந்தாய். நினைக்கட்டும், மகிழட்டும் என்று அனுமதித்தேன். ஆனால் அமீருக்குப் பயங்கரமான உத்தரவுகளைத் தவிர ரகசியமான உத்தரவுகளும் இருந்தன. மக்களையும் வீரர்களையும் இரு கூறுகளாகப் பிரித்தோம். இருவிதமாக அவர்களைச் சண்டைக்குத் தயார் செய்தோம். திடீரெனப் போர் ஏற்பாடுகளை நிறுத்தியது அவர்களுக்கும் முதலில் பிரமையளித்தது. ஆனால் ரகசிய உத்தரவுகள் அனுப்பப்பட்டன. அது அனுப்பப்பட்ட முறை வாய் வாயிலாக உபதலைவர்களுக்கு மட்டும் அனுப்பினேன். ஒவ்வோர் உபதலைவனும் மேலுக்கு அலட்சியமாகவும் உள்ளுக்குள் எச்சரிக்கையுடனும் நடந்து கொண்டான். காட்டுப் பகுதியைப் பார்த்தாயா பலவர்மா? மறைக்கப்பட்ட விற்கள் திடீரெனக் கோட்டைத் தளத்திலிருந்து மந்திரத்தால் எழுப்பப்பட்டவை போல் எழுந்து அம்பு மழை பொழிந்ததைக் கவனித்தாயா?" என்று வினவினான் இளைய பல்லவன்.

பலவர்மன் மனமுடைந்து இளையபல்லவனை ஏறிட்டு நோக்கினான். "அந்த விற்கள்? யந்திர விற்கள்..." என்று ஏதோ கேட்டான்.

"ஆம் பலவர்மா. அவை யந்திர விற்கள்தான். அவற்றை எழுப்பவும் படுக்க வைக்கவும் கீழே மர உருளை வண்டிகள் இருந்தன. அவை சிதறிக் கிடப்பதைப் பார்த்த உன் ஒற்றர்கள் அவை பயனற்றவை என்று எண்ணினார்கள். அவைகளை இயக்கும் வீரர்கள் அங்கில்லாததையும் கண்டதும் காவல் அடியோடு அற்றுவிட்டது என்று

எண்ணினார்கள். ஆனால் கொம்பு ஒன்று பலமாக ஊதப்பட்டதும் காவலர் கோட்டை மதிலுக்கு விரைய அவர்களுக்கு உத்தரவிடப்பட்டிருந்தது. சண்டை துவங்க அமீர் கொம்பு ஊதியதும், நான் பதிலுக்கு இங்கிருந்து கொம்பு ஊதுவதாக எங்களுக்குள் ஏற்பாடு இருந்தது. முதல் கொம்பு வீரர்களை மதில்மேல் ஏற்றும்; மக்களை ஊர்ப் பாதுகாப்புக்குத் துரிதப்படுத்தும். இரண்டாவது கொம்பு ஊதப்பட்டது போர் துவங்கத் தயாராகும் உத்தரவைக் குறித்தது. மூன்றாவது கொம்பு போர் துவங்கிவிட்டதைக் குறிப்பது. இதையெல்லாம் நீ பார்த்தாய், கேட்டாய் பலவர்மா! மதிலிலிருந்து எரியம்புகள் சீறிச் சென்றதைப் பார்த்தாயல்லவா? காடு எரிந்ததைக் கவனித்தாயல்லவா?"

"பார்த்தேன், கவனித்தேன்."

"சாதாரண அம்பு மழை காட்டுப் பகுதியின் மறைவிலிருந்து வெளிவந்த பூர்வகுடிகளைக் கொல்ல. தீயம்பு மழை அவர்களுக்கு மீண்டும் காடு புகலிடமளிக்காதிருக்கக் காட்டை முடிந்த வரையில் கொளுத்திவிட."

இந்தப் பயங்கர ஏற்பாடுகளைக் கேட்ட பலவர்மன் திகைத்தான். காட்டுக்கும் மதில் சுவருக்கும் இடையிலிருந்த மரங்களை அமீர் வெட்டி அதை வெறும் பொட்டல் வெளியாக அடித்த காரணத்தைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான் பலவர்மன். அந்த இடைவெளி உண்மையில் பதக்குகளின் மயானவெளி என்பதைப் புரிந்துகொண்டு நடுங்கினான். அந்த நடுக்கத்தை அதிகப்படுத்தக் காட்டுப் பகுதியிலிருந்து பலர் வீறிட்டு அலறும் சத்தம் அந்த அறைக்குள்ளும் பயங்கரமாகப் புகுந்தது. "இடும்பனின் கப்பல்கள்..." என்று ஈனசுரத்தில் கேட்டான் பலவர்மன்.

"கொளுத்தப்பட்டதைக் கடற்பகுதியில் நீ காண வில்லையா?" என்று சர்வ சாதாரணமாக வினவினான் இளையபல்லவன்.

பலவர்மன் இடிந்து ஆசனத்தில் சாய்ந்தான். "கண்டேன். ஆனால்..." என்று ஏதோ சொல்ல முற்பட்டான்.

"கடற்புறாதான் நீரில் மிதக்கவில்லையே; சூளுக்களின் கப்பல்களை யார் கொளுத்தியது என்றுதானே கேட்கிறாய் பலவர்மா?" என்று இடிந்து உட்கார்ந்து விட்ட பலவர்மனின் கேள்வியைத் தானே வெளியிட்ட கருணாகர பல்லவன், "கடற்புறாவின் சக்தியை உனக்குக் காட்டினேன் பலவர்மா! ஆனால் முழுதும் காட்டவில்லை. நின்ற நிலையிலேயே கப்பல்களுடன் போரிடும் சாதனங்கள் கடற்புறாவில் இருக்கின்றன. அபாயம் வரும்போது சாதுவும் துஷ்டனாகிறான் பலவர்மா. அது போல்தான் கடற்புறாவும். புறா சாதுவான பட்சி; ஆனால் அவசியம் நேரிடும் போது கழுகைவிடக் கொடிய முறையில் தாக்கும் வன்மை கடற்புறாவில் இருக்கிறது. நாளைக் காலையில் உனக்குக் காட்டுகிறேன்" என்று கூறினான்.

படைத் தலைவன் சொல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வாளென பலவர்மன் இதயத்தைத் துளைத்தது. அவன் கோபம் எல்லை கடந்தது. "காலை வரை ஏன் காத்திருக்க வேண்டும்?" என்று கேட்டான் பிரமை தட்டிய குரலில்.

"இன்றிரவு கடற்கரையில் யாரும் உலாவ முடியாது."

"ஏன்? ஏன்?"

"கடற்புறாவின் எரியம்புகள் கடற்கரைப் பகுதிகளில் யாரையும் அணுகவொட்டா."

"கொள்ளை மாதர்கள்..."

"இரவின் ஆரம்பத்திலேயே நகருக்குள் அழைத்து வரப்பட்டார்கள்."

"எனக்குத் தெரியாதே."

“நீ முக்கிய அலுவலாக இருந்தாய் பலவர்மா. ஒற்றர் களைச் சந்திக்கக்கூட உனக்கு அவகாசமில்லை. அவகாச மிருந்தாலும் பயனில்லை.”

“என்ன சொல்லுகிறாய்?”

“என்னைக் கொல்லும் முக்கிய பணியில் ஈடு பட்டிருந்ததால் மற்ற விஷயங்களை மறந்தாய். உன்னை இங்கு ஒற்றர் யாராவது சந்திக்க வந்தால் சிறை செய்து விடும்படி என் வீரர்களுக்கு உத்தரவிட்டிருந்தேன்.”

“உன் வீரர்களா?”

“ஆம். என்னை இந்த அறைக்குள் வரவழைத்ததும் இந்த மாளிகையை என் வீரர்கள் வசப்படுத்திக் கொண் டார்கள். இப்பொழுது மாளிகை என் வசமிருக்கிறது.”

பலவர்மனின் திகைப்பு எல்லைமீறிப் போய்க் கொண்டிருந்தது. மஞ்சத்தில் சாய்ந்து மிரள மிரள விழித்தான். “அப்படியானால் நான் கண்டது, கண்டது...” என்று இழுத்த பலவர்மன் சொற்களை, “கனவல்ல”, என்று இடை புகுந்து வெட்டினான் இளையபல்லவன்.

அடுத்த சில நிமிடங்கள் அந்த அறையில் நிலவியது மௌனமா அல்லவா என்பதைக்கூட நிர்ணயிக்க முடிய வில்லை பலவர்மனால். அறையிலிருந்த இருவருக்கிடையே மௌனம் நிலவத்தான் செய்தது. ஆனால் காட்டுப் பகுதி யிலிருந்தும், கடற்பகுதியிலிருந்தும் கிளம்பிக் கொண்டிருந்த பயங்கரச் கூச்சல்கள் அந்த அறையிலும் போர் நிலை யையே புகுத்தியது. துறைமுகத்தில் எரிந்த சூளுக்களின் கப்பல்கள் படீல் படீலென வெடிக்கும் சத்தம் அறைக்குள் காதைப் பிளந்தது. கப்பலிலிருந்து தப்பிக் கரையில் ஓடி வந்த சூளு வீரர்கள் கடற்புறாவின் அம்புகளால் தாக்குண்டு அலறிய சத்தமும் பயங்கரத்தை விளைவித்தது. காட்டுப்பகுதி கடற்பகுதியைவிட மாளிகைக்கு அருகாமை

யிலிருந்தபடியால் அங்கிருந்து வந்த பயங்கரக் கூச்சல்களும் அறையைத் திமிலோகப்படுத்தியது. நகரத்துக்குள் மக்கள் இரைச்சலும் அலறலும் போர்க் கோஷங்களும் பலமாக எழுந்தன. அந்தக் கோஷங்கள் அறையிலும் எதிரொலி செய்தன.

அந்த ஒலிகள் காதில் விழவிழ நடுங்கிய பலவர்மன் மஞ்சத்தில் சாய்ந்த வண்ணம் பிரேதம்போல் நீண்ட நேரம் கிடந்தான். நேரம் போவதை உணரும் சக்தியைக்கூட அவன் அந்தச் சமயத்தில் இழந்திருந்தான். "பயங்கரம்! பயங்கரம்!" என்ற சொற்கள் அடிக்கடி அவன் வாயிலிருந்து எழுந்தன. அந்தச் சொற்களைக் கேட்ட இளையபல்லவன் முகத்தில் கடுமையான சாயை பூர்ணமாகப் படர்ந்தது. "இந்தச் சொற்களை உன்னிடம் அகப்பட்டுக் கொண்டவர்கள் எத்தனை முறை சொல்லியிருப்பார்கள் பலவர்மா?" என்று முகத்தின் கடுமை சொற்களிலும் உறையக் கேட்டான் படைத்தலைவன்.

பதிலுக்கு ஏதோ முனகினான் பலவர்மன். "அதர்மத்துக்கு ஆரம்ப வெற்றிதான் பலவர்மா. தர்மம் நிதானமாகத்தான் அலுவலைத் தொடங்குகிறது. ஆனால் அந்த நிதான அலுவல் நிரந்தர சாதனைகளைத் தருகிறது. இதை உலகம் புரிந்துகொள்வதில்லை. புரிந்துகொண்டால் எத்தனை நல்ல உலகமாக இருக்கும் இது! எத்தனை செழிப்பும் வளர்ச்சியும் சாந்தியும் இதில் நிலவும்? ஆனால், உலவுவது வஞ்சகம், பேராசை, பணத்தாசை..." என்று மேலும் ஏதோ சொல்லப்போன இளையபல்லவனை, "யார் பணம் கேட்டது?" என்று இடைமறித்து வினவினான் பலவர்மன்.

இளையபல்லவன் இதயம் ஒருமாத காலத்துக்கு முன்பு ஓடியதற்கு அறிகுறியாகக் கனவுச் சாயை கண்களில் படர்ந்தது. "பணம் நீ கேட்கவில்லை பலவர்மா! ஆனால் அந்த ஆசை உன் ரத்தத்தில் ஓடுகிறது. உன்னைக்

கெடுத்ததே அந்த ஆசைதான். இதே அறையில் நான்கு பெரு முத்துகளை உன்னிடம் காட்டினேனே நினைவிருக்கிறதா உனக்கு? அதைக் கண்டுதானே என்னை இங்கு தங்க நீ அனுமதித்தாய்? அது உன் ஆரம்பப் பிசகு பலவர்மா! அதுதான் உன் பலவீனத்தின் ஒரு சக்கரம். இன்னொரு சக்கரம் அதிகாரம். பணம், அதிகாரம் இந்த இரண்டு ஆசைகளின் மீது ஓடுவதுதான் அதர்மம். அவை இல்லையேல் உலகில் முக்கால்வாசி அதர்மம் இல்லை; முக்கால்வாசி ஏமாற்றமும் இல்லை. பட்டுகளையும், முத்து வைர வைடூரிய மாலைகளையும் காட்டியிராவிட்டால் கொள்ளையரை நான் வசப்படுத்தியிருக்க முடியாது. என் பணப்பெட்டிகளை என் மரக்கலத்திலிருந்து உன் மாளிகைக்கு நான் கொண்டுவராவிட்டால் மக்களையும் வசீகரித்திருக்க முடியாது. இந்த அக்ஷயமுனை நகரத்தை நான் காத்திருக்க முடியாது. பணம் சில சமயங்களில் நல்லதும் செய்கிறது பார்த்தாயா பலவர்மா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

பலவர்மன் பதிலேதும் சொல்லாமலே நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான். நேரம் குதிரை வேகத்தில் ஓடி, விடியும் நேரமும் வரத் துவங்கியது.

பலவர்மன் மனத்தில் ஏதோ ஒரு யோசனை உதயமாகியது. "கருணாகரா! நீ என்னை வென்றுவிட்டாய். ஆனால் இப்பொழுது சற்று விட்டுக்கொடு. உனக்கு இணையிலாப் பரிசு தருகிறேன்" என்று பேச்சைத் துவக்கினான்.

"என்ன பரிசு பலவர்மா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"மஞ்சளழகி! அவளை இப்பொழுதும் உன் மனைவியாக்க முடியும் என்னால்?" என்று ஆசை காட்டிப் பேசினான் பலவர்மன்.

பதிலுக்கு இரைந்து நகைத்தான் இளையபல்லவன். ஏதும் புரியாத பலவர்மன் கேட்டான், "எதற்கு நகைக்கிறாய் கருணாகரா?" என்று.

"மஞ்சளழகி என்னிடம்தான் இருக்கிறாள்," என்றான் இளையபல்லவன் நகைப்புக்கு இடையே.

"இல்லை, இல்லை. பொய்," என்று கத்தினான் பலவர்மன்.

"உண்மை."

"இருப்பினும்..."

"இருப்பினுமென்ன?"

பலவர்மன் கண்கள் விஷத்தைக் கக்கின. "அவளைப் பற்றிய மர்மம் ஒன்றிருக்கிறது. அதன்..." அதன் என்ற பலவர்மன் வாசகத்தை முடிக்கவில்லை. இளையபல்லவ னிருந்த இடத்தை நோக்கிக் கொண்டேயிருந்தான். அவன் கண்களில் வெறி தாண்டவமாடியது. "இல்லை, இல்லை. அது இல்லை. அதுவாக இருக்க முடியாது" என்று கூவிக்கொண்டே ஆசனத்தைவிட்டு எழுந்து புலிபோல் இளையபல்லவன் மீது பாய்ந்துவிட்டான்.






## 48. தர்மம் நிரந்தரம்

அத்தியாயம் 49

# மர்மத்தின் சிகரம்

மஞ்சளழகியைப் பற்றிய மர்மமொன்று இருப்பதாகக் கூறி அதை விளக்க முற்பட்டு இளையபல்லவனிருந்த இடத்தை உற்று நோக்கியதும் உதடுகள் அடைக்க, விழிகள் மலைக்கச் சில விநாடிகள் பிரமித்துவிட்ட பலவர்மன் திடீரென, "இல்லை, இல்லை. அது இல்லை. அதுவாக இருக்க முடியாது," என்று கூவிக்கொண்டே வெறி பிடித்து இளையபல்லவன் மீது புலிபோல் பாய்ந்து விட்டானென்றால் அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. மஞ்சளழகியின் மர்மத்தை விளக்க அவன் முற்பட்ட மாத்திரத்திலேயே இடைக்கச்சையிலிருந்து இளைய பல்லவன் எடுத்த சாவியைக் கண்டதும் அது தன் கழுத்துச் சங்கிலியில் தொங்கிய தனது ரகசியப் பெட்டியின் சாவியே என்பதையும், ரகசியப் பெட்டியின் சாவி இளையபல்லவன் கைக்கு மாறிவிட்டதாகையால் இனி ரகசியமும் அவன் கைக்கு மாறிவிடுமென்பதையும் அறிந்ததாலும், அப்படி அந்தப் பெரும் ரகசியம் கை மாறிவிடும் பட்சத்தில், தான் சிறகொடிந்த பட்சிக்குச் சமானமென்பதையும் உணர்ந்ததால் பிரமைக்கும் வெறிக்கும் உள்ளானான் பலவர்மன். அந்தச் சாவியை எப்படியும் பிடுங்கித் தன்னையும் தன் பலத்தையும் காத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆத்திரம் அவனை அடுத்த செயலுக்கு உள்ளாக்கி இளையபல்லவன் மீது பாய வைத்தது.

மிகுந்த வேகத்துடனும் வெறியுடனும் திடீரெனத் தன்மீது பாய்ந்துவிட்ட பலவர்மனைக் கேவலம் ஒரு

குழந்தையைச் சமாளிப்பதுபோல் சமாளித்த இளைய பல்லவன், வாள் பிடித்த வலக்கரத்துக்கு வேலையளிக் காமலே சாவியேந்திய இடக் கையாலேயே பலவர்மனைத் தரையில் தள்ளிவிட்டான். அப்படித் தள்ளிய பின்பும் எந்தவித ஆத்திரத்தையோ கோபத்தையோ காட்டாமல், "வெறியை அடக்கிக்கொள் பலவர்மா! வெறியால் உலகத்தில் எந்தக் காரியமும் நிறைவேறுவது இல்லை. விஷயம் தலையை மீறிப் போகும் சமயங்களில்தான் நிதானம் மனிதனுக்கு அவசியம். எழுந்து பழையபடி ஆசனத்தில் அமர்ந்துகொள்" என்று போதிக்கவும் செய்தான் படைத்தலைவன்.

போதனையை ஏற்றுக்கொள்ளும் நிலையிலோ விஷயங்களை அலசி ஆராய்ந்து பார்க்கக்கூடிய நிலை யிலோ இல்லாத பலவர்மன் கீழே விழுந்தது விழுந்தபடியே ஒரு கையைத் தரையில் ஊன்றிக்கொண்டே தலையை நிமிர்ந்து மீண்டும் மீண்டும் படைத்தலைவன் கையிலிருந்த நீண்ட சாவியைக் கேட்டான், "அது என் சாவி! கொடுத்து விடு," என்று அர்த்தமில்லாமல் கூவவும் செய்தான்.

இளையபல்லவன் விழிகள் அந்த வஞ்சகனை நன்றாக ஆராய்ந்தன. "இது உன் சாவியல்ல பலவர்மா! இல்லாததை நினைத்து மனத்தை அலைக்கழித்துக் கொள்ளாதே," என்று ஏளனமாகச் சொற்களும் உதிர்ந்தன படைத்தலைவன் உதடுகளிலிருந்து.

அந்த வார்த்தைகள் பலவர்மன் பலவீன இதயத்துக்கு அமுத தாரையாக இருந்தன. "என்ன! என் சாவியல்லவா!" என்று கேட்டுக்கொண்டே தள்ளாடித் தள்ளாடி எழுந்து நின்றான் அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவன்.

"அல்ல, உன் சாவியல்ல இது. வேண்டுமானால் கழுத்துச் சங்கிலியைப் பார்," என்றான் இளையபல்லவன் பதிலுக்கு.

பலவர்மன் மட்டும் சாதாரண நிலையிலிருந்தால் கழுத்துச் சங்கிலியில் சாவி இருப்பது இளையபல்லவனுக்கு

எப்படித் தெரியும் என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டிருப்பான். அல்லது, இடும்பனுடன் தான் பேசியதைப் படைத்தலைவன் கேட்டிருந்தால் அவனுக்கு அதைப் பற்றித் தெரிந்திருப்பதில் ஆச்சரியமில்லையென்றாவது அறிந்திருக்கலாம். ஆனால் இரண்டையும் சிந்தித்துப் பார்க்கத் திறனற்ற பலவர்மன் இளையபல்லவன் பதிலைக் கேட்டதும் தனது கழுத்துச் சங்கிலியை அங்கியிலிருந்து இழுத்து அதில் தொங்கிய சாவியைக் கண்டதும் ஓரளவு சமாதானமே அடைந்தான். அந்த சமாதானத்தின் விளைவாக மெள்ள நடந்து பின்னடைந்து ஆசனத்தில் பொத்தென்று விழவும் செய்தான்.

ஆனால் அடுத்த விநாடி அவன் சமாதானத்தையும் குலைக்கும் சொற்கள் இளையபல்லவன் இதழ்களிலிருந்து உதிர்ந்தன. "இது உன் சாவியல்ல பலவர்மா! ஆனால் அதைப்பற்றி நீ சமாதானமடைய எந்தக் காரணமும் இல்லை. நன்றாக உற்றுப் பார்," என்று கூறித் தனது இடது கையிலிருந்த திறவுகோலை இருமுறை உருட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"என்ன! என்ன!" என்று மீண்டும் பிரமை பிடித்துக் கேட்டான் பலவர்மன்.

"இது உன் சாவியல்ல. ஆனால் அதன் இரட்டை" என்றான் இளையபல்லவன்.

"இரட்டையா!" பலவர்மன் கேள்வியில் பிரமிப்பும் கலவரமும் தொனித்தன.

"ஆம். அதன் இரட்டைப் பிறவி."

"எப்பொழுது பிறந்தது?"

"நீ என்னுடன் குடித்து மயங்கி விழுந்தாயே நினைப்பிருக்கிறதா?"

"இருக்கிறது."

"அன்று பிறந்தது."

"என்ன ?"

"ஆம் பலவர்மா ! அன்று இந்த அறையில் உனக்கு மது ஊற்றிக் கொடுக்கவில்லை நான் ?"

"ஆம், கொடுத்தாய். நன்றாக நினைவிருக்கிறது எனக்கு. மதுக்குப்பியொன்றைக் கையில் பிடித்துக் கொண்டு நீ தள்ளாடித் தள்ளாடி வந்தாய். என்னையும் குடிக்கும்படி மன்றாடினாய். குடித்தால் பெரும் ரகசிய மொன்றை வெளிப்படுத்துவதாய் உளறினாய்..." என்று மேலும் ஏதோ சொல்லப்போன பலவர்மனை இடை மறித்த இளையபல்லவன், "அது உளறலல்ல பலவர்மா!" என்று உறுதி நிரம்பிய சொற்களைக் கொட்டினான்.

"உளறலல்லவா ?" பலவர்மன் கேள்வியில் ஆச்சரியம் மிதமிஞ்சி ஒலித்தது.

"அல்ல, உளறலல்ல. அன்றுதான் அந்தப் பெரும் ரகசியம், நீ நீண்ட நாளாக இந்த அறைப் பெட்டியில் வைத்துப் பூட்டியிருந்த ரகசியம் வெளியாயிற்று" என்று சொல்லி வார்த்தைகளைச் சிறிது தேக்கினான் இளைய பல்லவன்.

"இல்லை, பொய். நான் குடித்து மயக்கம் போட்டு இந்த மஞ்சத்தின்மீது குப்புற விழுந்து கிடந்தது உண்மைதான். ஆனால் ரகசியம் வெளியாகவில்லை. நான் விழித்ததும் பெட்டியைத் திறந்து பார்த்தேன்..." என்று மேலும் பேசப்போன பலவர்மன் சொற்களை மீண்டும் இடைபுகுந்து வெட்டிய இளையபல்லவன், "ஓலைச் சுருள் அப்படியே இருந்தது." என்று முடித்தான்.

பலவர்மன் விழிகள் பிரமிப்பைக் கக்கின. இளைய பல்லவன் அந்தப் பிரமிப்பைக் கண்டு சொன்னான். "பிரமிக்காதே பலவர்மா! நீ அன்று பார்த்த ஓலைச் சுருள் வேறு. இடும்பனிடம் நீ பேசியதைக் கேட்டதும் பெட்டியி லுள்ள ரகசிய ஓலையைப் பார்க்க நான் தீர்மானித்தேன். அதற்காகவே நீ படுக்கச் செல்லும் நேரத்தில் மதுக்

குப்பியுடன் உன் அறைக்கு வந்து மதுவைக் குடிக்க உன்னைத் தூண்டினேன். ரகசியத்தைப் பற்றி நான் சொன்னதும் ஏதோ என்னைப்பற்றி அறிந்து கொள்ளலா மென்ற ஆசையில் நீ நான் ஊற்றிய மதுவை அருந்தினாய். அந்த மதுவில் மயக்க மருந்து கலந்து இருந்தது," என்று.

"மயக்க மருந்தா?" இதைக் கேட்ட பலவர்மன் மூளை சிதறிவிடும் போலிருந்தது.

இளையபல்லவன் சர்வசாதாரணமாகச் சொன் னான்: "மயக்க மருந்துதான் பலவர்மா! அரபு நாட்டு மயக்க மருந்து. யாரையும் விநாடி நேரத்தில் உறங்கச் செய்ய வல்லது. அதன் வன்மையை நீ உணர வேண்டு மானால் அமீரைக் கேட்கவேண்டும்," என்று.

"நான் அமீரைக் கேட்கத் தேவை இல்லை," என்று இரைந்து கூவினான் பலவர்மன்.

"கேட்கத் தேவையில்லை. நானே சொல்கிறேன். அந்த மருந்து காலை வரையில் மனிதர்களை உறங்க வைக்க வல்லது. ஆனால் கொல்லாதது. இஷ்டமிருந்தால் கொல்லும் மருந்தை உபயோகித்து அன்றே உன்னை நான் ஒழித்திருக்கலாம். ஆனால் உன்னைப்போல் நான் கொலை காரனல்ல. ஆகவே தூங்க வைத்தேன். நீ மயங்கி விழுந்ததும் அமீர் இந்த அறைக்கு வந்தான். நான் உன் முதுகின்மீது வேறு மதுவைக் கொட்டினேன்," என்ற இளைய பல்லவனை நோக்கிக் கேட்டான் பலவர்மன், "முதுகின் மீதா, எதற்கு?" என்று.

"சேந்தனை ஏமாற்ற," என்றான் இளையபல்லவன் இதழ்களில் இளநகை கூட்டி.

"சேந்தனை எதற்காக ஏமாற்ற வேண்டும்?"

"அவன் உறுதியற்றவன். எங்காவது உண்மையை உளறிவிட்டால் நீ எச்சரிக்கை அடைந்துவிடுவா யல்லவா?""

"எதைப்பற்றி?"

"உன் சாவியை மெழுகு ஒற்றி நாங்கள் அச்சு தயாரித்தது பற்றி."

"அச்சா! எதற்கு?" என்று கூறிச் சீறிக்கொண்டு எழுந்திருக்க முயன்றான் பலவர்மன்.

"அசையாதே பலவர்மா! முழுக் கதையையும் கேள்." என்று அதட்டிய இளையபல்லவன் மேலும் விளக்கினான். "உன் ரகசிய ஓலையைத் திருடத் தீர்மானித்ததும் உன் கழுத்துச் சாவிக்கு மெழுகு ஒற்றி, சாவி தயாரிக்க முடிவு செய்தேன். உன் கழுத்துச் சாவியைத் திருடினால் நீ விழித்துக் கொள்ளலாம், விஷயத்தைப் புரிந்து கொள்ள லாம். அதற்கு நான் இடம் கொடுக்க இஷ்டப்படவில்லை. ஆகவே குப்புற விழுந்த உன்மீது குருதி போன்ற சிவப்பு மதுவைக் கொட்டினேன். சேந்தனை இங்கு வரச் சொல்லி அமீர் உதவியால் அவனை உன் கழுத்துச் சாவியில் மெழுகு ஒற்றி அச்சும் எடுத்துக்கொண்டோம். பிறகு அவனை அறைக்கு அனுப்பிவிட்டு அவன் மதுவிலும் சிறிது மருந்தைக் கலந்து கொடுத்தோம். சேந்தனுக்கு ஏதும் புரியாதிருக்க அவன் அறையில் வெறும் மெழுகு உருண்டையையும் வைத்தோம். அமீரின் உதவியால் இதெல்லாம் முடிந்தது. மறுநாள் புதுச் சாவி தயாராகி விட்டது. உன் ஓலையை எடுத்து நகலும் எடுத்தோம். உன் ஓலையிருந்த இடத்தில் வேறு ஓலைச் சுருளை வைத்தோம். உன் ஓலையிலிருந்த விஷயத்தை மொழி பெயர்க்கவும் செய்தோம். அத்தனையும் அமீர் செய்து முடித்தான். அமீரைப் போன்ற திறமைசாலி உலகில் கிடையாது பலவர்மா..."

இந்த இடத்தில் இளையபல்லவன் சிறிது நிதானித்துப் பலவர்மனைக் கூர்ந்து நோக்கினான். பலவர்மன் சப்தநாடி களும் ஒடுங்கி மஞ்சத்தில் உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் கிலி படர்ந்து கிடந்தது. அந்தக் கிலியை அதிகப்படுத்த மேலும் கதையைத் தொடர்ந்த இளைய

பல்லவன், "இத்தனையையும் அமீர் சாதித்தான். சேந்தன் செய்வதைக் கனவென்று நினைக்க அமீர்தான் ஏற்பாடு களைத் திட்டமாகச் செய்தான். ஆகவே நாங்கள் சேந்தன் உளற முடியாதபடி செய்தோம். மறுநாள் ஓலையின் நகல் ஒன்றை உன் பெட்டியில் வைத்துவிட்டு முதல்நாள் வைத்த வெறும் ஓலையை அகற்றினோம். தந்திரங்களை அடுத் தடுத்துக் கையாண்டோம். பெரும் துரோகிகளைச் சமாளிப்பதில் தந்திரம் அவசியமாகிறது. அப்படிப்பட்ட துரோகிகளில், வஞ்சகர்களில், நீ முதன்மையானவன். மஞ்சளழகியின் மர்மத்தை ஓலையிலிருந்து புரிந்து கொண் டேன். அவளுக்குரிய ஸ்தானத்தை அவளுக்குக் கொடுக்க வும் முடிவு செய்தேன்," என்றான்.

பலவர்மன் முகத்தில் மீண்டும் சிறிது நம்பிக்கை உதயமாகியது. அடுத்து வெளிவந்த அவன் குரலிலும் அந்த நம்பிக்கை துளிர்விட்டது. "கருணாகரா!" என்று மெல்லப் பேச்சைத் துவங்கினான் பலவர்மன்.

அவன் நம்பிக்கைக்குக் காரணம் இளையபல்லவ னுக்கு நன்றாகப் புரிந்ததால் அவன் உதடுகளில் இளநகை ஒன்று விரிந்தது. "ஏன் பலவர்மா?" என்று கேட்டான் இளையபல்லவன் போலி அன்பு தொனித்த குரலில்.

"மஞ்சளழகியின் மர்மம் பூராவும் ஓலையில் இல்லை..." என்று பேச்சை முடிக்காமல் விட்டான் பலவர்மன்.

"ஆம் ஆம். ஓலையில் விஷயம் அரை குறையாகத்தா னிருந்தது," என்று இளையபல்லவனும் இணங்குவது போல் பேசினான்.

"மீதி விஷயம்..." என்று பலவர்மன் ஏதோ சொல்லத் துவங்கினான்.

"மர்மம்தான் போலிருக்கிறது," என்றான் இளைய பல்லவன்.

"மர்மத்தின் சிகரம்." பலவர்மன் சொற்களில் லேசாக உற்சாகமும் தொனித்தது.

"அந்தச் சிகரத்தை..."

"நீ எட்டலாம்."

"அதற்குப் பொருள் உண்டுபோல் இருக்கிறது."

"உண்டு."

"எத்தனை வேண்டும்?"

"எத்தனை என்பதைவிட எது என்று கேட்பது பொருந்தும்."

"எது?"

"இந்த அக்ஷயமுனை."

"நான் வெற்றி கொண்டுவிட்ட இந்த அக்ஷய முனையா!"

"ஆம்."

"இதை என்ன செய்ய வேண்டும்?"

"என்னிடம் பழையபடி ஒப்படைத்துவிட வேண்டும்."

"ஒப்படைத்தால்?"

"மர்மம் வெளியாகும்."

"இல்லையேல்?"

"என்னுடன் மறைந்துவிடும்."

பலவர்மனின் கடைசி வார்த்தைகள் மிகுந்த உறுதியுடன் வெளிவந்தன. உறுதியுடன் மேலும் சொன்னான் பலவர்மன். "கருணாகரா! எந்த நாணயத்துக்கும் இரு புறங்கள் உண்டு. ஒரு புறத்தை ஓலையிலிருந்து அறிந்தாய். இன்னொரு புறத்தை அறிய என் இதயத்தைத்தான் பார்க்க வேண்டும். என் இதயக் கதவுகள் அத்தனை எளிதில் திறக்காதவை. நன்றாகச் சிந்தித்துப் பார் கருணாகரா! நான் உனக்கு அளிக்கப்போகும் பரிசுக்கு அக்ஷயமுனை ஒரு

துரும்பாகும். நான் கொடுக்கும் பரிசு எது தெரியுமா?" என்று.

"எது பலவர்மா?" என்று கேட்டான் இளைய பல்லவன்.

"ஸ்ரீவிஜயத்தின் ஆதிக்கம். நீ எந்தவிதக் கஷ்டமும் படாமலே ஸ்ரீவிஜயத்தை ஆட்கொள்ளலாம். உன் விருப்பப் படி குணவர்மனுக்கு ஸ்ரீவிஜயத்தை முடிசூட்டலாம். இப்பொழுதுள்ள ஜெயவர்மனை ஒழிக்கலாம்" என்றான் பலவர்மன்.

"அத்தனை சக்தியுள்ளதா அந்த ரகசியம்?"

"ஆம். அது உன் வெற்றிக்கு அத்தியாவசியமான சாவி. அதைக்கொண்டு உன் அபிலாஷைக் கதவுகளை நீ கண்டிப்பாய்த் திறக்க முடியும்."

"வேறு வழி ஏதுமில்லையா?"

"இல்லை."

இளையபல்லவன் நீண்ட நேரம் ஏதோ யோசித்தான். "யோசிக்க நேரமில்லை கருணாகரா! பொழுது விடியும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதோ காட்டுப் பகுதியிலும் கடற்பகுதியிலும் சத்தமும் அடங்கிக் கொண் டிருக்கிறது. உன் திட்டம் வெற்றி பெற்றுவிட்டது. அதைப் பூரண வெற்றியாக்கிக் கொள். உனக்கு வேண்டியது கலிங் கத்தின் கடலாதிக்கத்தை உடைப்பதும் ஸ்ரீவிஜயத்தைக் குணவர்மன் வசப்படுத்துவதும் தானே? அதை நான் சாதித்துத் தருகிறேன். அக்ஷயமுனையை மட்டும் எனக்கு அளித்துவிடு. உனக்கு மஞ்சளழகியைத் தருகிறேன். பூரண ரகசியத்தின் சாவியையும் தருகிறேன். மர்மத்தின் சிகரத் தைத் தருகிறேன்," என்றான் பலவர்மன்.

இளையபல்லவன் சில விநாடிகள் மௌனம் சாதித்தான். விடியும் நேரம் நெருங்குவதற்கான பட்சி ஜாலங்களின் சப்தங்கள் வெளியில் தொனித்தன. அத்துடன் யாரோ சிலர் தடதடவென்று வெளியே நடந்து

வரும் காலடிச் சத்தங்களும் கேட்டன. அந்தக் காலடிச் சத்தங்கள் கேட்டதும் இளையபல்லவன் பெரிதாக நகைத்தான். அந்த நகைப்பின் ஊடே, "முடியாது. அக்ஷய முனையை உனக்கு நான் அளிக்க முடியாது," என்றான்.

"ஏன் முடியாது?" என்று சீறினான் பலவர்மன்.

"அதற்கு உடையவர்கள் வந்துவிட்டார்கள்," என்று கூறிய இளையபல்லவன், தாழிட்டக் கதவைத் திடீரென்று திறந்து சற்று விலகி நின்றான்.

திறந்த வாயிலின் வழியாக முதலில் மஞ்சளழகி நுழைந்தாள். அதைக் கண்டு அடியோடு நிலைகுலைந்து போன பலவர்மன் அவளுக்குப் பின்னால் வந்து வாயிற்படியை அடைத்துக்கொண்டு நின்றவனைக் கண்டதும் பெரும் திகைப்பு, அச்சம் இரண்டும் சித்தத்தைக் கௌவ மிரள மிரள விழித்தான். மர்மத்தின் சிகரமும் இளையபல்லவன் கைகளில் சிக்கிவிட்டதை அறிந்த பலவர்மன் "இது! இவர்கள்! அதோ! அவன், இல்லை இல்லை, அவர்!" என்று பிரமை பிடித்து அலங்கோலத்துடன் உளறவும் செய்தான். உளறிய வாயும் திடீரென அடைத்து நிலைத்தது. விழிகள் மிதமிஞ்சிய அச்சத்தைக் கக்கிக்கொண்டே வாயிற்படியில் நின்ற உருவத்தை நோக்கிக் கொண்டே இருந்தன.

"அக்ஷயமுனையின் சொந்தக்காரர்கள் வந்து விட்டார்கள்..." என்று இளையபல்லவன் கூறியது எங்கோ தொலைவிலிருந்து கேட்பது போலிருந்தது பலவர்மன் காதுகளுக்கு. வாயிற்படியை அடைத்து நின்றவரைப் பார்த்த விழிகளில் பயத்தால் பஞ்சடையவும் முற்பட்டன. அந்த அறையே மேலும் கீழுமாய்ச் சுழல்வது போலிருந்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு.

அத்தியாயம் 50

# பிரிவு

அறைக் கதவைத் திறந்துவிட்டு, "அக்ஷயமுனையின் சொந்தக்காரர்கள் இதோ வந்துவிட்டார்கள்," என்று இளையபல்லவன் கூறிய சொற்கள் எங்கோ தொலைவிலிருந்து அசரீரி போல் காதுகளில் ஒலிக்கவும், கண்கள் பஞ்சடைந்து மிரண்டும் திணறி விழிக்கவும், அந்த அறையே சுழல்வது போன்ற பிரமை ஏற்படவும், எதிர்பாராத உணர்ச்சிகளால் தாக்கப்பட்டுக் கிலி பிடித்து வெலவெலத்துப் போன அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவன் வாயிற்படியைப் பார்த்து பார்த்தவண்ணமே ஆசனத்தில் சாய்ந்து கிடந்தான். தன் கண்முன்னே எழுந்த காட்சி உண்மையா கனவா என்ற சந்தேகம்கூட அவன் சித்தத்தில் எழுந்ததன்றி, கனவாக இருந்து தொலையக்கூடாதா என்ற ஏக்கமும் உள்ளத்தில் திடுதிடுவென நடமாடத் தொடங்கவே இருதயமும் படக்படக்கென்று பலமாக அடித்துக் கொண்டது. கதவு திறந்ததும் நுழைந்த தன் வளர்ப்பு மகள் மஞ்சளழகியைக் கண்டுகூட அவன் திகைப்படையவில்லை. அவளுக்குப் பின்னால் ஓசைப்படாமல் வந்து அறைக்குள் நுழையாமலும் பின்னுக்கும் நகராமலும் வாயிற்படியில் புதிதாக அமைத்த நடுச்சிலை போல் நின்ற உருவத்தைக் கண்டதும்தான் பிராணனே போய்விடும் நிலையை அடைந்தான் அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவன். அவன் கண்கள் சில விநாடிகள் திகைப்படைந்த போது அந்த உருவம் சிறிது மங்கலாகத் தெரிந்ததென்றாலும் அந்த மங்கலிலும் பெரும் பயங்கரம் இருக்கத்தான் செய்தது. கண்கள் மீண்டும் சுயநிலை அடைந்து புத்தி

சுழன்றபோது அறையும் சுழன்றதாகையால் அதில் தலைகீழாகச் சுழன்ற அந்த உருவத்தின் சுழற்சிகூடப் பழிவாங்க வரும் பெரும் பிசாசு தலைகீழாக ஆடுவது போன்ற பிரமையை அளித்தது பலவர்மனுக்கு. அத்தனை மங்கலிலும் சுழற்சியிலும் அந்த உருவத்தின் இதழ்களில் தென்பட்ட கோரப் புன்னகைக்கும் மயானத்தின் பூதங் களின் புன்னகைக்கும் எந்த வித்தியாசமும் இருந்த தாகத் தெரியவில்லை அந்த வஞ்சகனுக்கு. பூதத்தின் புன்ன கையை அவன் கண்டதில்லை. கண்டால் இப்படித் தானிருக்கும் என்பதில் மட்டும் அவனுக்குச் சம்பூர்ண நம்பிக்கை அந்தச் சில விநாடிகளில் உண்டாயிற்று. அந்த நம்பிக்கை வாழ்வின் வளத்தில் அதுவரையில் அவனுக் கிருந்த சிறிது நம்பிக்கையைக் கூடத் தூள்தூளாக உடைத் தெறிந்தது. அப்படி சகலத்திலும் நம்பிக்கை இழந்த பயத்தின் வசப்பட்ட அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவ னின் கண்கள் இறுதியை எதிர்நோக்கும் முறையிலேயே வாயிற்படியை எதிர்நோக்கிக் கொண்டிருந்தன.

அப்படிக் கிலியால் நிலைத்த அந்தக் கண்களுக் கெதிரே வாயிற்படியில் அசையாமல் நின்றான் சீனக் கொள்ளைக்காரனான அகூதா. அவன் இதழ்களில் சிறு புன்னகையொன்று படர்ந்து நின்றது. அவன் கூரிய கண்களில் விவரிக்க இயலாத ஒளி ஒன்று சுடர்விட்டுக் கொண்டிருந்தது. எந்தவித ஆயுதமும் தரிக்காமல்தான் நின்றிருந்தான் அகூதா. அதையும் கண்ட பலவர்மன் அந்தச் சமயத்தில் அகூதாவுக்கு ஆயுதமெதுவும் தேவை யில்லை யென்றே நினைத்தான். உதடுகளில் தெரிந்த பேயின் புன்முறுவலையும் விழிகளில் விரிந்த விவரிக்க இயலாதிருந்த பார்வையையும்விட தன்னைக் கொல்லக் கூடிய ஆயுதங்கள் வேறு இல்லையென்பதை நன்றாக உணர்ந்த பலவர்மன் உடல் மெல்ல நடுங்கவும் செய்தது. அவன் பிரமை, கிலி, உடலின் நடுக்கம் எல்லாவற்றையும்

கவனித்த அகூதா வாயிற்படியை விட்டு நகராமலும் ஏதும் பேசாமலும் சில விநாடிகள் நின்றான். அடுத்த விநாடி களில் அகூதாவின் இதயத்தில் எழுந்துகொண்டிருந்தது பெரும் புயல். அதன் காரணம் இளையபல்லவனுக்குத் தெரிந்திருந்தது. மஞ்சளழகி அந்தக் காரணத்தை உணரா விட்டாலும் தன் தந்தையை அழிப்பதற்கு வேண்டிய கட்டத்தை மற்ற இருவரும் துவக்கிவிட்டார்கள் என்பதை மட்டும் அறிந்தாள். அதன் விளைவாக ஏற்பட்ட அனுதாபத்துடனும், அனுதாபமும் நீண்ட நாள் பழக்கமும் விளைவித்த அன்புடனும் தந்தையை அணுகி அவன் தோள்மேல் ஆதரவுடன் தனது கையை வைத்தாள் மஞ்சளழகி. அந்த ஆதரவுக்கரம்கூட அவனுக்கு அமைதி யை அளிக்கவுமில்லை; பயத்தை நீக்கவுமில்லை. பாதாளத்தில் விழத் துவங்கிவிட்டவனுக்கு அறுந்த கயிறு அளிக்கும் ஆதரவையே அந்தக் கரம் அந்த நிலையில் அளித்தது அவனுக்கு. ஆகவே அந்தக் கையைக் கூடத் தன் கையால் அகற்றினான். மீண்டும் மஞ்சளழகி அவன்மீது கையை வைக்கப் போனாள். "வேண்டாம்! அந்தப் பாதகன்மீது உன் புனிதமான கையை வைக்காதே" என்ற அகூதாவின் சொற்கள் எழுந்து அவள் கையைத் திடீரெனத் தேக்கின.

மஞ்சளழகியின் சீற்றம் மிகுந்த விழிகள் அகூதாவை நோக்கித் திரும்பின. "என் தந்தை மீது கையை வைக்கலாமா கூடாதா என்பதை எனக்குச் சொல்ல நீங்கள் யார்?" என்று சீற்றம் மிகுந்த சொற்களையும் கொட்டினாள் அக்ஷய முனை அழகி.

"அந்தக் கேள்வியை அவனையே கேள்," அகூதாவின் பதில் வந்த குரல் சர்வ சாதாரணமாகத்தானிருந்தது மஞ்சளழகிக்கு. ஆனால் பலவர்மனுக்கு அதில் ஏதேதோ பொருள்கள் தொனித்தன.

மஞ்சளழகி பலவர்மனையும் பார்த்து, அகூதாவை யும் ஒருமுறை பார்த்தாள். "தந்தையை மரியாதை மட்டின்றி ஏன் அழைக்கிறீர்கள்?" என்று மீண்டும் வினவினாள் மஞ்சளழகி சிறிதும் கோபம் குறையாமலே.

"அதற்கும் அவனையே காரணம் கேட்கலாம் பெண்ணே" என்றான் அகூதா மீண்டும்.

மஞ்சளழகிக்கு எதுவுமே புரியவில்லை. ஏதாவது விளக்கம் கிடைக்குமா என்பதற்காக இளையபல்லவனை ஒருமுறை நோக்கினாள். அவன் முகம் உணர்ச்சியற்றுக் கல்லாக உறைந்து கிடந்தது. ஆகவே மறுபடியும் அகூதா வையே கேட்டாள். "அக்ஷயமுனைக் கோட்டையின் தலைவரை மரியாதையின்றி அழைக்கிறீர்கள். அவரை மட்டும் என்ன? என்னையும் பெண்ணே என்றும் அழைக் கிறீர்கள். அப்படி அழைக்க உங்களுக்கென்ன உரிமை யிருக்கிறது? நான் உமது பெண்ணா?" என்று.

பதில் மெல்லத்தான் வந்தது அகூதாவிடமிருந்து. சொற்கள் நிதானமாகத்தான் உதிர்ந்தன அவன் உதடுகளி லிருந்து. ஒலியில்கூட வெறுப்போ விரோதமோ இல்லை. அன்புதான் பரவிக் கிடந்தது. "பெண்ணல்ல, மருமகள்?" என்ற சொற்கள் அறையை மட்டுமல்ல, மஞ்சளழகியின் உணர்ச்சிகளையும் ஊடுருவிச் சென்றதால் அவள் திகைத்துச் சில விநாடிகள் நின்று விட்டாள். "நான்...நான்..." என்று ஏதோ குழறவும் செய்தாள்.

"நீ என் மருமகள்?" திட்டமாக மீண்டும் ஒலித்தன அகூதாவின் சொற்கள்.

"மருமகளென்றால்..." மேலே பேச முடியவில்லை மஞ்சளழகிக்கு — தொண்டையை ஏதோ அடைத்துக் கொண்டது.

"என் சகோதரியின் மகள்," என்றான் அகூதா. இதைச் சொன்ன அவன் குரலில் உணர்ச்சிகள் அலை பாய்ந்தன.

"நான்...உங்கள்..." என்று கேட்டாள் மஞ்சளழகி சந்தேகத்துடன் தட்டுத் தடுமாறி.

"சகோதரியின் மகள். என் சகோதரி ஒரு வஞ்சகனால் கடத்திச் செல்லப்பட்டாள். இன்னொரு வஞ்சகனுக்குப் பரிசாக அளிக்கப்பட்டாள். அந்த வஞ்சகர்களைப் பல வருஷங்களாகத் தேடித் திரிந்தேன். அவர்கள் யாரென்று தெரியவில்லை. வருஷக்கணக்கில் புலன் எதுவும் கிடைக்க வில்லை. புலன் கிடைத்தபோது நீயும் கிடைத்தாய். இளைய பல்லவன் முயற்சியால் கிடைத்தாய். நாமிருவருமே அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறோம்" என்று அகூதா நன்றி ததும்பிய கண்களை இளையபல்லவனை நோக்கித் திருப்பினான்.

மஞ்சளழகியின் மூளை குழம்பிக் கிடந்தது. அந்தக் குழம்பிய நிலையிலும் அகூதா சொன்னது அவளுக்கு விளக்கமாகப் புரிந்தது. அகூதாவின் சகோதரியை வஞ்சித்தது தன் வளர்ப்புத் தந்தையாகத்தானிருக்க வேண்டும் என்பதை அவள் தீர்மானமாக அறிந்து கொண்டாலும், தன் தாயை அவர் யாருக்குப் பரிசாக அளித்தார் என்பது மட்டும் புரியவில்லை அவளுக்கு. அதையும் புரிய வைத்தான் அகூதா. வாயிற்படியில் நின்ற வண்ணமே அந்தப் பழைய கதையை அவன் சொன்னான். சொன்னது கதை. நிகழ்ந்த இடத்துக்கும் காலத்துக்கும் அவன் கருத்து சென்றது. கண்கள் கனவுலகத்தில் சஞ்சரித்தன. வார்த்தைகளில் வேதனை நிரம்பி நின்றது. சகோதரியை அவன் உயிருக்குயிராக நேசித்தானென்பது மஞ்சளழகிக்கு நன்றாகத் தெரிந்தது.

பலவர்மனை உற்று நோக்கிக்கொண்டே அந்தப் பழைய கதையை அகூதா சொன்னான். "நினைவிருக்கிறதா பலவர்மா! சொர்ணத் தீவின் தலைநகரான ஸ்ரீவிஜயத்தின் கடற்கரையோரத்திலிருந்த அந்தச் சிறுகுடிசை?" என்று

ஆரம்பக் கேள்வியுடன் கதையைத் தொடங்கிய அகூதா, "அன்று அந்தச் சிறு குடிசையில் இருவர் இருந்தார்கள். ஒருவன் வலைஞனான அகூதா பரம ஏழை. மீன் பிடிக்க அன்று படகில் ஓடினான். அந்த மீனைச் சமைக்க குடிசை யிலிருந்தாள் அவன் சகோதரி. இருவரும் ஏழ்மையிலும் பரஸ்பர அன்பினாலும் நல்வாழ்வு நடத்தினார்கள். இருவரும் கடற்கரைப் பறவைகளாக ஆடியோடித் திரிந்தார்கள். அந்தப் பறவைகளில் பெண் பறவை மிகவும் அழகாயிருந்தது. யாரோ ஒருவன் கண்ணிலும் பட்டது. அதைப் பிடித்து வரும்படி அவன் இன்னொருவனுக்குச் சைகை செய்து போனான். இன்னொருவன் அதைக் கண்ணி வைத்துப் பிடித்துப் போனான். சகோதரனான ஆண் பறவை கடலுக்கு மீன் கொத்தப்போயிருந்த சமயத்தில் பெண் பறவையைக் கொத்திக் கொண்டு போயிற்று ஒரு கழுகு. திரும்பி வந்ததும் ஆண் பறவை அலைந்தது, தேடித் திரிந்தது, துடித்தது. விசாரித்ததில் தகவல் ஏதும் கிடைக்கவில்லை. நல்லுடை உடுத்தி இருவர் புரவிகளில் வந்ததாகவும், ஒருவன் என் சகோதரியை நோக்கிக் கைகாட்டிச் சென்றதாகவும், மற்றவன் அன்றிரவு அவளைப் பலவந்தமாகக் கதறக் கதறத் தூக்கிச் சென்ற தாகவும் கேள்விப்பட்டேன். அவர்கள் யாரென்று அங்கிருந்தவர்களுக்குத் தெரியவில்லை. இளையபல்லவர் ஓலை கிடைத்த பின்புதான் உண்மையறிந்தேன். என் சகோதரியை அலற அலறத் தூக்கிச் சென்றவன் இந்த அயோக்கியன் பலவர்மன். அவளைக் கெடுத்து வதைத்துக் கொன்றது யாரென்று தெரியவில்லை," என்றான் அகூதா.

"ஜெயவர்மன்" என்ற இளையபல்லவன் சொற்கள் அந்த அறையில் மிகப் பயங்கரமாக ஒலித்தது.

"யார்! ஜெயவர்மனா! ஸ்ரீவிஜயத்தின் சாம்ராஜ்யாதி பதியா?" எதற்கும் அசையாத அகூதாவின் குரலும் அசைந்தது.

"ஆம் தலைவரே! ஜெயவர்மன்தான். ஆனால் அவன் உமது சகோதரியை வதைக்கவில்லை. கடற்கரையில் பலமுறை கண்டு அவள் இணையற்ற எழிலுக்கு இதயத்தைப் பறிகொடுத்தான். ஆகவே, அவளை அடையத் தீர்மானித்தான். அதற்கு உதவினான் பலவர்மன்" என்று விளக்கினான் இளையபல்லவன்.

"கடற்கரைவாசிகள் அப்படிச் சொல்லவில்லையே! அரசனைக் கூடவா அவர்களுக்கு அடையாளம் கண்டு பிடிக்க முடியாது?" என்று வினவினான் அகூதா.

"முடியாது. இருவரும் மாறு வேடத்திலிருந்தார்கள்" என்றான் இளையபல்லவன். அத்துடன் மேலும் சொன்னான்: "உங்கள் சகோதரியைத் தூக்கிச் சென்ற காலத்தில் ஜெயவர்மன் அரசனல்ல. இளவரசனாயிருந்தான். ஆகவே மன்னனுக்குத் தெரியாமல் உங்கள் சகோதரியைப் பலவர்மன் மேற்பார்வையில் வெளியூரில் வைத்து அடிக்கடி சென்று அவளுடன் வசித்தான். அடுத்த வருடம் தந்தை இறக்கவே அவன் அரியணை ஏறினான். அதே வருடத்தில் மஞ்சளழகியும் பிறந்தாள். மஞ்சள் நிறப் பொன்னைப் போலிருந்த அவள் அழகைக் கண்டு பூரித்தான் ஜெயவர்மன். ஆனால் அவளை ஈன்ற அன்னை ஈன்ற நிமிடத்தில் காலமானதால், குழந்தையை என்ன செய்வதென்று தெரியவில்லை ஜெயவர்மனுக்கு. சில நாள்கள் தாதி ஒருத்தியிடம் கொடுத்து மறைவில் வளர்த்தான். இடையில் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனாகி விட்ட பலவர்மனிடம் குழந்தையை அனுப்பினான்..." என்ற இளையபல்லவன் சற்றே கதையை நிறுத்தினான்.

அந்த விசித்திரக் கதையை கனவில் கேட்பதுபோல் கேட்டுக் கொண்டிருந்த மஞ்சளழகி, "உம் சொல்லுங்கள்" என்றாள் உணர்ச்சி வலையில் சிக்கி.

மேலே விவரிக்கப் புகுந்த இளையபல்லவன் கேட்டான், "யார் மூலம் உன்னை அனுப்பினார் மன்னர் தெரியுமா?" என்று.

"ஒரு தூதன் மூலம்" என்றாள் மஞ்சளழகி குரல் தழுதழுக்க.

"அந்தத் தூதன் யார்?" இளையபல்லவனின் கேள்வி திடமாக எழுந்தது.

"தெரியாது" என்றாள் மஞ்சளழகி.

"என்ன ஆனான்?"

"திரும்பிப் போய்விட்டான்."

"இல்லை; திரும்பவில்லை."

"வேறு..."

"இந்த அறையில் கொல்லப்பட்டான்."

"பொய், பொய், இருக்காது!" என்று கூவினாள் மஞ்சளழகி.

"இல்லை. பொய்யில்லை மஞ்சளழகி. உண்மை. முக்காலும் உண்மை. உன்னைக் கொண்டு வந்தவன் ஸ்ரீவிஜயத்தின் உபதளபதி. அவன் இந்த அறையில் கொல்லப்பட்டான். அவன் கொடுத்த ஓலையில் ஜெயவர்மன் பழைய கதையை மீண்டும் எழுதியிருந்ததால் அந்த ஓலையைப் பத்திரப்படுத்திக் கொண்டான் பலவர்மன். நாள்கள் ஓடின. ஜெயவர்மன் கைப்பட இருந்த அந்த ஓலை பலவர்மனுக்குப் பெரிதும் உதவிற்று. அதைக் கொண்டு அடிக்கடி ஜெயவர்மனை மிரட்டிப் பல சலுகைகளைப் பெற்றான் பலவர்மன். இடையே எழுந்தது அகூதாவின் பயங்கரப் புகழ். அதையும் சுட்டிக்காட்டி அக்ஷயமுனையில் தன்னைப் பெரிதும் பலப்படுத்திக் கொண்டான். பூர்வகுடிகளைப் பாதி பயத்தாலும், பாதி நயத்தாலும் தன் வசப்படுத்திக் கொண்டான். ஸ்ரீவிஜ

யத்தின் சாம்ராஜ்யாதிபதிக்கு அடுத்தபடியாக மதிக்கப் பட்டான் பலவர்மன். காலக்கிரமத்தில் அக்ஷயமுனை கொள்ளைக்காரர்கள் தங்கும் இடமாயிற்று. இதன் புகழும், பலவர்மன் அக்கிரமும் எங்கும் பரவின. அக்ஷயமுனை ஸ்ரீவிஜயத்தின் பலமான, யாரும் அசைக்க முடியாத துறைமுகமாயிற்று. அதை உடைக்கத் தீர்மானித்து இங்கு வந்தேன். அது மட்டும் உடையவில்லை. வேறொரு பெரும் மர்மமும் உடைந்தது" என்ற விவரித்தான் இளைய பல்லவன்.

மஞ்சளழகி திக்பிரமையடைந்து உட்கார்ந்திருந்தாள். பலவர்மன் நிலை சொல்லவொண்ணாததாயிருந்தது. கதையைக் கேட்ட அகூதாதான் அடுத்தபடி பேசினான். "சரி! மேலே நடக்கவேண்டியதைக் கவனிக்கலாமே!" என்றான்.

அந்தக் குரல் பலவர்மனை ஓர் உலுக்கு உலுக்கியது. "மேலே என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று தீனமான குரலில் கேட்டான்.

"அதை நீதான் தீர்மானிக்க வேண்டும்" என்றான் அகூதா.

"நானா! நான் என்ன தீர்மானிப்பது?" என்று கேட்டான் பலவர்மன்.

"தூக்கில் தொங்கப் போகிறாயா, அல்லது வெட்டுப் பாறையில் மடிய இஷ்டமா என்பதை நிர்ணயித்துக் கொள்" என்று அகூதா திட்டமாகவும், கடுமையாகவும் சொன்னான்.

"கூடாது! என் தந்தையைக் கொலை செய்ய ஒப்ப மாட்டேன்" என்று கதறிய மஞ்சளழகி பலவர்மன் கழுத்தைச் சுற்றிக் கைகளைப் போட்டு அவனைப் பலமாக கட்டிக் கொண்டாள்.

"உன் தாயை வஞ்சித்தவன் இவன்" என்று எழுந்தது அகூதாவின் பயங்கரக் குரல்.

"இருப்பினும் என்னை ஆசையுடன் வளர்த்தவர்" என்றாள் மஞ்சளழகி.

"உன் தாயின் விவாகம் முறைப்படி இருந்தால் நீ ஸ்ரீவிஜயத்தின் அடுத்த மகாராணியாக இருக்க வேண்டிய வள் என்று உஷ்ணத்துடன் புகுந்தது அகூதாவின் குரல்.

"அப்படித்தான் அழைக்கச் சொன்னேன் கண்டியத் தேவரை" என்றான் இளையபல்லவன் இடைபுகுந்து.

அதுவரை புரியாத பல விஷயங்கள் மஞ்சளழகிக்குப் புரியலாயின. தன்னை மகாராணியென்று அழைக்க இளைய பல்லவன் கண்டியத்தேவனுக்குக் கட்டளையிட்ட காரணம் மிகத் தெளிவாகப் புரிந்தது மஞ்சளழகிக்கு. எத்தனை திறமையுடன் எத்தனை வேஷங்கள் போட்டுத் தன் ரகசியத்தை அறிந்து பலவர்மனை முறியடித்து விட்டான் இளையபல்லவன் என்பதை அறிந்துகொண்ட மஞ்சளழகி இளையபல்லவனின் இணையற்ற திறமையை எண்ணி எண்ணிப் பெரிதும் வியந்தாள். இளையபல்லவன் பெரும் முத்துகளைக் காட்டி ஆரம்பத்தில் தன் தந்தையின் மனத்தைக் கவர்ந்தது, தன் நடனத்தில் வில்வலனை முறியடித்தது. பிறகு குடிகாரனாக நடித்துப் பலவர்மனை ஏமாற்றிப் பல விஷயங்களையும் அறிந்துகொண்டு, அகூதாவுக்கு ஓலையனுப்பி இடும்பனிடமிருந்து தன்னை மீட்டது, பிறகு இருவரையும் அக்ஷயமுனைக் கோட்டை அறைக்கு வரவழைத்தது ஆகிய விஷயங்களை நினைத்து, 'இப்படியும் ஓர் அதிசய மனிதர் இருக்கிறாரே உலகத்தில்! என்று வியந்தாள். இளையபல்லவன் முயற்சியால் தந்தை யின் கதி அதோகதியாகிவிட்டதை உணர்ந்தாள். அப்படி உணர்ந்தும், பலவர்மன் தன்னை மகளைப் போலவே

நடத்தி வளர்த்ததை மட்டும் அவளால் மறக்க முடிய வில்லையாகையால் அவனை எப்படியும் காப்பாற்ற உறுதி கொண்டு அகூதாவை நோக்கிச் சொன்னாள்: "இவர் என்னை வளர்த்தவர், தாயைவிட அருமையாக வளர்த் தவர். தாயை எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்த தாயும் தந்தையும் இவர்தான். இவரைக் கொல்லுமுன் என்னைக் கொல்ல வேண்டும்" என்று.

இளையபல்லவன் முன்வந்து, "தேவையில்லை, இவரைக் கொல்லத் தேவையில்லை" என்றான் அகூதாவை நோக்கி.

"வேறு என்ன செய்வது?" என்று கேட்டான் அகூதா.

"நீங்கள் அனுமதித்தால் என்னுடன் அழைத்துச் செல்லுகிறேன்" என்றான் இளையபல்லவன்.

"எங்கு அழைத்துப் போகப்போகிறீர்கள்?" என்றாள் மஞ்சளழகி.

"நான் செல்லுமிடத்திற்கு."

"நீங்கள் இங்கிருக்கப் போவது இல்லையா?"

"இல்லை."

"ஏன்?"

"இங்கு வந்த வேலை முடிந்துவிட்டது."

"அப்படியானால் அக்ஷயமுனையை யார் பரிபா லிப்பது, காப்பது?"

"நீதான் மஞ்சளழகி. நீதான் இதை ஆள வேண்டும். பலவர்மன் வளர்ப்புப் புதல்வியென்ற முறையில் உனக்கு அந்த உரிமையை ஜெயவர்மன் மறுக்க முடியாது. இனி இதைக் காப்பதும் கஷ்டமல்ல. கொள்ளையரைப் பெரும் கடல் வீரராக மாற்றியிருக்கிறேன். மண்ணாகிக் கிடந்த மக்களை எழுப்பிவிட்டேன். கடலில் இடும்பனையும் தரையில் வில்வலனையும் ஒழித்துவிட்டேன். ஆகவே இந்த

இடத்தை நீ ஆண்டுவா. ஆள உனக்குச் சகல தகுதியும் இருக்கிறது. இந்தத் தளத்தை முழுதும் அளிக்கவில்லை நான். இதுவரை கலிங்கத்துக்கு உதவிவந்த இந்தத் தளம் இனி எனக்கு உதவட்டும். என் சபதத்தின் ஒரு பகுதிதான் முடிந்திருக்கிறது. இன்னொரு பகுதியை நோக்கிச் செல்கிறேன். வா, மஞ்சளழகி. உன் அரசைப் பார். வெற்றி கொள்ளப்பட்ட பதக்குகளைப் பார். கடற்கரையில் மாண்டும் சிறைப்பட்டும் கிடக்கும் சூளுக்களைப் பார். எரிந்து நாசமாகியிருக்கும் அவர்கள் மரக்கலங்களைப் பார். வா மஞ்சளழகி, வா பலவர்மா, வாருங்கள் சீனத் தலைவரே!"

மற்ற மூவரும் அவனைத் தொடர்ந்தனர். அக்ஷய முனையின் புதுத் தோற்றத்தைக் கண்ட மஞ்சளழகி பிர மித்தாள். காட்டுப் பகுதியில் மாண்டு கிடந்தனர் பதக்குகள் பலர். கோட்டையிலிருந்த காவல் வீரர்கள் மஞ்சளழகியைக் கண்டதும் வெற்றிக் கோஷமிட்டார்கள்! இதையெல்லாம் கண்டுகொண்டே கடற்கரையை அடைந்த மஞ்சளழகியின் பிரமிப்பு உச்சநிலையை அடைந்தது. அங்கு கடற்புறா பெரும் அசுரப் பட்சிபோல் நீரில் மிதந்துகொண்டு நின்றது. மாலுமிகள் பாய்களை விரிக்கும் நிலையில் இருந்தார்கள். அதன் பக்கத்தில் நின்றது அகூதாவின் பெரும் போர்க் கப்பல். சுற்றிலும் எரிந்து சாய்ந்து கிடந்தன சூளுக்களின் மரக்கலங்கள் நான்கு.

அந்த மலைப்பில், கடற்கரையில் நின்ற அமீரும் கண்டியத்தேவனும் பலவர்மனைத் தங்களுடன் பலவந்த மாக அழைத்துச் சென்றதைக்கூட அவள் கவனிக்க வில்லை! அகூதா தன் மருமகளை அணைத்து முத்தமிட்டு, "குழந்தாய், மீண்டும் வருகிறேன். பலவர்மனைக் கொல் லாதது எனக்கு வருத்தம்தான். இருப்பினும் நான் இளைய பல்லவரை மீறி எதுவும் செய்வதற்கில்லை" என்று கூறி

விடைபெற்றுத் தன் மரக்கலத்துக்குச் சென்றான். கடைசியில் இளையபல்லவன் மட்டுமே அவளுடன் தனித்து நின்றான்.

மஞ்சளழகி தன் அழகிய விழிகளால் அவனை ஏறெடுத்து நோக்கினாள். "நீங்களும்..." அதற்குமேல் சொல்ல அவளால் முடியவில்லை.

'ஆம். போகவேண்டும் மஞ்சளழகி" என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டான் இளையபல்லவன்.

"நான் சொன்னது சரியாகப் போய்விட்டது" என்றாள் அவள் துக்கம் தொண்டையை அடைக்க.

"எது?"

"இந்த அலை போலத்தான் நீங்களும் என்று அன்றே சொன்னேனே?"

"ஆம். சொன்னாய்."

"அலையும் என்னைத் தொட்டுவிட்டுப் போகிறது, நீங்களும் அப்படித்தான் போகிறீர்கள்." மஞ்சளழகியின் குரல் தழுதழுத்தது.

"அலை மீண்டும் வந்து தொடுகிறதே மஞ்சளழகி, அப்படி நானும் வருவேன்" என்றான் இளையபல்லவன் அவளுக்குத் தைரியமூட்ட.

"நம்பிக்கையில்லை எனக்கு."

"இளையபல்லவன் சொன்ன சொல் தவறியதில்லை மஞ்சளழகி."

"கண்டிப்பாய் வருவீர்களா?"

"வருவேன்."

"எப்பொழுது?"

"கடமை முடிந்ததும்?"

"என்ன கடமை?"

"கலிங்கத்தின் கடல் பலத்தை உடைக்கும் கடமை."

அக்ஷயமுனை அழகி தலையை அசைத்தாள். அந்த அசைப்பில் அதிக நம்பிக்கையில்லை. அவன் கடமையின் ஒரு பகுதிதான் கலிங்கத்தின் கடலாதிக்கத்தை உடைப்பது. இன்னொரு பகுதி குணவர்மனை ஸ்ரீவிஜயத்தின் அரியணையில் அமர்த்துவது என்பதை அவள் அறிந்திருந்தாள். அந்த இரண்டாவது கடமையின் அஸ்திவாரம் காஞ்சனா தேவியின் காதல் என்பது அவளுக்குச் சந்தேகமறத் தெரிந்திருந்தது. 'இவர் கடமையை நோக்கிப் போகவில்லை. காதலை நோக்கிப் போகிறார்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு பெருமூச்செறிந்தாள். அவள் அழகிய கன்னத்தில் தன் இதழ்களைப் பொருத்திவிட்டு, காத்திருந்த ப'டகை நோக்கி வெகு வேகமாகச் சென்றான் இளைய பல்லவன்.

மஞ்சளழகி கடற்கரையிலேயே அலை ஓரத்திலேயே நின்றிருந்தாள். முதலில் துறைமுகத்தை விட்டுச் சென்றது அகூதாவின் மரக்கலம். பிறகு அசைந்தது பாய் விரித்த கடல் புறா. கடலின் அலைகளை அலகால் கிழித்துக் கொண்டு தன் முதல் பயணத்தைத் துவங்கியது. அந்தக் கடற்புறாவின் எழில் சாதாரண சமயத்தில் மஞ்சளழகியின் இதயத்தைக் கொள்ளை கொண்டிருக்கும். ஆனால் காதலன் பிரிந்து சென்ற அந்தச் சமயத்தில் அவள் அதன் எழிலைப் பார்க்கவும் சக்தியற்று நின்றாள்.

பாலூர்ப் பெருந்துறையில் இளையபல்லவன் கரையிலிருந்தான்; மரக்கலத்தில் கண்ணீர் திரையிட நின்றாள் காஞ்சனாதேவி. இன்றோ மஞ்சளழகி மைவிழிகள் நீர்த்திரையிட தரையில் நிற்கிறாள்; மரக்கலத்தில் ஓடுகிறான் படைத்தலைவன். இரண்டும் மாறுபட்ட நிலைதான். ஆனால் இரு மாதர் காதலிலும் மாறுபாடு இல்லை. இரண்டும் உறுதியான காதல். இரண்டும்

உள்ளத்தைச் சிதற அடிக்கும் சக்தியை உடையன. எது வெற்றி கொள்ளுமோ காலம்தான் சொல்லும். ஆனால் கடல் புறாவின் தளத்தில் நின்ற இளையபல்லவன் இதயத்தில் அன்று மஞ்சளழகியே குடிகொண்டிருந்தாள். கரையில் நின்ற அவள் உருவம் காலைச் செந்நிற ஒளியில் அவள் பொன்னிற மஞ்சளைப் பளபளப்பாக மாற்றி, அவளை அக்ஷயமுனைத் தேவதையென அடித்திருந்தது. “வருந்தாதே மஞ்சளழகி. கடமையை நோக்கிப் போகிறேன். சீக்கிரம் வந்துவிடுவேன்” என்று தளத்தில் நின்ற இளையபல்லவன் முணுமுணுத்தான். வேகமாக அடித்த காற்று அந்தச் சொற்களை மஞ்சளழகிக்குக் கொண்டு சென்றதோ என்னவோ தெரியாது. பாய்மரத்தை மட்டும் நன்றாக உந்தி, கடல்புறாவின் வேகத்தை அதிகப்படுத்தியது. காதலரைப் பிரிப்பதில் காற்றுக்குத்தான் எத்தனை ஆனந்தம்!

## இரண்டாம் பாகம்

### முற்றும்